


உ
கணபதிதுணை.

# மண்ணியல்சிறுதேர்.

## (மிருச்சகடிகம்.)




மகிபாலன்பட்டி
பண்டிதமணி
**மு. கதிரேசச்செட்டியார்**
மொழிபெயர்த்தியற்றியது.






மேலைச்சிவபுரிச்
**சன்மார்க்கசபையாரால்**
வெளியிடப்பெற்றது.

ஸ்ரீமுகளு ஐப்பசிமீ
1933.

574



# இப்புத்தகத்திலடங்கியவை.


| | | பக்கம். |
|---|---|---|
| 1. | முகவுரை | க |
| 2. | சிறப்புப்பாயிரம் | கக |
| 3. | அணிந்துரை | உ0 |
| 4. | மதிப்புரை | ந௩ |
| 5. | கதைச்சுருக்கம் | சக |
| 6. | பெயர்விளக்கம் | ருஉ |
| 7. | ஆராய்ச்சிமதிப்புரை | ருஎ |
| 8. | மண்ணியல்சிறுதேர் | 1–424 |
| 9. | செய்யுண்முதற்குறிப்பகராதி | 425 |
| 10. | பிழையும் திருத்தமும் | 431 |

57-1

உ

கணபதிதுணை.

# முகவுரை.

---

வெண்பா.

நல்லபல நூலின் நறுஞ்சுவையு மெய்ப்பொருளும்
வல்லே யுணர மதியுதவி—மெல்ல
வுடலிற் புகுந்தெ னுளமுருக்கும் வள்ளல்
கடவுட் களிற்றுமுகன் காண்.

மக்கள்வாழ்க்கையிற் பொறி கருவியாக நுகரப்படும் இன்பங்களினும் அறிவு கருவியாக நுகரப்படும் இன்பமே சிறந்ததென்பது பெரியார்துணிபு. சிறுபான்மை பொறிகள் துணைநிற்ப நுண்மாணுழைபுலங்கருவியாக நுகரப்படும் அத்தூய இன்பம் யாதென ஆராயப்புகுவேமாயின், அது நூலின்பமாகவேமுடியுமென்பது அறிஞர்கண்டது. நுண்ணறிவாகிய ஒண்ணிதியுடையார்க்குப் பிறபொருள்களால் வரும் இன்பங்கள் எல்லாவற்றினும் சுவைநலமிக்க நவையிலா நூல்களாற் பெறப்படும் இன்பமே விழுமியதாகும். மதிவலியில்லார்க்கு இவ் வின்பப்பேறு கிடைத்தற்கரியதாகலின், அன்னார் தாம்படைத்த பொருள்வலியளவே பொறிகருவியாகப்பெறக்கடவவின்பத்திலிறுமாந்து, அப்பொருளற்றநிலையில் அதன் காரியமாகிய அவ் வின்பத்தையும் இழந்து வருந்தும்நிலையினராவர். அறிவுகருவியாக அடையப்படும் நூலின்பம் யாண்டும் உலப்புடையதாகாது. வருந்துதற்குரிய பிரிவு

இதற்கு இன்று என்பது யாவரும் உணர்வர். பொருளாற் படைக்கும் இன்பம் வளர வளர அதற்குக் காரணமாகிய பொருள் சுருங்கித் தேயுமென்பதும், அறிவாற் படைக்கும் இன்பம் வளர வளர அதற்குக் காரணமாகிய அறிவு மேன்மேலும் வளர்ச்சியடையுமென்பதும் யாம் உணர்ந்துவருகின்றேம். தானும் வளர்ந்து தன்மூலத்தையும் வளர்க்கும் நூலின்பமே மக்கட்டன்மைக்குஇன்றியமையாது வேண்டப்படுவதொன்றாகும். இத்தகைய தூய நல்லின்பத்தைப் பயக்கும் நூல்கள், சொல்லானும் பொருளானும் இனிமைமிக்குப் பயில்வார்கருத்தைத் தம்வயப்படுத்துச் சுவைபல கனியப்பெற்றுக் கிளைக்கக் கிளைக்கக் கருத்துவகையால் அறிவுதிளைக்க இடனளித்துத் தெளிவுமேற்கொடுமிளிரும்நிலையினவாயிருத்தல்வேண்டும் என்பது புலநலஞ் சான்ற கலைவல்லார்துணிபாகும். மக்களுக்கு இன்றியமையா அறப்பகுதிகளை வரலாற்றுமுறையில்வைத்துச் சுவைநலந் தோன்ற வெளிப்படுத்தவெழுந்தநூல்களையே மேற்குறிப்பிட்ட இலக்கணங்களமைந்த காப்பியங்களென்று பெரியார் கூறுப. இக் காப்பியக்கவிஞர்களின் அருஞ்செயலே அறிவரும்புமலரத் துணைபுரிவதாகும். சிறந்த காப்பியமணஞ் செறியப்பெற்ற மதிமலரே மக்கள்வாழ்க்கைக்கு எழில்செய்யும் அணிகலனாகும். இங்ஙனம் திருந்திய அறிவுக்குப் பொருந்திய நல்லுணவாய்த்திகழ்ந்து இன்புறுத்தும் காப்பியங்கள் பற்பலமொழிகளினும் பல்வேறுவகையினவாகப் புலவர்பெருமக்களால் ஆக்கப்பட்டுள்ளன. அவ்வகையுள் நாடகக்காப்பியமென்பதும் ஒன்று. இஃது உயரிய நோக்கங்கள் தோன்றச் சுவைபொதுள ஆக்கப்படுமாயின் இதனினும்

சிறப்ப இன்பப்பேற்றுக்கு எதிர்பார்க்கப்படுவது வேறு இராதென்று கூறலாம். இதற்குரிய இலக்கணங்கள் வடமொழியில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. நம் அமிழ்தனைய தமிழ்மொழி, இயல் இசை நாடகம் என முத்திறப்படுத்தப் பட்டு நிகழ்ந்தமுறைமையை நோக்குவேமாயின், இதன்கண் அவ் விலக்கணங்கள் பண்டைக்காலத்தில் எத்துணை விரிவாக அமைந்திருந்தனவென்பது புலனாகும். இற்றைஞான்று நம் தீந்தமிழில் நாடகப்பகுதிகள் ஒருசிலவன்றி முழுதுங் காண் டற்கில்லை. ஒருமொழியில் ஒருகாலத்தில் ஒருபகுதி விரி வாக அமைந்து பிறிதொருகாலத்தில் அப்பகுதி எக்காரணத் தாலோ குறைந்துவிடுமாயின், அக் குறைவை நிறைவிக்க வேண்டுவது அம்மொழிப்பற்றுடையார்க்குரிய கடமையாகு மன்றோ! இக் குறிக்கோளைக் கடைப்பிடித்தே தமிழில் நாடகக்கலையின்வளர்ச்சிகருதி வடமொழியிலுள்ளதொரு பெரியநாடகத்தைத் தமிழாக்கமுற்பட்டேன். மொழிபெயர்த் ததர்ப்படயாத்தலையும் தமிழ்நூல்வகையு ளொன்றாகவைத் துத் தொல்காப்பியனார் அறுதியிட் டுரைத்தனராதலின், அவர்கட்டளையைமேற்கொண்டு நூலியற்றல் தமிழ்மொழி யாளர்க்குப் பொருந்தியதாகுமென்பது என்றுணிவு. இத் துணிவுபற்றித் திருவருட்பாங்கால் மொழிபெயர்த்தியற்றிய மண்ணியல்சிறுதேர் என்னும் இந் நாடகத்திற்கு முதனூல் வடமொழியில் சூத்திரகன் என்னும் அரசரால்இயற்றப்பட்ட மிருச்சகடிகம் என்பதாகும்.

வடமொழிக்கலைகளிற் சிறந்தபயிற்சியும் நெடுங்கால வுலகவாழ்க்கையும் சிவபத்திப்பெருந்திருவும் உடையராய்ப் புவியுலகாட்சியும் கவியுலகாட்சியும் ஒருசேரப்பெற்று

இற்றைக்கு 1500 ஆண்டுகளுக்குமுன்விளங்கிய சூத்திரகன் என்னும் அவ் வரசர், சுவைகளுக்கெல்லாம் நிலைக்களமாக வடமொழியில் ஆக்கியளித்த மிருச்சகடிகம் என்னும் இது, நாடகவகைகளுள் பிரகரணத்தின்பாற்படுவதாகும்; 382 சுலோகங்களைத் தம்மகத்தேகொண்ட பத்து அங்கங்களையுடையது. உவகைச்சுவையும் அவலச்சுவையும் இதன்கட் பெருவரவினவாகக் காணப்படும். கவிகுலதிலகமாகிய காளிதாசமகாகவியின்காலத்திற்குமுன்னுள்ளவரும், நாடகக் கவிகளின் நிரலில் முன்வைத்து எண்ணப்பட்டவரும், பற்பல நாடகங்களின் ஆசிரியருமாகிய பாசமகாகவியினுல் சாருதத்தம் எனப் பெயரிய நாடகம் ஒன்று இயற்றப்பட்டுளது. அதனையே விரித்து விளக்கி மிருச்சகடிகம் என்னும் புத்துருவாக்கி இவ் வாசிரியர் வெளிப்படுத்தியுள்ளா ரென்பது ஆராய்ச்சியாளர்கண்ட வுண்மையாகும். முன்னோர் மொழிபொருளேயன்றி யவர்மொழியும் பொன்னேபோற் போற்றுதல் நன்றெனக்கண்டமையாற்போலும், அச் சாருதத்தத்திற்கண்ட சுலோகங்கள் பல அப்படியே இதன்கண் எடுத்தாளப்பட்டுள்ளன. இதன்கண் உள்ள கதையமைப்புக்கள் அறிவுடையார் பாராட்டத்தக்கன. வெற்றெனத் தொடுத்தலாக எதனையும் இதன்கட் காண்டலரிது. "இவ்விடத்து இது வேண்டியதன்று" என்று எண்ணும்நிலையில் அமைந்ததுபோற் காணப்படும் ஒருபகுதியைப் புலனுடையார் உற்றுநோக்குவாராயின், அதன் இன்றியமையாமை அவர்க்குப் புலனுகும். மக்கட்பகுதியினரின் பல்வேறு இயல்புகளை மிகவும் வியக்கத்தக்கமுறையில் எடுத்து விளக்கிச் செல்லும் இப்பிரகரணம், தன் ஒருசிறுகூற்றுற் சூத்திரக

மன்னர்திறமையையும் பெருங்கூற்றால் நாடகப்பேராசிரிய ராகிய பாசமகாகவியின் ஆற்றலையும் தன்னகத்தேகொண்டு மிளிர்தலைக்கண்டு, இது தமிழிற் சிறந்தமுறையில் மொழி பெயர்க்கப்படின் தமிழறிஞர்க்குப் பயன்விளைக்கும் என் னும் உறுதியுடையனாய் இப் பணியிற் றலைப்படலானேன். வடமொழியினின்றும் மொழிபெயர்க்கப்படும் நூல் முதனூ னயத்தை யிழந்துவிடாமலிருக்கவேண்டுமென்பதும், அம் மொழியில் அதனைப் பயிறற்குக் கருவிநூற்பயிற்சி முதலிய தகுதி எத்துணை வேண்டப்படுகின்றதோ, அத்துணைத் தகுதி மொழிபெயர்ப்புநூலைப் படிப்பார்க்கும் வேண்டப் படும்நிலையில் இஃது அமையவேண்டுமென்பதும் என் கருத்து. இக் கருத்தைச் சிறந்த கடைப்பிடியாகக் கொண்டமையால் இம் மொழிபெயர்ப்பு நடித்தற்குச் சில மாறுதலைப்பெறும்நிலையில் அமையினும், படித்தற்குத் தகுதிவாய்ந்ததாக இருக்கும்வண்ணம் செய்யப்பட்டது. முதனூலிலுள்ள சுலோகங்கள் ஒன்றும் விடாமல் தமிழில் சந்தர்ப்பத்திற்கேற்றவாறு பாவும் பாவினமுமான செய்யுள் வடிவில் மொழிபெயர்க்கப்பட்டன. முதனூலில் அமைந்த சுலோகங்கள் 382 ஆகும். அவை தமிழில் 371 செய்யுட்க ளாகப் பெயர்த்தியற்றப்பட்டன. ஒரு சில இடங்களில் தொடர்நிலையாக அமைந்த இரண்டு மூன்று சுலோகப் பொருள்கள், தமிழில் ஓரே ஆசிரியப்பாவிலமையச்செய்தமை யால் முதனூலிலுள்ள எண்கள்பதினொன்று தமிழிற் குறைய லாயின. நாடகபாத்திரங்கள் ஒருவரோடொருவர் உரை யாடுங்காற் குறிப்பிற்பொருடரப்பேசிய உரைநடைகளுக்கும் செய்யுட்களுக்கும்வேண்டுமிடங்களிலெல்லாம்,கருத்துக்களை

விளக்கி வினைமுடிபுகாட்டிப் பொருள்விளங்க ஆங்காங்கு அடியிற் குறிப்புரைகள் எழுதப்பட்டுள்ளன.

நாடக இலக்கண அமைதிகளும் சுவைகளும் இந்நூலுள் இன்ன இன்ன இடங்களில் இவ்வாறிவ்வாறு அமைந்தன வென்பது இதன் அணிந்துரையாலும், தலைவன் தலைவியர் முதலிய பாத்திரங்களின் இயல்புகளும் ஆங்காங்குக் கவி கருதிய நுண்ணிய குறிக்கோள்களும் வரலாற்றுமுறையில் உலகம் அறிந்துகோடற்குரிய சிறந்த ஒழுக்கமுறைகளும் சுவைத்தின்புறற்குரிய பகுதிகளும் இன்னவென்பது ஆராய்ச்சிமதிப்புரையாலும் அறிந்துகொள்ளக்கிடத்தலின், அவற்றை யான் ஈண்டு விரித்திலேன். இதன்முகமாக வெளிப்பட்ட அறங்களைத் தொகுத்துக் கூறப்புகின்,

சுவைபல மலிந்து நவையற விளங்கும்
மாட்சிமிக் குடைய மண்ணியல் சிறுதேர்
என்னுமிந் நாடக நன்னூற் கண்ணே
செல்வம் படைத்துழி நல்குர வாளர்க்
கீதலும் வறுமை யியைந்த காலை
நோத றவிர்ந்து நுவல்கட னாற்றலும்
அடைக்கலப் பொருளை யாவியி னோம்பலும்
புகலடைந் தோரைத் தகவுறப் போற்றலும்
இன்னுயிர் நண்பர்க் கின்னல் நேர்ந்துழித்
தன்னுயிர் வெறுத்தலும் மன்னுயி ரோம்பலும்
இன்னாசெய் தார்க்கு மினியவே செய்தலும்
வினைப்பயன் நுகர்வுழித் தெய்வம் வெறுமையும்
ஈந்துபொருள் வறத்த லினிதெனக் கோடலும்

அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாதலும்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினை கடத்தற் கொல்லா தாதலும்
பெருமையும் சிறுமையும் பிறப்பா னன்றிக்
கருமச் சார்பால் வருமெனத் தெளிதலும்
கற்பின் மாட்சியும் காதலின் பெருமையும்
உண்மைக் காதற் குயரிய குணங்களை
அண்மைக் காரண மாதலு மற்றஃ
தெத்துணை யிடர்ப்பா டியையினு மிகவா
தத்துணை வளர்ச்சி யடையு மென்றலும்
சூதும் களவும் தீதியல் காமமும்
ஒல்லா வொழுக்கென வொரூஉதலும் பொல்லாக்
கயமையிற் றீய பயனை விளைதலும்
காதற் சுவையினும் பேதறு நட்பே
விழுமிய தாதலும் இழிவுறுந் தீய
நட்பினைக் களைதல் நன்றெனக் கோடலும்
அடிமை நிலையினும் அறம்பிற ழாமையும்
தீயவன் தலைவ னுய காலை
அவன்வழி நிற்றல் தவறுடைத் தாதலும்
மனையறத் தியைந்த மாண்புடைப் புதல்வனை
எனையபல் பொருளினு மின்பொரு ளாதலும்
ஒன்றிய அன்பின் ஒருவ ருஞற்றிய
நன்றி மறவாமை நலஞ்செயு மென்றலும்
மாண்மிகு மானமே பூணென மிளிர்தலும்
அருளறந் துறவிற் குரிய தாதலும்
அறந்தலை நின்று திறம்ப லின்றித்

தெய்வங் கொள்கை யுய்தி யளித்தலும்
ஆகிய இவையும் பிறவும் அமைந்து
நன்புலங் கொள்வோர்க் கின்பஞ் செய்யுமால்.

இந்நாடகம் மிக விரிந்த அளவினதாதலின் கற்பார்க்குப் பயன்படுமென நினைந்து இதன் கதைச்சுருக்கமும் நாடக பாத்திரங்களின் பெயர்விளக்கமும் எழுதி இதனுடன் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூலை இங்ஙனம் மொழிபெயர்த்து வெளியிட வேண்டுமென்று யான்கொண்டகருத்தைப்பாராட்டி இதற்கு வேண்டும் உதவிகளை அவ்வப்போது செய்துவந்ததோடு, சிறந்தமுறையில் அழகுற அச்சிட்டு வெளிப்படுத்தியவர்கள், புதுக்கோட்டை அரசினராட்சியுட்பட்ட மேலைச்சிவபுரிக் கண்ணுள்ள சன்மார்க்கசபையினராவர். சன்மார்க்கசபை வெளியீடுகளில் இது நான்காவதாக வெளியிடப்படுகின்றது. மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபை இற்றைக்கு இருபத்து நான்கு ஆண்டுகளுக்குமுன் திருவருட்பாங்கால் தோன்றித் தமிழன்பர்களுக்குப் பற்பல நற்பயன்களை விளைத்துவருகின்றது; ஆண்டுதோறும் தமிழ்நாட்டுச் சிறந்த கல்வியாளர்களை அழைத்துச் சொற்பொழிவுகள்செய்வித்தும், தன் அங்கமாகவுள்ள தமிழ்க்கலாசாலைமுகமாக மாணாக்கர் பலர்க்கும் தொடக்கக்கல்விமுதல் மதுரைத்தமிழ்ச் சங்கத்துப் பிரவேசவகுப்பு, பாலபண்டிதவகுப்புவரையுள்ள பாடங்களை நல்லாசிரியர்களைக்கொண்டு பயில்வித்தும், தமிழார்வமிக்க எளிய மாணாக்கர்சிலருக்கு உண்டி உறையுள் முதலியன அளித்தும், இன்னோரன்ன நூல்வெளியீடுகளைச் செய்தும் தமிழ்மொழியை வளர்த்துவருதலை யாவரும்

உணர்வர். இதன் தலைவராகிய என் அன்பர் திரு. வ. பழ. சா. பழ. சாமிநாதன்செட்டியாரும் அவர்தம் அன்புரிமைச் சோதரர்களும் அவர்கள் சிறியதந்தையார்புதல்வர்களும் இச் சன்மார்க்கசபையை நாளும் போற்றி வளர்த்துவரு கின்றனர். சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கச் சிவ பிரான் திருவருட்பாங்காற் றோன்றிய சன்மார்க்கசபையும் அதன் பரிபாலகர்களும் நீடுவாழ்கவென வாழ்த்துதலையன்றி வேறுசெயற்பாலது யாதுளது?

மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி Dr. பிரமஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள், சேதுஸம்ஸ்தானத்து மஹாவித்துவான் ஸ்ரீ உப. வே. ரா. இராகவையங்காரவர்கள் முதலிய பெரியார்களருளிய சிறப்புப்பாயிரங்களும் மதிப்புரை களும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப்பேராசிரியர் (Professor) ஆக இருந்த ஸ்ரீமத். சுவாமி விபுலாநந்தர் B. Sc. (London) அவர்கள் செவ்விதினாராய்ந்து நாடக இலக்கண முறையைத் தழுவி எழுதியுதவிய அழகிய அணிந்துரையும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பேராசிரியர் (Professor) திரு. சோமசுந்தரபாரதியார் M. A; B. L. (Advocate) அவர்கள் அரிதினாராய்ந்து தமிழ்ப்பெருங் காப்பியமாகிய சிலப்பதிகாரக்கதையுடனியைத்துச் சுவை ததும்ப எழுதியுதவிய ஆராய்ச்சிமதிப்புரையும், இந்நூற்கு மிகவும் அணிசெய்து திகழ்கின்றன. இப் பெருந்தகை யாளர்கட்கெல்லாம் என் உளமார்ந்த வணக்கத்தையும் நன்றியறிவையும் புலப்படுத்திக்கொள்கின்றேன். அணிந் துரையையும் ஆராய்ச்சிமதிப்புரையையும் எழுதுங்கால் அடிகளும் பாரதியாரும் முறையே தங்கியிருந்த இடங்கள்

மாவலிகங்கைக்கரையிலுள்ள குளிர்பூஞ்சோலையும், கொடைக் கானல்மலையுமாகும். இங்ஙனம் வாய்த்த இடங்களாலும் அன்பினாலும் உடல்குளிர உளங்குளிர அமைந்த நிலையில் எழுதப்பட்டனவாதலின், அவை சொல்லானும் பொருளா னும் இனிமைபயந்து படிப்பார்புறவகக்கருவிகளைக் குளிர் வித்து இன்புறுத்தும்நிலையில் அமைந்துள்ளன.

இந் நாடகநூல் பதிப்பிடுங்கால் இதன்கண் அச்சுப் பிழை நேராமல் திருத்தஞ்செய்து உதவியவர்கள் மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ் உதவிப்பத்திராதிபராகிய என் அரியநண்பர் ஸ்ரீமாந் T. K. இராமாநுஜையங்காரவர்களாவர். இந் நூல் அச்சுவனப்புற அமைதற்குக் காரணம் இவர்கள் அன்புமுகமாக மேற்கொண்ட அரியமுயற்சியேயாகும். இதனை அச்சிடுதற்குமுன் பிரதிகள் எழுதுவித்தும் ஒப்பு நோக்கியும் உதவிபுரிந்தவர்கள் மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபைத் தலைமைத்தமிழாசிரியர் திரு. மு. அருணாசலம்பிள்ளை யவர்களாவர். இவ்விருமெய்யன்பர்களுக்கும், மொழிபெயர்க் குங்கால் உதவிபுரிந்த என் நண்பர்களாகிய வடமொழிப் பண்டிதர்களுக்கும் என் நன்றியறிவை யுரிமைப்படுத்து கின்றேன்.

ஒன்றுக்கும்பற்றாத சிறியேனை இச் செயலிற்புகுத்தி நிறைவேற்றியருளிய எல்லாம்வல்ல இறைவன் றிருவடி மலர்களை நெஞ்சார நினைந்து வாழ்த்துகின்றேன்.

சாரதாவிலாஸம்,
மகிபாலன்பட்டி,
1-9-1933.

இங்ஙனம்,
மு. கதிரேசன்.

உ

கணபதிதுணை.

# சிறப்புப்பாயிரம்.

---

சென்னை மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி
டாக்டர் பிரமஸ்ரீ

## வே. சாமிநாதையரவர்கள் இயற்றியவை.

சீர்த்தவொரு பானங்கப் பூரணநா டகமென்று
சிறந்தோர் போற்றும்
ஆர்த்தசுவை வடநூலைக் கவிகளிடை விரவுரைநூ
லாக்கிக் கற்றோர்
ஏர்த்தமொழி பெயர்ப்பென்று மதித்திடமண் ணியல்சிறுதே
ரென்னும் பேராற்
கூர்த்தசுவைத் தமிழினளித் திட்டனன்யா ரவனென்னிற்
கூறக் கேண்மின். (1)

தூமேவு குமரகுரு பரமுனிவ னாராய்ந்து
சொற்ற தாய
ஏமேவு *கல்வியே கற்புடைய பெண்டிரெனு
மின்க விக்குத்
தேமேவு மிலக்காயோன் புலவர்பா லன்புடைய
சீல மேயோன்
மாமேவு மகிபால நகர்வாழுங் கதிரேச
வணிக ரேறே. (2)

---

* நீதிநெறிவிளக்கம்.

இராமநாதபுரம் சேதுஸம்ஸ்தானத்து மகாவித்துவான்

## ஸ்ரீ உப. வே. ரா. இராகவையங்காரவர்கள்

இயற்றியவை.

பூவுலக நாகரிக மூலமெனல் பொற்ப
யாவகைய ஞானநிதி யிற்குமொரு வைப்பாந்
தேவமொழி யிற்றலைசி றந்துபல்து றைக்கட்
பாவகைகொ ணூல்களள வைப்பகர்வர் யாரே. (1)

அப்பெரிய நூல்வகையு ளங்கையுள நெல்லி
யொப்பவுணர் வெய்தவுல கத்தியல்பு ரைத்துத்
தப்பிலுயி ருக்கெளிதி னிற்பயன்ற ரற்காம்
மெய்ப்பொருளி னிற்றிகழ்வி ழுப்பமுள வற்றுள். (2)

கோத்திரமு யர்ந்தகுடை வேந்தர்தொழு மேந்தல்
பாத்திரம றிந்துதவு சூத்திரக னென்போன்
சாத்திரமு ணர்ந்துதலை நாடகவி யற்கு
நேத்திரமி தென்னநிகழ் விக்கமதி யெண்ணி. (3)

பருச்சகட வாழியினு ருண்டுபடர் செல்வத்
துருச்சகல முங்கொளுயிர் வாழுமியல் போதும்
மிருச்சகடி கப்பெயர்வி ளங்குபெரு நூலைக்
கருச்சமைய வைத்தவடி விற்றமிழர் காண. (4)

கத்தியவ கைக்கினிய கட்டளையி தென்னப்
பத்தியவ கைக்குமுரை யாணியிது பன்ன
உத்தியின்வ ழாதுமொழி யிற்பெயர வுய்த்தான்
மெத்தியசி றப்பினிவன் யாவனென விள்வேன். (5)

சோழகுல துங்கன்கரி காலன்முதன் முன்றொட்
டேழ்நிலைய மாடநிரை மாளிகையெ டுத்து

வாழ்பெரியர் வாணிகநல் வாகைமுடி சூடி
ஊழுயர்பு கார்நகர மோங்கவரு செல்வர். (6)

ஒன்பதும ணிக்குநிக ரொன்பதுவ குப்பார்
நன்பெரியர் தூயநக ரத்தரசர் பின்னோர்
முன்புதிரை வாரிதிபு கார்புகும நாளிற்
றென்பழைய நாடுபுக லாயினர்சி றந்தே. (7)

கோதுபதி யாதுயர்செங் கோன்முறையி னீடுஞ்
சேதுபதி நாடுசெகன் முற்றுமினி தெய்தித்
தீதுகழு வுந்திருவ ணைத்துறைய தென்று
மேதகுதன் மம்விளைய மேவியபி னங்கே. (8)

ஒன்பதுவ குப்பினரு மொன்பதொளிர் கோயில்
இன்புடனெ டுத்துமறை யிம்மியும்வ ழாமல்
அன்புபெரு கத்தமத றம்பெருக நாளும்
பொன் பெருக வாழ்ந்துயர்பு கார்வணிக ருக்குள். (9)

தொடைவயிர வன்றளிதொ ழுஞ்சிறுகு ளத்தூர்
உடையவன்கு லத்துமகி பாலநக ரோங்க
நடையினிலு யர்ந்தொளிர்முத் துக்கருப்ப னன்பே
றடையவுத யஞ்செய்கதி ரேசனெனு மண்ணல். (10)

முளைப்பருவந் தொட்டுமண மொய்த்ததுள வம்போல்
இளப்பருவ மேயறிவொ ளிக்குரிய ஞானன்
விளைத்தபழ நூல்பயில்வி நோதமதி னுள்ளந்
திளைத்தனன்மு னைச்செனன வாசனைசி றந்தே. (11)

பாலினிமை தேனினிமை பன்மணமோ டருங்
காலினிமை நீரினிமை காணினிமை காதன்
மாலினிமை யாவுமதி யாலிதய மாந்தும்
நூலினிமை யிற்பினென நுண்ணிதறி வந்தான். (12)

முற்கடல்கு டித்தமுனி வன்முகன்வ ழிந்த
நற்கடல்கு டித்தததனை நாடுேக ரேங்குஞ்
சொற்பொழிதல் செய்துயர்க லைப்பயிர்வ ளர்க்க
அற்பழிவி லாதபுய லாயினனி வண்தான். (13)

மலைப்பொருள்ப டைத்தவர்த மக்குள்விழை வெல்லாம்
விலைப்பொருள்கொ டுத்தடைவ ரேனுமெழு மைக்கும்
நிலைப்பொருளி னுக்குநிலை யில்பொருளொவ் வாமற்
கலைப்பொருள்கி டைப்பரிய தென்றுணர்வு கண்டு. (14)

தனம்வளர வெண்ணிமுயல் தன்கிளைஞர் பக்கல்
மனம்வளர மன்னியிவன் செய்பணிய ளப்பில்
இனம்வளர்க வென்றிவனி யற்றுகழ கங்கள்
தினம்வளர்தல் கண்டறிஞர் சிந்தைகளி கூர்வர். (15)

கற்றவர்வி யக்கவறி யக்கழக மேவப்
பெற்றவரு வக்கவறி வற்றவரு மோரச்
செற்றவர்வி ருப்பமொடி னிக்கவிவ னுய்ந்து
சொற்றவரு மைப்பொருள்சொ லாதவர்கள் யாவர். (16)

*மன்னவனண் ணாமலைம தித்தபெரு நண்பன்
என்னினிய †சிந்நயனெ னப்புலமை மிக்கோன்
பொன்னினிய மங்கைபுல மாமகள்பொ ருந்தித்
தன்னினநி லைக்கநெறி யின்னதென விள்வோன். (17)

தந்தைதர வந்தபெய ரிற்றன்புல மைக்கு
வந்தவுயர் பண்டிதம ணிப்பெயர்மு னிற்க

---

* செட்டிநாட்டு ராஜா ஸர் அண்ணாமலைச்செட்டியாரவர்கள்.

† தேவிகோட்டை வித்துவச்சிகாமணி வீர. லெ. சிந்நயச் செட்டியாரவர்கள்.

இந்தநல நாடுமுத வீழம்வரை யெங்குங்
கொந்திரிசை நாறவவை யத்தலைமை கொள்வோன். ()

முன்பல்வட நூல்கள்தமி ழான்மொழிபெ யர்த்தோன்
தென்பழைய நாட்டணிக லந்திகழ வுள்ளோன்
மன்புலவர் வாழ்கெனவ ழுத்தவிவ னின்னும்
நன்பலசி றக்கநெடு நாளினிது துய்த்தே. (19)

வேறு.

எழில்கொள்சூத் திரகன்முன் னிசைசெய்நா டகமெனும்
பழமிருச் சகடிகப் பனுவல்பண் டிதமணி
தழையமண் ணியல்சிறு தேரெனத் தமிழிலே
மொழிபெயர்த் தனன்பொருள் முழுதுமொத் திலகவே. (20)

---

வெள்ளகால் ராவ்ஸாஹிப். திரு.

V. P. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G. B. V. C.

இயற்றியது.

ஆரியநன் மொழிக்குமிக வணிசெய்மிருச் சகடிகநா
டகத்தை மேலாம்
ஏரியைமண் ணியல்சிறுதே ரென்றுமொழி பெயர்த்துயர்சீ
ரெய்தி ஞனல்
சீரியதென் வடமொழிநூற் கடல்கடந்து கரையடைந்த
திறலோ ஞேர்பால்
நாரியர னன்பன்பண் டிதமணியாங் கதிரேச
நாவல் லோனே.

---

யாழ்ப்பாணம் பரமேசுவரக்கல்லூரித் தலைமைத்தமிழாசிரியர்

## பிரமஸ்ரீ நவநீதகிருஷ்ணபாரதியாரவர்கள்

இயற்றியது.

புவியுல காட்சியுங் கவியுல காட்சியும்
ஏத்தப் படைஇய சூத்திரக னென்போன்
ஆரியத் தியாத்த சீரிய பிறப்பான்
அந்தண னாவான் அருந்தொழி றன்னான்
வணிகனைப் பயின்று குணம்பல பூண்டு
வண்மையா னொடித்து மண்ணொடு விண்வளைஇ
வித்துசீர்ச் சாரு தத்தனெனு மாலைச்
சேற்றின் முளைத்தெழு செழுந்தா மரையெனக்
கணிகையிற் பிறந்து குணநலன் சிறந்து
காதல்கொண் டன்னவன் சாதறவிர்த் துய்ந்த
வயந்த சேனைதா னயந்த வரலாற்று
நாடகக் காப்பியத் தூடே பயின்ற
பாட்டு முரையும் வல்லோர் பகர்ந்த
வுள்ளுறைக் குறிப்புந் தெள்ளிதி னேற்றி
நடையுந் தொடையு நல்லிசைச் சூழலும்
தொடர்ந்தகப் படுத்தித் துரிசின் றதற்கொரு
படிபடைத் திட்ட பான்மைத் தாமென
வியப்புறத் தமிழிற் பெயர்த்திரு மொழிக்கும்
அதுபொது வாகி யணிசெய வணிந்து
நறிய மண்ணியல் சிறுதே ரெனும்பெயர்
சூட்டிப் பெரும்பெய ரீட்டினன்; அகம்புறம்
வாய்ந்த விலக்கிய மலர்ப்பூந் தண்சுனை
தோய்ந்துகளித் தாடித் தொல்காப் பியமுத

லேய்ந்த விலக்கணத் துறைவழி யெழுந்து
தெய்வங் கமழுந் திருமுறைக் கோயிலுண்
முறையொடு போந்தங் கிறைசீர் பாடி
மறையமு தருந்திக் குறைவெலா நிறைந்து
வடகலை முற்றித் தென்கலை தெளிந்து
வெள்ளி வீதியைத் தெள்ளிப் பெயர்த்தும்
நலப்பெருஞ் சிறப்பிற் பலப்பல நூலுரை
யியற்றியும் பயன்கொளப் பயிற்றியும் இமயத்
துச்சிநின் றிம்மென் றொழுகியுல கோம்பும்
கங்கைச் செலவென மங்கலஞ் சான்ற
சொற்பெருக் காலே பற்பல விளைப்போன்
இலக்கிய வுலக மனைத்தையு மீன்றும்
இளமைச் செவ்வியின் வளமைகழி கில்லா
இருக்குமா மறையெனுந் திருக்கிளர் செல்வியின்
செவ்விநுகர் பேற்றைச் செந்தமிழ் கொளற்காத்
தான்றவ முயல்வோன்; ஆன்றோர் தமக்கெலாம்
ஊன்றுகோ லாகி யுற்றுழி யுதவல்
சான்ற திருவினன் றோன்று பாவலன்
என்னினெனக் கினிய வின்னுயிர் நண்பன்
மன்னிய பண்டித மாமணி
பன்னுகதி ரேச னென்னுநா வலனே.

---

அமராவதிபுதூர் வித்துவசிரோமணி

திருவாளர். வயி. நாக. ராம. அ.

## இராமநாதச்செட்டியாரவர்கள் இயற்றியவை.

விரிச்சசடை யிடைமதியத் திளங்குழவி
விளங்குதலை மேலோன் சற்றுச்
சிரிச்சுநெடு மதில்மூன்று மெரித்தபிரான்
றிருவடியே சிந்தை செய்து
பரிச்சகுடை மண்ணுடையான் சூத்திரகன்
வடமொழியிற் பரிந்த சின்ன
மிருச்சகடி யொன்றுவனைந் தானுங்கே
யதுநின்று விட்ட தம்மா. (1)

நெடுங்காலம் அச்சிறுதேர் நின்றநிலை
பெயராது நிற்பக் காணூஉக்
கொடுங்காலன் வலிகுறைத்த குளிர்காலன்
றிருநடனங் கொழிக்குந் தென்பாற்
படுங்காலம் வந்தெய்த இனியதமிழ்
வன்னமியை பதத்தாற் றீற்றித்
தொடுங்காலம் யாவருக்கு மெளிதாகிப்
பயனளிப்பத் தொடருண் டாக்கி. (2)

அச்சிட்டுப் பூணிறுவி ஆரமெலாம்
வலியுறுத்தி யலங்கா ரித்து
வைச்சிட்டுக் கடையாணி மாட்டியுயர்
நெடுங்கூடு வனைத்துப் போக்கிக்
கச்சிட்டுப் பொலிதனத்தார் காளைகளெல்
லாந்திரண்டு களிப்போ டீர்ப்ப
மெச்சிட்டுத் தமிழ்நாட்டுக் கோட்டுவித்தா
ஞரென்னில் விளம்பு வேனல். (3)

இலக்கியமும் இலக்கணமுஞ் சைவநூல்
 களுமலையா யிருக்கு முங்நீர்
கலக்கியமு தத்தினைக்கண் டெடுத்துண்டு
 பிறர்க்களித்துக் களித்தோர் நாளும்
அலக்கியம்யா ரையுஞ்செய்யா தெங்கள்குலத்
 தவர்புலமை யகிலங் தேர்வான்
துலக்கியநற் கதிரேசன் மித்தவேதன
 வேபெயர்போற் சொலத்தக் கோனே. (4)

சோழநாட் டினுமேன்மைத் தொண்டைநாட்
 டினும்வெண்மைச் சுடர்நாற் கோட்டு
வேழநாட் டினுமுயர்ந்து பலபுலவர்
 நாவலவர் மிடைந்து வாழும்
ஈழநாட் டினுஞ்சிறந்த பிரசங்க
 மழைபொழியு மெழிலி யாய்ப்பார்
ஆழநாட் டியதுவசன் பிறந்தபாண்
 டியநாட்டுக் கணிசெய் வானே. (5)

பார்ப்பான்சொற் றமிழ்பின்னேன் கிரந்தமிது
 வழவழப்பே பண்ணு மென்று
நீர்ப்பான்மை மிகுமுலகம் புகல்கின்ற
 பழமொழியை நெடிது நோக்கித்
தீர்ப்பான்வந் தவதரித்த சமஸ்கிருத
 சிம்மமெனத் திகழ்ந்து கீர்த்தி
போர்ப்பான்பண் டிதமணியெங் கதிரேசன்
 மகிபால புரேசன் மன்னே. (6)

---

உ

# அணிந்துரை.

---

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில்
தமிழ்ப்பேராசிரியர் (PROFESSOR) ஆக இருந்த ஸ்ரீமத்.
**சுவாமி விபுலாநந்தரவர்கள் B; Sc. (London)**
எழுதியது.

---

ஈழத்து நடுநாட்டிலே மாவலிகங்கைக்கரையிலே எழிலாரும் இளமரக்காவின் மருங்கணைந்த குளிர்பூஞ்சோலையொன்று உளது. மண்மடந்தையின்மார்பிற்கிடந்த மலர்மாலையெனத்திகழும் அப் பூம்பொழிலின்பாங்கர் அன்புடையாரொருவரது திருமனையிற் சின்னாட்டங்கியிருந்து, இளவேனிற்பருவம் இறுவதன்முன்னர்த் தமிழ்நலங்கனிந்த நல்விருந்தாகிய மண்ணியல்சிறுதேர் என்னும் இந் நாடகக்காப்பியத்தினைப் படித்துப்படித்து உளமகிழ்வெய்தினேம்.

சூத்திரகன் எனப் பெயரிய வடமொழிக்கவியரசர் யாத்தமைத்த மிருச்சகடிகம் என்னும் பிரகரணநாடகத்தின் நேர்மொழிபெயர்ப்பாகிய இம் மண்ணியல்சிறுதேர் தண்கதிர்மதியமும் இளவேனிலும் தலைப்பெய்த பூம்பொழில்போன்று இதயத்திற்கு இனிமைபயப்பது. தண்ணளிநிறைந்த தலைவராகிய சாருதத்தர் தண்கதிர்மதியம் போல்வார்; அவரது உயர்குணங்களிலீடுபட்ட வசந்தசேனை இளவேனிற் பொலிவுடையாள். "எழின்மிகு மிவர்தாங் துய்த்த வின்பநன்னிலை" இந் நாடகத்தினது தலைமைப்பொருள் (ஆதிகாரிகம்) ஆகும். கீழ்மகனாகிய சகாரன் வசந்தசேனையின்பால்வைத்த பொருந்தாக்

காதலும், அதனுலெய்திய நிகழ்ச்சிகளும், அறநெறிவழுவிய பாலகன் என்னும் அரசனை இடைக்குலத்துதித்த ஆரியகன் என்னும் நல்லோன் சூழ்வினைவலியால் வென்று உச்சயினி நகரத்தில் மணிமுடிபுனைதலும், ஆரியகற்கு உயிர்த்தோழனுகிய சருவிலகன் வசந்தசேனையின் தோழியாகிய மதனிகையைப் பெறுதலும், சூதாட்டத்திலே தோல்வியடைந்த சம்வாககன் பௌத்தமதத்துறவியாதலும், தனக்கு நன்றிபுரிந்த வசந்தசேனைக்கு உற்றுழியுதவலும் என்றின்னன தலைமகற்குப் பயன்றருவவாகிய பிறநிகழ்ச்சிகளாதலின் இவை சார்புப்பொருள் (பிராசங்கிகம்) ஆவன. சருவிலகன் மதனிகைகதை தொடர்ந்து நீண்டுவருதலின் கிளைக்கதை (பதாகை) யெனக் கொள்ளற்குரியது.

மேற்குறித்தவற்றை உளங்கொள்வதற்குக் கதைத் தொடர்பை யறிவது இன்றியமையாததாதலின், அதனை ஈண்டுத் தொகுத்துக்கூறுவாம்.

"அவந்திதிக மணிநகரி லந்தணர்தங் குலத்துதித்த" சாருதத்தர் வரையாதுகொடுக்கும் வண்மையினர்; இளமையில் வறுமைநேர்ந்துளாராயினும் தம் முயர்குணங்களினின்றும் சிறிதும் வழுவாதொழுகிவந்தார். ஒருநாள் மாலைக்காலத்திலே இவர் தேவபூசையை முடித்துக்கொண்டு நண்பனுகிய மைத்திரேயனைநோக்கி நாற்சந்திகூடுமிடத்துப் பிராமிமுதலிய தெய்வங்களுக்குப் பலியைக்கொடுக்கும்படி பணித்து இரதனிகையென்னும் பணிப்பெண்ணையும் அவனேடுடனனுப்பினர். உச்சயினிநகரிலரசுபுரிந்த பாலகன் என்னும் அரசனது மைத்துனனுகிய சகாரன் வசந்தசேனையைத்தொடர்ந்து அவளை வலிதிற்பற்றும் நோக்கமாக

விடனேடும் சேடனேடும் வீதியில் வருவோன் இருளிலே தடுமாறி இரதனிகையின்கூந்தலைப் பற்றுகின்றான். இத் தருணத்திலே திறக்கப்பட்டிருந்த வாயிலினுட்புகுந்த வசந்த சேனை சாருதத்தர முன்னிலையையடைகின்றாள். காம தேவாயதனம் என்னும் பூஞ்சோலையிலே கண்டநாண்முத லாகத் தனதுள்ளத்தைச் சாருதத்தர்பாற்போக்கிய வசந்த சேனையானவள் குலமகளாகிய தூதையுறையும் மனையினுட் புகுதல் தகவன்றெனை எண்ணிப் புறத்தே நிற்கின்றாள். அவளை இன்னளென்றறிந்த சாருதத்தர் அன்புரைகூறலும் அவள் தனது அணிகலன்களை அவர்பால் அடைக்கலமாக வைக்கின்றாள். பின்னர், சாருதத்தர் அவளைக் கொண்டு சென்று அவளது இல்லத்துய்த்து மீளுகின்றார். இவ்வள வோடு அணிகலன் அடைக்கலம் என்னும் முதல் அங்கம் முடிகின்றது.

சூதர்நிலை என்னும் இரண்டாம் அங்கத்தினுள்ளே, சூதாட்டத்தில் தோல்வியடைந்த சம்வாககன் வசந்தசேனை யின்முன்னிலையை யடைந்து தான் முன்னாளிலே சாரு தத்தருக்குப் பணியாளனாகவிருந்த வரலாற்றினைக் கூற, வசந்தசேனை அவ்வுரைகேட் டகமிக மகிழ்ந்து அவனது கடனைத் தீர்த்துவிடுதலும், பின்னர், அவன் உலகவாழ்க்கை யில் வெறுப்புற்றுத் துறவுபூணுதலும், அத்துறவியைத் தறிமுறி யென்னும் யானை பற்றுதலும், கன்னபூரகன் அவனை விடுவித்தசெய்தியை வசந்தசேனைக்கறிவுறுத்தலும் கூறப்பட்டன.

கன்னமிடல், சருவிலகன்பேறு, புயன்மறைப்பு, வண்டி மாற்றம், ஆரியகனைக்கோடல், வசந்தசேனைதுன்பநிலை, வழக்

காராய்ச்சி, தொகுத்துக்கூறல் என நின்ற ஏனைய அங்கங்களி னுள்ளுறைபொருளை 98, 129, 170, 213, 243, 253, 305, 359-ஆம் பக்கங்களிலுள்ள அடிக்குறிப்புக்களிற் கண்டு தெளிந்துகொள்க.

நாடகவகை பத்தினுள் இதனைப் பிரகரணத்தின்பாற் படுத்துவர். "பிரகரணத்தின்கதை கவியினாற் கற்பிக்கப் பட்டகதையாயிருத்தல்வேண்டும். நிகழ்ச்சி பூவுலகத்தில் நடக்கவேண்டும். தலைவன் அமாத்தியன் (மந்திரி), விப்பிரன், வணிகன் என்னும் வகையில் ஒருவனாய்த் தீரசாந்தனாய், அபாயமுற்றவனாய் அறம் பொருள் இன்பம் என்னும் மூன் றினையும் கருதியபொருளாகக்கொண்டவனாய் வருதல் வேண்டும். தலைமகள் தலைமகனது மனைவியாகிய குலமகளாக வாவது விலைமகளாகவாவது இருக்கலாம். குலமகள் மனையி லிருத்தல்வேண்டும். விலைமகள் புறத்தேயிருக்கவேண்டும். குலமகள் தலைவியாயின் சுத்தமெனவும், விலைமகள் தலைவி யாயின் விகிர்தமெனவும், இருவரும்வரின் சங்கீர்ணமெனவும் பிரகரணம் மூவகைப்படும். சங்கீர்ணப் பிரகரணத்திலே தூர்த்தர்பலர் தோற்றுவர்." மண்ணியல்சிறுதேர் சங்கீர்ணப் பிரகரணமென்பது தெளிவாகின்றது.

சாருதத்தன் "தீரசாந்த" னென்னும் வகையினைச்சேர்ந்த தலைவனாவான். தலைவர் நால்வகையர்; ஆடல் பாடலிலீடுபட் டின்புற்றிருக்கும் மென்னீர்மையோன் உவகைமேவிய தலைவன் (தீரலலிதன்) ஆவான்; பொறையும் அடக்கமும் நற் குணமனைத்தும் பொருந்திய இருபிறப்பாளன் தண்ணளி மேவியதலைவன் (தீரசாந்தன்) ஆவான்; மேன்மையும் பொறை யும் கருதியதுமுடிக்கும் ஆற்றலுமுடையோன் மேன்மை

மேவிய தலைவன் (தீரோதாத்தன்) ஆவான்; வெகுளியும் பொறாமையும் மேவித் தற்புகழ்ந்து மந்திரதந்திரங்களில் வல்லவனாய் அகங்காரமேற்கொண்டிருப்போன் தறுகண் மேவிய தலைவன் (தீரோத்ததன்) ஆவன். பெருமையும் உரனும் நால்வகைத் தலைவர்க்கு முரிய. அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவமஞ்சுதலும் பெருமைப்பால. கடைப்பிடியும் நிறையும் கலங்காது துணிதலும் வலியின்பால. இவையனைத்தும் சாருதத்தரிடத்திற் காணப்படுவன.

"நற்குணத்தேன் மிக்க நளினமலர் சீலவொளி
மிக்க மதியிடுக்கண் மேவினா—ரொற்கமெலாம்
வீட்டுமிடம் வேலையுட்சீர் மிக்கமணி யாமவரை
நாட்டிலறி யாரெவரோ நன்று" (செ. 199.)

என்னுஞ் சந்தனகன்வாக்கும்,

"கருதுமுயர் நம்பிக்கை வேர்வீழ்த்து
விநயமெனுங் கவடு போக்கி
யரியகுணத் தளிரீன்று பெருமிதமா
மலர்பூத்தே யடைந்தோர்க் கெல்லாம்
தருமளிசால் கொடையாகுங் கனிநிறைந்த
சான்றோனாந் தருவின் கண்ணே
மருவியவன் புறவினராம் புட்களெலா
மின்புற்று வதியு மேகொல்!" (செ. 138.)

என்னும் வசந்தசேனை வாய்மொழியும் சாருதத்தரது மாட்சிமிக்க வுயர்குணங்களை வெளிப்படுத்துவ.

தலைவரோடுற்ற தொடர்பினைநோக்கத் தலைவியர் எண் வகைப்படுவரென நாடகநூலாசிரியர் கூறுவர். எண் வகையோராவார்: ஸ்வாதீநபர்த்ருகை, வாசகசஜ்ஜை, விரஹோற்கண்டிதை, கண்டிதை, கலகாந்தரிதை, விப்பிரலப்தை, ப்ரோஷிதப்பிரியை, அபிசாரிகை என்ப. குறியிடத்துத் தலைவனைநாடிச்சென்றமையால் வசந்தசேனை அபிசாரிகையாவாள். சேற்றிற் பிறந்த செங்கமலம்போன்ற இம்மடவரல் நற்குணங்களுக்கு உறைவிடமாயினளாதலின் ஆரியகன் என்னும் அரசன் இவளைக் குலமகளிர்க்குரிய "வது" என்னுஞ் சொல்லால் அழைக்க அருள்செய்துள்ளான். கற்புக் கணிகலனாகிய தூதையும் இவளை உடன்பிறந்தாளெனக் கொண்டு பாராட்டினள். இவளிறந்தாளென எண்ணி அவலித்த விடனது வாய்மொழியாக அமைந்த செய்யுள் படித்துப் படித்துச் சுவைத்தற்குரியது:—

"நாகரிக நீர்நிறைந்த நதியைக் காணேன்
நலமிகுசீ ரிரதியவ ணகரஞ் சார்ந்தாள்
ஆகமொளி ரணிகளுக்கோ ரணியே யின்ப
வாடலினுற் பொலிசுமுக வணங்கே யந்தோ!
வாகைமிகுங் குணநிதியே முறுவ லாய
மணற்குன்றே யென்போல்வார் மகிழும் வாழ்வே
யோகைதரு மெழிற்பண்ட நிலைய மாய
வொருமதன னங்காடி யொழிந்த தந்தோ." (செ. 260)

"காமக்கிழத்தி தன்மகத்தழீஇ ஏமுறுவிளையாட்டிறுதிக்கண்" தலைமகள் அவளைநோக்கி, "மாசில் குறுமகளெவன்

பேதுற்றனை, நீயுந் தாயை யிவற்கென" ப் புலந்துகூறும் மரபும், புதல்வனைநோக்கிச் "சிறுபட்டி, ஏதிலார் கையெம்மை யெள்ளுபு நீதொட்ட-மோதிரம் யாவோயாங் காண்கு" என்றலும், தலைவனைநோக்கி "அணியொடு வந்தீங்கெம் புதல்வனைக் கொள்ளாதி" என்றலும், இவைபோல்வனவும் தமிழ்வழக்காயினும் ஈண்டுப் பொருந்துவவாகா; வசந்தசேனை கணிகையர் குலத்துதித்தும் உயர்குணமமையப்பெற்றுளாதலின். சாருதத்தரது செல்வத்திருமகனைக்கண்டு இவள்கூறும்வாசகங்கள் கன்னெஞ்சினையும் கரைக்குந்நீர்மைய. 217, 218 ஆம் பக்கங்களை நோக்குக. இச் சிறந்தபாகமே இந் நாடகத்திற்கு மண்ணியல்சிறுதேர் என்னும் பெயரினைத் தந்துநின்றது.

தலைவனுக்கு நண்பனாகிய மைத்திரேயனென்பான் விதூஷகனாவான். சகாரனது இலக்கணத்தினை 34 ஆம் பக்கம் அடிக்குறிப்பினுட் காண்க. சருவிலகன் உயர்குலத்துதித்தும் மதனிகைபாற்கொண்டவிழைவினாலே கன்னமிடலாகிய இழிதொழிலைச்செய்து அவளைப்பெறுகின்றான். அங்ஙனமாயினும், நண்பனாகிய ஆரியகனுக்குத் துன்பம்நேர்ந்ததெனக் கேள்வியுற்றவுடனே தான் நுகரவிரும்பிய இன்பத்தினை வெறுத்து நட்புக்கடன்றீர்க்க விரைந்துசெல்கின்றான்.

"நண்பரும் பெண்டிரும் நரர்க்கிப் பூமியில்
ஒண்பொரு ளென்பவூ றுற்ற விப்பொழு
தெண்படு மன்பினு லியைந்த நண்பனே
பெண்பலர் தம்மினும் பெரிய னுவனுல்" (செ. 131.)

என்னும் செய்யுள் அவனது பெருந்தகைமையைப் புலப்படுத்துகின்றது. ஆரியகன் இடைக்குலத்திற்பிறந்தானாயினும் அரசர்க்குரிய அருங்குணங்கள் நிரம்பப்பெற்று

ஞதலின் ஊழ்வலி அவனை யரசனுக்கியது. பாலகன் அறநெறி வழுவியொழுகினனாதலின், அவன்கீழமைந்த நீதிபதியும் துறையறிந்து முறைசெய்தற் கியலாதவனாயினன். நாடகப் பொருளினையும் நாடகபாத்திரரையும் ஒருவாற்ரு னாராய்ந் தாம். இனிச் சந்தி சுவை என்னு மிவற்றை யாராயப்புகுவாம்.

"அணிகலன் அடைக்கலம்" "சூதர்நிலை" "கன்ன மிடல்" என்னும் மூன்று அங்கமும் முகமாகச் "சருவிலகன் பேறு" "புயன்மறைப்பு" என்னும் இரண்டங்கமும் பிரதிமுக மாக வமைந்துநின்றன. "வண்டிமாற்றம்" "ஆரியகனைக் கோடல்" "வசந்தசேனை துன்பநிலை" என்னும் மூன்றங்கமும் கருப்பம் என்னும் மூன்ருஞ் சந்தியாவன. "வழக்காராய்ச்சி யும்" "தொகுத்துக்கூறல்" என்னும் பத்தாம் அங்கத்தில் வசந்தசேனை தோற்றுதற்கு முன்னுள்ள பாகமும் விளைவு ஆகும். பத்தாம் அங்கத்தின் எஞ்சிய பாகம் துய்த்தல் ஆகும்.

கவிச்சுவைததும்பும் தமிழ்ச்செய்யுள் முந்நூற்றெழுபத் தொன்று (371) வடமொழிச்சுலோகங்களுக்கு நேர்மொழி பெயர்ப்பாக இந்நாடகக் காப்பியத்திற்கு அணியெனத் திகழ் கின்றன. இவைதம்முள் ஒருசிலவற்றை யொன்பான்சுவைக் கும் உதாரணமாக எடுத்துக் காட்டுவாம்.

உவகைச்சுவை (சிருங்காரம்)–22, 33, 110, 139, 165, 166, 167, 170, 171, 182, 183, 184, 185.

பெருமிதச்சுவை (வீரம்)–3, 43, 44, 46, 76, 132, 133, 138, 201, 291, 297.

இளிவரற்சுவை (பீபற்சம்)–66, 68, 69, 120, 121, 122, 123, 146, 176, 177, 178, 179,

வெகுளிச்சுவை (ரௌத்திரம்)–60, 232, 290.

நகைச்சுவை (ஹாஸ்யம்)–19, 23, 27, 37, 92, 236, 242, 256.

மருட்கைச்சுவை (அற்புதம்)–55, 80, 150, 160, 163, 175, 192, 218, 349, 350, 351, 352.

அச்சச்சுவை (பயோற்கர்ஷம்)–15, 17, 18, 20, 58, 114, 222.

அவலச்சுவை (கருணை) – இந்நாடகக்காப்பியத்தினுள் இச்சுவை பெருவரவிற்று. 7, 8, 9, 10, 11, 12, 13, 34, 35, 36, 51, 53, 260, 265, 306, 315, 317, 318, 320, 321, 333, 337, 344, 345.

நடுவுநிலைச்சுவை (சமப்ரகர்ஷம்)–48, 128, 129, 130, 199, 200, 204, 205, 219, 224, 225, 231, 248, 251, 274, 296, 311, 327, 334, 355, 370. இவற்றினுள் 224 ஆம் செய்யுள் வீடுபேற்றிற்கு மார்க்கங்கூறிற்று.

இந்நாடகத்தினுள் வெகுளிச்சுவை(ரௌத்திரம்) மிகவும் அருகிவருதலை நோக்குக. ஒன்பதுசுவைகளையும் நவமணிகட்கு ஒப்பிடலாமாதலின் "மண்ணியல் சிறுதேர்" நவமணிக் குவையினைத்தாங்கி நடப்பதென்பது பெறப்படுகின்றது.

சுவை பற்றுக்கோடாக எழுந்த நால்வகைவிருத்திகளுள் இளிவரல் வெகுளி யிவற்றைச்சார்ந்துநிற்கும் ஆரபடிவிருத்தி ஈண்டைக்கியலாமையை நோக்குக. சாத்துவதியும் கைசிகியும் "பரந்திசை யெய்திய பாரதி விருத்தியும்" இந் நாடகத்தி

னுட் பொருந்திநின்றன. துன்பம்பற்றாத நற்குணம், ஆண்மை, தனக்கெனவாழாப் பெருந்தகைமை, இரக்கம், நேர்மை யென்னுமிவற்றோடு பொருந்திநடப்பது சாத்துவதி விருத்தி; ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் காமநுகரும் இன்பவிளையாட்டினை விரித்துக்கூறுவது கைசிகிவிருத்தி; பாரதிவிருத்தி பிரரோசனை வீதி பிரகசனம் ஆமுகம் என நால்வகைப்படும். இந் நாடகத்து முன்னுரையினுள் ஆமுகமும் பிரரோசனையும் அமைந்துநின்றன. ஆமுகம் பிரஸ்தாவனை யெனவும்படும். சூத்திரதாரன் நடியையோ மாரிஷனையோ விதூஷகனையோ விளித்துத் தனதுகருமம் ஏதோ பேசுவதுபோலச் சொல்வன்மையினால் நாடகத்துப் பொருளைக் குறிப்பாகவுணர்த்துவது ஆமுகமாகும். சபையோரின் உள்ளத்தில் மேல்வருவனவற்றைப் பார்ப்பதற்கு அவாவுண்டாகும்படி எடுத்துக்கொண்டபொருளைப் புகழ்ந்துகூறுதல் பிரரோசனை எனப்படும். பிரஸ்தாவனையினுள்ளே சூத்திரதாரன் வறுமையை வருணிப்பதும் மைத்திரேயனை "உணவிற்குத் தலைவராகவிருக்கவேண்டும்" எனக் கேட்பதும், முதலங்கத்தினுள் மைத்திரேயன் சாருதத்தரது நல்குரவினையெடுத்தியம்புவதும், பின்னர்ச் சாருதத்தன் தோன்றி,

"வறுமையும் மரணமும் மதித்து நோக்குறின்
வெறிதரு மரணமே விரும்பற் பாலதாம்
நெறிபிறழ் வறுமையிற் றுன்ப நீண்டதச்
செறிதரு மரணத்திற் சிறிது துன்பமே." (செ. 9.)

என வுரைப்பதும் நாடகத்தினுட் "சிறிதாகத் தோன்றிப் பலபட விரிவெய்தி நடக்கும் நாடகக் கருத்தாகிய" பீஜத்தை

உணர்த்துகின்றன. நல்லோர் நல்கூர்ந்தாரேனினும் அவர் தமது செம்மையிற் சிதைவுறார் என்பதே இந் நாடகக் கருத்தாகிய பீஜமாகும்.

இந்நாடகத்தினுள் வரும் அழகிய செய்யுட்களுட் பல வறுமைத்துன்பத்தை வருணித்துரைப்பன. கணிகையர் சீர்மை, கீழ்மக்கள்சீர்மை, சூதினியல்பு, நீதிமன்றம், களவு நூல், இசைநூலென்பன பிறபொருள்வைப்பாக இந்நாடகத்தினுட் காணப்படுவன.

சங்கப்புலவரும் சைவச்சான்றோரும் சேர்த்துவைத்த செழும்பொருணிதியை ஈட்டி யியற்றி அவையறிந்தீயும் வண்மைசான்ற வணிகமணியெனத் தமிழகம்போற்றும் பண்டிதமணியவர்கள் இம் மொழிபெயர்ப்பினை நோக்கக் கவிமணியெனவும் விளங்குகின்றார்கள். தமிழ்நலங்கனிந்த செவ்விய பாடல்களாகிய நவமணிக் குவையைத் தாங்கி இம் "மண்ணியல்சிறுதேர்" நடக்கின்றதென முன்னர்க்காட்டினும். கவிச்சுவைததும்பி மாட்சிமிக்க பாடல்கள் ஒரு சிலவற்றைத் தொகுத்துக்கோடலும் ஒருசார் பயன்றருவதாதலின் அப்பயன் நோக்கி ஒரு சில பாடல்கள் குறிப்பிடற்பாலன. அவைதாம். 43, 46, 79, 80 115, 117, 131, 139, 141, 142, 143, 146, 149, 150, 156, 160, 161, 162, 165, 171, 182, 186, 199, 218, 230, 245, 249, 254, 260, 265, 281, 283, 290, 296, 324, 329, 330, 331, 332, 344, 346, 349, 350, 351, 552, 360, 370.

பக்கந்தோறுங் காணப்படும் அடிக்குறிப்புக்கள் நூற்பொருளைத் தூய்மைசெய்து நுணுகியுணர்வதற்கும், நூனயத்

தினைக்கண்டு மகிழ்வுறுதற்கும் கருவியாக அமைந்துநின்றன. உரைநடை தெள்ளிதினியன்ற சொற்களானமைந்து உள்ளுந்தோறும் இனிமைபயப்பது.

இதன் முதனூலோடு தொடர்புடைய மற்றொரு நாடகத்தினைக் குறித்துப் புறவுரையாக ஒருசில கூறுதலும் பயனுடைத்தாகும். திருவநந்தபுரத்து மஹாமஹோபாத்தியாய ஸ்ரீமாந். கணபதிசாஸ்திரியாரவர்கள் குறிப்புரையோடு வெளிப்படுத்திய "சாருதத்தம்" என்னும் வடமொழிநாடகம் ஒன்று உளது. பாஸமகாகவி யியற்றிய சாருதத்தம் என்னும் மிச்ரப்பிரகரணம் என அந்நூற் றலையிற் பொறிக்கப்பட்டுள்ளது. ஆங்கில முகவுரையிலே பதிப்பாளராகிய சாஸ்திரியாரவர்கள் குறிப்பிட்ட சில விஷயங்களை மொழிபெயர்த்துத் தருவாம். "சூத்திரகனியற்றிய கீர்த்தி வாய்ந்த மிருச்சகடிகத்திற்குச் சாருதத்தம் என்னும் இந்நாடகம் அடிப்படையாவதெனச் சுவப்நவாசவதத்தம் என்னும் நூலினது முகவுரையினுள்ளே ஏற்கனவே கூறியுள்ளோம். முதலங்கத்தினமைப்பிலே இரண்டிற்கும் அத்துணை வேறுபாடில்லை. சாருதத்தத்தில் வசந்தசேனையைப் பின்றொடர்வாரிருவர்; மிருச்சகடிகத்தில் விடன், சேடன், சகாரனென மூவர். மிருச்சகடிகத்தின் இரண்டாமங்கத்திற் காணப்படும் மாதுரன், த்யூதகரன், தருத்துரகன் என்போர் சாருதத்தத்தில் வரவில்லை; சம்வாககன் சாக்கிய சிரமணனாகாது பரிவிராட் ஆகின்றான். மூன்றாம் அங்கம் இருநாடகங்களிலும் ஒத்தபான்மையது. நான்காமங்கத்திலே மதனிகை சஜ்ஜாலகர் (சருவிலகர்) உரையாடுதல் வசந்தசேனையின் செவிப்படுந்தருணத்திலே விதூஷகன் இடையே

தோற்றுகிறான்; விதூஷகன் போயினபின்னரே சஜ்ஜாலகன் வசந்தசேனையின்முன் வருகிறான்; மிருச்சகடிகத்தில் இவ்வங்கம் வேறுவகையாக நடக்கிறது. ஆரியக பாலகர் கதை சாருதத்தத்தில் யாண்டுங் காணப்படவில்லை. சாருதத்தத்திற் குறிப்பாகச் சுட்டப்பட்டவை மிருச்சகடிகத்தில் விரிவுறக் கூறப்படுகின்றன. சகாரனது வழுநிறைந்த வாக்கியங்கள் சாருதத்தத்தில் ஒருசிலமாத்திரம் உள்ளன. சூத்திரகன் அதனை அளவுகடந்து விரித்திருப்பது நோக்கற்பாலது. சாருதத்தத்துச் சுலோகங்கள்பல மிருச்சகடிகத்திற் பேதமின்றி வந்துபயில்கின்றன.''

பண்டிதமணியவர்கள் அளித்த நல்விருந்தாகிய இந் நாடகக்காப்பியமானது தமிழறிஞர்க்குத் தீஞ்சுவை பயப்பதெனக்கூறி இவ் வணிந்துரையை முடிக்கின்றோம்.

ஸ்ரீராமகிருஷ்ணசங்கத்து
இந்துஹைஸ்கூல்,
திருக்கோணமலை.
24-7-1933.

சுவாமி விபுலாநந்தர்.

---

# மதிப்புரை.

தஞ்சைக் கரந்தைத்தமிழ்ச்சங்கத்துத் தலைவரும் "தமிழ்ப்பொழில்" ஆசிரியரும் வழக்கறிஞரும் ஆகிய செந்தமிழ்ப்புரவலர் திரு. த. வே.

## உமாமகேசுவரம்பிள்ளையவர்கள் B. A; B. L.

எழுதியது.

உயர்தனிச்செம்மொழிகளுள் மிகச்சிறந்ததென அறிவுடையோர்போற்றும் தமிழ்மொழி, வளம்பெறத் திகழ்ந்த பண்டைக்காலத்தே இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத் தமிழ் எனும் முத்திறத்திலும் கவினுடன்விளங்கியதெனக் கருதப்படுகிறது. முத்தமிழ்ப்பெருங்காப்பியமெனும் சிலப்பதிகாரத்திலும் உரையாசிரியர்களின் குறிப்புக்களிலும் நாடகஇயலைப்பற்றியசெய்திகள் கிடைக்கின்றன. சிலப்பதிகாரமே முத்தமிழும்விரவியநூலெனவும், நாடகவுறுப்புக்களையுடைமையால் நாடகக்காப்பியமெனவும் கூறுதல் பெருவழக்கு. உய்த்துநோக்குமிடத்துப் பண்டைத்தமிழர் கருதிய நாடகம் நாம் கருதும் நாடகத்தினும் வேறென்பது போதரும். சிலப்பதிகாரத்திற் கூறப்படுவது ஆடலும் பாடலும் சார்ந்த கூத்து (Dance). அவிநயமும் அதன் சிறந்தஉறுப்பெனப் புலனுகின்றது. பாவகங்களின்பொருள், அவிநயக்கலையுணர்ந்தோர்க்கன்றி, விளங்குமாறில்லை. நடிப்போ (Action) அவிநயத்தினும் வேறு. தமது உள்ளத்தின் உணர்ச்சிகள் மெய்ப்பாட்டுடன் விளங்குமாறு தமது உரையோடு ஒட்ட இயங்குதல் நடிப்பாகும். கூத்தும் நாடகமும் ஒன்றோ? வேறோவெனும் ஆராய்ச்சி புலமை மிக்கோர் மேற்கொள்ளத்தகுவதொன்று. நல்லிசைப்புலவர்கள்

நாடகத்தமிழெனவிதந்தோதிய இலக்கியநூல்களும், இலக்கணநூல்களும் மறைந்தமையால் அவற்றின் உண்மை நிலையைக் காணுதற்கில்லை. பிற்றைநாட்களில், தெருக்கூத்தர்கள் ஆடும் குறவஞ்சி பள்ளு—போன்ற சிலநாடகங்கள் சிற்றூர்களில் பாமரமக்களை உவப்பித்துவந்தன. நாளடைவில் 'சினிமா' 'டாக்கி' முதலிய கண்கவர்காட்சிகள் தலைப்படவும் தெருக்கூத்துக்கள் வழக்கற்று மங்கிவருகின்றன.

நாடகக்கலை இவ்வாறாகத் தமிழகத்திற் குன்றிவருவதையும் மக்களின் இன்பவாழ்வுக்கும் அறிவுவளர்ச்சிக்கும் அக்கலை இன்றியமையாததென்பதையும் செவ்விதினுணர்ந்த செந்தமிழ்ப்புலவர்கள் சென்ற ஐம்பது ஆண்டுகளாக இக்குறையினை அகற்றத்தலைப்பட்டனர். இம்முயற்சியிற் றலைசிறந்தார் Professor சுந்தரம்பிள்ளையவர்களும் பரிதிமாற்கலைஞன் எனும் பெயரினைக்கொண்ட வி. கோ. சூரியநாராயணசாத்திரியாரவர்களும் ஆவர். இவ்விருவரும் தமிழ் ஆங்கிலம் ஆகிய இருமொழிப்புலமையும் நுண்ணறிவும் மிக்காராதலால் அங்கிலக்கவிஞர்களியற்றிய சிறந்த நாடகநூன்முறையினைப் பெரிதுந்தழுவிச் சில நாடகநூல்களை யியற்றினர். இவர்களைப் பின்பற்றி ஷேக்ஸ்பியரின் நாடகங்களிற் பலவற்றை மொழிபெயர்த்தும் தழுவியும் தமிழ்நாடகங்கள் பல புலவர்களால் எழுதப்பெற்றன. இவையன்றி நாடகக்கலையிற் கைவந்த சிலர் அரங்கில் நடித்தற்குரிய முறையிற் பற்பல நாடகங்களையியற்றியுமிருக்கின்றனர். இத்திறத்தனவாகிய நாடகநூல்களிற் பெரும்பாலன புலவர்கள் மெச்சுந்தரத்தனவாயில்லை; நாடகமேடையில் நடிக்கப்படுங்கால் கண்கவர்காட்சிகளாலும் இன்னிசைகளாலும் நகைச்

சுவைவிளைக்கும் நொடிப்புக்களாலும் கேட்போரை உவப்பித்தொழியும் பெற்றிமையுடையனவாயிருக்கின்றன. சிறந்த குறிக்கோளும், காவியநயங்களும், சொற்சுவை பொருட்சுவைகளும் இவற்றிற் காண்பதரிதாகின்றது. அங்கிலநாடகங்களைத் தழுவிய நூல்கள் அயல்நாட்டினரின் பழக்கவழக்கங்களையும் மனப்பான்மைகளையும் வெளிப்படுத்துவனவாய்த் தமிழ்மரபுக்கு ஏலாதனவாயிருக்கின்றன. இன்ன பலகாரணங்களால் இதுகாறும் வெளிப்போந்த நாடகநூல்கள் புலவர்கள்மனத்தைக் கவருந்தாத்தனவாயில்லை.

நமது நாட்டியல்பையே புனைந்தெழுதும் புலமைசான்ற வடமொழிக்கவிகள் பன்னூற்றாண்டுகளின்முன்னரேஎழுதிய நாடகநூல்கள், பல்வகைச்சுவைகளும், காவியநயங்களும் நிரம்பிய பேரிலக்கியங்களென மதிக்கப்படுகின்றன. அவற்றின் நயங்களைத் தமிழறிஞர் அறிந்துகோடற்கு மொழிபெயர்ப்புநூல்கள் இன்றியமையாத சாதனங்களாகின்றன. ஆனால் மொழிபெயர்ப்புவேலை மிக மிக அருமையானது. அதனைச் செவ்விதினியற்ற ஒரு தனிப்புலமை வேண்டும். முதனூலின்கருத்தை ஆடியின் நீழலென வேற்றுமொழியிலுரைத்தற்கு இருமொழிப்புலமையும் முதனூலாசிரியரினும் சிறந்த சொல்லாற்றலும் கவித்துவசக்தியும் வேண்டும். இத்தகைய சிறப்பியல்களையுடைய புலவர்கள் அரியராதலால் மொழிபெயர்ப்புநூல்களும் அரியவாகின்றன. காளிதாசர் இயற்றிய நாடகங்களிற் சிறந்த “சாகுந்தலம்” எனும் நூலை மறைமலையடிகள் புலவர்கள்போற்றுதற்குரியமுறையில் மொழிபெயர்த்துச் சில ஆண்டுகட்குமுன் தமிழுலகுக்கு ஈந்தனர். இதுபோது பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியா



ரவர்கள் மிருச்சகடிகம் என்னும் வடமொழிநூலை மண்ணியல்சிறுதேர் எனும் பெயரால் இயற்றித் தமி ழுலகிற்கு வழங்கியருளினர். வடமொழிக்கருவூலங்களிற் சொல்லழகு பொருளழகுநிறைந்து நற்பயன் விளைப்பன வாய்த்திகழுஞ் சிறந்த நூல்களைத் தமது நுண்மாணுழை புலனால் ஐயந்திரிபற ஆய்ந்தறிந்து முதனூலின் நிழற்படமே (Photo) போலத் தூயதமிழிற் பெயர்த்தெழுதித் தமிழ் மொழியை வளம்பெறச்செய்துவரும் பண்டிதமணியாரின் புகழைத் தமிழ்நாடு நன்கறியும். இவர்கள் மொழிபெயர்ப்பில் மிகவுங் கைவந்தவர் என்பதற்குச் சுக்கிரநீதியின் தமிழ் மொழிபெயர்ப்பே போதிய சான்றும். இவர்கள் வட மொழி தென்மொழிகளில் மிகப் புலமைவாய்ந்தவர்; அவற்றின் பேரிலக்கியங்களின் சொற்சுவை பொருட்சுவை களிற் பலகாலுந் தோய்ந்து தோய்ந்து இன்புறுபவர்; அணி யிலக்கணங்களையும் சுவைநயங்களையும் நன்கு ஆய்ந்து அனுப விப்பவர்; மகாகவிகளின் இருதயங்களை உளங்கொளக் கொண்டு தமது மொழிமதுகையாலும் சொல்வளத்தாலும் கேட்டார்ப்பிணிக்குந்தகையவாய்க் கேளாருங் கேட்பமொழி யும்ஆற்றல்படைத்தவர்; ஆதலால், பேரிலக்கியமெனக்கருதப் படும் மிருச்சகடிகத்தை மொழிபெயர்க்குந்தகுதி பண்டிதமணியாரவர்கட்கே யுரியதாகும். முன்னொருகால் அங்கிலமும் வடமொழியும் வல்லாரொருவர், தமிழ்ப் புலவ ரொருவரது துணைகொண்டு மிருச்சகடிகம் என்று எழுதப் பெற்ற மொழிபெயர்ப்புநூலைப் படித்திருக்கிறேன். அதி லுள்ள உரையும் செய்யுளும் மொழிவளமின்றிக் கொச்சை மொழியில் இயற்றப்பெற்றிருந்தமையால் மூலநூலையே அவ மதிக்கநேர்ந்தது. இம் "மண்ணியல்சிறுதேர்" என்ற நூல்

பயில்தொறும் பல்வகைச்சுவைகளையும் நல்கி மனத்தினை இன்புறுத்துகிறது. மூலநூலில் உள்ளபடியே உரையும் செய்யுளுமாக இயற்றியிருக்கின்றனர். தமிழிற் காணுத உவமங்களும் கற்பனாலங்காரங்களும் இதிற் காணப்படுகின்றன.

நல்குரவே நினைக்குறித்து நானிவ்வா றயர்வுறுவேன்
மல்கியநட் புரிமைகொடு வாழ்கின்ரு யென்னுடலிற்
புல்கியநீ ஈதெனதென் றெண்ணுறுமப் பொருண்முடிவை
அல்கியயா னுடனீப்பின் யாண்டடைவா யினியென்றே. (செ. 36)

எனச் சாருதத்தன் நல்குரவை விளித்துரைக்குங் கூற்று "என்னை வருத்திலையேல் இடும்பைக்கிடம் யாது சொல்லே" எனும் நமது சொற்கோவின்வாக்கை நினைவுறுத்துகின்றது. இந்நூலில் ஆங்காங்கு எழுதியிருக்கும் குறிப்புரைகளும் விளக்கங்களும், வடநாட்டுமரபுகளையும் சொன்னயங்களையும் தெரிந்துகோடற்கு மிகவுந் துணைசெய்கின்றன.

இந்நாடகநூலானது வடமொழிநாடகங்கட்கெல்லாம் காலத்தால் முற்பட்டது. இற்றைக்கு 1700 ஆண்டுகட்குமுன் சூத்திரகன் என்ற அரசனால் இயற்றப்பெற்றதெனக் கருதப்படுகிறது. அக்காலத்து ஆரியநாட்டின் நாகரிகநிலை, அரசியல், நீதிமுறை, பார்ப்பனர், கணிகையர், சூதர், கள்வர், அரசர் இன்ன பிறமக்கட்பகுதியினரின் உலகியல்நிலை முதலியவற்றையும், தொன்மையின் வடமொழிநாடகத்தின் அமைப்பினையும், கவிநயங்களையும் அறிந்துகோடற்குக் கருவியாயிருக்கின்றது. இவ் வரியநூலைக் கவின்பெற இயற்றித் தமிழுலகிற்கு உவந்தளித்த தமிழ்வள்ளலாகிய பண்டிதமணியவர்கட்கு எமதுநன்றி யுரியதாகும்.

கரந்தை,
9-7-1933.

த. வே. உமாமகேசுவரன்.

மதுரை இராமேசுவரம் தேவஸ்தானத்து
வடமொழிக்கலாசாலைத் தலைமையாசிரியர் (PRINCIPAL)
## பிரமஸ்ரீ V. சுப்பிரமணியஐயரவர்கள் B. A; L.T.
எழுதியது.

உலகியலைக் கண்ணாடிபோல் உள்ளது உள்ளவாறுகாட்டும்வண்ணம் இற்றைக்குச் சுமார் ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்குமுன் அரசரும் புலவருமாய்விளங்கிய சூத்திரகன் என்பவரால் வடமொழியிலியற்றப்பட்ட மிருச்சகடிகம் என்னும் பிரகரணநாடகத்தின் இத் தமிழ்மொழிபெயர்ப்பு ஒரு புதியமுறையி லமைக்கப்பெற்றுளது. வடமொழிநாடகங்களின் தமிழ்மொழிபெயர்ப்புக்களிற் பெரும்பாலும் செய்யுட்களை வசனநடையிலேயே எழுதிவிடுதல் இதுவரை நிகழ்ந்துவந்த வழக்கம். ஆனால், இம்மண்ணியல்சிறுதேர் மொழிபெயர்ப்பாளராம் பண்டிதமணியவர்கள் மேற்கூறிய வழக்கத்தை மேற்கொள்ளாது செய்யுட்களைச் செய்யுளாகவே சமைத்துள்ளார். இதனால் முதனூலுக்குரிய இலக்கியப்பெருமை சற்றுங் குன்றாமல் மொழிபெயர்ப்புக்குங் கொண்டுவரப்பட்டுளது. இந்நூல் வழிநூலாயினும் முதனூல் போலவே விளங்குகின்றது.

நூலின் பல்வேறுபகுதிகள் முதனூலோடு ஒப்பிட்டுத் தருவித்தருவிப்பார்க்கப்பட்டன. பார்க்கப்பார்க்க மொழிபெயர்ப்பின்பெருமை மேன்மேலும் விளங்கலாயிற்று. கருத்திலோ அமைப்பிலோ நடையிலோ சுவையிலோ சற்றும் பிறழாமல் முதனூலின் பிரதிபிம்பம்போல் விளங்குகின்றது என்று துணிவுடன் கூறலாம். வடமொழியில் தெளிவுகுன்றிக் கிடக்குஞ் சிலஇடங்களில் இத் தமிழ்நூல் தெளிவுமலிந்து

காணப்படுகின்றது. இவற்ருல் இது முதனூலினும் மேம்பாடுடையதாகக் கருதற்பாலது.

முதனூலிற், பல்வேறுவிருத்தங்கள் கையாண்டிருப்பதற்கேற்ப மொழிபெயர்ப்பிலும் இடத்திற்குப் பொருத்தமாக மிக்கதிறமையுடன் விருத்தவகைகள் கையாளப்பட்டிருக்கின்றன. செய்யுள்நடை இலகுவாக ஓடுவதுடன் தெளிவு பொலிந்தும் நிற்கின்றது. கருத்திற்கேற்றவாறு நடையில் உயர்வுதாழ்வு காணப்படினும் அதன் மேம்பாடு ஓரிடத்தும் குன்றவில்லை. வசனமும் எளிதில் அறியக்கூடிய இயல்பு வாய்ந்துவிளங்குகின்றது. இவ்வாறு வடமொழிக்கருத்துக்கள் குன்ருமலும் மாருமலும் வழிநூலிற் கொண்டுவரப்பெற்றிருத்தல் மிகவும் பாராட்டத்தக்கது.

முதனூலை நிழல்போல் எவ்வாற்ருனும் அடுத்துச் செல்கின்றது என்னும் இம் மொழிபெயர்ப்பின்பெருமையைச் சிலர் ஒருகுறைவாகக் கருதலாம். இவர்களின் எண்ணம் மொழிபெயர்ப்பில் முதனூலின் பருப்பொருளைமாத்திரம் தழுவிக்கொண்டு பிறவற்றிற் சுதந்தரமாகச்செல்லலாமென் பதே. தற்காலத்தில் இதை ஏற்றுக்கொள்பவர் மிகச்சிலரே யாவர். ஏனெனில் இவ்வெண்ணத்துடன் செய்யப்பெற்ற மொழிபெயர்ப்புக்கள் வழுக்கள் மலியப்பெற்று முதனூற் கருத்துக்களைச் செவ்வனே தெளிவுறுத்த இயலாதிருத்தல் பற்றியேயாம். ஆதலால், சிறந்த மொழிபெயர்ப்பாளர்கள் ஒவ்வொரு அம்சத்திலும் முதனூலையே தழுவிநிற்பது நலமென்றுகருதி வழிநூல்களை இயற்றுகின்ருர்கள். பிற்கூறிய நெறியில் நிற்கும் பண்டிமணியவர்கள் மிக வியக்கத்தக்க

திறமையுடன் முதனூலினியல்பை நெருக்கத்துடன் தழுவி இந்நூலை வெளிக்கொணர்ந்திருப்பது பெரிதும் போற்றத் தக்கது.

தமிழ்மொழியில் இவ்வித முயற்சியில் இதுதான் முதலாவதென்று கருதுகின்றேன். வடமொழியிற் புகழ்பெற்ற மற்ற நாடகங்களையும் இதுபோலத் தமிழ்மொழிக்குக் கொண்டுவரப் பண்டிதமணியவர்கள் முன்வருவார்களானால் தமிழ்மொழிக்கும் வடமொழிக்கும் ஒருங்கே நன்மைபயப்பவராய் இருமொழியாளருடைய நன்றிக்கும் பாத்திரராவார்கள். அன்றியும், மேற்றிசை நாடக ஆசிரியர்களைப் பின்பற்றி இதுகாறும் தமிழ்மொழியில் நாடகங்களியற்றும் தற்கால ஆசிரியர்களுக்குக் கண்திறந்துவிட்டுத் தொன்றுதொட்டு நாட்டில் வழங்கிவந்திருக்கும் வடமொழிவழியிற் செல்வதற்கு வழிகாட்டிய புகழும் இவர்களுக்கு எய்துமென்பது திண்ணம்.

Rameswaram
Devasthanam Patasala,
Madura.
3—8—33.

**V. Subramaniya Iyer,**
Principal.

## மண்ணியல்சிறுதேர்க் கதைச்சுருக்கம்.

---

அவந்திதேயத்திலேயுள்ள அழகிய தலைநகராகிய உச்சயினிநகரத்திலே அந்தணர்குலத்திலே வேதவேள்விமுதலிய வைதிககன்மங்களை முறைப்படிசெய்துவந்த உயர்குடியிலே சாகரதத்தனுக்குப்புதல்வனுகச் சாருதத்தன் என்பான்தோன்றினுன். இவன் பிறப்பால் அந்தணனுயினும் வாணிகத் தொழிலைமேற்கொண்டு பொருளீட்டி வணிகர்தெருவில் வாழ்ந்தமையால் வணிகன் எனவும் வழங்கப்பட்டான். இவன் அன்பு தயை ஈகை அறப்பற்று கடவுட்பத்தி முதலிய உயர்குணங்களையுடையனுய் இளம்பருவத்தே கற்பிற்சிறந்த தூதை என்னும் பெண்ணை மணந்தான். நற்குண நற்செய்கை மிக்க அக் கற்பரசியாகிய தூதையின்பால் இவற்கு உரோகசேனன் எனப் பெயரிய ஒருபுதல்வன் பிறந்தான். அக் கற்புடைமனைவியோடும் செல்வப்புதல்வனேடும் பெரும்பொருளுடையனுய் இல்லறவாழ்க்கையை யினிதுநடாத்திக்கொண்டிருக்குங்கால், தான்படைத்த திரண்டபொருண்முழுதையும் வறியார்க்கும் புலவர்க்கும் இசையாளர்முதலியோர்க்கும் ஈந்து இளமைப்பருவத்தே வறியனுயினுன். இந் நிலையில், அந்நகரிற் கணிகையர்குலத்திற்றோன்றிய வசந்தசேனையென்பாள், இளமையும் எழிலும் உடையளாய் நற்குணநிலையமாகவும் மிகப்பெருஞ்செல்வமும் பலகட்டுக்களையுடைய உயர்ந்த மாளிகையும் உடையளாய் நல்வாழ்க்கையிற்றிகழ்ந்தும்விளங்கினுள். அவள் ஒருநாள் அந்நகரத்துமக்கள் எல்லோரும் இள

வேனிற்காலத்து இன்பநுகர்ச்சிப்பொருட்டு நகர்ப்புறத்தே யமைந்த காமதேவாயதனம் என்னும் உய்யானத்தையடைந் தனராகத் தானும் ஆண்டுப்போந்து அங்குவந்திருந்த வாணிக வள்ளலாகிய சாருதத்தனைக் கண்டாள். அவ் வசந்தசேனை விலைமகளிர்குலத்துப் பிறந்தாளாயினும் குலமகளிரொழுக் கத்தையே பற்றிநின்றவளாதலின், பொருள்விழையாது அச் சாருதத்தன்குணங்களுக்கு ஈடுபட்டுக் காதலுற்றாள். சாரு தத்தனும் அவள்காட்சியில் ஈடுபட்டானாயினும், தன்பொரு ளற்றநிலைகருதி அவளை யடையமுயன்றிலன். இங்ஙனம் ஒருவரையொருவர்தம் உள்ளமீர்த்தலால் இருவரும் மாறிப் புக்கிதயமெய்திப் பின் தத்தம் உறையுளையடைந்தனர். இவர் கள்நிலை யின்னவாக, அந்நகரத்து அரசன் பாலகனுடைய காதற்கிழத்தியின் உடன்பிறந்த மணவாக்கன்னிமகன் சமத் தானகன் எனப் பெயரிய சகாரன் என்பான் காதற்சுவை யறியானாய்த் தன்னைவிரும்பாதநிலையில் அவ்வசந்தசேனையை வலிந்துபற்ற மிக்க முயற்சியுடையனாயிருந்தான். ஒருநாள் மாலைக்காலத்திறுதியில் வசந்தசேனை தெருவில் தனியே நடந்துபோதலைக் கண்டு அவ் வறிவிலாச் சகாரன், தன் துணைவராகிய விடன் சேடன் இவர்களுடன் நயந்தும் அச் சுறுத்தியும் பலபேசி அவளைப் பின்றொடர்வானாயினன். அவ் வமயத்திற் சாருதத்தன் தன்இல்லத்தில் தேவபூசையைநிறை வேற்றிப் பிராமிமுதலிய தெய்வங்களுக்குப் பலிதரத் தன் பார்ப்பனத்தோழனாகிய மைத்திரேயனையும் அவனுக்குத் துணையாக இரதனிகை என்னும் பணிப்பெண்ணையும் விளக் குடன் வெளிச்செலவிடுத்தான். அவர்கள் வாயிற்கதவைத் திறந்ததும் சகாரனால் மிகநெருக்கித் தொடரப்பட்ட வசந்த

சேனை, அவற்கு அஞ்சி அவன் வாய்மொழியால் திறக்கப் பட்ட இல்லம் சாருதத்தனது என உணர்ந்து அதனுட்புகுந் தனள். சகாரன் தன்முயற்சி பயனுறாமையாற் சூள்கூறிச் சென்றான். தன் இல்லத்திற்கு வந்த வசந்தசேனையைச் சாருதத்தன் உபசரித்து அவள் கொடியவர்க்கு அஞ்சி அடைக்கலமாகத் தந்த பொற்பணிமுடிப்பைத் தன்வீட்டிற் பாதுகாப்பில்வைத்து அவளுக்குத் துணையாகச் சென்று அவளை அவள்வீட்டில்விடுத்துத் திரும்பினான்.

தன் இல்லம் எய்திய வசந்தசேனை, மற்றாநாள் தன்சேடி மதனிகையுடன் சாருதத்தன்பால் தனக்குள்ள காதலைப்புலப் படுத்து உரையாடிக்கொண்டிருக்குங்கால், சூதில் தோற்று, மாதுரன் சூதன் இவர்களுக்கு இறுக்கக்கடவ பத்துப்பொன் களினிமித்தம் அவர்களாற் றுரத்தப்பட்டுத் தன்பக்கல் அடைக்கலம்புகுந்த சம்வாககன் என்பான், முன் சாருதத் தற்கு உடம்புபிடிக்குந்தொழில்புரிந்தவனென்று தெரிந்து, சாருதத்தனிடத்துள்ள அன்பால் தன் பொன்வளையலைக் கொடுத்து அவன்கடனைத் தீர்த்தாள். அச் சம்வாககன் உலகப்பற்றையொழித்து அப்பொழுதே பௌத்தசந்நியாசி யாயினான்.

இஃது இங்ஙனமாக; ஒருநாளிரவு சாருதத்தன் இரேபில னது இசையைக் கேட்டு இன்புற்றுத் தன் இல்லமெய்தித் துயில்புரிவானாயினான். அவனால் இரவில் வசந்தசேனையின் பொற்பணிமுடிப்பைப் பாதுகாக்கநியமிக்கப்பட்ட மைத்தி ரேயன் அதனை உள்ளிடத்தேவைத்துத் தானும் உறங்கினான். இந்நிலையில் வசந்தசேனையின் பணிப்பெண்ணாகிய மதனிகை யின்பாற் காதல்மேற்கொண்ட சருவிலகன் என்னும் பார்ப்

பான் ஒருவன் அவளைத் தனக்கு உரிமையாக்குதற்குரிய பொருளில்லாமையாற் சாருதத்தனது இல்லத்திற் கன்ன மிட்டு உட்சென்று அப்பொற்பணிமுடிப்பைக் கைப்பற்றித் தன் தகாதசெயலுக்கு வருந்தி வெளிச்சென்றான். மற்றைநாட் காலையில் அப்பொற்பணிக்களவுக்கு வருந்திய சாருதத்தன் பழிக்கு ஆளாகாவாறு கற்பரசியாகிய அவன் மனைவிதந்த இரத்தினமாலையைமைத்திரேயன் வசந்தசேனைக்குக்கொடுக்க எடுத்துச்சென்றான்.

இதற்கிடையில் வசந்தசேனை, தன் இல்லத்திற் சாரு தத்தனது ஓவியஉருவத்தி லீடுபட்டிருக்குங்காற் சகாரன் பொருளுடனுய்த்த வண்டி வர, அதன்கண் ஏறிச்செல்லப் பணித்த தாயைச் சினந்து மறுத்துரைத்துக்கொண்டிருந் தாள். அவ்வமயம் சருவிலகன் போந்து களவிற்கொண்ட பொற்பணியை மதனிகையின்கருத்துப்படி வசந்தசேனை யிடம் சேர்த்து, மதனிகையை அவள் தரப் பெற்று, உவகை யோடு திரும்பிவருங்கால் இடையே தன் நண்பனாகிய ஆரியகன் என்னும் இடைச்சிறுவன் பாலகன் என்னும் அரச னாற் சிறைப்படுத்தப்பட்டசெய்திகேட்டு, மதனிகையை அவள் பெற்றார்பாற்போக்கி நண்பனைச் சிறையினின்றும் விடுவிக்கச் சென்றான். பின்னர், மைத்திரேயன் வசந்த சேனையின் இல்லமெய்தி அவள்செல்வநிலைகண்டு வியப்புற்று உபவனத்தில் அவளைக்கண்டு இழக்கப்பட்ட அடைக்கலப் பொற்பணிக்கு மாற்றுப்பொருளாக இரத்தினமாலையைக் கொடுத்து வருத்தத்துடன் திரும்பினான்.

அன்றிரவில் முகிற்கூட்டங்கள் விண்ணிற்செறிந்து மழைபெய்தன. சாருதத்தன் மைத்திரேயனதுவரவை எதிர்

பார்த்திருக்குங்கால், மைத்திரேயன் வந்து நிகழ்ந்ததுகூறி வசந்தசேனையின்வரவைத் தெரிவித்து அவ் விலைமகள்நட்பை வெறுத்தொழிக்கவேண்டுமென்றான். சாருதத்தன் அவள் உயர்குணங்களைப் பாராட்டிக்கொண்டிருந்தான். இந் நிலையில் மழைக்காலிருளில் வசந்தசேனை, விடன் சேடி இவர்கள் துணையுடன் சாருதத்தனது இல்லத்தையடைந்து அவன் களவிலிழந்த தன் அணிகலன்களை அவற்குக்காட்டி மகிழ் வித்து, அன்றிரவு அங்குத்தங்கி அவனோடு இன்புற்றிருந் தாள்.

மற்றுநாள் அதிகாலையில் தன்வண்டியில் வசந்தசேனையை யேற்றி அழைத்துவரும்படி சேடனுக்குக் கட்டளையிட்டுச் சாருதத்தன் புட்பகரண்டகம் என்னும் பூஞ்சோலையை யடைந்தான். வசந்தசேனை துயினீத்தெழுந்து இரத்தின மாலையைத் தூதைக்கு அனுப்பத் தூதை மறுத்துவிட்டாள். அவ்வமயம் "யான் விளையாடுதற்கு இம் மண்வண்டிவேண்டா; பொன்வண்டி வேண்டும்" என்று சாருதத்தன்புதல்வன் உரோகசேனன் அழுதுகொண்டிருத்தலை வசந்தசேனை கண்டு மனம்நெகிழ்ந்துருகித் தன் பொற்பணிகளைக் கழற்றி அக் குழந்தைக்குக்கொடுத்துப் 'பொன்வண்டி செய்துகொள்ளுக' என்று கூறிவிட்டுச் சாருதத்தன்வண்டியிற் புறப்படச் சித்த மாக இருந்தாள். சாருதத்தனுடைய சேடன், வண்டி விரிப்பை யெடுத்துவருதற்பொருட்டு வண்டியோடு வேற் றிடஞ் சென்றிருக்குங்கால், சகாரன் சொற்படி தாவரகன் என்னும் சேடன் கொணர்ந்த வண்டி, தெருவிற் பிறவண்டி கள் மிகுதியாகப் போக்குவரத்துச் செய்தமையால் தடைப் பட்டுச் சாருதத்தன்வீட்டு வாயிலில் ஒதுங்கிநின்றது.

வசந்தசேனை தீயூழ்வலத்தாற் சகாரன்வண்டியிலேறினாள். அவ்வமயம் சிறைப்பட்டிருந்த ஆரியகன் விலங்கை முறித்துக் காவலர்பின்றொடர மறைந்து ஓடிவந்து சாருதத்த னுடையவண்டியைக் கண்டு சேடன் வருத்தமானகன் பேச்சினால் அது சாருதத்தனது என்று அறிந்து அதன் பின்புறமாக ஏற, வசந்தசேனை ஏறினாளென எண்ணிச் சேடன் வண்டியைச்செலுத்தினான். வழியிடையே ஆரிய கனைத் தேடிப்பிடிக்கவந்த படைவீரர் இருவருள் சந்த னகன் உண்மையறிந்து வீரகனைத் துன்புறுத்தித் தன் வாட் படையை ஆரியகனுக்கு ஈந்து தன்நண்பனாகிய சருவிலகனைத் தேடிச்சென்றான்.

இது நிற்க; புட்பகரண்டகமென்னும் பூஞ்சோலையிற் சாருதத்தன் வசந்தசேனையின்வரவை யெதிர்பார்த்திருக்குங் கால் வண்டி வந்தது. அதன்கணிருந்த ஆரியகன் சாருதத் தனை அடைக்கலம்புகுந்து வரலாறுகூறச் சாருதத்தன் அவற்கு அன்புரைகூறி ஆறுதலளித்து நட்புக்கொண்டு தன் வண்டியிலேயே மறைவாகப்போக்கி வழியில் தீநிமித்தமுண் டாகத் தன் இல்லம்நோக்கிச் சென்றான்.

இஃது இங்ஙனமாக; சம்வாககனாகிய பௌத்தசந்நி யாசி, சகாரனது பூந்தோட்டத்துள்ள புட்கரிணியில் ஆடை யொலிக்கச்சென்று, சகாரனால் அடித்துத் துன்புறுத்தப் பட்டு, விடன்வேண்டுகோளால் விடுதிபெற்று வெளிச்சென் றான். சகாரன் விடனோடு பூஞ்சோலையினழகி லீடுபட்டுத் தன்னைப்புகழ்ந்துகொண்டிருக்கும் அமயம், தாவரகன் என் னும் சேடன், அறியாமல் ஏறிய வசந்தசேனையுடன் வண்டியை ஓட்டிவந்தான். அவன்குரலோசை மாறுகஇருத்த

லால் ஐயமுற்ற வசந்தசேனையைக்கண்டு சகாரன் அஞ்சி விலக, உண்மையுணர்ந்த விடன் வசந்தசேனைபால் இரக்கங் கொண்டு அவளைச் சகாரன் அறிந்துகொள்ளாமற்செய்யப் பலவாறு முயன்றும் அது பயன்செய்யாதொழிய, முடிவிற் சகாரனைநோக்கி, "வசந்தசேனை நின்னைக் கூடுதற்கு வந்திருக்கின்றாள்" என்றான். அதுகேட்டு மகிழ்ந்த சகாரன் பலவாறு காதலுரைபகர்ந்து வசந்தசேனையின்காலில் வீழ்ந்து வேண்டவும் அவள் அவனைச் சினந்து வெறுத் தொதுக்கினாள். அது பொறாத சகாரன் வண்டியினின்றும் அவளை யிறக்கிக் கொலை செய்யத்துணிந்து விடனையும் சேடனையும் அத்தகாதசெயலிற் றலைப்படவேண்டினான். அவர்கள் மறுத்துப் பற்பல நீதி புகன்று தடைப்படுத்தவும் கேளானாய்த் தானே கொலைசெய்ய முற்பட்டான். விடன் மீண்டும் வலிந்து தடைப்படுத்தினான். அதன்பின் சகாரன் தனக்கு அவ்வெண்ணமில்லையென்று வஞ்சவுரைபகர்ந்து சேடனைத்தேடும்படி விடனைப்போக்கித் தான் காமுகனாய்நடித்து மீண்டும் வசந்தசேனையை வேண்டினான். அவள் மறுத்துரைக்கவே, அது பொறானாய் அவளைச் சாமாறு கழுத்தைக் கையால் நெரித்தான். வசந்தசேனை உயிர்ப்பற்று நிலத்தில்வீழ, இறந்தனளென்றுகருதிச் சகாரன் ஒருபுறத்தே யொதுங்கியிருந்தான். அப்பொழுது விடன் சேடனுடன்வந்து நிகழ்ந்ததுகண்டு பலவாறு வருந்தி, இச்சகாரக்கயவன் இக்கொலைக்குற்றத்தைத் தன்பாலேற்றவுங்கூடும் என்று நினைந்து அவனை யச்சுறுத்தி அவன் நட்பையும் ஒழித்துச் சருவிலகன் சந்தனகன் என்னும் இவர்கள் இருக்குமிடந் தேடிச்சென்றான். சகாரன் வசந்தசேனையின்உடலைச் சருகுகளால்மூடிவிட்டுச் சேடனைத்

தன்னில்லத்து மேன்மாளிகையில் விலங்கிட்டுவைத்து, "வசந்தசேனையைச் சாருதத்தன்கொன்றான்" என்றுவழக்குத் தொடர எண்ணி நீதிமன்றஞ்சென்றான். அதன்பின், பௌத்தசந்நியாசியாகிய சம்வாககன் மீண்டும் அங்குவந்து தன் துவராடையைக் கழுவி அச்சருகுக்குவியலில் உலர வைத்தான். அது மூச்சுக்காற்றால் அலைதலைக்கண்டு உற்றுப் பார்த்து, ஒரு பெண்ணின்கை வெளிப்படுதலை யறிந்து, இலைகளைவிலக்கி முன் தனக்கு உதவிபுரிந்த அம்மையெனத் தெளிந்து, வருந்தித் தண்ணீர்கொடுத்துக் களைதீர்த்து நிகழ்ந்ததுணர்ந்து, தன் பௌத்தமடத்துக்கு அழைத்துச் சென்று ஆங்குள்ள தருமசகோதரியின்பக்கலிருத்தினன். இங்ஙனமிருக்க.

சாருதத்தன்மேற் கொலைக்குற்றவழக்குத் தொடர்வதாக எண்ணிச் சென்ற சகாரன், ஆடையணிகலன்களால் தன்னையலங்கரித்துக்கொண்டு நீதிமன்றஞ் சென்று ஏவலன் முகமாகத் தன்கருத்தை நீதிபதிக்கு அறிவித்தான். நீதிபதி இவன் கயமையைநினைந்து முதலில் மறுத்துப் பின் தனக்கு ஏதம்விளையுமென அஞ்சி வழக்கைக் கூறும்படி கட்டளையிட்டான். சகாரன் மகிழ்ந்து பலவாறு தற்பெருமைபேசிப் பின் "புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட்டத்துள் வசந்தசேனையைப் புகுவித்து அவள் அணிகலன்களினிமித்தம் எவனோ கொலைசெய்துவிட்டான்" என்று வழக்குக்கூறினன். நீதிபதி, அவ்வழக்கு வசந்தசேனையின் தாயைப்பற்றியதென வுணர்ந்து அவளை யழைத்துவரச் செய்து அவளுரையால் அது சாருதத்தனைப்பற்றியதென் றறிந்து அவனையும் அழைத்து விசாரித்தான். சாருதத்தன்,

"வசந்தசேனை அவள் இல்லத்துக்கு எவ்வாறுசென்றுளென்பதை யான் அறியேன்" என்று கூற, அவ்வமயம் முன் சந்தனகனால் துன்புறுத்தப்பட்ட வீரகன் நீதிமன்றம்புகுந்து கூறியமொழியால் வசந்தசேனை சாருதத்தன்வண்டியிலேறிச் சென்றுள் என்பது வெளியாயிற்று. புட்பகரண்டக மென்னும் பூஞ்சோலையில் மரம்வீழ்ந்து மற்றொருபெண் இறந்து கிடக்க, அவளுடலைக் கண்டுவந்து வீரகன் கூறியதால் பெண் கொலையுண்மையும் வெளிப்பட்டது. இந்நிலையில் உரோகசேனற்கு வசந்தசேனை முன்தந்த அணிகலன்களைத் திருப்பி அவளிடங்கொடுக்கும்படி அனுப்பப்பட்ட மைத்திரேயன், வழியிடையே சாருதத்தன் நீதிமன்றத்துக்கு அழைக்கப்பட்டதைக் கேள்வியுற்று வசந்தசேனையினிடம் செல்லாமல் நீதிமன்றம்நோக்கி வந்தான். வந்து நிகழ்ச்சியுணர்ந்து சகாரனோடு கைகலந்து கலகம்விளைத்துக்கொண்டிருக்கும்போது, அவன் கக்கத்தினின்றும் அணிகலன்கள்வீழ, அவை வசந்தசேனையுடையனவென்பது சாருதத்தன்முகமாக வெளிப்பட்டது. இவ்வெல்லாச் சான்றுகளையுமுணர்ந்த நீதிபதி தன் மனச்சான்றுக்கு மாறாகச் சாருதத்தன் குற்றவாளியென அரசற்கு அறிவித்தான். அரசன் பாலகன் சாருதத்தனைக் கழுவேற்றும்படி கட்டளையிட்டான். நீதிபதி அரசனாணையைக் கொலைஞர்க்கு அறிவிக்கச்செய்துபோயினான்.

கொலைஞராகிய சண்டாளர் கொலைக்குற்றத்தைப் பறைமுகமாக வெளிப்படுத்திச் சாருதத்தனை அலரிமாலை யணிவித்துக் கொலைக்களத்துக்கு அழைத்துச்சென்றனர். வழியிடையே சாருதத்தன் கொலைஞர் அனுமதிப்படி மகனையும்

மைத்திரேயனையும் கண்டு பிரிவிரக்கங்கூறிப் புதல்வற்குப் பூணூலையிந்து கொலைஞரோடு தெருவழியாகப்போம்போது, சகாரனில்லத்து மேனிலத்தில் விலங்கிடப்பட்டிருந்த தாவரகன் என்னும் சேடன் தன் இறப்பையும் பொருட் படுத்தாது, வள்ளலாகிய அச்சாருதத்தனைப் பிழைப்பிக்க நினைந்து மேனிலத்துச் சாளரவழியாக நிலத்தில்வீழ்ந்து விலங்குமுறியப்பெற்றுத் தெய்வவயமாக உடற்கு ஊறின்றி யெழுந்துவந்து, "வசந்தசேனையைக் கொலைசெய்தவன் சகார னே; சாருதத்தன் அல்லன்" என்று உரக்கக் கூறினான். அதுகேட்ட கொலைஞர் திகைப்புற்று ஆங்குவந்த சகாரனை வினவச் சகாரன், "பொற்காப்பைத் திருடியதுகுறித்து இவனை விலங்கிட்டுவைத்தேன்; அதுபற்றி இவன் இவ் வாறு கூறுகின்றான்" என்றான். கொலைஞர் அதனை யுண்மை யெனக்கொண்டு சாருதத்தனைக் கொலைக்களம் அடைவித்துக் கழுவேற்றமுயன்றனர். இஃதிங்ஙனமாக, முன்னர் வசந்த சேனையைப் பௌத்தமடம் சேர்ப்பித்த சம்வாககன் என் னும் துறவி, அவளைத் தேற்றிச் சாருதத்தனில்லத்துக்கு அழைத்துவருங்கால் வழியிடையில் நிகழ்ச்சிகளின் உண்மை யுணர்ந்து வசந்தசேனைக்குக்கூற, அவள் பதைபதைத்து அத் துறவியுடன் விரைந்துவந்து சாருதத்தனைக்கண்டு கழுவேற் றலைத் தடைப்படுத்தினாள். சாருதத்தன் தன் அருமைக் காதலி வசந்தசேனையைக்கண்டு தழுவி யுவகைபூத்தான். துறவி சகாரன்செய்த தகாதசெய்கைகளை விளக்கிக்கூறினான். இந்நிலையில், சித்தன் மொழிப்படி ஆரியகன் என்னும் இடைச்சிறுவன், பாலகன் என்னும் அரசனைக்கொன்று, அர சியலைத் தன்வயப்படுத்துத் தனக்குத் துணைபுரிந்த சாருதத்

தனை விடுவித்து, அவற்குக் குசாவதி என்னும் தலைநகரி லிருந்து அரசுபுரியும்படி அரசியலைவழங்கியிருக்குஞ்செய்தி யைச் சருவிலகன்மூலமாகச் சாருதத்தற்குத் தெரிவித்தான். அவ்வமயம் சாருதத்தன் வேறு புகலற்றுத் தன்னையே சரண மடைந்த சகாரனைத் துன்புறுத்தாமற்போக்கிக் கற்பரசி யாகிய தன் மனைவி தூதை, தன்பிரிவாற்றாது தீப்புகுநிலையி லிருப்பதைச் சந்தனகன்மூலமாக அறிந்து மயக்கமுற்றான். பின் சருவிலகன் தேற்றத் தேறி வசந்தசேனை சருவிலகன் என்னும் இவர்களுடன் தன் இல்லத்தின்பாங்கர் விரைந்து சென்று, இரதனிகை மைத்திரேயன் உரோகசேனன் இவர் கள்சூழத் தீப்புகும்நிலையில்நின்ற தன் தருமபத்தினியைக் கண்ணுற்று ஆறுதலளித்துப் புதல்வனையும், மைத்திரேயனை யும் தழுவி இரதனிகைக்கு அன்புரைகூறி மகிழ்ந்தான். ஆரி யகன் என்னும் அரசன் வசந்தசேனையைக் குலமகளிர்க்குரிய வது என்னுஞ் சொல்லால் வழங்குமாறு பெருமைப்படுத்திய செய்தி சருவிலகனால் தெரிவிக்கப்பட்டது. தூதையும் வசந்தசேனையும் உடன்பிறப்புரிமை பாராட்டி ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டனர். சம்வாகன் என்னுந் துறவி பௌத்தமடங்களெல்லாவற்றிற்கும் தலைவனாகவும், தாவர கன் என்னும் சேடன் அடிமைத்தன்மையினின்று விடுதி பெறவும், கொலைவினைஞராகிய அச்சண்டாளர்கள் மற்றைச் சண்டாளர்களெல்லோர்க்கும் தலைவராகவும் பெருமைப் படுத்தப்பட்டனர். சாருதத்தன், தன் காதலிமார் புதல்வன் பரிசனங்கள் ஆகிய இவர்களுடன் கூடி அறம்பலபுரிந்து திறம்பலில்லாத நல்வாழ்க்கையில் தலைப்பட் டின்புறுவா னாயினன்.

வெண்பா.

சீர்த்தி மிகும்வசந்த சேனையெனும் பெண்மணியும்
ஆர்த்தகுணச் சாருதத்த வண்ணலும்—போர்த்தபெருந்
துன்பமெலா முண்மைத் துணையறத்தி னாற்போக்கி
இன்பநெறி நின்றா ரிவண்.

———

உ

# இந்நாடகபாத்திரங்களின் பெயர்விளக்கம்.

---

ஆரியகன்—தன்னைச் சிறைப்படுத்திய உச்சயினீநகரத்தரச னாகியபாலகனைவென்று அரசுரிமைபெற்றஇடைச் சிறுவன்; தனக்கு உதவிபுரிந்த சாருதத்தன் முதலியோர்க்கு நலம்புரிந்தவன்.

இரதனிகை—சாருதத்தனுடைய பணிப்பெண்; தலைவன் தலைவியர்மாட்டுப் பேரன்புடையவள்.

*இரேபிலன்—ஓர் இசைப்பாடகன்.

உரோகசேனன்—சாருதத்தனுக்கு அவன் அறமனைக்கிழத்தி தூதையினிடத்துப் பிறந்த அருமைப்புதல்வன்; இவன் விளையாடுதற்கு அமைந்த மண்வண்டி பற்றியசெய்தியே இந்நாடகத்திற் சிறந்த சுவை நலமுடையதெனக் கண்டு முதனூலாசிரியர் இந் நாடகத்திற்கு "மிருச்சகடிகம்" எனப் பெயரிட்ட னர்.

எழுத்தாளன்—நீதிமன்றத்திருந்து வழக்குமுறையை எழுது பவன்.

ஏவலன்—நீதிமன்றத்தை அலகிட்டுத் தூய்மைப்படுத்துதல் முதலியனசெய்யும் பணியாள்.

கன்னபூரகன்—வசந்தசேனையின் ஏவலன்; தறிமுறி என்னுங் களிற்றால் பௌத்தசந்நியாசிக்கு நேர்ந்த துன் பத்தை யொழித்தவன்.

கிழவி—வசந்தசேனையின் நற்றாய்; நீதிமன்றஞ்சென்று சாரு தத்தனைக்கண்டிரங்கி அவனைவிடுவிக்கமுயன்றவள்.

---

*இப்பக்கத்திலும் பின்வரும்பக்கங்களிலும் இவ்வடையாளம் (*) இடப்பட்டோர் அரங்கப்பிரவேசமில்லாதவர்கள்.

கும்பீலகன்—வசந்தசேனையின்வரவைச் சாருதத்தனுக்குத் தெரிவிக்கவந்த சேடன்.

சகாரன்-உச்சயினீநகரத்தரசன் பாலகனுடைய காதற்கிழத்தியின் சோதரன்; சமத்தானகன் என்னும் பெயருடையவன்; மணவாக்கன்னி மகன்; வசந்தசேனையைக் கொலைத்துன்புறுத்திச் சாருதத்தனை அக்குற்றத்துக்கு ஆளாக்கியவன்; பிழைபடப்பேசலும் மாறுபட்டசெய்கையும் உடையவன்.

சண்டாளர்கள்—ஆகிந்தன் கோகன் என்னும் பெயரினையுடையார்; சாருதத்தற்கு விதித்த கொலைத்தண்டத்தை நிறைவேற்ற நியமிக்கப்பட்டவர்கள்.

சந்தனகன்—இவன் பாலகனுடைய படைத்தலைவருள் ஒருவன்; ஆரியகனைத் தேடுதற்கு நியமிக்கப்பட்ட சயன் சயமானன் மங்கலன் புட்பபத்திரன் என்னும் படைவீரர்களுக்குத் தலைவனுவான்; சிறையினின்றும் வெளிப்பட்டுச் சாருதத்தன்வண்டியில் மறைவிற்சென்ற ஆரியகற்குத் துணைபுரிந்தவன்.

சம்வாககன்—முதலிற் சாருதத்தற்கு உடம்புபிடிக்குந் தொழில்புரிந்து பின் சூதிற்பட்ட கடனை வசந்தசேனையுதவியால் இறுத்துப் பௌத்தசந்நியாசியானவன்.

சருவிலகன்— மதனிகையினிமித்தம் சாருதத்தன்வீட்டிற் கன்னமிட்டுப் பொற்பணிகளைக்கவர்ந்த களவுநூல் வல்ல பார்ப்பனக்கள்வன்; ஆரியகன் என்னும் இடைச்சிறுவன் பாலகமன்னனைவென்று அரசுகோடற்குத் துணைபுரிந்தவன்.

சாருதத்தன்—இவன் இந்நாடகத் தலைவன்; வறுமையிற் செம்மைமிக்க வள்ளல்; பல அல்லலுக்காளாகி அறந்தலைகாப்ப முடிவில் நல்வாழ்விற்றலைப்பட்டவன்.

*சித்தன்—ஆரியகனுக்கு அரசுகிடைக்குமென்று வருங்கால நிகழ்ச்சியறிந்துகூறியவன்.

சூத்திரதாரன்—இவன் நடன் எனவும் கூறப்படுவான்; நாடகத்தொடக்கத்தில் தன் மனைவியாகிய நடியுடன் உரையாடுமுகமாக நாடகக்கருப்பொருளைக் குறிப்பாக வெளிப்படுத்துக்கூறியவன்.

சூதன்—சூதிற் சம்வாககனை வென்று பொருள்பெற்றவன்.

*சூர்ணவிருத்தன்—சாருதத்தற்கு மணமூட்டப்பட்ட மேலாடையை மைத்திரேயன்முகமாக அனுப்பினவன்.

செட்டி—நீதிமன்றத்தில் தண்டமாக இறுக்கப்படும் பொருள் முதலியவற்றை யாராய்ந்து எண்ணுதல் முதலிய வினைசெய்பவன்.

சேடன்—1. சகாரனுடைய ஏவலன். 2. சாருதத்தனுடைய ஏவலன். 3. வசந்தசேனையினுடைய ஏவலன்.

சேடி—1. வசந்தசேனையினுடைய பணிப்பெண். 2. தூதையின் பணிப்பெண். 3. சாருதத்தனுடைய பணிப்பெண்.

தருத்துரகன்—இவன் மாதுரனோடு கலகம்விளைத்துச் சம்வாககனுக்கு உதவிபுரிந்த மற்றொரு சூதனவான்.

தாவரகன்—சகாரனுடைய வண்டியோட்டும் ஏவலன்; தன்னுயிரையும் பொருட்படுத்தாமல் சாருதத்தனுக்கு உதவிபுரியமுயன்றவன்,

துறவி—முதலிற் சம்வாககனுகவிருந்து பின் உலகவாழ்க்கையைத் துறந்து பௌத்தசந்நியாசியானவன்; கொலைத்துன்பத்தினின்றும் வசந்தசேனையைத் தெளிவித்து ஆறுதலளித்தவன்.

தூதை—இவள் சாருதத்தனுடையமனைவி; கணவன் கொலைத் தண்டம்விதிக்கப்பட்டதுகேட்டுத் தீப்புகமுயன்ற கற்பரசி; வாழ்விலும் தாழ்விலும் மனநிலைதிறம்பா மாண்புடையவள்.

நடி—சூத்திரதாரனுகிய நடன்மனைவி.

நீதிபதி—சகாரனுடைய பொய்வழக்கை மனச்சான்றுக்கு மாருக ஏற்று வசந்தசேனையைக் கொன்றவன் சாருதத்தன் எனக் கிடைத்த சான்றுகளைக் கொண்டு வருத்தத்துடன் தீர்மானித்து அரசற்குத் தெரிவித்தவன்.

பந்துலர்—விலைமாதரில்லங்களில் உண்டுடுத்துத் திரிபவர்.

*பரபிருதிகை
*பல்லவகன் } வசந்தசேனையின் ஏவலர்.

*பாலகன்—உச்சயினிநகரத்திருந்து அரசுபுரிந்த அரசன்; அறம்பிறழ்ந்து சாருதத்தனுக்குக் கொலைத்தண்டம் விதித்து ஆரியகனுல் அரசிழந்து உயிர் துறந்தவன்.

மதனிகை—வசந்தசேனையின் சேடி; சருவிலகன்காதலித்தது தெரிந்து வசந்தசேனையால் அவற்குக் கொடுக்கப்பட்டவள்.

மாதுரன்—இவன் சூதாடுகளத்தலைவன்; சபிகனெனவும் கூறப்படுவான்.

மைத்திரேயன்—இவனே இந்நாடகத்தில் விதூடகனாவான்; நாடகத்தலைவனாகிய சாருதத்தன்பால் அளவிகந்த பேரன்புடைய பார்ப்பனத்தோழன்; வறுமைக் காலத்தும் அவனைப் பிரியாது வேண்டுவனசெய்த வன்; தன்தலைவன்பிரிவில் உயிர்விடவும் துணிந்த வன்.

வசந்தசேனை—இந் நாடகத்தில் முக்கியமான தலைவி இவளே; பிறப்பால் விலைமகளாயினும் குலமகளிரொழுக்க மேற்கொண்டு வறுமைநிலையெய்திய சாருதத்தன் குணங்களில் ஈடுபட்டு அவனைக் காதலித்து அடைந்தவள்.

வருத்தமானகன்—சாருதத்தனுடைய வண்டியோட்டுஞ் சேடன்.

விடன்—1. சகாரனுடைய தோழன்; வசந்தசேனையின் துன்பநிலைக்கு இரங்கிச் சகாரனுடைய நட்பை வெறுத்தவன்; சாருதத்தன்பெருமையைப் பாராட்டிப்பேசும் இயல்பினன். 2. வசந்தசேனை சாருதத்தன் இல்லத்துக்கு வருங்கால் மழைக்கா லிருளில் அவளுக்குத் துணையாகவந்தவன்.

வீரகன்—இவன் பாலகமன்னனுடைய படைத்தலைவருள் ஒருவன்; ஆரியகனைத்தேடுதற்கு நியமிக்கப்பட்ட விசல்லியன் வீமாங்கதன் தண்டகாலன் தண்ட சூரன் என்னும் படைவீரர்களுக்குத் தலைவன்; சந்தனகனால் துன்புறுத்தப்பட்டு நீதிமன்றஞ் சென்றவன்.

# ஆராய்ச்சிமதிப்புரை.

---

அண்ணுமலைப்பல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பேராசிரியர்
**திரு. சோமசுந்தரபாரதியாரவர்கள்**
(M. A., B. L. அட்வகேட்)
எழுதியது.

பண்டிதமணி. திரு. மு. கதிரேசச்செட்டியாரவர்கள் தமிழாக்கித்தந்த மண்ணியல்சிறுதேர் என்ற நாடகத்தைப் படித்து மகிழ்ந்தேன். இது தமிழினுக்கே ஆக்கந்தரும் என்பதில் ஐயமில்லை.

நாடகமாயினும், சிலப்பதிகாரம்போல இதுவும் இயற்றமிழ்வகையான நாடகக்காப்பியமேயாகும். சிலப்பதிகாரம் உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுள். இது பாட்டிடைவைத்த உரைவகைப்பனுவல். முன்னது தனித்தமிழ் முதனூல். பின்னிது மொழிபெயர்ப்பு வழிநூல். இவ்வளவே இவற்றுள் வேற்றுமை. இவற்றிடைக் காணப்பெறும் ஒப்புமைகளோ மிகப்பலவாம். இரண்டும் இயற்றமிழ்ப் பனுவல்கள். இசையொடும் இசைந்த பாட்டுடையவேனும் இசைத்தமிழ்வகையுமன்று; கூத்தியற்கூறுகும் நாடகத் தமிழ்ப்பகுதியுமன்று.

மக்களால் மதிக்கப்பெறும் பொருளனைத்தையும் தமக்குப் பொருளாகக்கொண்டுவழங்கும் இயற்றமிழ்ப்பனுவலெல்லாம், பாட்டும்பாவினமுமான அளவியற்செய்யுட்களும்,

நூல் உரை பிசி முதுமொழி மந்திரம் கூற்று என அறுதிறப் பட்டு அடியளவற்ற செய்யுட்களுமாக இவ்விருவகையுள் அடங்கும் (தொல். பொருள். சூ. 387, 477-478).

செய்யுள் பனுவல் என்னுஞ் சொற்கள், பொதுவில் நூலெனவழங்கும்பொருளவாம்.

அசை சீர் தளை யாப்புறவு ஓசை நோக்கம் வனப்பாதி யுறுப்புக்களையும் நல்லவினைத்திறம், ஒல்லும்நடைத்துறைகளை யும் கொண்டு, அகம் புறம் என் றிருதிறப்பட்டு, மக்கள் மனத்தை இன்புறுத்தி, என்னிலரெனினும் எவரையும் எல் லாம் உடையராக்கும் அறிவையும் விருந்தெனவளர்க்கும் மருந்துணவாவது பாட்டு.

சூத்திரம் ஒத்து படலம் பிண்டம் என நான்குவகைப் பட்டுப் புலவர்பிறருக்கு அறமருத்துதற்குரிய கருவியாவது நூல் (தொல். பொருள். சூ. 479–481).

உரையோ எப்பாலவர்க்கும் தப்பாதுதவும் கொழு கொம்பாய் அறிவருமைசுருங்கி எள்ளரும் ஆட்சியருமை பெருகிப் புலன்வல்லாரியற்றப் பலன்மிகவுதவுங் கலனாகும்.

எஞ்சிய பிசிமுதலாயவை ஈண்டு வேண்டப்படாமையின் விரிக்கவேண்டா.

இனி, உரைவகைநடை நான்கெனமொழிப; அந் நான்கனுள் இம் மண்ணியல்சிறுதேர், பாட்டிடைவைத்த குறிப்புவழித்தாய உரைநடையாகும் (தொல். பொருள். சூ. 486).

இதன் முதனூல் அல்லது மூலநூல், வடமொழிநாடக வகையுள் ஒன்றான பிரகரணமுறையிற் சூத்திரகன் என்னும் வேந்தனால் ஆக்கப்பட்டதென்பர். இப்பிரகரண இலக்கணம், இயற்றமிழிற் புலனெறிவழக்குடைய பாட்டுப்பனுவல்களை யும் நாடகத்தமிழில் உலகவழக்கொத்துநடக்கும் கூத்தை யும் போலாது, இயற்றமிழ்ப்பகுதியிலேயே நாடகவழக்கா றெனத் தொல்காப்பியர் வகுத்து விளக்குவதைப் பெரும் பாலும் ஒத்துள்ளது.

மிருச்சகடிகம் எனும் வடமொழிப் பிரகரணநாடகத்தை மண்ணியல்சிறுதேர் என்னும் தமிழ்ப்பெயருடன் மொழி பெயர்த்துதவிய ஆசிரியரை, இருபெருமொழியின் திருவுவந் துயர்ந்த பருணிதர்புகழும் பண்டிதமணியென முன்னமே தமிழகம் நன்கறியும். இப்புலவர், தென்சொற்கடந் திளைப் பவர்; வடசொற்கடற்கும் எல்லைகாணக் களிப்பவர்; சைவ மும் தமிழும் தழைய அரிய பல விரிவுரைகளியற்றுவதும், இனிய புதிய புத்தகங்களெழுதித் தமிழுலகுக் குதவுவதுமே தமக்குரிய காலப்போக்காகக்கொண்டு வாழ்பவர். இவர், தமிழகம் முன் முற்றும் அறியப்பெறு எதிலராயிருப்பினும், இந்நாடகம் ஒன்றே இவருக்குப் பொன்றாப் புகழ்தரத்தக்க தாம்.

இஃது, இப்புலவரின் நிறைநூற்கல்வித்திட்பத்தையும் மிறைபடா மதியொட்பத்தையும் ஒருங்குநிறுவுஞ்சான்றாக நிலவுவதாகும். 'சேரிமொழியிற் செவ்விதிற் கிளக்கும்.' கூத்து முதலிய நாடகத்தமிழ்நடையைவெறுத்துச் செயிர் தீர்ந்த செந்தமிழ்ச்செய்யுண்மொழியாற் சீர்புனைந்தியாத்த அழகுடையது இப்பனுவல் (தொல். பொருள். சூ. 549).

எழிலோடியனெறியெளிமையும் இயைந்த இலக்கணச் செவ்வியுடையது இயற்றமிழ் என்றும், அதனால் புலவரிடை மட்டே வழக்காறுடைய வடவாரியச் செயற்கைச்செம் மொழியில் எழுதப்பெற்ற முதனூலிற் புலமையற்ற பாத்திரங்களைச் சேரிமொழியொத்த சிதைந்த பாகதச்சொற்க ளாற் பேசவைத்த முறை, இனிய இயற்றமிழ்நூலில் இடம் பெறல் இன்றியமையாததன்று என்றும் கருதி, அதனை விலக்கிப் பயில்வார்க்கு மொழிநயமுந் தோன்ற இயற்கைச் செந்தமிழியன்மொழியிலேயே நம் புலவர் இந்நாடகத்தை எழுதிச்செல்வர்.

அன்றியும், இடையிடையே தொடுக்கப்பெற்ற பொருட்டிட்பமும் நடைநயமும் புணரயாத்த பலதிறப்பட்ட பாவும் பாவினமும் இவர் புலமைநலத்தைப் புலனுறுத்து கின்றன.

இவை பலவற்றாலும் இந்நாடகம் நடிக்கப்பெறுவதினும் படிக்கப்படுவதற்கே பெரிதும் பயன்படுவதாகுமென்பதும் வெளிப்படை.

இதில் ஆசிரியர் நாடகபாத்திரங்களின் பேச்சளவில் அவ்வவர் உளக்கிடை ஒழுக்கம் நோக்கம் நிலைமைகளைப் படிப் பவர் எளிதினுணருமாறு யாப்புறவுசெய்தமைத்த செவ்வி மிகவும் பாராட்டற்பாலது. இத்திறம் முதனூலாசிரியரைப் பெரிதும் பொறுத்ததாயினும், இத்துறையில் மொழிபெயர்ப் பாளரின்பொறுப்புக் கொஞ்சமல்ல. செயற்கைச்செம்மொழி யான ஆரியநடைப்போக்கும் இலக்கணமுறையும் சொல் லாட்சித்துறைகளும், இயற்றமிழியல்புக்கும் இலக்கணப்

போக்கு கிளவியாக்கமரபுகளுக்கும் இயைபு மிகவுடைய வல்ல என்பது அறிவாருக்கு, வடமொழிநாடகத்தைத் தமிழில் நாடகநூனயங்குறையாமல் மொழிபெயர்த்துத்தருவதன் அருமை வெட்டவெளியிட்டவொளியெனவிளங்கும்.

வடமொழிபயிலாத எம்மனோரால் முதனூலோடொத்து நோக்க இம் மண்ணியல்சிறுதேர் எத்துணைச் சிறப்புரிமை கொள்வதென்று அளந்து அறுதியிடற்கில்லை; எனினும், பலரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள மிருச்சகடிக நாடகங்களைப் படித்த நான் ஈண்டுத் துணிந்துகூறற்குரிய தொன்று உளது.

ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக்கொண்ட பாவல ரொருவரின் மொழிபெயர்ப்பையும், வடமொழிக்கு விசேடவுரிமைபாராட்டும் பார்ப்பனவித்தகரொருவர் மொழிபெயர்ப்பையும் ஆங்கிலத்தில் நான் படித்துளேன். அவற்றைப் படிக்குங்கால் இயலமைவிற் சிற்பவினைநயமோரார் வருந்தியாத்த திருந்தாச்சிற்றில்போல, இயல்போடெழில்சிவணாது மொழிபெயர்ப்பாளரின் முயற்சியளவையே அவை விளக்கி நிற்கக்கண்டேன்.

நம் பண்டிதமணி ஆரியம்போற் றமிழும் தமிழேபோல் ஆரியமும் விரும்பிப்பயின்ற வித்தகரேன்பது இம் மண்ணியல் சிறுதேரைப் படிப்பவருக்கு விசதமாகும்.

இயலொழுக்காய் முதனூல் இதுவே எனத்தக்க எழில் வளமும் நடைநலமும் சுவைபலவும் செறிந்தொளிரும் செவ்வியுடையது இந்நூல்.

இனி, இந்நூலுள், ஆங்காங்கே ஆசிரியர்தெரித்துரைக்கும் அடிக்குறிப்புக்கள், இவர் புலமைநுணுக்கத்தையும் தொனியலங்காரமுதலிய காவியநலங்களை நுனித்துணர்ந்தனுபவிக்கும் இவர் மதிநுட்பத்தையும் இனிதுவிளக்கும். உதாரணமாக: மூலத்தில், வசந்தசேனை பொருள்வறந்த சாருதத்தனைக் காதலியாது மீட்கக்கருதிய சேடி, மலருதிர்ந்த மாமரத்தைச் சுரும்பு விரும்பாது எனக் கூறக்கேட்ட வசந்தசேனை, அதனாலன்றோ சுரும்புகள் மதுகரங்கள் எனப்பெயர் பெற்றன (பக். 66-67) என்று கூறியதாக வாளாகூறப்பட்டுள்ளது. இதற்குக் குறிப்பெழுதுங்கால், தேனைப் பிறருண்ணத் தேடிவைத்துத் தான்நுகரா வண்டுக்கு மதுவைச் செய்துதருவதால் "மதுகரம்" எனப் பெயர்வந்தபொருத்தத்தை விளக்குமுகமாக, அவ்வெளிய அறிவற்ற சுரும்பு போலத் தம் நலத்தைப் பிறர்பொருட்டாளும் பொருட்பெண்டிரொழுக்கத்தில் தனக்குள்ள வெறுப்பையும், தன் எழிலிளமைநலத்தைத் தகவுடைய சாருதத்தனைக்கூடித் தானே தன் மெய்க்காதலுடன் அனுபவிப்பதில் தனக்குள்ள வேட்கையையும் வசந்தசேனை இக் கூற்றால் விளக்கியதாகக் காட்டுகின்றார். இது பெரிதும் பாராட்டத்தக்கது.

இப்படியே இந்நூலிற் பலவிடத்தும் ஆசிரியர் தரும் அடிக்குறிப்புக்கள் நூல்வனப்பை வளப்படுத்தும் விழுப்பமும் நுணுக்கமும் உடையவாய்ச் செல்லுகின்ற செவ்வியறிந்து மகிழவேண்டும்.

இதிற் பலபாத்திரங்களையும் இயலளவிற் சித்திரித்துள்ள வினைத்திறமும் அவரவர் சொல்லாடலில் அவரவரியல்பைப் பொறிப்பதுடன். ஒவ்வொருவரும் இந்நாடகநோக்கத்துக்கு

இயலுரிமையுடையராதலேயும் கோடாமற் குறையாமல் நிறுவிய நுட்பமதியொட்பமும் தமிழ்நடைச்செவ்வியும் பொருளொடுபுணர்ந்த பாட்டுக்களின் எழில்வளமும் திட்பமும் தனித்தனியே வியாசங்களாக விரிக்கத்தகும்நிலேயின.

பாயிரமொன்றில் ஆயிரம் அழகையும் அளந்து அறுதியிடமுயல்வது அவசியமும் பொருத்தமு மில்லேயாதலால் விரித்தற்கு அஞ்சி விடுக்கின்றேன்.

இந்நூலின் உரைநடைவளத்தை இதனேப் படிப்பவர் அனேவரும் சுவைத்துணர்வர்.

ஊன்றிப்படிப்பவ ருளத்தைக்கவரும் பாக்களின் பான்மையை ஒரு சிறிது இப்பாயிரநடையில் வேண்டாவெறுக்கையாய் இயலமைவில்வந்துபுகுஞ் சில பாவடிகளேக் கொண்டே ஒருவாறு மதித்தறியலாம். விதந்து சில சிறந்தனவா யெடுத்துரைத்தல் அருமையொடு மிகையுமாகும.

பொதுவாக இந்நாடகப் பாட்டுக்களேச் சுவையுணர்ந்து படிப்பவர்கள், நம் பண்டிதமணி, வள்ளுவர் திருத்தக்கதேவர் மணிவாசகர் மூவர் சேக்கிழார்-அன்ன தெய்வப்புலவரின் இறவாப்பாசுரங்களிற் பல்காற்பயின்று பழுத்த பாவன்மையும், சொல்லேத்தொடுக்குங் கல்லாப்புலவர்தம் பொல்லாப் புலமை போலாது கற்றுக் கனிந்த நாவன்மையும் உடையரென்பதை நன்கு கண்டு தெளிவார்.

புதிய முறையில் இந்நூலே ஆராய விரும்புவோரைத் தூண்டற்குதவுமாறு, ஒருமுறை படித்தஅளவில் நான் இதிற் கண்ட நயங்களுட் சிலவற்றை இங்கே குறிப்பிட இடமிரப்பேன்.

இதன் கதைச்சுருக்கமாவது:—வேசையரியலொழுக்கத்தை வெறுத்த இளமையும் எழிலும் வளங்கொளும் பரத்தை வசந்தசேனையென்பவளும் பழுதற்ற பார்ப்பனர் குலத்துதித்து, மாசற்ற வணிகஅறம் மேற்கொண்டுவாழ்ந்து, அருளொடும் அன்பொடும் திறனறிந்து தீதின்றிவந்த பொருளையெல்லாம் விருந்தோம்பித் தக்கார்க்கு வேளாண்மை செய்துலந்து வறுமைபூண்ட சாருதத்தன் என்பவனும் தம்முள் மெய்க்காதல்கொண்டதும், அக்காதல் காரணமாக இருவரும் பல அல்லலுழந்து அவலமுற்றதும், இறுதியில் அறந்தலைகாப்ப, இவர்க்குக் கேடுசூழ்ந்த கயவன் சகாரனும் அவன் மைத்துனமன்னன் பாலகனும் அறக்கழிவுபூண்டு அழிவெய்தக் கருத்தொருமித்த இக் காதலரிருவரும் ஆதரவுபட்டு அறத்தான்வரும் இன்பந்துய்க்கப்பெற்றதுமேயாகும்.

சிலப்பதிகாரத்தில் வணிகன் கோவலன் காதலித்த மாதவிகதைககும் இங்குச் சாருதத்தன்பாற் காதல்கொண்ட கணிகை வசந்தசேனைகதைக்கும் உள்ள பலபெரிய ஒற்றுமைகளும் சில அரிய வேறுபாடுகளும் மிகவும் பாராட்டற்பாலன.

மாதவியும் வசந்தசேனையும் பரத்தையராய்ப் பிறந்தும் கற்பறத்தையே காமுற்றார்; வணிகரைக் காதலித்தார்; அன்புற்ற காதலரைப் பிரிந்து பலவாறு அல்லலுற்று அவலப்பட்டார்; தூயசிந்தையோடு சீலநெறிதிறம்பாத் தம் வாழ்க்கையால் மெய்க்காதற்றிறத்தையும் அன்பறத்தையும் விளக்கிச் சிறந்தார்.

இன்னும், இவ் விருநாடகத்துள்ளும் கவனித்தற்குரிய பிற ஒப்புமைகளும் உண்டு.

பரத்தைகாதலாற் பரிபவமுற்றுவந்த கோவலனுக்கு, அவன் காதற்பரத்தையைக் களிப்பித்துவக்குமாறு, தன் பெற்றோர்பாற்பெற்ற விலையற்ற மணிப்பாற் பொற் சிலம்பைக்கொடுத்து மகிழ்ந்த அவ னறமனைக்கிழத்தி கண்ணகியேபோல், வசந்தசேனைக்கு வழங்குதற்கு வறுமை யால் வழியற்றுவருந்திய சாருதத்தனுக்கு, அவன் மனையறத் துணைவியான தூதையும் தன் தாய்வீட்டிலிருந்துபெற்ற விலைமதிக்கவொண்ணு இரத்தினமாலையை விரும்பிச்சேர்ப் பிக்குஞ்செய்தி, ஒருமனப்பெண்டிரின் கற்பறங்காழ்த்த சிந்தையின்செவ்வியும் பரித்தியாகவுளப்பான்மையும் ஒளிரச் செய்கின்றது.

பெருங்குடிப்பெண்டிராய்ப் பிறந்து அளிநிறைந்த இள கியமனத்தராய் வளர்ந்தும், கண்ணகியும் தூதையும், மறக் கற்புடைமையால் தத்தம் கணவர்பிரிவிற் பேதுற்றமனத்த ராகித் தறுகண்மையெய்தி, மற்றுஞ் சுற்றத்தார்க்குற்ற கடனையும் மறந்து தம்முயிரைத் திரணமாகநினைந்து களையத் துணிகின்றனர்.

பரத்தையராயினும் மாதவியும் வசந்தசேனையும் கழி பெருங்காதலுடைமையால், தத்தம் தலைவர்தம்பிரிவால் உணங்கிய உளத்தராய் வன்கண்மையற்ற கையறவோடு கற் பறங்காத்துத் தம் காழ்த்தகாதலைக் கவினுறுத்துகின்றனர்.

இவருள்ளும், வளஞ்செறி செல்வச்செவ்வியிற் கோவலனை அவன் பொருளொடும் இளமைநலம்வறக்க

நுகர்ந்த மாதவி அவன் பிரிவின்பின் பெரிதும் வளர்ந்த தன் காதற்பயன் கைவரப்பெறுது தாபதநிலைமேற்கொண்டு நோன்பால்மெலிந்து நொந்தாள்.

"நண்ணு நீள்வெயிற் காலத்தில் நல்லநீர்த் தடம்போல், உண்ணும் வேட்கையை மக்களுக் கொழித்தலா லுலர்ந்து," (செ. 44.) நல்குரவால் நட்டோரும் புறக்கணிக்கும்நிலையில், "வறியனுயினும் குலவொழுக் குடையநன் மகனே, முறைமையின் முயன்றடைதாற் குரியவன்" (செ. 255.) ஆவன், என்று தேர்ந்து, காதலறமொன்றே கடைப்பிடித்துச் சாருதத்தன்பாற் பொருளின்மையைப் புறக்கணித்து, அவன் பொருட்டே அன்புசெலுத்திய வசந்தசேனையின் தூயகாதல் அவனையும் அவள்காதலனையும் தலைக்காத்து இறுதியிலின்ப மூட்டுகிறது.

பின்னும் காண்பாம்:—கோவலனும் சாருதத்தனும் பெரும்பொருள்வணிகராய்ப்பிறங்கிய பெரியர். இருவரும் இசையினில் வல்லுநர். கற்பறமனைவியர் இருக்க இருவரும் கணிகையர்காதலாற் பிணிபடுகின்றனர். எனினும், கோவலன் தானும் தன் தலைவியும் இளமையும் எழிலும் வளஞ்செய வளரும் காசறு காதற்கனி தினம் நுகர்ந்து களித்துவருமிடையே, மாதவிக்குத் தன்மேற் காதல்கதுவாமுன்னம் கேவலம் இளமைக்கிடைந்து கடலன்ன காமமுழந்து, அன்பின்விழையாது பொருள்விழைந்த வேசை மறுகினில் விற்கவிடுத்தமாலையைப் பொன்தந்துவாங்கி, மனையறம் மறந்து காதன்மனைவியையும் துறந்து, பொருட்பெண்டின் புன்னலந் தோய்ந்து, தன் பெரும்பொருளும் அருநலமனைத்தும் உடன்வறந்து ஓய்ந்தான்.

சாருதத்தனே, நாற்பதாண்டளவும் அனைத்தறமோம்பி, மாசறவாழ்ந்து தன் அளவிலாப்பொருளை யாரு நன்குவப்பத் தனக்கெனவின்றி யாவையும் வழங்கி நல்லறமெவைக்கும் சிறந்ததோர்நிலையமாய்நின்றவன். இளமையால் மகளி ரெழிலினுற் றளர்வுருவுளத்தன்.

கன்னிமைகனிந்துமுற்றிக் காமுறக் கமழுங் காமத் தின் னறுங் கனியைத் துய்க்கக் கணவனுக் கருத்தி நாளுங் களித் துளந்தளிர்க்குங் காதலறமனைவி கண்ணகிபோலாது, அற னுற்றி முத்த தூதை, குன்றியும் காமமில்லாக் குறையா நிறையினள்; காழ்த்த கற்புறுசிந்தையளாய்க் கணவனுக்கு மனையறவேள்விநல்லாற்றிற் றுணைநின்று 'மனைத்தக்க மாண் புடையளாகித்' 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகை சான்ற சொற்காத்துச் சோர்விலா' துவாழுஞ் சீலமுடையள்.

இப் பெண்ணரசியைக் கண்ணேபோற்பேணி, அவள் கணவனும், கண்ணியமும் அன்பும் நாளும் பெருகப் போற்றி வருவான். எனினும், காதல்வறந்த கற்புக்களஞ்சியத்துக்கு ஆடவர்காதலுள்வரட்சிநீக்கிக் குளிர்வித்துத் தளிர்ப்பிக்கும் ஆற்றல் இல்லையன்றே! மேரி காரில்லியின் உலகாதிக்கம் (Temporal Power) எனும் நவீனகத்தில் மாசற்ற கற் பெனுந் திண்மையுடைய கோமனைவியோடு நடுப்பருவம் வரை வழுவறவாழ்ந்த பரங்கியரசன் (French King), பின் தன்னைக்காதலித்த ஏழைப்பெண்ணைக்கண்டபோது நெஞ்சம் நெகிழ்ந்து அவள்பால் நேயமுற்றுமிளிர்ந்த கதையறிவாருக் குக் காதற்சிறப்பும் அதன் திறமும் தெரிக்கவேண்டா. அறமனைக்கிழத்தியின் கற்பறமதிப்பே பற்றுக்கோடாகக் கொண்டு மனையறநடத்திக் காதற்சுவையுணராதுவாழ்ந்த

சாருதத்தன் தன்பாற் காதலூறிக் கனிந்தசிந்தையளான வசந்தசேனை இன்பவுவகையி னிராகமுற்று, அன்பாற் றினைத் தழீஇமகிழ வலியவந்தபோது, உவந்து உளங்கனியாது பசையாது, நாகரிகநீர்நிறைந்த நதிபோலுங்குணவதியாய்த் திகழ் திருவைத் தீமையொருவினளைச் சினந்து கசந்ததுக்கி வெறுத் தொதுக்குவது இயல்பாமா? அன்றியும், இவ்விருவரும் முன் பிறரைக் காதலியாத் தூயவுளத்தராய்க் காமதேவாயதனம் என்ற உய்யானத்தில் ஒருவரையொருவர் முதலிற் கண்ட கணமே இருவரும் மாறிப்புக்கு ஒருவர் மற்றொரு வர் தூய மறுவறுமிதயமெய்தி மாறிலாதிருக்கலாயினர்; அத னால் முதற்காட்சியிலெழுந்து காழ்த்த தலைக்காதல் நிலைத்து வளர் மனத்தினராயினர்.

இவ் விருவேறு காதற்கதாபாத்திரரிடைக் காணப்படும் அன்பொழுக்கவேறுபாடு, கோவலன் சாருதத்தன் என்னும் இருவர்மனப்பாங்கையும் வினையாட்சியையும் வேறுபடுத்த வும் காண்போம்.

காமக்கடலில் ஆழ்ந்துழந்த கோவலன், ஊக்கம் அடி யறுக்கப்பட்டுக் கொடுவினை அடர்த்தபோது மனமடிந்து அறவினையாட்சியிற் றிட்பமின்றித் தற்காப்பில் உரனழிந்து பொற்கொல்லன்வஞ்சத்தால் எளிதில் உயிர்துறக்கலாயினன்.

சாருதத்தனோ அறனாற்றிக் காழ்த்தநெஞ்சில் தூயகாதல் வேரூன்றித்தழைபத் தான் கயவனான சகாரன் தொடுத்த வஞ்சவல்வழக்காலும் கொடுங்கோல்வேந்தன் குரூரத்தாலும் கொலையொறுப்புக்கு ஆளாயபோதும், மனமிடியாது, அவ லத்தாற் கசந்தவுளம்கொதித்து விதியையும் தெய்வத்தையும்

வீணே பழித்திழித்துப் பாழ்போகாது, நெஞ்சத்துச் சான்றாண்மைகோடாதுநின்று, "மதிவலி மாற்றும் விதிமுதலாக, வலியவர் கூறிய வல்லுரை வழக்கால், அரிதினேறிட்ட துரிசுளே னெனினும், யான்புரி நல்லறன் வான்றிற லுடையதேல், ஆசாரம் பெருக்குங் காதற் கிழத்தியாம், மானமார் வசந்தசேனையே (இறந்தனளாகக்கருதப்பட்டும் அவள்) வானில், பொன்னுடல் பெற்றுப் பொலிவுற் றிருப்பினும், இந்நில வரைப்பின் எவ்விடத் துறினும், இப்பொழு தீங்கு மெய்ப் பொலிவோடு, வந்துதன் இயற்கை வண்மைசால் குணத்தால், என்பழி துடைத்தே யின்புறுத்துகவே" (செய்-346) என்று நன்னம்பிக்கையுடன் சூளுறவுகூறத் துணிவுபெற்றான். "குண நல மொழுக்க மார்ந்த கூரெழிற் றேரணியன்ன—துணைவியால் நல்லூழ் கூட்டத் துன்பமாங் கரையிகந்த-புணரியைக்கடந்து" (செ. 360) பொற்புறுவாழ்வும் உற்றான். அறமறவா வாழ்க்கையாலும் தூயவள் அறக்காதற்றுணையாலும் சாருதத்தன் தீவினையுலந்தும், அறமனைவியைத் துறவாமல் அவளும் வாழ்த்த, வாகைமிகுங் குணநதியும் ஒகைதரும் எழிற்பண்ட நிலயமுமாய் ஒருமதனனங்காடித்திருவான வசந்தசேனையின் ஒவாக்காதலையும் உலப்புறாக் கூட்டுறவின்பத்தையும் உரிமை கொண்டான்.

ஆகவே, காதலற்ற காமத்தில் ஈடுபட்ட கோவலன், மனையறமாண்பையும் வாழ்வையுமே இழக்கநேர்ந்தது. கறையற்ற காதலாற் சாருதத்தன் புகழொடுபுணர்ந்த இனிய புனிதப் புதுவாழ்வுபெறலாயினன்.

இவ் விருகதையிலும் காதலரிடைத் தூதுபோவோர் பழுதற்ற பார்ப்பனராவர். இது தமிழ்ச்செய்யுள்வழக்குக்

கும் மரபுக்கும் அமைவுடைத்தென்பது தொல்காப்பியச் சூத்திரத்தாலும் தெளியப்படும் (பொருள்-சூ. 177).

இரு நாடகத்தலைவர்களின் அவலத்துக்கும் முதற்காரணம் கயவரிருவரின் வஞ்சமெனினும், முடிவில் முனைத்து வந்துறுப்பது காமவயப்பட்டு ஆராயாமற் கொலையொறுப்பை விதித்த அரசரிருவரின் அறக்குறைவேயாகும்.

இதில், பாரெழுந்தபோதெழுந்த பழங்குடிப்பிறந்த பாண்டியன், தன் காதலறமனைவியி னூடலைத் தவிர்க்கவிரையும் விருப்பாலும் தட்டான் ஒத்த சிலம்புக்கரிபோக்கிய வஞ்சத்தாலும் உளந்திகைத்துத் தீர ஆராயாமற் கொலை விதித்து அறந்திறம்பினன்; எனினும், உண்மையறிந்ததும் தன்பிழைநாணிக் கோவறங்கோடிய பழிதுடைப்பான் வல்வினைவளைத்த கோலைத் தன் செல்லுயிரால் நிமிர்த்துத் துறக்கஞ்சேர்ந்தான்.

வடவாரியம் தென்தமிழ்—நாகரிக மிரண்டினுக்கும் முனைநிலமல்லாத இடைநாட்டுமன்னன் பாலகனோ, மணவாத தன் காமக்கிழத்திபாற் காழ்த்த பாசத்தால் இருண்டவுளத்தனுய்க் குற்றமற்ற ஆரியகனைச் சிறைப்படுத்தியதுமன்றிக் கொல்லாமல் நாட்டினின்றும் பொருளோடகற்றப்பணித்த நீதிபதிகருத்தையும், 'குற்றமிழைப்பினுங் கொல்லுதற் குற்றமறையோ னுரியனலன்' என்ற மனுவுரையையும் புறக்கணித்து மைத்துனக்கயவன்—மனைவாக்கன்னிமகன்—சகாரன் வேண்டியாங்குக் குடிப்பிறந்த குணக்குன்றுன சாருதத்தனைக் கழுவேற்றிக் கொன்றுவிடப் பணித்தான். அறத்தி

னிறுதி வாழ்நாட்கிறுதி, அஃது றுதியாதலால் அப் பாலகன் ஆரியகனல் வேள்விநிலத் தாடுபோல வெட்டப்பட் டிறக்கின்றான்.

இவையெல்லாம் காவியநீதி (Poetic Justice) யின்பாற் பட்ட நாடகநயங்களாகும்.

இனி, இதில் அரிய இனிய சில சந்தர்ப்பங்கள் சிந்தித்து மகிழத்தக்கன. தன் காதற்கிழவனான சாருதத்தன்சிறுவனை வசந்தசேனை சந்திப்பதும், அவன்முகத்தில் தன்காதலனை மீட்டுங்கண்டு அவள் அன்புறுவதும், அவன் வறுமையறியாக் குழவிப்பருவத்தால் விளையாடவிரும்பிய பொற்றேரியற்றத் தன் அணிகலன்களை அவள் பரிந்தளிப்பதும் மிகவும் வனப் புடையவாகும்.

மேலும், வறுமையால் தன் நற்றாய் அணிபூணக்காணு அச்சிறுவன், வசந்தசேனையை 'இவள் உன்தாயாவாள்' என்ற செவிலிக்கு 'என் தாயாயின் இவள் எப்படி அலங்கார முடையளாயினள்' என்று அவலத்துடன் கூறுவதும், அது சுட்டிய அவன்குலவறுமைத்துனியைப் பொறுக்கவொண்ணு மல் வசந்தசேனை பசைந்து கசிந்து கண்ணீர்மல்கிப் பருவரலுறுவதும், பிறகு தன் கலன்களைக் கழற்றிவிட்டு, 'இப்பொழுது உன் தாயாயினேன்' எனக்கூறித் தன் அணி களை அவனுக்குப் பொற்பாண்டில்செய்துகொள்ளத் தருவ தும், அவள் அருளவலத்தாற் கண்கலங்கியதை அணிகலன் தருவதிற் றயங்கியதாகக்கருதி, அவன், அணிகலனைப் பெறே னென மறுப்பதும், அவள் கண்ணைத் துடைத்துக்கொண்டு, 'கலன் கொள்க.' என்று அவனை யிரந்து பரிந்துவப்பிப்பதும் படிப்பவருணர்வைப் பறிகொள்ளும் (பக். 218, 219.).

இனி, இதனினும் அவலச்சுவைமிகுமிடம், தூதை, தன்கணவனைக் கழுவேற்றக்கொண்டுசென்ற செய்திகேட்டுத் தீப்பாயப்போவதும், தன் சிறுவனும் சேடியும் தடுத்துத் துயருறுவதும், அவர்களைவிலக்கி அவள் புனரெரிபுகப் போவதுமாம். ஈண்டுத் தற்கொலை தகாதெனத்தடுத்தமைத்திரேயனுக்குக் கணவனைக்கழுவேற்றினரெனும்செய்தி கேட்பதினும், தனக்கு எரிநெருப்புத் தட்பமுடையதென்றும், அத்தகைய அமங்கலச்சொல் தன் செவிப்புகுவதைத் தடுப்பதற்குத் தற்கொலைப்பாவங்கூடத் தகுஞ்செயலாகு மென்றும் அவள் கூறி, எரிமருங்கேறி நெருங்குவதும் கன்னெஞ்சையுங் கரைத்துருக்கும் (பக். 415, 416.).

தான் தீப்புகுவதைத் தாழ்க்குந் தடையாய்நின்ற குழந்தையைத் தான்சொல்லியாங்குப் பிடித்துவைத்துத் தன்னை நெகிழவிட அருகுநின்றாரனைவரும் மறுத்துவிடக் 'கொலைஞர்கள்கொண்டுசென்ற எம்பெருமான் இனி உன்னைக் காப்பாற்றமாட்டார்' என்று அவள் எங்குந்தருணம், சாருதத்தன் ஓடிவந்து, "யானே என்மகனைக் காப்பேன்" என்று வாரியெடுத்துத் தழுவ, எரிவாயிறங்கப்போகும் தூதை கண்டு களித்துக் கணவனையும் அவன் இறவாமற்காத்த கணிகையையும் வாயாரவாழ்த்தி வசந்தசேனையைத் தன் தங்கையாகப் பேணிப் பாராட்டுவதும், யாரும் பாராட்டத்தகுவதாகும் (பக். 416-419.).

அப்போது தூதை எரிப்புகுந்திறவாமையே தனக்குப் புதிய பெருவாழ்வாகுமென வசந்தசேனை யுரைத்துவந்தது, அவளது கள்ளமற்ற உள்ளத்துயர்வை ஒளிரச்செய்கின்றது.

இனி, விப்பிரவணிகனன சாருதத்தன்சால்பொடு பண்டமாற்றஞ்செய்யத்தகும்பொருளாயமைந்த வசந்தசேனை யின் குணச்செல்வப்பெருக்குக்கெல்லாம் மூலதனமுண்மை, கணிகையர்குலத்துப் பிறந்தும் கௌரவபுத்தியும் கருணையு முடைய அவளன்னைபாற் காணலாகும். சாருதத்தனைக் காணுமுன், பொருள்வறந்த அவன் நேசம் தன் மகளுக்கு வேண்டாவெனக்கருதி விலக்கமுயன்றுவந்த இவள், சாருதத் தனை நீதிமன்றத்தில் நேரிற்கண்டதும் அவனெழிலுருவ நலம் தன்மகள்காதலைப் பயன்படுத்துமென மதித்ததோ டமையாது, அவன் முகப்பொலிவுகொண்டு அவன் உயர் குணத்தையும் உடனே நுனித்துணர்ந்து பாராட்டுகிறாள்; தன்மகளை அவள் கலன்கருதி இவன் கொலைபுரிந்தானெனச் சகாரன் கூறியபோது, இழிந்த பொருள்காரணமாகத் தகாத செயலைச் சாருதத்தன் செய்பவனல்லன் எனத் துணிந்து கூறித் தன் ஆழ்ந்த மதிநுட்பத்தையும் மனிதரை மதித்தறி யும் அறிவுடைமையையும் புலப்படுத்துகிறாள்; பிறகு சாரு தத்தனே வசந்தசேனையைக்கொன்று அவள் கலன்களை அப கரித்திருக்கவேண்டுமென்று பலர் பல கரிபோக்கி விளக்கியும், நீதிமன்றத்தார் வசந்தசேனைகலன்களை அவளுக்குக் காட்டி 'இவை வசந்தசேனைக்குரியனவா?' என்று வினவுங்கால் அவள் தன் மகளிறந்த பருவரலையும் மறந்து சாருதத்தனைக் காக்கும்நோக்குடன் அவை தன் மகள்கலன்கள்ல்லவென மறைக்கமுயலுகின்றாள்; முடிவில் வசந்தசேனை இறந்துபட் டனளென்று நம்பி அவளிறந்தபின் வாழ்வதினும் சாதலே இனிதாகக்கருதிய சாருதத்தன், தானே கொலைபுரிந்த குற்ற

வாளியெனப் பிறர்நம்பும்படி மாற்றம் கூற, நீதிபதி வேறு வழி காணாது அவனைக் கொலையொறுப்புக்காளாக்கநினைத்த போது இக்கிழவி, தன்மகளை அவன் கொன்றவனாயினும், அக்கொலைவழக்கில் விசேடசம்பந்தமுடையவள் தானே யாகையால் உண்மைவாதியான தானே அவனுயிரை யிரப்ப தாயும் கொல்லாமல் அவனை மன்னித்து விடுதலைபண்ணு மாறும் நீதிபதியைக் குறையிரப்பது, அவளுயர்குணத்தை யும் உளவிசாலத்தையும் விளக்குவதாகும். இனைய தாய் வயிற்றுதித்த வசந்தசேனை நற்குணமேலீட்டால் நாளும் உயர்ந்துசிறந்தது இயன்முறையென்பதும் அறிந்து மகிழத் தக்கது. இது நிற்க.

சருவிலகன், மதனிகைபால் தனக்குள்ள கழிபெருங் காதல் காரணமாக, அவளடிமைநிலையை விலைகொடுத்தழிக் கும் அளவற்ற ஆர்வத்தால் அதற்குப் பொருள்தேடப் பிறிது வழி காணாது சாருதத்தன்வீட்டிற் கன்னமிட்டு ஆங்கே அடைக்கலமாக வசந்தசேனைவைத்த சில கலன்களைக் கள வாடுகின்றான். கட்ட கலன்களை நிலைத்த வஞ்சநஞ்சுகவராத நெஞ்சினனாகையால் வசந்தசேனைபால் மதனிகைவிடுதலைக்கு விலையாகச்சேர்ப்பித்து, மதனிகைசுதந்தரத்தை யாசிக்கிறான். அவளும் உண்மையை ஊகித்தறிந்து அவனுக்கும் மதனிகைக் கும் நலமாற்றக்கருதி மதனிகையை அவனுக்குத் தருகின் றாள். இப்படித் தன்னுயிரையும் அறத்தொடு மானத்தையுமே இழக்கநேரும் இழிவோடு அபாயமும் நிறைந்த களவுத்தொழி லைப் புரிந்து தன் கழிபெருங்காதற்கிழத்தியைக் கைக் கொண்டு மணந்துகளிக்கச்செல்லுந்தருவாயில் தன் நண்ப னான ஆரியகனை அரசன் சிறைவைத்தசெய்தி கேட்டான்.

உடனே தன் நெடிதுகாழ்த்த காதலையும் காதலியின் அவலத்தையும் மறந்து, நண்பனிடுக்கண்களைவதே தனிமுதலறமாகக் கொண்டு மதனிகை அபலையான தன்னைத் தன்தகப்பனிடஞ் சேர்ப்பித்துச்செல்லுமாறு நயந்திரக்கவும், அக் காதற்கடனுற்றவுந் தாழாது வழியிடையே அவளைப் பண்டிக்காரனிடம் ஒப்புவித்துவிட்டு விரைந்து ஆரியகனைச் சிறைமீட்கச்செல்லுகின்றான். இஃது இவ னியற்பெருங்குணத்தையும் இனிய நட்புக்காழ்த்த வுளப்பாங்கையும் விகசிக்கச்செய்கிறது. இனைய நல்லியல்புடைமையாலன்றோ இறுதியில் இவன் புதியஅரசியலிற் பெருமையும் பதவியும் பெறுவதோடு சாருதத்தனையும் வசந்தசேனையையும் முடிவில் அவர்களறவொழுக்கத்துக்குத் தக்கவாறு பெருமைப்படுத்தும் பேறும் பெறுகின்றான். அறத்தாறு வீண்போகாதென்பதை இச் சருவிலகன்சரிதமே உதகரிக்க உதவுவதாகும். இதுவும் இந்நாடகத்தைக் கவின் செய்யும் இனிய இயலற அமைப்புக்களுள் ஒன்றென்பது கருதி மகிழத்தக்கது.

இனி, செல்வத்தில் தெவிட்டலும், நல்குரவில் நசைமிகலும் மக்கள்பால் இயல்பாதலை மைத்திரேயன் முதலங்கத் தொடக்கத்திற் கூறுவதும், சனியை முதுமையில் தொடராமல் இளமையில் வந்து கழியும்படி விரும்பும் முதுமொழி பொதிந்த அறிவுடைமையைச் சாருதத்தன்,

"துக்க மாங்கடற் றுளைந்தவற்
 கின்பமீத் தோன்றுதல் நலமாகுந்
தக்க தாஞ்சுக வாழ்க்கையி
 லுற்றவன் தரித்திர முற்றக்கால்
புக்க தேகத்தின் சுமையொடு
 நடைப்பிணம் போன்றுநின் றுழல்வானல். (செ. 8.)

என விளக்குவதும் படிப்பவர்மனத்திற் பதியும்.

'பொருளின்மை துன்பமெலாம் பயக்கும் மூலம்.' (செ. 12)

என்ற சாருதத்தன்கூற்று,

"நல்குர வென்னு மிடும்பையுட் பல்குறைத்
துன்பங்கள் சென்று படும்."

என்னும் குறட்கருத்தை நினைவுறுத்துவதாகும்.

ஈன்றதாயானும் பிறன்போலநோக்கப்படும் நல்குரவின் வலியைச் சாருதத்தன்கூற்றாகப் பின்வருங் கவிகள் விளக்கித் தெளிக்கின்றன.

"இல்லாமை யாலொருவன் சொல்வழியின்
மனைவிமக்க ளிசைவா ரல்லர்
பொல்லாமை பலவிளையு மன்புமிக
நட்டோரும் புறக்க ணிப்பர்
புல்லாது வலிகுறையு மொழுக்கமெனு
மதியொளியும் பொன்று மந்தோ!
ஒல்லாது பிறர்புரியுந் தீவினையு
மவன்செயலா வுலகங் கொள்ளும்" (செ. 34.)

"எல்லாரு மென்னை யெளிமைப் படுத்துரைப்பர்
அல்லா தெவனுண்மை யாதரிப்பான்—பொல்லாவிவ்
வையந் தனிலாண்மை மாற்றும் வறுமைபிறர்
ஐய முறற்கேது வாம்" (செ. 179.)

இப்பாவடிகள்,

"இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை, இளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்"

"நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வுபடும்"

என்ற குறளடிகளின்பொருளை வலியுறுத்தக் காண்பாம்.

"கரியினது கவுள்வெறுமை கண்டிரியும்
வண்டினம்போற் காணென் னில்லம்
அரியவள மொருவியதென் றனுகுரு
திரப்போர்க ளகல்கின்றார்" (செ. 10.)

என்று இனிய இயலுவமை எடுத்தாளும் புலமைநலன் யாவரையும் எஞ்ஞான்றும் இன்புறுத்தும். இக்கவியின் ஈற்றடியில், தா னிழந்தபொருள்பற்றிக் கவலாத சாருதத்தன் தன் வறுமைகருதி வாராமல் விலகும் விருந்தினரான "பெரியவர்தம் மனமுவக்கப் பேணாத துன்பம்பே துறுக்குமாலோ" என்று பிரலாபிப்பது, இச்சால்புக்கடனறிகாட்சிப் பெரியோன் இடனில்பருவத்தும் ஒப்புரவிற்கொல்கா வுளத்தனுய்ச் செயுநீர செய்யாதமைகலாவாறு நல்கூர்ந்த நயனுடைமையை நன்கு நாட்டுகிறது.

இனி, பல பாத்திரங்களின்வாய் வரும் உவமைகள், அவரவர் பிறப்பு ஒழுக்கம் உளப்பாங்கு இனத்தியல்புகளுக்கேற்புடையவாய், விரிக்கும்பொருளை விளக்குதற்குரிய எடுத்துக்காட்டாயமைந்து நாடகத்தை அணிசெய்கின்றன.

"தாழ்குடிப் பிறந்த தருணி போல
அலையின் ஓரிடம் நிலையுத லின்றே" (செ. 150.)

யாழ், ஊடிச்சினக்கும் காதலியைப்போல மடியேற்றித் தைவரப்பெறுகின்றது. (பக். 158.)

இழிக்கப்பெற்ற நற்குடிப்பிறந்தானைப்போல எருமைக்கடா நெட்டுயிர்க்கின்றது. (பக். 157.)

தயிரன்னத்தால் வயிறுநிரம்பிய அந்தணனைப்போலக் கிள்ளைகள் நன்மொழிகளைப்படிக்கின்றன. (பக். 161.)

மதன்றூதாகிய நாகணவாய்ப்புள் தலைவனாற் பெருமை பெற்று இறுமாந்த வேலைக்காரியைப்போல ஓசையிடுகிறது. (பக். 161.)

எனவரும் இனைய பலவும் சிந்தித்து மகிழத்தக்கன.

"பெண்கள் வடமொழிபயிறலும், ஆடவர் இசைபாடுதலும் நகைவிளைக்கற்பாலன." (பக். 100.) என்று விதூடகன்கூறுவது சுவைக்கத்தக்கது.

சருவிலகன் தன் காதலியின் அடிமைநிலையகற்றும் ஆதரத்தாற் பொருள்வேண்டிச் சாருதத்தன்வீட்டிற் கன்னமிடுவதும், அது சம்பந்தமாகக் களவுநூலுள்ளிட்டுத் தான் கற்ற கல்வியெல்லாம் உபயோகிக்கும் விமரிசையும், பூசுரன் பூணூலும் கன்னத்துளையளத்தற்கும் அணிகளின் கடைப் பூட்டகற்றற்கும் கதவுத்தாழ் இழுத்தற்கும் பாம்பு முதலியன கடித்தால் உடனே விடமேறாமற் கடியிடத்தைச்சுற்றிக் கட்டற்குமாக இவ்வாறு களவுக்குதவுங் கருவியாவதைக் கவித்துக் களிக்கும் அவன் மனப்பாங்கும், அற்றம் நோக்கி அரியகினைக் துடனுளும் அவன் வினைத்திறமும், சுவர்களின் தன்மைக்கேற்பத் துளையுருவைச் சமைக்க வெண்ணும் அவ னறிவின்றிறமும் ஆகிய இவையெல்லாம் மூன்றும் அங்கத்திற் படிக்கப் பயன்தரும்.

அவ்வாறே நான்காம் அங்கத்தில் வசந்தசேனைவீட்டு வர்ணனையும், ஐந்தாம் அங்கத்தில் மழைவனப்பும் முழுவதும் படித்துப் பாராட்டற்பாலவாகும். விடன் பரத்தையரியல்பைவிளக்கும் 29, 30-ஆம் கவிகள் படிப்பவருளங் கவரும்.

சகாரனது கயமையும், அவனுடைய பொருளற்ற நெடு மொழிகளும், அச்சமும் அதனோடியைபுடைய ஆசையும், காதலற்ற கழிகாமமும், ஈரமில்லாக் கொடுமையில் உவப்பும் ஆகிய இவையெல்லாம் மேலளவில் நகையும் ஊன்றிநோக்க இரக்கமும் துனியும் பெருக்குவனவாம்.

சருவிலகன் சேடன் சந்தனகன் முதலியோர் தத்தம் நிலைக்குரிய கடனாற்றுவதிற் சிலம்பாது சிறுதவறுகளிழைப் பினும் அறங்கொல்லும் தகாதசெயலில் வெறுப்புடையராய் நெஞ்சடியில் நேசக்கடனாற்றுந் திண்மைநிலைத்தவராய்நடப் பது, கேவலம் மக்களின்நிலைகொண்டு அவருளத்தியல்பையும் உண்மையொழுக்கையும் மதித்தற்கில்லை; செல்வரிடைக் கய மையும் வறியரிடைச் சீலமும் பெரிதும் இருத்தல்கூடும்; என்ற வுண்மையை உறுதிப்படுத்துகிறது.

சாருதத்தனது பொருள்வறந்தநிலை அவன் பெரு மிதத்தை வளர்ப்பதாகுமுண்மையை வசந்தசேனை நனித் துணர்கின்றாள். தன் சிறியசுருக்கத்துப் பெருமைவேண்டிக் கைம்மாறுதரவியலாது தான் நல்கூர்ந்தநிலையிற் பொருட் பெண்டிர்குலத்துப்பிறந்த வசந்தசேனை தன்பால் வலிந்து காதல்காட்டினும், அவளுக்குத் தான் மீட்டுதவக்கூடாமை கருதிச் சாருதத்தன் அவளைச் சேட்படுத்தியகலும் இயல் புடையன். அதனால், கைம்மாறுவேண்டாத் தன்மெய்க் காதலால் அவனோடு தான் கற்புறவொன்றே காமுறுவதை அவனுக்கறிவுறுத்தி, அவன் அதனை நம்பித் தன்னை யாட் கொள்ளும்வரை தன் கழிபெருங்காதலை அடக்கிக்காத்து, அவனையினைக்குஞ் சூழ்ச்சிமுடித்துத் . . துணிவெய்தியபின்

தாழ்ச்சியுட்டங்காது முயல்வதே கருமம் என்று வசந்த சேனை தன் தோழியிடம் 2-ஆம் அங்கத்திற் கூறிய கூற்று அவள் காதற்றூய்மையையும் சாருதத்தனது மானஞ்சான்ற மனமாண்பையும் ஒருங்குதகரிக்கும் இனிய சான்முகி மிளிரும்.

சாருதத்தன் சான்றாண்மை பண்புடைமைகளை அறன் கடைநின்றாருளெல்லாம் அறக்கடையனுன விடன்வாயாலும் கொலையையே குலத்தொழிலாகக்கொண்டுடைய சண்டாளர் வாயாலும் விகசிக்கச்செய்த கவித்திறம் கவினுடையது.

> "நல்லோர் துயர்க்கடலை நாடிக் கடக்குமணை
> எல்லா வுயர்குணமு மேற்றநிதி" (செ. 326.)

என்று அவனைக் கழுவேற்றும்பணி பெற்றுப் பருவரலுறும் சண்டாளனும்,

> "கலைபயி லறிஞர்தம் நிலையளக் துணர
> வுற்றகண் ணடி; பற்றுநற் செய்கைக்
> கொல்லுநற் கட்டளைக் கல்லே; ஒழுக்கமாம்
> படுகரை கடவாக் கடலே; பலர்க்கும்
> ஆதர வானேன்; நோதர யாரையும்
> இழிவுறக் கருதான்; பழிதபு மக்கட்
> குளவுயர் குணனெலா மொளிர்தரு நிலையம்" (செ. 46.)

என்று தூர்த்தனன விடனுமே கொண்டாடவற்றாகும் சாருதத்தன்பெருமை படிப்பாருளத்தைப் பரவசப்படுத்தும்.

'இயல்பு, வடிவொடு பொருந்துதல் வழக்கே' (செ. 285.) என்ற இயலுண்மைக்கேற்பச் சாருதத்தன்தோற்றமே அவன்பெருமையைக் கரிபோக்கிநிறுவுகிறது. இதனாலன்றே

ஒழுக்கந்தவறிய கோவலனுடன் நின்ற கண்ணகியையும் அவன்பாற்கண்ட எளிமைகருதிப் பரிகசிக்கத்துணிந்த கடையொழுக்கவிடனினத்து மற்றொரு கீழ்மகனுங்கூடச் சாருதத்தனைக்கண்டு எள்ளாது பராவுகின்றான்.

பாவமறியாப் புனிதரைப் பார்க்குமளவிலேயே, அறமறியா விடர்களின் விடமனமும் கூசிமடியும் என்றவுண்மையை விடன்கூறும் சாருதத்தன் மெய்க்கீர்த்திகளும், 'என்விழிகள் நற்குலமகளைப் பார்த்தலிற் பயமுறுமம்ம' (செ. 237.) என்று அவன் சகாரனிடம் கூறிய இயன்மொழியுமே வலியுறுத்தும்.

பரத்தைபாற் காதலைப் பரிகரிக்கும்படிவேண்டிய மைத்திரேயனுக்குத் தன் வறுமைநிலையே வசந்தசேனையிடம் தன் காதலை மீறவிடாது தன்னை மீட்குமெனவுரைக்குஞ் சாருதத்தன்கூற்றாக,

"அடரு மெண்ணங்கள் வறியற்கெப் பொருளினு மணுகி
முடிவிற் கேடுறீஇ யவற்றின்மீண் டுள்ளத்தே மூழ்கும்" (செ.145.)

என்று எடுத்துக்காட்டிய செய்யுளடிகள், மனோவியல்புபற்றி நுனித்தறியத்தகும் உண்மையைத் தெளிவிப்பதுடன் கவிநலத்தையும் கவினுறக்காட்டுமன்றோ.

இன்னும் இந்நாடகத்திற் சில உண்மையியல்புகளும் நுண்பொருள்களும் அரிய நல்லவழக்கங்களும் காணப்படுகின்றன. அவை, ஆசிரியர் தம் கூரியமதியால் தேறிய இயற்கைத்தத்துவங்களைத் தம் நூற்போக்குக்கு உதவுமாறு கையாளுந்திறமையைக் காட்டும். அவற்றுள் ஒன்றிரண்டை

மட்டும் இங்கு மாதிரிக்குச் சுட்டுகின்றேன். வலம் இடமாக வும் இடம் வலமாகவும் உருமாற்றித்தோற்றும் கண்ணுடி யியல்பைப் பிராமணனுகிய தன்னுடையவிபரீதநிலைக்குவமை யாக விதூடகனும் (பக்-21), வெளிப்பட்டகணத்திலேயே மறையவல்ல விரைவுடைய பெண்பாம்பின்செலவை மாறுபடு மகளிர்மனத்துக்கும் நிலையற்ற செல்வத்துக்கும் உவமமாகச் சருவிலகனும் (செ. 118) எடுத்துக்கூறுமுகத்தால் இவ் வுண்மைகள் தெளிக்கப்படுகின்றன. இன்னும் பலவிடத்தும் இனைய பல இயல்புநயங்களை எடுத்தாளக் காணலாம்.

தந்தைதா யிருவர்வழியிலும் பழுதற்ற பார்ப்பனர்வழி வந்த சாருதத்தன் வாணிகத்தொழிலை மேற்கொண்டொழுகிய தால், அறந்தலைநின்றுனேனும் அவன் வைசியனுகவே நடத் தப்பெறுகின்றனன்; பார்ப்பனர்தெருவிற் குடியிருக்கவு மொண்ணுமல், வணிகர்வீதியிலேயே வசிக்கவேண்டியவனுகி ருன். கணிகையர்குலத்துதித்த வசந்தசேனை, தன் தூய வொழுக்கத்தாற் குலமகளாக அங்கீகரிக்கப்பட்டு "வது" எனும் பட்டவரிசையும் குலமகளிர் உடையுரிமைகளும் பெறு கின்ருள். ஆரியகன் இடையனுயினும் அரசனுக அங்கீகாரம் பெறுகின்ருன். கணிகையர்விட்டடிமைத்தாசியானமதனிகை பார்ப்பனனுன சருவிலகனுக்கு மனைவியாகிருள். ஆகவே அக்காலத்திற் பிறப்பால்மட்டும் சாதியுரிமைகளேற்படாமல், அவரவர் ஒழுக்கம் செய்தொழில்வேற்றுமைகளால் வருண முறை வரிசையுரிமைகள் வழங்கப்பெறும் வழக்காறுண்மை வலியுறுகின்றது.

மேலும், இம்முறை அக்காலத்தவர்களின் மனமொத்த ஆட்சியுடையதென்பது,

"சண்டாளர் தங்குலத்திற் றம்பிறந்தே மாயினுமுன்
சண்டாள ரல்லேந் தகவுநனி—கொண்ட
பெருமை யுடையாரைப் பேதுறுக்குந் தீயர்
கருமமுறு சண்டாளர் காண்" (செய். 334)

எனும் இந் நாடகக் கடையங்கத்துச் சண்டாளன்கூற்றூனும் நிலைபெறுவதாகும்.

இந்நாடகத்துச் சாருதத்தனுகிய சூத்தசித்திரத்தில் ஒரு சிறியமாசுூக்கண்டு மனமுளைபவரும் உளராகலாம். தனக்குப் பலவாறு கேடுசூழ்ந்தாற்றிவரும் சகாரனையும் இரங்கியளிக்கும் செவ்விய மனவியல்புடையவன் இவன் என்பதை நம் பண்டிதமணியவர்களே 343-ஆம் பக்கத்து அடிக்குறிப்பில் விசதப்படுத்தியுமிருக்கிறார்கள். "பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக் குறைபதி" என்னும் இலக்கணத்துக்கு இலக்காயொழுகும் இவன், தனக்குத் தவறிழைத்த பாலக வேந்தனைச் சகாரன்வஞ்சத்தால்நொந்துள தன்மனம்வெந்து,

"பகையுரை பற்றியோ பார்ப்பன னுமெனைத்
தகவறக் கொல்லுதி; சாற்றும் இச்செயலால்
அடுநர கிடைநின் குடிவழி மக்களொடு
கடிதின் வீழ்ந்து படுதுய ருறுகவே" (செ. 312)

எனச் சபிக்கின்றான். இறுதியில், பாலகன் இறந்துபட்டானெனச் சருவிலகன்கூறக் கேட்டபோதும் இரங்காமல் அவனிறப்பினால் மகிழ்கின்றான். இவன்மனம் இன்னலால் இறுகிற்றேனும் இவ்விரண்டிடத்தும் இவன்செயல் இவனியற்பெருமையோடொவ்வாத குறையாகவே நிற்கும்.

கைபிகந்ததண்டம் விதித்த வேந்தனுக்கு அதுவே அடுமுரண் தேய்க்கும் அரமாகி, அவனையழித்தது அறத்தாறெனினும் அவனழிவில் மகிழ்ச்சிகாட்டியது சாருதத்தனுக்கு மதியின் மறுப்போல அவன்புகழை மாசுபடுத்துங் குறையாகவே நிற்பதாகும்.

இப்பனுவல் இயலெழிலுயர்வுகளும் புலமைநலங்களும் நாடகவளமும் செறிந்துள்ள செவ்விநோக்கியேபோலும், இதனைத் தமிழாக்கத்தக்கதெனத் தெளிந்து தேர்ந்து பண்டிதமணி மொழியெயர்த்துதவினரென்று எண்ணக் கிடக்கின்றது.

கல்லூரிகளில் உயர்தரவகுப்புமாணவருக்கு உதவத்தக்க உரைநடைநூல் நாடகங்கள் தமிழில் இல்லை எனக் குறை கூறும் இந்நாளில், இதனையுதவிய பண்டிதமணியை, இது காறும் தக்காரைப் புறக்கணிக்குந் தமிழகமும் சருவகலாசாலை களும் இனி மிகவும் பாராட்டத் தாழ்க்கமாட்டா எனப் பெரிதும் நம்புகிறேன்.

இனைய பல தொண்டாற்றித் தமிழ்வளர்த்து நெடுவாழ் வும் வளர்புகழும் நிதிவளமும் நிதம்வளர, நம்புலவர் உரிமை பெறப் பல்லாண்டுகூறுகின்றேன்.

Camp.
கொடைக்கானல்.
26–5–1933.

ச. சோமசுந்தரபாரதி,
அட்வகேட்,
பசுமலை, மதுரை.

—

உ

கணபதி துணை.

# மண்ணியல் சிறுதேர்.

## முதல் அங்கம்.

### [1] முன்னுரை.

### [2] வாழ்த்து.

நேரிசையாசிரியப்பா.

1. உரை[3]பரி யங்க யோகி னிருக்கை
தளராதி யாத்த கிளர்மா சுணக்கச்
சிருமடங்கு சுற்றிய வெழின்முழந் தாளும்
[4] வளியுள் ளடக்கலி [5] னுளநிகழ் வுணர்வெலாம்
அறுதலு மதனுற் பொறிவகை யடக்கமுந்
தத்துவ நோக்கிற் றன்னிற் றன்னையே

---

[1] இதனை முதனூலார் ஆமுகம் எனவும், பிரஸ்தாவனை எனவுங் கூறுவர். நடியாதல் விதூடகனாதல் நடனாதல் சூத்திரதாரனோடு உரையாடுதல் இதன்கண்நிகழ்தல் இலக்கணம்.

[2] இதனை முதனூலார் நாந்தீ என்ப. நாந்தி என்பது அரங்க வழிபாடாகும். அரங்கத்திற்கு அதிதெய்வமாக விளங்கும் நந்தி தேவரைப்பற்றி நிகழ்தலின் நாந்தி எனப்பட்டது. படைப்புக் காலத்தில் இறைவன் அருட்கூத்து நிகழ்த்துங்கால் அப்பெருமானது சங்கற்பமாத்திரையில் நந்திதேவர் அரங்கமாந்தன்மை யெய்தினரென்ப. ஆதலின் அரங்கவழிபாடு நாந்தி என்று வழங்கலாயிற்று.

[3] பரியங்கம் - வீராசனம். [4] வளியுள்ளடக்கல் - பிராணாயாமம். [5] உளநிகழ்வுணர்வு - சித்தவிருத்தியாகிய புலனுகர்ச்சியுணர்வுகள்.

[1] உட்புறக் கரண மொழிவுறக் காண்டலும்
உடையனுப் தன்னை யடைவோர் தெளிதர
நிருவிகற் பத்தி னேரும்வா தனைவித்
திரிதலிற் செம்பொருட் பிரிவறப் பற்றுபு
[2] மன்னுயி ரெல்லா நன்னரின் புற்றுயச்
சங்கரன் மேற்கொள் சமாதி
எங்கனு நம்மை யினிதுகாத் தருள்கவே[3]. (க)

---

[1] ஏனையோர்க்குப்போல இறைவற்கு உட்புறக் கரணம் காண்டற்கருவி யன்மையான் இவ்வாறு கூறப்பட்டது.

[2] சங்கரன் மேற்கொள் சமாதிக்குப் பயன் கூறியவாறு; "பிறர் புரியுந் தவங்களுக்குரிய பயன்களைத் தரவல்ல இறைவன், தானே தவம்புரிதல் யாதோ ஒரு கருத்துப்பற்றி நிகழ்வதாம்" என்பர் குமாரசம்பவநூலாசிரியர்.

[3] இவ்வாழ்த்துச்செய்யுளால் இந்நாடகக்காப்பியக் கருப் பொருள் குறிப்பிற் கொள்ளப்படும். அது வருமாறு:— சங்கரன் என்னுஞ் சொல் இன்பத்தைச் செய்பவன் என்னும் பொருள தாகலின், அது வசந்தசேனையைப்புலப்படுத்தும். சமாதி யென்பது உள்ளத்து நிகழும் அவளது காதலைக் குறிக்கும். நிருவிகற்பத்தின்- அணிகலன் முதலிய இன்மையால். வாதனைவித்து-தொன்றுதொட் டுள்ள செல்வம். இரிதலில் - கெடெய்திய நிலையிலுள்ள. செம் பொருள்-அந்தணனாகிய சாருதத்தன். அவனைப் பிரிவறப் பற்றுபு மேற்கொண்ட காதல் என்க. இனி, சங்கரனுக்கு விசேடணமாக வுள்ளவெல்லாம் வசந்தசேனைக்குக் கொள்ளல்வேண்டும். பரியங்கம் - கட்டில்; அமளிக்கண் என்பதாம். மாசுணம் - பாம்பு. அதனால் இருமடங்கு சுற்றப்பட்ட முழந்தாள் என்பது நாகம்போல் இறுகுறத் தலைவனைத் தழுவுதலால் அவன் முழந்தாளோடியைந்த முழந்தாளை யுடையவளென்பதையும், வளி யுள்ளடக்கலால் உளநிகழ்வுணர்வெல்லாம் அற அதனுற் பொறிவகை

இன்னும்,

கலிவிருத்தம்.

௨. [1] உலக மீன்ற வுமைகர மின்னலின்
மலர நீருண் டிருண்ட மழையென
நிலவு நீலகண் டன்றிருக் கண்டமே
யுலகின் மன்னுயிர் யாவும் புரக்குமால். (௨)

[வாழ்த்துரை முடிந்தபின்]

சூத்திரதாரன்—சபையோரின் [2] மகிழ்ச்சியைத் தடைப் படுத்தும் இப்பயனற்றசெயல் ஒழிக. "[3] யாங்கள்

---

யடக்கம் என்பது அந்தக்கரணமும் பொறிபுலன்களுந் தலைவனை யன்றி வேறுபொருள்களிற் செல்லாமல் அவனொருவனையே பற்றி நிற்கப்பெற்றவளென்பதையும், 'தத்துவநோக்கில்......காண்டலும்' என்பது உண்மைக்காதற்கு நிமித்தமான சிறந்த குணநலங்களை அவன்பாற் காண்டலால் தன்பால் அவனைத் தன்னினு மினியனாகக் கொண்டு உட்புறக் கரணங்களுக்குப் பிறபொருள் ஒழிவெய்தக் காண்கின்றவள் என்பதையும் குறிப்பனவாம். வசந்தசேனை சாருதத்தன்பாற்கொண்ட உண்மையான காதற்சிறப்பே இந் நாடகக் காப்பியத்திற் சிறந்த சுவைப்பொருளாகத் திகழ்ந்து இன்புறுத்து மென்பது இதன் திரண்ட கருப்பொருளாம் என்க.

[1] ஈண்டும் மேகத்தைப்போல இரப்போரது நல்குரவு வெப்பத்தைப் போக்கவல்ல சாருதத்தனை மின்னலையொத்த வசந்தசேனை தழீயினள் என்னுங் காப்பியக் கருப்பொருள் புலனாதல் உணர்க.

[2] மகிழ்ச்சி-நாடகத்தைப் பார்க்கவேண்டும் என்னும் உவகை.

[3] கவி காப்பியங்களின் பெருமையையும் நடன் முதலியோர் மாண்பையும் வெளிப்படுத்துவது பிரரோசனை யென்னும் பகுதி யாம்; அதன் தொடக்க மிதுவாகும்.

[1] மண்ணியல் சிறுதேர் (மிருச்சகடிகம்[2]) எனப் பெயரிய இப் [3]பிரகரணநாடகத்தை நடாத்தும் முயற்சியுடையேம்" என்னும் இதனை யான் பெரியோர்களுக்கு வணக்கஞ்செய்து தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

[4] இந்நாடககவியோ,

நேரிசையாசிரியப்பா.

3. தந்தியி னடையுஞ் சகோரநேர் விழியும்
இந்துநேர் வதனமும் எழினிறை யாக்கையும்

---

[1] மண்ணுனியன்ற சிறிய தேர்.

[2] மிருத் - மண்; சகடிகா - சிறுதேர்; சிறுர் விளையாடுதற் குரியது. அதனையுடையது இந்நாடகமாதலின் இதனை "மிருச் சகடிகம்" என்பர் முதனூலாசிரியர். சாருதத்தன் வறுமையால் அவன்புதல்வன் உரோகசேனன் விளையாடுதற்கு மண்ணுற் செய்யப்பட்ட சிறுதேர் அமைந்தது என்று இதன் ஆறும் அங்கத்திற் கூறப்படும்.

[3] பிரகரணம் நாடகவகைகளு ளொன்று; கவி தன்னறிவால் நிருமிக்கப்பட்ட கதையினையுடையதும், விட்புலநிகழ்ச்சி முதலியன வின்றி உலகியல்களை விரிப்பதும், தலைவனுக: அமைச்சன், அந்தணன், வணிகன் என்னும் இவருள் ஒருவனையும், தலைவியாக: குலப்பெண், கணிகை என்னும் இருவருள் ஒருவரையேனும், அன்றி இருவரையும் ஒருங்காகவேனுங் கொண்டு நிகழ்வதும், தலைவன் அறம் பொரு ளின்பங்களிற் பற்றுடையனுகவும் பலவகை இடை யூறுகளையுடையனுகவும் அமையப்பெறுவதும் இப் பிரகரண இலக்கணமாம். ஏனை நாடகப் பொதுவிலக்கணங்க ளெல்லாம் இதற் குரியனவாம்.

[4] இதனை யியற்றிய புலவர்.

புலமையும் புகழும் அலகிலா வன்மையும்
இகலெறு மூக்கமும் பகர்சொல் வின்மையு
மறையுணர் திறனு நிறைதவப் பொருளு
நேரலர் களிறெலாம் போரி னடக்குஞ்
செய்கையின் மிக்க கைவன் மையும்
உடையவ னிருக்கோ டடைதரு சாமமும்
[1] எண்ணு [2] மின்பமுந் திண்ணிய [3] வேழமும்
பற்றிய கலைகளும் முற்ற வுணர்ந்தோன்
அரனரு ளாலே [4] யிருளகன் றொளிரும்
நாட்டமும் பெற்றோ னீட்டு பல்பொருட்
பரிமகம் புரிந்து பார்முழு தாண்டோன்
அரசர்தங் குலத்து விரசுசூ டாமணி
உரிமையி னரசுதன் னொருமகற் கிந்துபின்
ஒருபது நாளுட னெங்குநூ றாண்டு
மருவியிவ் வுலகில் வாழ்ந்துமா [5] வேள்வியிற்
பூத்தரு மங்கியிற் புகுந்த
சூத்திர கன்னென வேத்துமன் னவனே. (௫)

---

[1] எண்-கணிதநூல், [2] இன்பம் - காமநூல். [3] வேழம்-யானைநூல். [4] இருள் அகன்று ஒளிரும் நாட்டம் - இருட்படலம் என்னும் நோய்நீங்கப்பெற்ற கண்; அன்றி மயக்க முதலியன நீங்கிய ஞானநாட்ட மெனினுமாம்.

[5] "ஸர்வஸ்வாரம்" என்னும் பெயரினையுடைய வேள்வித்தீயிற் சரபங்கனைப்போற் புகுந்தவன்; பத்துநாளுடன்கூடிய நூறுயாண்டு வரை நிலவுலகத்தில் வாழ்ந்து பின் வேள்வித்தீயிற் புகுந்தான் என்று இக்கவியே தன்னைக்கூறியது, கணிதநூலுணர்ச்சியானும், முன்னரே துணிந்துவைத்தமையானுமா மென்ப. தன்காலத்தின் பின்னுள்ளோரால் இந்நாடகம் பிரயோகிக்கப்படுமென்பது துணிந்து இறந்தகாலத்தாற் கூறினன்.

இக்கவியாசாற் செய்யப்பட்ட இந்நாடகத்தில்,

ஆசிரியவிருத்தம்.

4. [1] அவந்திதிகழ் முணிநகரி லந்தணர்தங்
குலத்துதித்தே [2] யரிய னாகி
நிவந்திளமை தனில்வறுமை நேர்ந்துளோன்
சாருதத்த னென்பா னேயம்
உவந்திவன்ற னுயர்குணத்தாற் பிணிப்புண்டு
கணிகைகுலத் தொருத்தி யுற்றாள்
சிவந்தருகல் லிளவேனிற் பொலிவுடையா
ளவள்வசந்த [3]சேனை யென்பாள். (ச)

ஆசிரியவிருத்தம்.

5. எழின்மிகு மிவர்தாந் துய்த்த
வின்பநன் [4]னிலையுஞ் [5]சூழ்ச்சி
தழுவலும் வழக்கின் மாறுந்
தன்மையுங் கயவர் மேற்கொண்

---

[1] அவந்திதிகழ் அணிநகர் - அவந்தி தேயத்திலேயுள்ள அழகிய தலைநகராகிய உச்சயினிநகரம். [2] அரியன் - வணிகன்; பிறப்பால் அந்தணனும் தொழிலான் வணிகனு மாவன்.

[3] சேனையென்பது இறுதியில் அமையக் கணிகையர்குலத்துப் பெண்களுக்குப் பெயர்கோடல் விதி யென்ப.

[4] 'நிலையு நீதி' என்னும் பாடமும் பொருந்தும்.

[5] சூழ்ச்சி - உபாயம்; தடையாகவுள்ளவற்றைக் கடந்து ஒருவரையொருவர் கூடுதற்கு மேற்கொள்ளப்படுவது:

டொழுகுமவ் வியல்பு மற்றை
யூழ்வினை யூட்டு மாறும்
முழுவது நிலவச் செய்தான்
முன்னுருத் திரக னென்பான். (ரு)

[சுற்றிப்பார்த்து] ஓ! நமது நாடகசாலை பாழடைந்துளது; பாடகர்கள் யாங்குப் போயினர்? [நினைவுகூர்ந்து] ஆம் அறிகின்றேன்.

கலிவிருத்தம்.

6. மக்க ளில்லதொ ரில்லமும் பாழ்நல
மிக்க நண்பரில் வாழ்க்கையும் பாழ்செலுந்
திக்கு முற்றுஞ் சிறுதகை யோர்க்குப்பாழ்
[1] ஒற்க மிக்கவற் கொல்லுவ யாவும்பாழ். (சு)

இசை பாடியாயிற்று. நீண்ட நேரம் இவ்விசைபாடினமையான், முதுவேனிற்காலத்திற் கடுங்கதிர்க்கிரணங்களால் உலர்ந்த தாமரைக்கொட்டைபோற் றுடிக்கின்ற கருமணிகளையுடைய என்கண்கள், பசியினாற் சுழலுகின்றன. ஆதலின், என்மனைவியையழைத்துச் சிறிது பழஞ்சோறு உண்டோ? இன்றோ? என்று கேட்பேன். [[2] காரிய நிமித்தமும் நாடகநிகழ்ச்சியும் பற்றிப் பாகதமொழியிற் பேசவேண்டியவனாகின்றேன்] அந்தோ! அந்தோ! நெடு

[1] ஒற்கம் - வறுமை; வறுமையாளர்க்கு எல்லாம் பாழ் என்பதாம்.

[2] தூய வடமொழியிற் பேச இயலாதவர்கள் பிராகிருதத்திற் பேசுதல் இயல்பு. தமிழ் இயற்கைமொழியாதலானும், இதன்கண் இழிசனவழக்குக்கு விதியின்மையானும் பயில்வார்க்கு மொழிநயமுந் தோன்றச் செந்தமிழ்மொழியிலேயே எழுதப்படும்.

நேரம் இசைபாடினமையான், உலர்ந்த தாமரைத்தண்டுபோல என் உடலுறுப்புக்கள் உணவுவேட்கையால் வாடுகின்றன. ஆதலின், இல்லமெய்தி மனைவியால் எதாயினுஞ் சித்தஞ் செய்யப்பட்டதுண்டோ? இன்றோ? என்று அறிவேன். [சுற்றிப்பார்த்து] இதுதான் நமது இல்லம். இதன்கட் புகுகின்றேன். [புகுந்துபார்த்து] ஆச்சரியம்! ஈதென்னை! நம் வீட்டில் வேறுமாதிரியான ஏற்பாடுகள் உள்ளன. வழியெல்லாம் நீண்ட கழுநீர்வெள்ளத்தை யுடையன. இரும்பு முதலிய வுலோகங்களானுய பாண்டங்களை யீர்த்த லாற் கரியதும், அதனால் வேறு பல நிறங்களையுடையதும் ஆகிய இந்நிலம் திலகத்தான் அலங்கரிக்கப்பட்ட மங்கை போல மிகவும் விளக்கமுற்றுளது. இவ்விடத்துள்ள அடிசில் நறுமணத்தாற் கிளர்ந்தெழும் பசி என்னை மிகவுந் துன் புறுத்துகின்றது. நம் முன்னோரான் ஈட்டப்பட்ட வைப்புப் பொருள் வெளிப்பட்டதுகொல்! அன்றி, யானே பசி மிகுதியால் இவ் வுயிருலகத்தை அன்னமயமாகப் பார்க்கின் றேன்கொல்! நம் கிருகத்தில் பழஞ்சோறும் இல்லையே! பசியோ என் ஆற்றலைக் கடந்து மிகவுந் துன்புறுத்து கின்றது. இவ்விடத்தில் எல்லாம் புதிய தொடக்கங்களாக வுள்ளன. ஒருத்தி சந்தன முதலிய கலவைகளைப் பிசை கின்றாள். மற்றொருத்தி மலர்களைத் தொடுக்கின்றாள். [நினைவுகூர்ந்து] ஈதென்னை? நிற்க. மனைவியையழைத்து உண்மையைக் கேட்டறிகின்றேன். [வேடசாலைக்கு எதிரே பார்த்து] நங்காய்! இங்கு வருக.

நடி—[வந்து] ஐய! இதோ வந்தேன்.

சூத்திரதாரன்—காதலி! நின்வரவு நல்வரவாகுக.

நடி—ஐய! இன்னகாரியம் செய்தல்வேண்டுமென்று கட்டளையிடுங்கள்.

சூத்திரதாரன்—பெண்ணே! ["நெடுநேரம் இசைபாடினமையால்" என்னும் இது முதலியவைகளைக் கூறி] நம் வீட்டில் ஏதாவது உண்ணத்தக்கதுண்டோ? இல்லையோ?

நடி—ஐய! எல்லாம் இருக்கின்றன.

சூத்திரதாரன்—யாதியாதிருக்கின்றது?

நடி—அவையாவன:—அக்காரவடிசில், நெய், தயிர், அரிசி, தாங்களுண்டற்குரிய மற்றைச் சுவைப்பொருள்கள் முதலிய எல்லாம் உள்ளன. இவ்வாறே என்றும் இருக்குமாறு தங்கள் குலதெய்வங்கள் அருள்செய்க!

சூத்திரதாரன்—நம்வீட்டில் இவ்வெல்லாம் உள்ளனவா? அன்றிப் பரிகசிக்கின்றாயா?

நடி—[தனக்குள்] பரிகசிக்கின்றேன். [வெளிப்படையாக] ஐய! [1] அங்காடியிலுள்ளன.

சூத்திரதாரன்—[சினத்துடன்] ஆ! இழிந்தவளே! இத்தகைய நினது அவா சிதைவுறுக. இப்பொழுது [2] வளைவு சுவர்க்கு ஆதாரமாக இடப்படும் அடுக்குச்செங்கலைப்போல்

---

[1] அங்காடி-கடைத்தெரு; வெல்லம் நெய் முதலிய எல்லாம் கடைத்தெருவிலுள்ளனவென்று பரிகசிக்கின்றாள்.

[2] இவ்வுவமை பலவகையான சுவைமிக்க உணவமைக்கப் பட்டனவென்று அவனுக்குப் பேரவாவை வளர்த்துப் பின் இவ்வெல்லாம் கடைத்தெருவிலுள்ளனவென்று பரிகசித்து அவ்விருப்பங்களை வீழ்த்தினமையைப் புலப்படுத்தும்.

என்னை உயரத்தூக்கி வீழ்த்தியமையால் நீயும் கேடுறுவாயாக.

நடி—ஐய! பொறுத்தருள்க. பொறுத்தருள்க. இது பரிகாசமன்றோ?

சூத்திரதாரன்—அங்ஙனமாயின் இவ்வேற்பாடுகளெல்லாம் புதியனபோற் காணப்படுகின்றனவே. ஒருத்தி சந்தன முதலிய கலவைகளைப் பிசைகின்றாள்; மற்றொருத்தி மலர்களைக் கட்டுகின்றாள்; இந்நிலம் பஞ்சவன்னமலர்களின் சேர்க்கையால் விளங்குகின்றது. ஈதென்னை?

நடி—இன்று நோன்பு தொடங்கியிருக்கின்றேன்.

சூத்திரதாரன்—இந்நோன்புக்குப் பெயர் யாது?

நடி—"கட்டழகுள்ள கணவன்" என்பதாகும்.

சூத்திரதாரன்—மாதராய்! இதற்குப் பயனெய்தல் இவ்வுலகத்திலா? உம்பருலகத்திலா?

நடி—ஐய! உம்பருலகத்தில்.

சூத்திரதாரன்—[சினத்துடன்] பாருங்கள்! பாருங்கள்! பெரியோர்களே! என்னுடைய சோற்றுச்செலவினால் இவள் உம்பருலகத்துக்கணவனைத் தேடுகின்றாள்.

நடி—ஐய! அருள்க. அருள்க. தாங்களே மறுபிறப்பிலும் கணவனாகவேண்டும் என்பதே[1].

சூத்திரதாரன்—இந்நோன்பை எவன் உனக்கு உபதேசித்தான்?

---

1 இந்நோன்பின் பயனாகுமென்று முடிக்க.

நடி—தங்கள் அன்புமிக்க நண்பர் சூர்ணவிருத்தர்.

சூத்திரதாரன்—[கோபத்தோடு] ஆ! இழிதகவ! சூர்ண விருத்த! புதிய [1] மணப்பெண்ணின் குழற்கற்றைபோல நின்னை [2] மணப்பொருள்களாற் பூசிப்புனைந்து சினமிக்க பாலகனென்னும் அரசன் வெட்டிவீழ்த்தலை எப்பொழுது காண்பேன்!

நடி—ஐய! அருள்க! உம்பருலகத்திலும் தங்களையே பற்றியது இந்நோன்பு. [என்று அடிக்கண் இறைஞ்சுகின்றாள்.]

சூத்திரதாரன்—நங்காய்! எழுக. இந்நோன்பு யாரால் நிறைவேறல்வேண்டும்? கூறுவாயாக.

நடி—நம்போன்றார்க்குத் தகுதியான நிலையிலுள்ளாரும் இந்நோன்பில் உண்டற்குரியவருமாகிய [3]ஓர் அந்தணரால்.

சூத்திரதாரன்—பெண்ணே! அங்ஙனமாயின் செல்க. யானும் நம்போன்றார்க்குத் தகுதியான அந்தணரொருவரை உணவுக்கு அழைத்துவருகின்றேன்.

நடி—தங்கள் கட்டளைப்படியே. [என்று போய்விடுகின்றாள்].

---

[1] மணப்பெண்ணின் குழற்கற்றை பூசிப்புனைந்து கட்டப்படுதல் போலச் சூர்ணவிருத்தனையும் பூசிப்புனைந்து கொலைப்படுத்த வேண்டுமென்பது கருத்து.

[2] கொலைப்படுவோர்க்குரிய சந்தனம் மாலை முதலியவற்றால்.

[3] ஓர் அந்தணரால் நிறைவேறல்வேண்டும் என்று முன் வாக்கியத்தோடு முடிக்க.

சூத்திரதாரன்—[உலாவி] ஆச்சரியம்! அங்ஙனமாயின் இச்செல்வம் நிறைந்த உச்சயினீநகரில் [1]நம்போன்றார்க்குத் தகுதியான அந்தணரை எங்ஙனம் தேடுவேன்? [பார்த்து] [2]சாருதத்தருடையநண்பராகிய மைத்திரேயர் இதோ வருகின்றார். நிற்க. கேட்கின்றேன். மைத்திரேயரே! தாங்கள் எம் இல்லத்தில் இன்று உணவிற்குத் தலைவராகவிருத்தல் வேண்டும்.

[வேடசாலையில்]

ஓ! தாங்கள் மற்றோரந்தணரை உணவுக் கழைத்துக் கொள்ளுங்கள். யான் இப்பொழுது வேறொருசெயலில் முற்பட்டிருக்கின்றேன்.

சூத்திரதாரன்—ஐயரே! நிறைந்த உணவு; பகைமையும் இன்று; தக்ஷிணைப்பொருளும் கிடைக்கும்.

[பின்னரும் வேடசாலையில்]

ஓ! இப்போது சற்றுமுன்னர்த்தானே மறுத்துரைத்தேன்; அடிக்கடி என்னைத் தடைசெய்யும் இந்நிர்ப்பந்தம் என்னை?

சூத்திரதாரன்—இவன் மறுத்துரைத்துவிட்டான். நிற்க. மற்றோரந்தணரை உணவுக்கழைக்கின்றேன். [என்று போய்விடுகின்றான்.]

முன்னுரை முற்றிற்று.

---

[1] இழிகுலமும் வறுமையும் ஒருங்குடைய நம்போன்றார் என்க.

[2] சாருதத்தருடைய நண்பரென்றதனால் வறுமைநிலைப்பட்டிருக்கும் இவர் நமக்கு இணங்குவரென்பது கருத்து.

# அணிகலன் அடைக்கலம்.



[விதூடகன் மேலாடையொன்றைக் கையிலேந்தி வருகின்றான்.]

[1] மைத்திரேயன்—["மற்றோந்தணரை" என முன் சொல்லிய அதனையே கூறிக்கொண்டு] மைத்திரேயனாகிய யானும் பிறர் உணவுக்கு அழைத்தற்கு உரியனாயினேனே! ஆ! நல்குரவுத்துன்பமே! பஞ்சாப்பறக்கச் செய்கின்றாயே. பெருமையிற்சிறந்த சாருதத்தராதுசெல்வத்தால் இரவும் பகலும், மிக முயன்று நன்கு சித்தஞ்செய்யப்பட்டனவும் நெய் பெய்தமையால் நறுமணங்கமழ்வனவுமாகிய கொழுக் கட்டைகளையுண்டு தேக்கெறிந்து, அவற்றை இல்லத்தி னுள்ளே நான்குவாயில்களும் ஒன்றுகூடும் வழியிடைக்கட் பற்பல உண்கலங்கள் சூழவிருந்து, ஓவியம் எழுதுபவன் போல் விரல் நுனிகளால் தொட்டுத்தொட் டெறிவேன். நகரச்சதுக்கங்களில் திரியும் ஊரேறுபோல் [2] வாயசைத்துக் கொண்டிருப்பேன். அத்தகைய யான் இப்பொழுது சாரு தத்தராதுவறுமையால் [3]மாடப்புறாப்போல் எவ்விடத்தினுந் திரிந்து படுத்துறங்குதற்பொருட்டு இவ்விடத்தை அடை

---

[1] விதூடகன். [2] வாயசைத்தல் - அசைபோடல்; அது உணவு நிறைந்தமையால் நிகழ்வது.

[3] மாடப்புறா, பலவிடங்களிலும் அலைந்து உணவுதேடி உண்டு மாலைப்பொழுதில் பழகிய ஓரிடத்தையடைந்து உறங்குதல்போல, மைத்திரேயன் சாருதத்தராதுவறுமையால் உணவுக்கு வேறு பல இடங்களிற்சென்று உறங்குதற்பொருட்டு அவரில்லத்தை அடை கின்றான் என்பதாம்.

கின்றேன். மாட்சிமிக்க சாருதத்தருடைய அன்புள்ள நண்பரான சூர்ணவிருத்தர், "தேவகாரியம் நிறைவேறியபின் மாண்புமிக்க சாருதத்தர்பால் இது சேர்க்கற்பாலது" என்று கூறிச் சாதிமலர்களான் மணம்வூட்டப்பட்ட இம்மேலாடையை என்பால் தந்தனர். ஆதலின், பெருமைமிக்க சாருதத்தரைப் பார்க்கின்றேன். [சுற்றிப்பார்த்து] இதோ சாருதத்தர் தேவபூசையை நிறைவேற்றி இல்லுறை தெய்வங்களுக்குப் பலியை எடுத்துக்கொண்டு இங்கே வருகின்றார்.

[அதன்பின், குறிப்பிட்டபடி சாருதத்தனும்
இரதனிகையும் வருகின்றனர்.]

சாருதத்தன்—[மேலேபார்த்து வருத்தத்துடன் பெருமூச்செறிந்து]

ஆசிரியவிருத்தம்.

7. அங்காளி னில்வாயி லிட்ட[1]பலி
[2] சாரசத்தோ டன்னக் கூட்ட
மன்னுநின் றப்பொழுதே யுண்டுகளித்
துலாவுறுநல் வளங்க ணீர்ந்த
இங்காளிற் [3]புற்புதர்க டோன்றிநெருங்
கவ்விடத்தே [4]யென்பில் யாக்கை
முன்னுநின் றுண்டொழிக்க வீழ்தருமால்
[5]வித்தினங்கண் முறையே யம்ம! (எ)

[என்றுகூறி மெல்லமெல்லச் சுற்றிவந்து இருக்கின்றான்.]

---

[1] பலி-பூதபலியாகப்போடப்படும் அரிசி முதலியன. [2] சாரசம்-வெண்ணாரை. [3]புற்புதர்கள் தோன்றுதல், பணியாளர் முதலியோர் போக்குவரத்தின்மையானும் தூய்மைசெய்யப்படாமையானு மாம். [4] என்பில்யாக்கை-புழு. [5] வித்தினங்கள்-நெல், பயறு முதலியன,

விதூடகன்—இதோ பெருமான் சாருதத்தர் இருக்கின்றார். ஆதலின், இப்பொழுது இவர்பக்கலிற் போகின்றேன். [அணிமைக்கணெய்தி] தங்களுக்கு மங்கலமுண்டாகுக. தங்கள்நலம் வளர்க.

சாருதத்தன்—ஓ! எக்காலத்தும் இனிய நண்பனாகிய மைத்திரேயன் வந்தனன். நண்ப! நின்வரவு நல்லதாக இருக்கவேண்டும்.

விதூடகன்—தங்கள்கட்டளைப்படியே. [இருந்து] ஓ! நண்பரீர்! நும் அன்புமிக்க நண்பராகிய சூர்ணவிருத்தர் "தேவகாரியம் நிறைவேறியபின் மாண்புமிக்க சாருதத்தர்பால் இது சேர்க்கற்பாலது" என்றுகூறிச் சாதிமலர்களான் மணம் ஊட்டப்பட்ட இம்மேலாடையைத் தந்தனர். [என்று கொடுக்கின்றான்.]

[சாருதத்தன் அதனைப் பெற்றுக்கொண்டு தன்னிலையை எண்ணி வாய்வாளாதிருக்கின்றான்.]

விதூடகன்—ஓ! சிந்தித்தலென்னை?

சாருதத்தன்—நண்ப!

ஆசிரியவிருத்தம்.

8. [1]மிக்க தாகிய விருட்பிழம்
புற்றுழி விளக்கொளிப் பயன்போலத்
துக்க மாங்கடற் றழுந்தவற்
கின்பமீத் தோன்றுத லமாகும்

[1] இச்செய்யுட்பொருள், 'சிந்தித்தலென்னை' என்று விதூடகன் கேட்டதற்குச் சாருதத்தன் விடைகூறியதாகும். திருவொழிந்த நிலையில் உடலையொழிக்க எண்ணியும் உடற்பிணிப்பு விட்டிலதே என்னுங்கருத்தால் சாருதத்தற்கு இறப்பினும் உயிர்வாழ்க்கை மிக்க துன்பந்தருவதாயிற்றென்பது சிந்தனைப்பொருளாம்.

தக்க தாஞ்சுக வாழ்க்கையி
னுற்றவன் றரித்திர முற்றக்காற்
புக்க தேகத்தின் சுமையொடு
நடைப்பிணம் போன்றுநின் றுழல்வானல்.(அ)

விதூடகன்—ஆ! நண்பரீர்! இறப்பு, வறுமை என்னும் இரண்டனுள் யாது தங்களால் விரும்பற்பாலது[1]?

சாருதத்தன்—தோழ!

கலிவிருத்தம்.

9. வறுமையு மரணமு மதித்து நோக்குறின்
வெறிதரு மரணமே விரும்பற் பாலதாம்
[2]நெறிபிறழ் வறுமையிற் றுன்ப நீண்டதச்
செறிதரு மரணத்திற் சிறிது துன்பமே. (கூ)

விதூடகன்—ஓ நண்பரீர்! கவலுதல் ஒழிக. முன்னர் இரப்போர்க்கித்துவந்த செல்வராகிய தங்கள் குன்றிய

---

[1] சாருதத்தன் உடற்சுமையையுடையனுயிருத்தலால் வறுமையுற்றும் உடலைவிடாதிருத்தல் அவற்கு விருப்பமாம்போலும் என எண்ணி மரணத்தினும் வறுமைத்துன்பம் குறைந்ததாகும் என்னும் ஊகத்தைமேற்கொண்டு இவ்வாறு வினவினன்.

[2] இறப்புத்துன்பம் உறவினரைவிட்டொழியும் அவ்வளவிற் சிறிதுகாலம் நிற்பது. வறுமைத்துன்பம் உடலொழியுங்காறும் நீண்டகாலம் நிற்பது.

நிலையும், [1] விண்ணவர்களுண்டெஞ்சிய பிரதமைப் பிறை போல மிகவும் அழகுடையதே.

சாருதத்தன்—நண்ப! எனக்குப் பொருளைப்பற்றிய துன்பம் இல்லை. பார்க்க.

ஆசிரியவிருத்தம்.

10. உரிமையிலாக் காலத்தி னுலர்ந்துறைந்த
மதத்தின்வரி யுற்றுத் தோன்றும்
கரியினது கவுள்வெறுமை கண்டிரியும்
வண்டினம்போற் காணென் னில்லம்
அரியவள மொருவியதென் றணுகுறு
திரப்போர்க ளகல்கின் றாரப்
பெரியவர்த மனமுவக்கப் பேணாது
துன்பம்பே துறுக்கு மாலோ. (கூ0)

விதூஷகன் — ஓ நண்பரீர்! [2]விடமுட்களையுடைய வேட்டுவன் என்னும் ஒருவகை வண்டுகளுக்கு அஞ்சிய இடைப்பையல்கள் காட்டில் எங்கெங்கு அவற்றாற் பிடிக்கப் படுதல் இல்லையோ அங்கங்கு விளையாடித்திரிதல்போல

---

[1] "முதற்கலையை அங்கியும், இரண்டாங்கலையைச் சூரியனும் உண்ணுகின்றனர்" என்னும் அறநூற்படி சந்திரகலைகள் தேவர்களுக்கு உணவாதலால் அக்கலைகளின் குறைவு பிறர்நலத்தின் பொருட்டு நிகழ்ந்து விசேட அழகுசெய்தல்போலச் சாருதத்தரது வறுமை பிறர்க்கு ஈதலால் நேர்ந்ததாதலின் அதனை மிக்க அழகுடையதென்றான்.

[2] விடமுட்களையுடைய வண்டுகளுக்கு அஞ்சி அவற்றாற் றன்புறுத்தப்படாத இடங்களில் இடைப்பையல்கள்திரிதல்போலப்

இவ்விழிந்தசெல்வமாகிய பழஞ்சோறு எங்கெங்கு உண்ணப் படுதலில்லையோ அங்கங்குச் செல்கின்றது.

சாருதத்தன்—நம்ப!

ஆசிரியவிருத்தம்.

11. [1]ஊழ்வலியாற் பொருள்வாலு முற்றதுபோ
தலுமியல்பே யுண்மை யாக
வாழ்தருநல் வளமிலதால் வருங்கவலை
யொருசிறிது மனத்துட் கொள்ளேன்
வீழ்தருமப் பொருளின்றி வெறிதுறுவோன்
றனைக்கண்டு விரும்பு நட்பிற்
சூழ்தருமிம் மாக்களெலாஞ் சுளிக்கின்று
ரிதென்னைச் சுடுமா லம்ம! (கக)

இன்னும்,

ஆசிரியவிருத்தம்.

12. [2]நல்குரவா னுணுமுமங் நாணத்தாற்
பீடழிவு நண்ணு மத்தான்
மல்குமவ மதிப்புறுமற் றலைதகத்தே
மகிழ்வின்மை யதுமா வின்னல்

பிறர்க்கு ஈந்து தாமும் அனுபவிக்கும் நல்லோர்களின் கொடை அனுபவங்களுக்கு அஞ்சி உலோபிகளைச் செல்வம் அடைகின்ற தென்பது கருத்து.

[1] செல்வம் மின்னலைப்போலத் தோன்றிமறைதலின் நிலையற்றது. அறிஞர்நட்பு நிலையுடையது. அங்ஙனமிருந்தும் இப்பொழுது அந்நட்புச் செல்வநிலைக்கு எற்றவாறு தன்னியல்பின் வேறுபடுதலைக் காண வருந்துகின்றேன் என்பதாம். "கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை, நீட்டி யளப்பதோர் கோல்" என்பது ஈண்டுக் கருதற்பாலது.

[2] நாணம் இரப்போரையும் செல்வரையும் காணுங்கால் உண்டாவது. அவமதிப்புறுதல், 'இல்லாரை யெல்லாரு மெள்ளுவர்'

நல்குமத னற்பகுக்கு முணர்வொழியு
மஃதொழிய நவிலுங் கேடு
பல்குமித னலந்தோ பொருளின்மை
துன்பமெலாம் பயக்கு மூலம். (கஉ)

விதூடகன்—ஓ நண்பரீர்! அச்செல்வமாகிய [1]பழஞ் சோற்றையேநினைந்து துன்புறல்வேண்டா.

சாருதத்தன்—நண்ப! ஆடவனுக்கு வறுமையானது,

நேரிசையாசிரியப்பா.

13. [2]சிந்தனை பற்பல வுந்துகா ரணமாம்
நிந்தனை நண்பரால் வந்துறப் புரியும்
உள்ளிப் பிறர்நனி யெள்ளற் கேதுவாம்
அனைவேற் றுருக்கொள் பகைமையு மாகும்

---

என்பதானும். ஒளியின் இன்மையே இருளாதல்போல மகிழ்வின்மையின் முதிர்ந்தநிலையே பெருந்துன்பமாக முடிதலின் "அது மாவின்னல் நல்கும்" என்பதாம். துன்பத்தாற் பற்றப்பட்டவன் தக்க இன்ன தகாதன இன்ன என்பதை உணரானுதலின், "பகுக்குமுணர்வொழியும்" என்று கூறப்பட்டது. வறுமை யொன்றே காரணகாரியமுறையாக நின்று இறப்பிறுதியாகவுள்ள எல்லாத்துன்பங்களையும் தருதலான், "துன்பமெலாம் பயக்குமூலம்" எனப்பட்டது.

[1] விதூடகனுக்குப் பழஞ்சோற்றில் விருப்பமுண்மையாற் பொருள் இங்ஙனம் உபசரிக்கப்பட்டது.

[2] சிந்தனை உடலோம்பல் முதலியவற்றிற்குரிய உபாயம் ஆராய்தல் முதலியன. விரும்பியதைத் தடுத்தலானும் விரும்பாததைத் தருதலானும் உலகத்தில் ஒருவற்கு மற்றொருவன்பாற் பகைமை நிகழும்; வறியவனிடத்துக் காரணமின்றி நிகழும். இது பற்றியே வறுமை, "வேற்றுருக்கொள் பகைமையுமாகும்" என்று

மேவற் சுற்றமும் ஏவன் மாக்களும்
சினமுறச் செய்யும் மனமுறக் கலந்த
காதலி கொடுமையுங் காடுறை வேட்கையும்
போதரப் புரியும் வீதரு முள்ளத்
தின்னுத் தீநனி தின்னுது,
எரிக்குமா லந்தோ! விரிக்குமா றென்னே? (கக)

[1] ஆதலின், நண்ப! இல்லுறைதெய்வங்களுக்குப் பூசை செய்தாயிற்று. செல்க. நீயும் நாற்சந்தி கூடுமிடத்துள்ள பிராமி முதலிய தெய்வங்களுக்குப் பலியைக்கொடு.

விதூடகன்—யான் போகேன்.

சாருதத்தன்—எதற்காக?

விதூடகன்—இங்ஙனம் பூசிக்கப்பட்டும் தெய்வங்கள் தங்களுக்கு அருள்செய்திலவாதலின், அத் தெய்வங்களைப் பூசித்தலால் வரும் பயன் யாது?

---

கூறப்பட்டது. சினமுறச்செய்தற்குக் காரணம் அன்னார்க்கு வேண்டுவன கொடாமையேயாம். காடுறை வேட்கைக்குக் காதலி கொடுமையே காரணம் என்க. இன்னுத்தீ-வறுமைத்துன்பமாகிய நெருப்பு; அது விரைந்து அழித்துவிடின் நன்றாம்; துன்பநுகர்ச்சி நெடிதிராதாகலின். விரைந்துயிர்போக்காது எரித்தல் மிக்கதுன்பம் தருமாதலின், “தின்னு தெரிக்குமா லந்தோ” என்று மிகுதுயர்க் குறிப்புக் காட்டப்பட்டது.

1 யான் வறுமையால் இழிக்கப்பட்டிருத்தலானும், அதனுல் வெளிச்சேறற்கு நாணமுடையேன் ஆதலானும் வெளித்தெய்வங் களுக்குப் பலியை நீயே கொடுக்கவேண்டும் என்று சாருதத்தன் விதூடகனை நோக்கிக் கூறியது.

சாருதத்தன்—நண்ப! அங்ஙனமன்று. இல்லறத்தானுக்கு இது [1]நித்தியகன்மமாகும்.

கலிவிருத்தம்.

14. [2]பூசனை செயன்முறை பொருந்த நித்தியம்
வாசக முடலொடு மனத்தி னாற்செயும்
மாசறு மன்பர்க்கு மகிழ்ந்து தெய்வங்கள்
நேசமொ டருளுமா னினைத்த லென்னையே. (கச)

ஆகலிற் செல்வாயாக. பிராமி முதலிய தெய்வங்களுக்குப் பலியைக்கொடு.

விதூடகன்—ஓ! யான்போகேன். வேறெவனாவது ஒருவனை ஏவுங்கள். இடப்பக்கத்தில் வலப்பக்கவுருவமும், வலப்பக்கத்தில் இடப்பக்கவுருவமும் தோன்றும் கண்ணாடியினிழல்போலப் பிராமணனாகிய எனக்கு எல்லாம் விபரீதமாக முடிகின்றன. மேலும், இம் மாலைக்காலத்திறுதியில், இவ் விராசவீதியில், விலைமகளிரும், விடசேடர்களும், அரச உறவினருமாகிய இவர்கள் திரிகின்றனர். ஆகலின்,

---

[1] நித்தியகன்மம், செய்யாதவழிக் கேட்டிற்குக்காரணமாதலின் பயனை ஆராயாது இன்றியமையாது செயற்பாலதென்பதாம்.

[2] பயனாராய்ச்சியில்லாத கன்மம் நூலில் விதிக்கப்பட்டதுவேனின், அதன் இன்றியமையாமையை வலியுறுத்தற்கு இச் செய்யுள் எழுந்தது. இது, "தன்கடன் னடியேனையுந் தாங்குதல், என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்னும் அருட்பாசுரப் பொருளைத் தலைக்கட்டாங்கிநிற்றல் அறிக. பொறிகளின் எல்லைக்கு மேற்பட்டபொருளைப்பற்றி உய்த்துணாமுயறலினும், விதியாக உள்ளவற்றைக் கடனாக மேற்கோடலே நன்றென்பதாம்,

தவளையை விரும்புகின்ற கரும்பாம்புக்குப் பெருச்சாளி எதிர்ப்பட்டதுபோல், யான் எதிர்ப்பட்டு அவர்களாற் கொல்லுதற்குரியனுவேன். நீங்கள் இங்கிருந்து என்ன செய்வீர்கள்.

சாருதத்தன்—நிற்க. யான் தியானத்தை நிறைவேற்றுகின்றேன். [1] சற்று இருக்க.

[வேடசாலையுள்]

நில். வசந்தசேனே! நில்.

[[2] அதன்பின் விடன், சகாரன், சேடன் இவர்கள் பின் தொடர வசந்தசேனை வருகின்ருள்.]

விடன்—வசந்தசேனே! நில்; நில்;

கொச்சகக்கலிப்பா.

15. [3] ஈதென்னை மென்மையெலா மிரிதரநீ யச்சத்தாற்
பாதநடம் பயின்றெளிரும் பான்மையதை யுந்துகின்ருய்
காதுவன சரன்றெடாக் கலக்கமுறு மான்பிணைபோன்
மீதணங்கி னசைகடைக்கண் மிகநோக்கி யோடுகின்ருய். ()

---

[1] கணிகை முதலியோர்களின் போக்குவரவு ஒழிந்தபின் போகலாமென்பது கருத்து.

[2] சாருதத்தன்பாற் காதல்கொண்டு அவனைநோக்கி வரும் வசந்தசேனையை, அவள் விரும்பாதிருக்குநிலையில் விடனும் சகாரனும் வலிந்துபற்றப் பின்தொடர்ந்துவருகின்றனர் என்பதாம்.

[3] காதல்காரணமாகப் பின்றெடரும் எங்களைக் குறித்து என் அச்சமுறல்வேண்டுமென்பான் "ஈதென்னை" என்ருன். அச்சத்தால் மென்மையெலாம் இரிதர எனவும், நடம்பயின் றெளிரும் பான்மையதாகிய பாதம் எனவும் இயைத்துப் பொருள் கொள்க. இரிதால் - நீங்கல். அணங்கின் அசை கடைக்கண் என்க, அணங்கு - வருத்தம்; நடுக்கமுமாம்,

[1]சகாரன்—நில்; வசந்தசேனிகே! நில்;

நிலைமண்டில ஆசிரியப்பா.

16. [2]தாவல் [3]நடத்தல் [4]கட்டழிந் தோடலென்?
வாலை நீ யருள்க [5]காலனின் பக்கல்
உறூஅ ளென்றொடி வெறூஅது நிற்க
நெருப்புத் திரளி னுருப்புற வீழ்தரும்
இறைச்சித் துண்டென வென்மனங் காமனால்
வெதுப்பப் படுதலை மெல்லியா ளுணர்தி. (கசு)

சேடன்—அம்மே! நில்; நில்;

கலிவிருத்தம்.

17. பீலிநிறை வேனின்மயில் போலவுறு பீதி
யாலெனது பக்கலினை கன்றுபெயர் கின்றாய்
[6]பாலடவி யுற்றவொரு கோழியிளம் பார்ப்பின்
மானுறவி ரைந்தெனது மன்னன்வரு கின்றான். (கஎ)

விடன்—வசந்தசேனை! நில்; நில்;

---

[1] சகாரன்சொற்கள் பொருளின்மை, முன்னொடுபின் முரணுதல், கூறியதுகூறல், மாறுகோளக்கூறல், உவமைவழு, உலகவிருத்தம், தேயவிருத்தம், நியாயவிருத்தம், நூல்வழக்கொடு மாறுகோள்ளல், ஏதுவின்மை, பயனின்மை முதலிய வழூஉக்களை உடையனவாம். இக்குற்றங்களை இவன் சொற்களில் ஆங்காங்கு உணர்க.

[2] [3] [4] கூறியதுகூறல். [5] உலகவிருத்தம். மேல்வருவன வற்றையும் இவ்வாறுணர்க.

[6] அடவியின்பாலென்க.

கொச்சகக்கலிப்பா.

18. வல்லுளியி னுற்பிளக்கு மனோசிலையின் முறைபோல
எல்லியலார் செங்குவளை யினவரும்பு குழல்சொரிய
மெல்லியசெவ் வாடைநனி வீழ்காற்றான் மிகவசையப்
புல்லியநல் விளவாழை போனடுங்கிப் போதலென்னே.

சகாரன்—நில்; வசந்தசேனிகே! நில்;

நிலைமண்டில ஆசிரியப்பா.

19. [1]மதனன் [2]உருவிலி [3]மன்மதன் றன்னை
[4]மயக்கமெற் குறுத்த வியக்குதி யம்ம!
இரவிற் படுக்கையி னின்றுயி னீக்குதி
[5]அஞ்சிப் [6]பயத்தால் வஞ்சிநீ [7]தாவுதி
[8]தட்டழிந் தோடுதி விட்டெனைச் [9]செல்லுதி
[10]இராவணன் றன்பா லெழின்மிகு குந்தி
தராதலத் துற்ற தன்மை போல
வென்பா லெய்திய வியல்பினை யன்றே. (கசு)

விடன்—வசந்தசேனே!

கட்டளைக்கலித்துறை.

20. நங்காயென் கால்வைப்பி னின்காலின்
வைப்பு நனிசிறக்க
இங்கார் [11]கலுழனைக் கண்டஞ்சு
பாம்பி னிவர்தலென்னே

---

1 2 3 7 8 9 கூறியதுகூறல்.

4 தனக்கு நேர்ந்த காமநோயையும் உறக்கம் இன்மையையும் வசந்தசேனையின்குற்றமாக ஏறிடுதல் நியாயவிருந்தமாம்.

5 6 பொருளின்மை. 10 உவமைவழு.

11 "கலுழனைக் கண்டஞ்சு பாம்பு" என்னும் உவமையால் எளிதிற் பிடிக்கத்தக்கவள் என்பது புலனும்.

தங்காதி யான்விரைந் தேகலை
மேற்கொளிற் சார்பவனன்
மங்காதி ரானிற் [1]றகைதகற்
[2]குழப்புற்று வந்திலனே. (உ௦)

சகாரன்—பெரியோய்! பெரியோய்!

நிலைமண்டில ஆசிரியப்பா.

21. இவளோ, காசினைப் பறிக்குங் காமன் கைக்[3]கசை
வாடன்மீ னுண்போ ளாடன் மகளே
இழிவுறு மவாவின ளிவள்குடி கேடி
பிறர்வயப் படாதவள் விறன்மதன் பேழை
பரத்தையர் சேரியி னிருத்தலை யுடையாள்
[4]வேசை [5]விலைமக ளாசைப் [6]பரத்தையென்
றிவ்[7]வொரு பான்பெயர் யானிட் டழைத்தும்
இன்னுமென் பால்விருப் பியைந்தில ளென்னே. ()

விடன்— கட்டளைக்கலித்துறை.

22. [8]அசைகின்ற வொண்குழை யாஞ
துராய வணிகதுப்பை
நசைகா முகர்தம் நகவிர
றைவரும் யாழையொப்பாய்

---

[1] தகைதல்-தடுத்தல். [2] உழப்பு-முயற்சி. [3] கசை-சம்மட்டி; சாட்டையுமாம். [4] [5] [6] கூறியதுகூறல்.

[7] பதினொருபெயர்கூறிப் பத்து என முடித்துக்காட்டியது மாறுகோளக்கூறல்.

[8] ஒண்குழை அணிகதுப்பை உராய என்க. கதுப்பு-கன்னம். ஓடுகின்ற வசந்தசேனை அச்சத்தால் அடிக்கடி திரும்பிப்பார்த்தலின் கன்னத்திற் குழை உராய்தலைக் கண்டா னென்க. காமுகர் நக விரலால் தடவப்படுதலானும் பொதுமையானும் எழில் இன்னிசை உடைமையானும் வசந்தசேனையை யாழ் ஒக்குமென்பதாம்.

மிசைமா முகிலொலி கேட்டஞ்சு
சாரசப் பேட்டினென்னை
இசையா தணங்கிற் றடுமாறிச்
செல்லலெ னேந்திழையே. (உஉ)

சகாரன்—

நிலைமண்டில ஆசிரியப்பா.

23. [1]கனைசன வென்ன வணிகல னொலிசெயப்
பிடுறு மிராமற் கஞ்சி யோடுஞ்
சிலைத் திரௌபதி போலச் செல்லலென்?
மங்கல விசுவா வசுவின் றங்கையாய்த்
தங்கிய சுபத்திரை தன்னை யநுமான்
கவர்ந்தாங் கொப்ப விரைந்து பற்றுவேன். (உ௩)

சேடன்—

கொச்சகக்கலிப்பா.

24. [2]மன்னனையுங் கூடி மகிழ்வுறுத்து வாயாயிற்
பின்னை யிறைச்சி பெறுவாய்பன் மீன்களொடு

---

அணங்கு - அச்சம். விடன்முதலியோர்பால் நாணம் அச்சம் முதலியன இன்றி ஒழுகும் இயல்பமைந்த விலைமகளாகிய நீஎன்னைக் கண்டு அஞ்சி ஓடுதல் எற்றிற்கு என்பான் 'செல்லலென்' என்றான் என்க.

1 இச்செய்யுளில் ஆகமவிருத்தமுண்மை காண்க. ஆங்கு ஒப்ப கூறியதுகூறல்.

2 சேடனைப்போன்ற இழிந்தோர்க்கு நாயினிடத்து மிக்க மதிப்புண் டென்பதும், இறைச்சி மீன் முதலிய உணவுகளே சிறந்தனவென்பதும் இயல்பாதலின் அவர்கள் பயின்ற பொருள்களே ஈண்டு உவமை முதலியனவாகக் கொள்ளப்பட்டன.

மின்னனையா யிவ்வூண் மிகவளித்தான் முனிறந்த
பின்னு மவனுடலைப் பேணுமா னுய்களெலாம். ()

விடன்—நங்காய்! வசந்தசேனே!

கட்டளைக்கலித்துறை.

25. [1]விண்ணார்ந் திலங்குபன் மீன்போற்
பலவுரு மேவியொளிர்
தண்ணார் நிதம்பத் தடமணி
மேகலை தாங்கமுகம்
எண்ணார் மனேசிலைச் சுண்ணத்
திலக மியையவம்ம!
நண்ணு நகரதெய் வம்போ
னடத்தலென் னுமுறவே. (உரு)

சகாரன்—

நிலைமண்டில ஆசிரியப்பா.

26. [2]காட்டிலோர் நரியினை யோட்டுபன் னுய்போல்
நின்னைக் கவர்வா னுன்னித் தொடர

[1] ஒளிர் மணிமேகலையை நிதம்பத்தடம் தாங்க, முகம் திலகம் இயைய, நாமுற நகரதெய்வம்போல் நடத்தலென் என முடிக்க. நாம் - அச்சம். நகரதெய்வம் என்றதனுல் அந்நகரத்தில் இவளினுஞ் சிறந்தார் இல்லை என்பதாம்.

[2] நரி ஈண்டுப் பெண்நரி. அதனைப் புணரத்தொடர்வது ஆண் நரியாகவும், நாய்தொடர்ந்ததுபோல் என்றதனுல் இஃது உவமை வழு. சகாரன் இழிகுலத்தானுதலின் அவன் எடுத்தாளும் உவமையும் இழிந்ததாயிற்று.

எங்களை யிர்க்கும் அங்கனுய்! என்மனம்
வேருட னரித்து [1]விரைவிற் [2]கடுக
[3]ஒல்லையி னேடலென் சொல்லுதி யம்ம? (உகூ)

வசந்தசேனை—[4]பல்லவக! பல்லவக! பரபிருதிகே! பரபிருதிகே!

சகாரன்—[அச்சத்தோடு] ஐய! ஐய! [5]மனிதர்கள்! மனிதர்கள்!

விடன்—அஞ்சவேண்டா. அஞ்சவேண்டா.

வசந்தசேனை—[6]மாதவிகே! மாதவிகே!

விடன்—[நகைப்போடு] மடவோய்! வேலையாட்களைத் தேடுகின்ருள்.

சகாரன்—ஐய! ஐய! பெண்களையா தேடுகின்ருள்?

விடன்—ஆம்.

சகாரன்—நூறுபெண்களாயினும் கொன்றுவிடுவேன்; யான் சூரன்.

வசந்தசேனை—[யாருமில்லாமையை நோக்கி] ஐயையோ! பரிசனங்களும் விட்டகன்றனரே? இவ்விடத்தில் யானே என்னைப் பேணவேண்டியவளாகின்றேன்.

விடன்—தேடுக. தேடுக.

---

1 2 3 கூறியதுகூறல்.

4 6 இவர்கள் பணியாளராவர்.

5 மனிதர்கள் என்ற அளவில் அஞ்சும் இயல்பினன். தன் வீட்டின்மாத்திரம் ஆரவார முடையானென்பது கருத்து.

சகாரன்—வசந்தசேனிகே! [1]பரபிருதிகையையாயினும், [2]பல்லவகனேயாயினும், இளவேனிற்காலத்துள்ள வனைய எல்லாப் பொருள்களையுமாயினும் கூவி அழை; கூவி அழை. யான் தொடர்ந்து பற்றுங்கால் உன்னைக் காப்பாற்றுபவன் யாவன்?

கொச்சகக்கலிப்பா.

27. [3]குந்திமகன் றசமுகனுங் கூறுசம தக்கினிமுன்
தந்தமகன் வீமனுநின் றனைக்காக்க வல்லுநரோ
சந்தமலர்க் குழற்கற்றை சரியவிழுத் திப்பொழுதே
முந்துறுதுச் சாதனன்செய் முன்வினையின் முயல்வேனல்.

எடி! பார்க்க; பார்க்க;

கொச்சகக்கலிப்பா.

28. கைவாளுங் கூரியதுன் கவின்றலையுந் திரும்பியதான்
மெய்யாக வத்தலையை [4]வெட்டுவனோ கொல்லுவனோ
எய்யாது நீயோட லினியமைக விந்நிலத்தில்
உய்யானு லுடனீக்க முறுங்கால நெருங்கியுளான். (உஅ)

வசந்தசேனை—ஐய! யான் பெண்பாலன்றே?

---

1 பரபிருதிகை - குயில். 2 பல்லவகம் - தளிர். இவை இளவேனிற்காலத்திற் சிறப்புறுவன.

3 குந்திமகன் தசமுகன் என்றதும் சமதக்கினிமகன் வீமன் என்றதும் ஆகமவிருந்தங்களாம். துச்சாதனன் திரௌபதியை மயிர்பிடித்திழுக்குங்கால் வீமன் முதலியோர் வாளா இருந்தனர். அதுபோல், யான் நின்னை இழுக்குங்கால் என்னைத் தடைப்படுத்துவார் யாருமிலர் என்பதாம்.

4 வெட்டுவனோ கொல்லுவனோ என்பது கூறியதுகூறல்.

விடன்—ஆதலாற்றான் உயிருடன் இருக்கின்றாய்.

சகாரன்—ஆதலாற்றான் கொன்றிலேன்.

வசந்தசேனை—[தனக்குள்] [1]இவன்பொருட்டுச் சாந்த மொழி கூறுதலும் அச்சத்தை விளைக்கின்றதே! ஈதென்னை? நிற்க. இவ்வாறு கூறுகின்றேன். [வெளிப்படையாக] ஐய! என்பாலுள்ள அணிகலன்களுள் எதனையாவது பெற எண்ணமுண்டா?

விடன்—வேண்டியதில்லை. நங்காய்! வசந்தசேனை! [2]பூந்தோட்டத்துக் கொடிக்கணுள்ள மலர்கள் பறிக்கத்தக்கன வல்ல; ஆதலின் அணிகலன்கள் வேண்டா.

வசந்தசேனை—அங்ஙனமாயின் இப்பொழுதுவேண்டுவ தென்னை?

சகாரன்—திருமாலையொத்த என்னை [3]வரபுருடனாகிய [4]மனிதனாக நீ விரும்பவேண்டும்.

வசந்தசேனை—[சினந்து] [5]சாந்தம்! சாந்தம்! செல்க. இழிசொற்களைக் கூறுகின்றாய்.

---

[1] பாம்புக்குப் பால்வார்த்தாலும் அது விளைக்கும் பயன் நஞ்சாதல்போல என்க.

[2] நின்னை அலங்கரித்துக் கண்டு இன்புறுதலேயன்றி நின் அணிகலன்களைக் களையவிரும்பவில்லை என்பது கருத்து. முழுதும் தரினும் வேண்டா என்பது தோன்ற "அணிகலன்கள்" எனப் பன்மையாற் கூறினான்.

[3] வரபுருடன் - காமுகன்; மணமகன். [4] புருடன் என்று முன்கூறிப் பின்னும் மனிதன் என்றது பொருளின்மையாம்.

[5] கேட்கத்தகாதன கேட்டலால் உண்டாம் பாவம் நீங்குக என்பதாம்.

சகாரன்—[கைகொட்டிச் சிரித்து] ஐய! ஐய! பாருங்கள்; பாருங்கள்; என்னை '[1]வருக;[2]மெலிகின்றாய்; [3]வாடுகின்றாய்;' என்று கூறுதலான், இக் கணிகைச் சிறுமி என்பால் மிகவும் காதலுடையளாயினள். [4]யானே பிறவூர்களையாவது, நகரங்களையாவது அடைந்தவ னல்லேன். பெருமாட்டி! ஐயனாகிய விடனது தலையை என் [5]கால்களால் தொட்டுச் சத்தியம் கூறுகின்றேன். நின்னையே இடைவிடாது தொடர்ந்து வந்தமையான் மெலிவுற்றவனாகவும் வாட்டமுற்றவனாகவும் உள்ளேன்.

விடன்—[தனக்குள்] ஆ! இம்மூடன்! "சாந்தம்" என்று சொல்லியதன் பொருளுணராது "வாட்டம்" என்று மாறுபடவுணர்கின்றான். [வெளிப்படையாக] வசந்தசேனே! நின்னால் கணிகையர்நிலைக்குத்தகாத சொற்கள் கூறப் பட்டன. பார்க்க.

---

1 வசந்தசேனை "சாந்தம் சாந்தம் அபேஹி" என்று கூறியதை, "ச்ராந்தோஸி, க்லாந்தோஸி ஏஹி" என்று தன் மயக்க வுணர்வால் மாறுபடவுணர்ந்து, சகாரன் இவ்வாறு கூறுகின்றான். அபேஹி - போ. ஏஹி - வா. ச்ராந்தோஸி க்லாந்தோஸி - வாடுகின்றாய்.

2 3 கூறியதுகூறல்.

4 வாடுதற்கு நிமித்தம் வேறு இன்று என்பதாம்.

5 கைகளால் தொட்டு என்றுதல், விடனது கால்களை என் தலையால் தொட்டு என்றுதல் கூறற்பாலதனைக் கால்களால் தொட்டு எனக் கூறியது ஒழுங்கின்மை.

ஆசிரிய விருத்தம்.

29. அணியிழாய் வரைவின் மகளிர்தம் வாழ்க்கைக்
கருந்துணை யிளைஞரென் றுணர்தி
கணிகையா நீநல் [1]வழியிடைத் தோன்றிக்
கானுபூங் கொடியினை யொப்பாய்
தணிவிலாக் காம வடவினைப் பொருட்குத்
தரும்விலைப் பொருளெனத் தாங்கி
நணியதா னல்லாய் விருப்பொடு வெறுப்பு
நாடிநீ சமமெனக் கோடி. (உகூ)

இன்னும்,

ஆசிரிய விருத்தம்.

30. அந்தணனு மறிஞனுந்தாழ் குலத்துதித்த
வறிவிலனுந் தோய்வர் வாவி
கொந்தணவுங் கொடிவளைதன் மயிற்கன்றி
வாயசமுங் கூடக் கூடும்
முந்துறுமுக் குலத்தவர்போற் பிறர்கடத்தற்
குரியதுமா மொழியுந் தோணி
அக்[2]தடம்பூங் கொடிநாவா யனையைநீ
யாவரையு மடைதற் பாலாய். (௩0)

---

1 வழிக்கண் உண்டாகிய பூங்கொடியை ஒப்பாய் என்றதனாற் பூஞ்சோலைக்கண் உண்டாகிய கொடியைப்போல் ஒருவற்கு உரியளல்லள் என்பதும், வழிச்செல்வோ ரெல்லாரானும் பொதுவாக மலர் முதலியன கொள்ளப்படுதல்போல் இவள்பால் அடைவோ ரெல்லாரானும் இவள் நலம் நுகர்தற்குரியதாம் என்பதும் புலனாதல் அறிக.

2 தடம், கொடி, நாவாய் அனையை என்றதனால், யாவர்க்கு முரிய பொதுமகள் என்பது போதரும்.

வசந்தசேனை—[1]குணமன்றே காதற்குக் காரணம். வலிந்துபற்றல் காரணமன்று.

சகாரன்—ஐய! ஐய! பிறப்பினாலேயே பிறர்க்குரியள் ஆகிய இவள் காமதேவாயதனம் என்னும் பூஞ்சோலையிற் கண்டதுமுதல் வறியவனாகிய சாருதத்தன்பாற் காதல் உடையளாய் என்னை விரும்புகின்றாளில்லை. அச் சாருதத்தன் இல்லம் இடப்பக்கமுள்ளது. நம் கைகளினின்றும் இவள் நழுவிவிடாதபடி ஐயன் செய்தல்வேண்டும்.

விடன்—[தனக்குள்] அறிவிலான்; யாது [2]சொல்லத் தகாததோ அதனையே கூறுகின்றான். பெருமை பொருந்திய சாருதத்தரையா வசந்தசேனை காதலித்தாள்! "[3]இரத்தினம் இரத்தினத்தோடு கூடி விளங்கும்" என்னும் இது நன்கு உணர்ந்து கூறப்பட்டது. ஆதலின், எய்துக. இம்மட

---

1 காதலும் வலிந்துபற்றுதலும் ஒன்றுக்கொன்று முரண் பட்டனவாம். குலமகளிர்க்குக் குணம்நோக்கிக் காதல்செய்தல் இயல்வதன்று; என்போன்ற விலைமகளிர்க்குக் குணம்நோக்கிக் காதல்செய்தலும் அக் குணமுடையார்க்கு உரிமையாதலும் பொருந்துவனவாம். ஆதலின், "யாவரையும் அடைதற்பாலாய்" என்று கூறியது பொருந்தா தென்பதாம்.

2 சொல்லத்தகாதது சாருதத்தனில்லம் இன்ன இடத்தில் என்பது. அதனை இவளறிந்தால் விரைந்து அவ் விற்கட் புகுவா ளென்பது கருத்து.

3 இரத்தினம் இரத்தினத்தோடு கூடி விளங்கும் என்றதனால் புருடரத்தினமாகிய சாருதத்தன் பெண்மணியாகிய வசந்தசேனை யோடுகூடி இன்புறல் தக்கதே என்பது புலனாம்.

வோனல் யாதுபயன்? [வெளிப்படையாக] [1]கானீன! வாணிகத் தொழிலையுடைய அச் சாருதத்தரது இல்லம் இடப்பக்கத்திலா இருக்கின்றது?

சகாரன்—ஆம். இடப்பக்கத்தேதான் அவன் விடுள்ளது.

வசந்தசேனை—[தனக்குள்] ஆச்சரியம்! இடப்பக்கத்தே அவர் இல்லம் உள்ளதென்பது உண்மையே. காதற்கிழவனைக் கூட்டுவித்தலால், இக் கொடியவன் இழைத்த தீமையும் நன்மையாயிற்று.

சகாரன்—ஐய! ஐய! பேரிருளில், உழுந்துக்குவியலுட் புகுந்த [2]மையுருண்டைபோலப் பார்த்திருக்கும்பொழுதே வசந்தசேனை மறைந்துவிட்டாள்.

விடன்—அம்ம! இருள் வலியது; அதனன்றோ,

---

1 கானீனன் - (மணஞ்செய்யப்படாத) கன்னிகை புதல்வன். அரசன்மாமனுக்கு மணஞ்செய்யப்படாத கன்னியினிடத்துப் பிறந்தவனாதலின் சகாரன் கானீனன் ஆயினான். 'காணேளிமாத:' என்னும் பாடம் இப்பொருளைக் குறிப்பதாம். 'காணேளி பிராத:' என்றும் மூலபாடம் உண்டு. அதற்கு அரசனுடைய மணஞ்செய்து கொள்ளப்படாத காமக்கிழத்திக்கு உடன்பிறந்தான் என்று பொருள் கோடல்வேண்டும். எங்ஙனமாயினும் அரசனுக்கு மைத்துனனாவன் என்பது போதரும். சாஹித்யதருப்பணத்தில் சகாரன் இலக்கணம் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. "மதம், மானம், அறிவின்மை, இழிகுலப்பிறப்பு, பொருளுடைமை, காமக்கிழத்தியின் உடன் தோன்றல், அரசற்கு மைத்துனனாதல் இவையுடையான் சகாரனாவான்."

2 நிறம் கருமையில்லாமையால் வசந்தசேனையை மையுருண்டையாக உவமித்தது உவமைவழு.

கலிவிருத்தம்.

31. [1]ஒளியிடைப் பரந்துசென் றெல்லை யெய்திய
நளியிருட் புகுதலிற் றடையை நண்ணுமென்
களிவிழி யிமைப்பில காணுங் காலையும்
முளைதரு மிருளினன் மூடல் போன்றவே. (௩௧)

இன்னும்,

கலிவிருத்தம்.

32. புல்லிரு ளெனதுடல் பூசல் போலும்வின்
வல்லையி னஞ்சனம் வழங்கல் போலுமால்
நல்லன செய்கிலார் [2]புணர்ப்பி னண்ணிய
அல்லுறு மென்விழி யவமுற் றுள்ளவே. (௩௨)

சகாரன்—ஐய! ஐய! வசந்தசேனிகையைத் தேடுகின்றேன்.

விடன்—கானீன! நீ அறிகின்ற அடையாளம் யாதேனுமுண்டோ?

சகாரன்—ஐய! ஐய! அஃது எத்தகையது?

விடன்—அணிகலன்களின் ஓசையாதல், கூந்தலின் இயற்கைமணத்துடன் கூடிய மாலைமணமாதல் அவ் அடையாள மாகும்.

---

1 சென்று புகுதலால் நண்ணும் விழியென முடிக்க. நளியிருள் - திணிந்த இருள். இல்லத்தின் அருகில் அதன் நிழல்மிகுதியால் இருள் மிக்கதென்பது கருத்து.

2 இன் ஒப்புப்பொருளில் வந்தது.

சகாரன்—[1]மாலைமணத்தைக் கேட்கின்றேன். இருள் நிரம்பிய மூக்கினாலோ அணிகலன்களின் ஓசையை நன்கு வெளிப்படையாகக் காண்கின்றேனில்லை.

விடன்—[2][மறைவாக] வசந்தசேனே!

கட்டளைக்கலித்துறை.

33. நீர்தங்கு மேகத் திடைக்கண்
மறைந்தமின் னேர்தரநீ
கார்தங்கு முன்னிரு ளிற்கட்
புலனிற் கரந்தனையால்
தார்தங்கு [3]மிம்மண மும்நூ
புரத்தின் றனியொலியும்
[4]சூர்தங்கு நீயுளை யென்றே
குறிப்பிற் றுலக்குறுமே. (௩௩)

வசந்தசேனே! கேட்டனையா?

வசந்தசேனை—[தனக்குள்] கேட்டேன். கருத்தையும் உணர்ந்தேன். [நிருத்தத்தாற் சிலம்புகளைக் கழற்றி மாலைகளையும் போக்கிச் சிறிது நடந்து கையினால் தடவிப்பார்த்து] அம்ம!

---

1 மூக்கினால் நுகரத்தக்க மணத்தைக் கேட்கின்றேன் என்றதும், செவியினாலறியத்தக்க ஓசையை மூக்கினாற் பார்க்கின்றேன் என்றதும், கண்ணைமறைக்கும் இருள் மூக்கை மறைத்த தென்றதும் உலகவிருந்தங்களாம்.

2 'ஜநாந்திகம்' என்று முதனூல் கூறும். திரிபதாகையாகச் செய்யப்பட்ட கையால் ஒருவனை மறைத்து அவையோருணரும்படி மற்றொருவனோடு மறைவில் உரையாடல் இதன் இலக்கணம்.

3 இம் மணமும் ஒலியும் நீ உளை என்று துலக்குறு மென்க.

4 சூர் - அச்சம்.

சுவரைத் தடவுதலான் அறியப்பட்டதன்றே இப் பக்கவழி. கையுறுத்தலால் வீட்டின் வாயில்வழி அடைக்கப்பட்டதாக உணர்கின்றேன்.

சாருதத்தன்—நண்ப! தியானத்தை நிறைவேற்றினேன். ஆதலின் இப்பொழுது செல்க. பிராமிமுதலிய தெய்வங்களுக்குப் பலியைக்கொடு.

விதூடகன்—ஓ! யான் போகமாட்டேன்.

சாருதத்தன்—அந்தோ!

ஆசிரியவிருத்தம்.

34. இல்லாமை யாலொருவன் சொல்வழியின்
மனைவிமக்க ளிசைவா ரல்லர்
பொல்லாமை பலவிளையு மன்புமிக
நட்டோரும் புறக்க ணிப்பர்
புல்லாது வலிகுறையு மொழுக்கமெனு
மதியொளியும் பொன்று மந்தோ!
ஒல்லாது பிறர்புரியுந் தீவினையு
மவன்செயலா வுலகங் கொள்ளும். (௩௪)

இன்னும்,

ஆசிரியவிருத்தம்.

35. பொருளிலான் றனைக்கூட லவனோடு
மொழிபகர்தல் புரியார் யாரும்
[1]பரிவிலாத் தனிகர்மனை நலங்குறித்துச்
சென்றக்காற் பார்ப்பா ரெள்ளி

1 பரிவு - அன்பு.

உருவிலாக் கந்தையுடுத் துவறுணி
யுடையார்க்கன் டொதுங்கிச் செல்வன்
[1] திருவிலா மைம்மிகவு மிழியாரும்
பாதகமாச் செப்ப லாமால். (௩௫)

இன்னும்,

கொச்சகக்கலிப்பா.

36. [2] நல்குரவே நினைக்குறித்து நானிவ்வா றயர்வுறுவேன்
மல்கியாட் புரிமைகொடு வாழ்கின்று யென்னுடலிற்
புல்கியநீ யிதெனதென் றெண்ணுறுமப் பொருண்முடிவை
அல்கியயா னுடனிப்பின் யாண்டடைவா யினியென்றே.

விதூடகன்—[நாணத்துடன்] ஓ! நண்பரே! யான் போகவேண்டுமாயின், எனக்குத்துணையாக இவ் இரதனிகை என்பாளும் வரல்வேண்டும்.

சாருதத்தன் — இ ர த னி கே ! மைத்திரேயனைத் தொடர்ந்துசெல்.

சேடி—ஐயன் கட்டளைப்படியே.

விதூடகன்—ஏடி! இரதனிகே! [3] பலியையும் விளக்கினையும் எடுத்துக்கொள். யான் வாயிற்கதவைத் திறக்கின்றேன். [அங்ஙனம் செய்கின்றான்.]

---

[1] திருவிலாமை - வறுமை.

[2] நல்குரவே என்னையொத்த வறியவன் உலகில் ஒருவனும் இல்லை; ஆதலின், உனக்கு மிக்க உரிமையுடைய என்னுடல் ஒழியின், இத்தகைய நல்லிடம் வேறு கிடைக்கப்பெறுமல் வருந்துவாயென்று நின்னைக்குறித்து யான் வருந்துவல் என்பது கருத்து.

[3] பூசைக்குரிய உபகாரணங்கள்.

வசந்தசேனை—எனக்கு அருள்புரிதற்கேபோலும் வாயிற்கதவு திறக்கப்பட்டது. ஆதலிற் புகுகின்றேன். [பார்த்து] ஐயோ! ஐயோ! ஈதென்னை? விளக்கு! [ஆடை நுனியால் விளக்கை அவித்து உட்புகுந்தாள்.]

சாருதத்தன்—மைத்திரேய! ஈதென்னை?

விதூடகன்—வாயில்வழி திறக்கப்பட, அவ்வழிவந்த திரண்ட காற்றால் விளக்கு அவிந்தது. ஏடி! இரதனிகே! நீ வாயில்வழியே புறப்படு. யானும், நான்குவாயில்கள்கூடும் உள்ளிடத்திருந்து தீபம் ஏற்றிவருவேன். [என்று போகின்றான்.]

சகாரன்—ஐய! ஐய! வசந்தசேனிகையைத் தேடுகின்றேன்.

விடன்—[1]தேடு; தேடு.

சகாரன்—[அங்ஙனஞ்செய்து] ஐய! ஐய! அவளைப் பிடித்துவிட்டேன். பிடித்துவிட்டேன்.

விடன்—மடவோய்! யானன்றே.

சகாரன்—ஐயன் இவ்விடத்தினின்றும் பெயர்ந்து ஒரு பக்கத்தில் இருக்கவேண்டும். [மீண்டும் தேடிச் சேடனைப் பிடித்துக்கொண்டு] ஐய! ஐய! பிடித்துவிட்டேன்; பிடித்து விட்டேன்.

சேடன்—பெருமானே! நான் சேடன்.

---

1 அடுக்கு விரைவுபற்றியது.

சகாரன்—[1] இவ்விடத்தில் ஐயன், இவ்விடத்திற் சேடன். ஐயன் சேடன்; சேடன் ஐயன். இனி நீங்கள் இருவரும் (என்னாற் குறிப்பிடப்படும்) ஒருபக்கத்திருத்தல் வேண்டும். [மீண்டும் தேடி இரதனிகையைக் கூந்தலிற் பற்றி] ஐய! ஐய! இப்பொழுது வசந்தசேனிகையைப் பிடித்து விட்டேன், பிடித்துவிட்டேன்.

கலிவிருத்தம்.

37. மன்னுமிவ் விருளின்கண் மறைந்து சென்றுதார்
துன்னுநன் மணத்தினுற் றோன்றும் நங்கையை
முன்னு[2] சாணக்கியன் முயல் திரௌபதிக்
கன்னியைப் பற்றல்போற் [3] கதுப்பிற் பற்றினேன்.

விடன்—

கலிவிருத்தம்.

38. இளமையின் செருக்கினு லியைந்து நற்குலத்
துளனொரு மகன்றனை யுளங்கொள் மங்கைநீ
தளமலர் நிறைவினுற் றகைமை சான்றநல்
அளகமீண் டிழுப்புண வவல முற்றனை. (௩அ)

---

[1] மந்தவுணர்வுடையார்க்கு ஒருபொருள் நினைவிற்பதிதல் அப்பொருள்பற்றிய சொல்லைப் பலமுறை கூறுதலானும். அதுபற்றி "ஐயன் சேடன்" என மீண்டு மீண்டும் கூறுவானாயினன். இங்ஙனம் விட சேடர்களின் உருவங்களைப் பகுத்துணர்தலினாற் போந்த பயன் யாதுமின்றாதலின் இது பயனில்கூற்றாம்.

[2] சாணக்கியன் திரௌபதியைப் பற்றல்போலென்றது இதிகாசவிருந்தம்.

[3] கதுப்பு - கூந்தல்.

சகாரன்— நிலைமண்டில ஆசிரியப்பா.

39. [1]சிறுமிநின் றலைக்க ணுறுங்குழ றன்னைக்
கூந்தலைக் கூழையைப் போந்தியான் பற்றலின்
சங்கரன் சிவனைச் சம்புவை யாதல்
பொங்கர வணிந்த [2]புராரியை யாதல்
அரற்றிக் கதறுக வழுக புலம்புக. (௩௯)

இரதனிகை—[அச்சத்துடன்] ஐயன்மாராகிய நீங்கள் என்னசெய்யமுற்பட்டீர்கள்.

விடன்—கானீன! குரலொலியின் ஒழுங்கு வேறாகத் தோன்றுகிறதே!

சகாரன்—ஐய! ஐய! தயிரின்மேலாடையைவிரும்புகின்ற பூனை, குரல்வேற்றுமைசெய்தல்போல் இத்தேவடியாள்மகள் குரல்வேற்றுமைசெய்கின்றாள்.

விடன்—குரல்வேற்றுமை செய்தாளா? ஆ! ஆச்சரியம்! அன்றி, இதன்கண் வியப்பென்னே?

கலிவிருத்தம்.

40. [3]நாடக வரங்கத்தி னண்ண லானுமேம்
பாடுறு கலைகளின் பயிற்சி யானும்பல்
[4]கூடகப் புலத்தினுங் குரலின் வேற்றுமை
யாடலி னிவள்வலி யண்மி னளரோ. (௪௦)

---

[1] இதன்கட் கூறியதுகூறல் வெளிப்படை.

[2] சிவபெருமானைக் கூவியழைத்தாலும் விடேன் என்பதாம்.

[3] அரங்கம்நண்ணல், கலைப்பயிற்சி, வஞ்சகப்புலமை ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றும் குரல்வேற்றுமைப்பயிற்சிக்குக் காரணமாகுமெனின், இவ்வெல்லாம் ஒருங்குடைய இவள், குரலை வேற்றுமைப்படுத்தலில் வியப்பென் என்பதாம்.

[4] கூடகப்புலம் - வஞ்சகஞானம்.

[வந்து]

விதூடகன்—ஓ! ஓ! வேள்வியினிமித்தம் கொலைப் படுத்தக் கொண்டுவரப்படும் ஆட்டின் இருதயம்போல முன் னிரவில்வீசும் இளங்காற்றால் விளக்கு மிகவும் நடுக்க முறுகின்றது. [இரதனிகையின்பக்கலெய்தி அவளைப்பார்த்து] ஏ! இரதனிகே!

சகாரன்—ஐய! ஐய! மனிதர்கள். மனிதர்கள்.

விதூடகன்—மாட்சிமிக்க சாருதத்தர் வறியவராக இருத்தலால் இப்பொழுது அவரில்லத்தின்கட் பிறமனிதர்கள் புகுகின்றனரே; இஃது அறமாமா? தகுதியாமா?

இரதனிகை—ஐய! மைத்திரேயரே! எனது மானக் கேட்டைப் பாருங்கள்.

விதூடகன்—[1] இம் மானக்கேடு உனக்கோ? அன்றி எங்களுக்கோ?

இரதனிகை—உங்களுக்கேயாம்.

விதூடகன்—ஈதென்ன? வலிந்துபற்றுதலா?

இரதனிகை—ஆம்.

விதூடகன்—உண்மையாகவா?

இரதனிகை—உண்மையாகவே.

விதூடகன்—[சினத்தோடு விறகுக்கழியை உயரத்தூக்கி] இது செய்யலாகாது. ஓ! தனக்குரிய இடத்திலிருக்கின்ற

---

[1] பணியாளருக்குச் செய்யப்படும் மானக்கேடு அவர்தம் தலைவரையே சாருமென்பது கருத்து.

[1]நாயும் வன்மையுடையதாகும். அந்தணனாகிய யானோ அதனினும் உயர்ந்தவன். ஆதலின், நம்போன்றார்களது ஊழ்வினைபோல் வக்கிரமான இவ் விறகுக்கழியால், உலர்ந்த மூங்கிலைப் பிளத்தல்போற் கீழ்மகனாகிய உனது தலையைப் புடைப்பேன்.

விடன்—மகாப்பிராமண! பொறுத்தருள்க. பொறுத் தருள்க.

விதூடகன்—[விடனைநோக்கி] [2]இச்செயலில் இவன் குற்றம்புரிந்தவனல்லன். [சகாரனைநோக்கி] இவனன்றோ இக் கொடுஞ்செயலிழைத்தவன். எட! எட! [3]மன்னவன் மைத் துன! [4]சமத்தானக! [5]கொடியோய்! [6]கயவ! இது தகுமா? மாட்சிமிக்க ஐயர் சாருதத்தர் வறுமையுற்றுளாராயினும், அவர் [7]உயர்குணங்களால் உச்சயினிநகரம் அலங்கரிக்கப்பட வில்லையா? எதற்காக அவரில்லத்துட்புகுந்து ஏவன்மகளிர்க்கு இத்தகைய துன்பஞ்செய்கின்றனை?

---

[1] பிறப்பான் இழிந்த நாயும் தன்னிடத்தி லிருக்குங்கால் ஆங்கு வரும் பிற வன்மைமிக்க பிராணிகளையும் வெல்லுமெனின், அந்தணனாகிய யான் ஈண்டு யார்க்கும் அஞ்சேன் என்று கருதினன் என்பதாம். இவ் வெடுத்துக்காட்டால் விதூடகனது கல்வியறிவின் இயல்பு புலனாகும்.

[2] இச்செயல் - இரதனிகையின் கூந்தலிற் பிடித்திழுத்தல்.

[3] [4] [5] [6] இவை முறையே இழிபிறப்பையும், அவன்பெயர் தன்னால் அறியப்பட்டதென்பதையும், தகாதனசெய்பவன் என் பதையும், மக்களுள் தாழ்ந்தோன் என்பதையும் புலப்படுத்துவன.

[7] சாருதத்தருடைய கொடைமுதலிய உயர்குணங்களாலேயே உச்சயினிநகரம் சிறப்புற்று விளங்குகின்றதென்பதாம்.

கலிவிருத்தம்.

41. [1]இழிவுநல் குலவினு லியைவ தன்றுபொன்
ஒழிவுறும் வறியனென் றாழிற் குண்டுகொல்!
அழிவறு செல்வனு யார்ந்துஞ் சிலத்தின்
வழுவின னெனினவன் வறுமை யாளனே.' (சக)

விடன்—[நாணத்துடன்] அந்தணர்பெரும! பொறுத்தருள்க. பொறுத்தருள்க. [2]வேற்ருள் என்னும் எண்ணத்தாலன்றே இது செய்யப்பட்டது; [3]செருக்காலன்று. பார்க்க.

கலிவிருத்தம்.

42. காமமிக் கவளையாங் கருதித் தேடினேம்:

விதூடகன்—இவளா?

விடன்—[4]பாவம் விலகக்கடவது.

[5]மாமைசால் [6]இளமைதன் வயத்தி னெய்தினுள்

---

[1] இச்செய்யுளின் பின்னிரண்டடிகளாலும் சகாரன் அரசன் மைத்துனனுய்ச் செல்வமுடையனுயிருப்பினும் ஒழுக்கம் தவறியவனுகலின், அவனே வறுமையாளன் என்பது குறிப்பிற் புலப்படுவதாம்.

[2] வேற்ருள் என்றது வசந்தசேனையை.

[3] செருக்கு - செல்வக்களிப்பு.

[4] இரதனிகையை வசந்தசேனையாக நினைந்து செய்த பாவம் விலகக்கடவ தென்பதாம்.

[5] மாமை - அழகு. [6] இளமையைத் தன்வயமாகப் பயன் படுத்துபவள்-கணிகையாகிய வசந்தசேனை.

எழுறு மவன்மறை வெய்த மற்றவள்
ஆமிவ ளெனநினைந் ததன்ம மெய்தினேம். (சஉ)

எங்ஙனமாயினும் இச்சிறந்த மனவமைதியை மேற்கொள்ளல்வேண்டும். [என்று வாட்படையைப்போக்கிக் கூப்பிய கைகளையுடையனாய்ப் பாதங்களில் வீழ்கின்றான்.]

விதூடகன்—பெரியீர்! எழுக. எழுக. யான் அறியாமற் பழித்துரைத்தேன். இப்பொழுதோ [1]உண்மையை அறிந்துகொண்டமையாற் [2]பொறுக்கவேண்டுகிறேன்.

விடன்—தாங்களன்றோ இந்நிகழ்ச்சியிற் பொறுக்க வேண்டியவர்கள். ஆதலின், ஓர் [3]உறுதிசெய்வதாயின் எழுந்திருப்பேன்.

விதூடகன்—தாங்கள்[விரும்பியதைச்]சொல்லவேண்டும்.

விடன்—இந்நிகழ்ச்சியைப் பெருமான் சாருதத்தர்க்குச் சொல்லுவதில்லையென்றால் எழுந்திருப்பேன்.

விதூடகன்—சொல்லமாட்டேன்.

விடன்—

கலிவிருத்தம்.

43. மாண்மிகு மறையவ மனத்திற் போந்தவிக்
கேண்மையென் றலைக்கொளுங் கிழமை பூண்டுளேன்
வாண்மலி சரத்தினே மெனினு மற்றெமைப்
பூண்மிளிர் [4]குணப்படை பொருது வென்றனை. ()

---

[1] குற்றமின்மையாகிய உண்மை யென்க.

[2] என் பழிப்புரையைப் பொறுக்கவேண்டு மென்பதாம்.

[3] உறுதி-விருப்பத்தைநிறைவேற்றுவதாகக்கூறும் குளுறவு.

[4] குணங்களாகிய படைகளால் வென்றனை யென்பதாம்.

சகாரன்—[பொறுமையோடு] ஐய! எதற்காக இச் சிறு பையனுக்கு எளிமையைப் புலப்படுத்தும் வணக்கம்புரிந்து பாதங்களில் விழ்கின்றீர்கள்?

விடன்—அஞ்சுகின்றேன்.

சகாரன்—தாங்கள் எதற்கு அஞ்சுகின்றீர்கள்?

விடன்—அச் சாருதத்தருடைய குணங்களுக்கு.

சகாரன்—எவன் இல்லத்திற்புகுந்தால் உண்ணத்தக்க தொன்றும் கிடைக்கமாட்டாதோ அத்தகைய சாருதத்தன் பால் உள்ள குணங்கள் யாவை?

விடன்—இங்ஙனம் சொல்லவேண்டா.

கலித்துறை.

44. [1]அன்னா னம்மனோர்க் களித்தலான்
மெலிவினை யடைந்தான்
என்னு செல்வத்தா னெவனையு
மிழிவுசெய் திலனல்
கன்னு நீள்வெயிற் காலத்தி
னல்லநீர்த் தடம்போல்
உண்ணும் வேட்கையை மக்களுக்
கொழித்தலா னுலர்ந்தான். (சச)

---

[1] வேனிற்காலத்து நறுநீர்த் தடாகம் இடைவிடாமல் மக்கள் பலர் உண்ணுதலால் நீர்வற்றி வருவாயின்றிக் குறைதல்போல, உலகத்துமக்கள் பலரும் நாள்தோறும் கொள்ளக் கொடுத்து மேற் பொருள்வருவாயின்றி ஊழ்வலியாற் சாருதத்தர் வறுமையுற் றிருத்தல் இழிவன்று; மேன்மையேயாம் என்பது கருத்து.

சகாரன்— [சினத்தோடு] [1]கருப்பதாசிபுத்திரனாகிய அவன் யார்?

ஆசிரியவிருத்தம்.

45. [2]திண்ணியன் வீரன் பாண்டுபுத் திரனாச்
செப்புமச் சுவேதகேதுப்பேர்
அண்ணலோ? இராதை மக்களா மொருபஃ
தானன னிந்திர தத்தன்
என்னுமிங் கிவரு ளொருவனோ? இராம
னிசைவினாற் குந்தியின் வயிற்றில்
நண்ணிய அசுவத் தாமனோ? தருமன்
நல்கிய சடாயுவோ? புகல்வாய். (சரு)

விடன்—மூட! பெருமைபொருந்திய சாருதத்தரன்றே இவர்.

நிலைமண்டில ஆசிரியப்பா.

46. எளியவர்க் கெல்லா மளிகொடை முதலிய
பலவுயர் தன்குண பலத்தான் வணங்கிய
திருமிகு கற்பக தருவே யுலகிற்
பொருந்திய நல்லோர்க் கருந்துணை வாழ்க்கையன்

---

[1] பிறப்பினாலேயே அடிமைப்பெண்ணின்மகன் என்பதாம்; இஃது இழிவுபற்றியது.

[2] சுவேதகேது உத்தாலகன்புதல்வன்; பாண்டுவின்புதல்வனல்லன். ஒருபஃதானனன்-பத்துமுகங்களையுடைய இராவணன். இராவணனும் இந்திரதத்தனும் இராதையின் புதல்வரல்லர்; இந்திரதத்தன் பெருங்கதையிற் கூறப்படும் ஓர்அரசன். இராமன் குந்தியின் கணவனல்லன்; அசுவத்தாமா அவர்க்குப் புதல்வனல்லன். சடாயு தருமன்புதல்வனல்லன். ஆதலின், இச்செய்யுட்பொருண்முழுதும் புராணவிருத்தம்.

கலைபயி லறிஞர்தம் நிலையளந் துணரா
வுற்ற[1]கண் ணாடி பற்றுநற் செய்கைக்
கொல்லுநற் [2]கட்டளைக் கல்லே யொழுக்கமாம்
படுகரை கடவாக் கடலே பலர்க்கும்
ஆதர வானோ னேதா யாரையும்
இழிவுறக் கருதான் பழிதபு மக்கட்
குளவுயர் குணனெலாம் ஒளிர்தரு நிலயம்
உயர்கண் ணோட்ட மயர்வறு வண்மையும்
துணிபொரு ளாக்கொளுந் தூயோ னின்ன
அணிதரு பன்னல மமைதா லானவன்
ஒருவனே யுலகி னுயிருட னென்றும்
மருவிச் சிறந்து [3]வாழ்வோன் மற்றையோர்
அயிர்ப்பில் துருத்தியி னுயிர்ப்புடை யோரே. (சகூ)

ஆதலின், இவ்விடத்தினின்றுஞ் செல்வோமாக.

---

[1] கண்ணாடி தன் எதிர்ப்பட்ட உருவத்தைத் தன்னுள் அடக்கிக் காட்டுதல்போலச் சாருதத்தன் தன் எதிர்ப்படும் அறிஞரின் அறிவுநிலையை மனத்தான் அளந்து கண் முதலிய உறுப்புக்களான் வெளிப்படுத்துக்குறிப்பிற்காட்டுதலின், இவன் "கலைபயி லறிஞர்தம் நிலையளந் துணரா வுற்ற கண்ணாடி" யாவான் என்பதாம்.

[2] கட்டளைக்கல்-உரைகல். இவன் மேற்கொள்ளுஞ் செயலெல்லாம் நல்லன எனவும், இவனாற் கொள்ளப்படாதன எல்லாம் தீயன எனவும், உலகம் அறிந்துகொள்ளற்கு உரைகல்போல்வான் என்பது கருத்து.

[3] இவன்கொடை முதலிய உபகாரச்செயல்களால் உலகத்துப் பலர் வாழ்தலின் இவன் ஒருவனே என்றும் உயிருடன் வாழ்பவனாவான்; மற்றையோர் உயிருடனிருந்தும் பிறர்க்கு உதவிமுதலியன இன்மையால் துருத்திபோல மூச்சுவிடும் இயல்பினரே என்பதாம்.

சகாரன்—வசந்தசேனையைப் பிடிக்காமலா?

விடன்—வசந்தசேனை காணப்பட்டிலளே.

சகாரன்—எப்படி?

விடன்—

ஆசிரியவிருத்தம்.

47. அந்தகன் பார்வை போலும்
[1]ஆதுரன் வன்மை போலும்
மந்தன துணர்வு போலும்
மடியுளான் [2]சித்தி போலும்
[3]சிந்தைநைந் தலையப் பெற்றான்
சிறந்தநூற் கல்வி போலும்
வந்தவள் பகைவ ரன்பின்[4]
மறைந்தன ளின்பா னின்றே.[5] (சஎ)

சகாரன்—வசந்தசேனையைப் பிடிக்காமல் யான் போகேன்.

விடன்—இதனையும் நீ கேட்டிலை.

---

[1] ஆதுரன் - நோயாளன். [2] சித்தி-பயனெய்தல். [3] சிந்தைநைந்தலையப்பெற்றான் - தடுமாறுளத்தன். [4] இன் - ஒப்புப் பொருளது.

[5] இச்செய்யுளுட் கூறிய உவமைகளுள் மந்தனதுணர்வு என்பது ஈண்டுச் சிறந்ததாகும். 'மந்தன்' என்பது சகாரனைக் குறிக்கும். முதலில் சாருதத்தனது இல்லம் இடப்பக்கம் உள்ளது என்று வெளிப்படுத்தத்தகாததொன்றை வெளிப்படுத்தியும், பின்னர் ஆண் பெண் என்னும் பகுத்தறிவின்றி விடன் சேடன் முதலியோரைப் பிடித்துக் காலந்தாழ்த்தும், ஆரவாரஞ்செய்த தொன்றே வசந்தசேனையின்மறைவுக்குக் காரணமென்பது கருத்து.

கலிவிருத்தம்.

48. கரியினை யடக்குதல் [1]கந்தின் கண்ணதாம்
பரியினைக் [2]கலினத்தாற் பற்ற லாகுமாங்
கரிவைய ரகத்துறு மன்பிற் சார்வரவ்
உரிமையன் பின்றெனி னெழிதல் வேண்டுமால். ()

சகாரன்—போகவேண்டுமாயின் நீங்கள் போகலாம். யான் போகேன்.

விடன்—நல்லது, செல்கின்றேன். [என்று போகின்றான்]

சகாரன்—ஐயனாகிய விடன் காணப்பட்டிலன். [விதூடகனை நோக்கி] எட! [3]காக்கைக்கால்போன்ற [4]தலைச்சிரம் உடையாய்! கொடுமைமிக்க சிறியவ! இரு. இரு.

விதூடகன்—யாங்கள் இருத்தப்பட்டவர்களாகவே ஆயினேம்.

சகாரன்—எதனால்?

விதூடகன்—[5]ஊழ்வலியால்.

சகாரன்—எழுந்திரு. எழுந்திரு.

விதூடகன்—எழுந்திருப்போம்.

சகாரன்—எப்பொழுது?

விதூடகன்—மீண்டும் ஊழ் நல்லதாகுங்கால்.

---

[1] கந்து - கட்டுத்தறி. [2] கலினம் - கடிவாளம்.

[3] வளைந்து நீண்டு விகாரமான தலை என்பதாம். [4] தலைச்சிரம் கூறியதுகூறல்.

[5] ஊழ்வலி - தீயூழின்வன்மை. அதனால் இருத்தப்பட்டவர்களாயினேம் என்பதாம். இருத்தப்படுதல் - தாழ்த்தப்படுதல்.

சகாரன்—எட! அழு. அழு.

விதூடகன்—யாங்கள் முன்னமே அழும்படி செய்யப் பட்டுளேம்.

சகாரன்—எதனால்?

விதூடகன்—வறுமையால்.

சகாரன்—எட! சிரி. சிரி.

விதூடகன்—சிரிப்போம்.

சகாரன்—எப்பொழுது?

விதூடகன்–செல்வம் மீண்டும் மாட்சிமிக்கசாருதத்தரை அடையுங்காலத்தில்.

சகாரன்—எட! சிறுபையலே! வறுமைமிக்க அச் சாரு தத்தன்பால், பின்வரும் என் சொற்களைச் சொல்லல் வேண்டும். "பொன்மயமான அணிகலன்களையுடையவளும், புதிய நாடகக்காட்சியிற் றோன்றிய நடியைப்போன்றவளும், வசந்தசேனை என்னும் பெயரினையுடையாளுமாகிய இக் கணிகைச்சிறுமி காமதேவாயதனம் என்னும் பூஞ்சோலையிற் கண்டதுமுதல் நின்பாற் காதலுடையளாய், எங்களால் வலிந்து தொடரப்பட்டும் நின்இல்லத்தின்கட் புகுந்தாள். ஆகலின், நீயே அவளை வெளிப்படுத்தி என்கையில் திருப் பித்தருதல்வேண்டும். தரின், நீதிமன்றத்தில் வழக்கின்றி விரைவில்தருகின்ற உனக்கு [மன்னவன் மைத்துனனாகிய] என் னோடு நெருங்கியநட்புண்டாகும். இன்றேல் தாராதிருக்கின்ற உனக்கு இறக்கும்வரை பகைமையுண்டாகும். இன்னும் பார்.

ஆசிரியவிருத்தம்.

49. வற்றலாங் கறியு மாப்பி
மலிதரத் திமிர்ந்த காம்பின்
முற்றுபூ சுணியின் காயும்
முழுநெயில் வெந்த வூனும்
உற்றமுன் பனிக்கா லத்தி
னுளவிர வட்ட சோறுஞ்
செற்றமுங் கடனுங் காலஞ்
சேறலாற் கேடுறுவால். (சகூ)

இதனைச் செவ்வையாகக் கூறுவாயா? மாறுபடக் கூறுவாயா? எனது அரண்மனையின் மேல்வீட்டு வெளிப்புறத்துமாடத்தில் யானிருந்து கேட்கும்படி நீ சொல்லவேண்டும். மாறுபடப் புகல்வாயாயின், கதவினிடுக்கிலகப்பட்ட விளாம்பழக் குடுக்கைபோல நின்தலையை மடமடவென நெரித்துவிடுவேன்.

விதூடகன்—சொல்லுவேன்.

சகாரன்—[மறைவாக] சேட! உண்மையாகவே ஐயனுகிய விடன் போய்விட்டானே?

சேடன்—ஆம்.

சகாரன்—அப்படியானல் நாமும் விரைந்துபோவோம்.

சேடன்—தாங்கள் வாட்படையை எடுத்துக்கொள்ளுங்கள்.

சகாரன்—உன்கையிலேயே இருக்கவேண்டும்.

சேடன்—[1]இவ்வாள் [2]எம்பெருமானை ஒத்ததாகும். ஆதலின், இதனைத் தாங்களே எடுத்துக்கொள்ளல்வேண்டும்.

சகாரன்—[[3]மாறுபடப்பிடித்துக்கொண்டு]

நிலைமண்டில ஆசிரியப்பா.

50. உன்னுசெவ் வள்ளியிற் செந்நிற முற்றுப்
புறமறை வின்றி யுறையினு ளுறங்கும்
வாளினைத் [4]தோளான் வாங்கி யூளையிட்
டாற்று முடுவலும் ஞமலியுங் குரைப்ப
ஓடுமோர் நரியி னோடுவன் மனைக்கே. (௫0)

[இருவரும் சுற்றிவந்து போகின்றனர்.]

விதூடகன்—அம்மா! இரதனிகே! உனக்கு நேர்ந்த இம் மானக்கேட்டைப் பெருமைமிக்க சாருதத்தர்பால் தெரிவித்தல்வேண்டா. தெரிவிப்பின், வறுமையால் துன்புறும் அவருக்கு இதனால் இருமடங்கான துன்பம் உண்டாமென்று எண்ணுகின்றேன்.

---

[1] சேடன் அவ்வாளின்சிறப்புநோக்கி அதனைத் தன் தலைவனாக மதிக்கின்றான்; ஆதலின் அதனைத் தனக்குரிய கருவியாகக்கையாளலாகாதென்றெண்ணிச் சகாரனை எடுத்துக்கொள்ளவேண்டுகின்றான் என்பதாம்.

[2] எம்பெருமான் - எமது தலைவனாகிய விடன்.

[3] மாறுபடப் பிடித்தல் - அடிப்பக்கத்தைவிட்டு நுனியிற் பிடித்தல்.

[4] கையினால் என்பதைத் தோளான் என்று கூறியது அறிவின்மையானும்.

இரதனிகை—ஐய! மைத்திரேயரே! இரதனிகையாகிய யான் நாவடக்கமுடையாளன்றே.

விதூடகன்—ஆம். அப்படியே.

சாருதத்தன்—[வசந்தசேனையைக்குறித்து] இரதனிகே! உரோகசேனன் மாலைக்காலத்து இளங்காற்றை விரும்பினவனுய், முன்னிரவுப்பொழுதுண்டாகிய குளிர்ச்சியாற் பீடிக்கப்பட்டுளான். ஆதலின், இவனை உள்ளிடத்தே அழைத்துச்செல்வாயாக. இம்மேலாடையால் இவனைப் போர்த்துவாயாக. [என்று மேலாடையைக் கொடுக்கின்றான்.]

வசந்தசேனை—[தனக்குள்] என்னை வேலைக்காரி என்று எண்ணுகின்றாரே. [மேலாடையைவாங்கி மோந்து போர்த்துத் தனக்குள் அவாவோடு] ஆச்சரியம்! இவ்வாடை சாதிமலர்களான் மணம் ஊட்டப்பட்டது. இவரது இளமை பயனுடையதாகவே காணப்படுகின்றது. [சாருதத்தன்அறியாவாறு தன்னை மறைத்துக்கொள்கின்றாள்.]

சாருதத்தன்—ஏடி! இரதனிகே! உரோகசேனனைத் தூக்கிக்கொண்டு உள்ளேசெல்.

வசந்தசேனை—[தனக்குள்] தங்கள் இல்லத்தினுள்ளே புகுதற்கு யான் தகுதியில்லாதவளன்றே.

சாருதத்தன்—ஏடி! இரதனிகே! மறுமொழியுமில்லையே! அந்தோ!

கொச்சகக்கலிப்பா.

51. விதிவலியாற் பொருணீக்க மேவுதலிற் றுன்பமெலாம்
உதிதருமிந் நிலைமையினை யொருமனித னடையுங்காற்
பதிதாமுன் னட்டோரும் பகைமையரே பன்னாளா
மதியன்பி னேவலரு மாறுபடு நிலையினரே. (ருக)

[இரதனிகையின்பக்கலெய்தி.]

விதூடகன்—ஓ! இவளன்றோ அந்த இரதனிகை.

சாருதத்தன்—அவ்-இரதனிகை இவளா? மற்றொருத்தி யாகிய இவள் யார்?

கலிவிருத்தம்.

52. உண்மையி னுணர்விலா துளவென் னுடையைப்
பெண்மையிற் பிழைபடப் பேதிற் சேர்த்தனன்.

வசந்தசேனை—[தனக்குள்] இதனால் அணிசெயப் பட்டேன்.

சாருதத்தன்—

[1]வெண்மைசால் கூதிர்நாண் மேகத் தின்மறை
தண்மதி நிலவுபோற் றயங்கு கின்றனள். (ருஉ)

ஆ! பிறன்மனைவியைக்காண்டல் தக்கதன்றே.

விதூடகன்—ஓ! ஓ! பிறன்மனைவியைக்காண்டல் என்னும் ஐயம் வேண்டா. இவ் வசந்தசேனை காமதேவாயதன மென்னும் பூந்தோட்டத்திற் கண்டதுமுதல் தங்களைக் காதலித்தாள்.

சாருதத்தன்—ஆ! இவள் வசந்தசேனையா! [தனக்குள்]

கலிவிருத்தம்.

53. உளபெருந் திருவெலா மொழிந்த ஞான்றெனக்
களவிகந் திவண்முக மாய காமமோர்

---

[1] வெண்மைசால் மேகமென்க.

வளமறு [1]சிறியவன் சினத்தை மானவென்
றளருட லுறுப்பிலே சார்ந் தடங்குமால். (௫௩)

விதூடகன்—நண்பரீர்! இவ்வரசன்மைத்துனன் சொல்கின்றான்.

சாருதத்தன்—என்ன?

விதூடகன்—“பொன்மயமான அணிகலன்களையுடையவளும், புதிய நாடகக்காட்சியில் தோன்றிய நடிகையைப்போன்றவளும், வசந்தசேனை என்னும் பெயரினையுடையவளுமாகிய இக் கணிகைச்சிறுமி, காமதேவாயதனம் என்னும் பூஞ்சோலையிற்கண்டதுமுதல் நின்பாற் காதலுடையளாய் எங்களால் வலிந்துதொடரப்பட்டும் நின் இல்லத்தின்கட் புகுந்தாள்.”

வசந்தசேனை—[தனக்குள்] ‘வலிந்து தொடரப்பட்டாள்’ என்னும் இஃது உண்மையே. [2]இவ்வெழுத்துக்களால் அலங்கரிக்கப்பட்டவளாகின்றேன்.

---

[1] சிறியவன்சினம் செல்லாவிடத்து நிகழுமாயின், கண் சிவத்தல் இதழ்கடித்தல் முதலிய அவன் உடலுறுப்புக்களின் இயக்கத்தளவில் ஒழியும்; அதுபோல் வறியவன்காமம் பயனுறாது அவன் உடலுக்குத் துன்பம்விளைக்குமவ்வளவில் ஒழியும் என்பதாம்.

[2] சகாரனுக்கு இணங்காமல் அவனால் வலிந்து தொடரப் பட்டாள் என்னும் சொற்றொடரிலுள்ள ஒவ்வோரெழுத்துக்களும் வசந்தசேனைக்கு அணிகலனாக மிளிர்ந்தன. விலைமகளாகிய இவள் நம்மாட்டுக்கொண்ட காதல் பொய்யாகுமென்று சாருதத்தன் எண்ணினால் தன்முயற்சி பயனற்றதாகுமேயென்று வசந்தசேனை எண்ணிக்கொண்டிருந்தனளாதலின், அந்நிலையில் “வலிந்துதொடரப் பட்டாள்” என்னும் சகாரன்கூற்று அவளுக்கு மிக்க மகிழ்ச்சி அளித்தலான் அணிகலனாயிற்றென்பதாம்.

விதூடகன்—“ஆகவின், நீயே அவளை வெளிப்படுத்தி என்கையில் திருப்பித்தரல்வேண்டும். தரின், நீதிமன்றத்தில் வழக்கின்றி, விரைவில்தருகின்ற உனக்கு மன்னவன் மைத்துனனாகிய என்னுடன் நெருங்கிய நட்புண்டாகும். இன்றேல், தாராதிருக்கின்ற உனக்கு இறக்கும்வரை பகைமையுண்டாகும்.”

சாருதத்தன்—[பொருட்படுத்தாமல்] [1]இவன் அறிவிலாதவன். [தனக்குள்] ஆ! இம்மங்கை தேவர்களுடன் கூடுதற்குத் தகுதியுடையவள். அதனாலன்றோ அவ்வமயத்தில்,

கலிவிருத்தம்.

54. இல்லினுட் புகுகவென் றேவப் பட்டுமெற்
புல்லிய விதிநிலை நோக்கிப் போந்திலள்
[2]பல்லிய லாடவர்ப் பயிற்சி யாற்பல
சொல்லுவ ளாயினுந் துணிந்து சொல்கிலள். (ருச)

[வெளிப்படையாக] நங்காய்! வசந்தசேனே! உருவத்தை உற்றுநோக்காது அறியாமையாற் பரிசனமெனக் கொண்டு ஏவிப் பிழைசெய்தவனாகின்றேன். அருள்செய்ய நின்னைத் தலைவணங்கி வேண்டுகின்றேன்.

---

[1] இவன் என்றது சகாரனை.

[2] பல ஆடவர்களோடு அடிக்கடிபழகியதால் மனத்துணிவோடு பேசும் வன்மையுடையவளாயிருந்தும், இப்பொழுது மிக்க அமைதியையும் வணக்கத்தையும் மேற்கொண்டிருத்தல் மிக்க இன்பம் தருவதென்பதாம்.

வசந்தசேனை—(என்னிலைக்குத்)தகுதியில்லாதஇடத்திற் புகுந்த இதனாற் பிழைபுரிந்தவள் யானே. ஆதலின், அருள் புரியப் பெருமானாகிய தங்களைத் தலைவணங்கி வேண்டு கின்றேன்.

விதூடகன்—ஓ! நீங்கள் இருவிரும் ஒருவரையொருவர் இன்பமுற வணங்கினவர்களாய், [1]நெல்விளைந்த கழனிகள் போலத் தலையோடுதலை பொருந்தப்பெற்றிருக்கின்றீர்கள். யானும் [2]ஒட்டகக்கன்றின் முழங்கால்போன்ற தலையினால் வணங்கி உங்களிருவரையும் அருள்செய்ய (எழுந்திருக் கும்படி) வேண்டுகின்றேன். [என்று எழுகின்றான்]

சாருதத்தன்— அமைக; [4]உரிமைநட்பு நிலையுறுவதாக.

வசந்தசேனை—[தனக்குள்] இவ் வின்சொல் பொருட் டிட்பமும் இனிமையும் உடையது. இப்பொழுது மாறுபட்ட நிலையில் இங்கேவந்த யான் தங்குதல் பொருத்தமின்று.

---

[1] நெல்விளைந்தகழனிகள் ஒன்றோடொன்று தலைப்பெய்த லாவது, ஒருகழனியில்விளைந்த நெற்பயிரின் தலை அடுத்துள்ள மற்றொருகழனியிலும், அதன்கண் உள்ள நெற்பயிரின் தலை இதன்கண்ணும் சாய்தலாம்.

[2] ஒட்டகக்கன்றின் முழங்கால் மேடுபள்ளமாக இருக்கும். அதுபோல விதூடகன்தலை உள்ளதென்பதாம்.

[3] குற்றம் எனதாக; நினதாக; எங்ஙனமாயினும் ஆகுக. இப் பொழுது அஃது ஆராயத்தக்கதன்று என்பது கருத்து.

[4] முன்னறியப்படாத என்னில்லத்துட் புகுந்தருளியது, எக்காரணத்தாலாயினும் ஆகுக. அகாரணமாக என்பாற்கொண்ட உண்மையன்பு நடைப்படாது வளர்தல்வேண்டும் என்பது கருத்து.

நிற்க. இங்ஙனம் கூறுகின்றேன். [வெளிப்படையாக] பெரும! யான் இங்ஙனம் தேவரீரது அருளுக்குப் பாத்திரமாயின், இவ்-அணிகலன்களைத் தங்கள் இல்லத்தில் அடைக்கலமாக வைத்தற்கு விரும்புகின்றேன். அணிகலன்களின்பொருட்டே இக்கொடியவர்கள் தொடர்ந்துவருகின்றனர்.

சாருதத்தன்—[1] இவ்வில்லம் அடைக்கலப்பொருள் வைத்தற்குரியதன்று.

வசந்தசேனை—பெரும! இது பொய்; [2]அடைக்கலப் பொருள்வைத்தல் ஆடவரிடத்தேயாம். இல்லங்களிலன்று.

சாருதத்தன்—மைத்திரேய! இவ்வணிகலன்களை எடுத்துக்கொள்க.

வசந்தசேனை—அருள்செய்யப்பட்டேன் [என்று அணிகலன்களைக் கொடுக்கின்ருள்.]

விதூடகன்—[பெற்றுக்கொண்டு] [3]உனக்கு மங்கலம் உண்டாகுக.

சாருதத்தன்—ஆ! மூட! அடைக்கலப்பொருளன்றே ஈது.

---

1 இவ்வில்லம் சிதைவுற்றும் காப்பாரில்லாமலும் இருத்தலால் தகுதியாகாதென்பது கருத்து.

2 ஆடவராகிய தாங்களோ ஒழுக்கநெறி பிறழாதவர்கள்; இல்லம் எங்ஙனமிருப்பினுமென்? தங்கள்பால் இதனை வைத்தல் கொடியவர்க்கு அஞ்சிப்போந்த யான் என்னைக் காப்பாற்றிக் கோடற்கேயாம்; என்று வசந்தசேனை கருதினளென்க.

3 அவ்வணிகலன்களைத் தனக்குத் தந்ததாக நினைந்து வாழ்த்துகின்ருன்.

விதூடகன்—[மறைவாக] அங்ஙனமாயின் கள்வராற் கவரப்படுக.

சாருதத்தன்—[1]சமீபகாலத்திலேயே,

விதூடகன்—இவள் தந்த அணிகலன்கள் நம்மிடத்து (க்கள்வர்பயத்தால்) அடைக்கலமில்லாததாகவே கருதப்படும்.

சாருதத்தன்—இவ்-அடைக்கலப்பொருளைத் திருப்பிக் கொடுத்துவிடுவேன்.

வசந்தசேனை— பெருமானே! இம் மைத்திரேயரைத் துணையாகக்கொண்டு யான் என் இல்லமெய்த விரும்புகின்றேன்.

சாருதத்தன்— மைத்திரேய! இப் பெண்மணியைத் தொடர்ந்துசெல்வாயாக.

விதூடகன்—தாங்களே இவ்-அன்னநடையாளைப் பின் தொடர்ந்துசென்றால் அரசவன்னம்போல் விளங்குவீர்கள். இவ்வேழைப்பார்ப்பானாகிய என்னை ,நாற்சந்திகூடுமிடத்துப் போடப்பட்ட உணவுப்பொருள்களை நாய்கள் கௌவுதல் போல் விளையாட்டுப்பையல்கள் நலிவுறுத்திக் கெடுப்பர்.

சாருதத்தன்—அங்ஙனமேயாக. இந்நங்கையை யானே தொடர்ந்துசெல்வேன். ஆதலின், அரசவீதியிற் கெடாதிருத்தற்குத் தகுதியான விளக்குக்களை ஏற்றல்வேண்டும்.

---

[1] இவ்வாக்கியம் முடிதற்குமுன்னரே விதூடகவாக்கியம் வந்தது; ஆதலின், பின்னுள்ள சாருதத்தன்சொல்லாகிய 'திருப்பிக் கொடுத்துவிடுவேன்' என்பதோடு இதனை முடிக்க.

விதூடகன்—வருத்தமானக! விளக்குக்களை ஏற்று.

சேடன்—[மறைவாக] ஆ! எண்ணெயில்லாமல் விளக்குக்கள் எப்படி ஏற்றப்படும்?

விதூடகன்—[மறைவாக] ஆ! முன்னர் எண்ணெய் நிரம்பிய அத்தகைய நம் விளக்குக்கள் இப்பொழுது வறுமைமிக்க காமுகர்களை வெறுத்தொதுக்கும் விலைமகளிர்போல [1]நேயமற்றிருக்கின்றன.

சாருதத்தன்—மைத்திரேய! அமைக. விளக்குக்கள் வேண்டா; பார்க்க.

ஆசிரியவிருத்தம்.

55. காமமிகு மங்கை[2]கதுப் பெனவெளுத்துத்
தாரகையின் கணங்கள் சூழத்
தாமமிகு சந்திரன்[3]கோப் பெருந்தெருவின்
றனிவிளக்காய்ச் சார்ந்தா னன்னான்
சேமமிகு வெள்ளியதண் கதிர்க்கற்றை
நீர்வடிந்த சேற்றின் கண்ணே
ஏமமிகும் [4]பாலொழுக்கின் [5]இருட்குழாத்
திடைவீழ்ந்திங் கிலகு மாலோ. (டுரு)

---

[1] நேயம் - அன்பு; எண்ணெய்.

[2] கதுப்பு - கன்னம். [3] கோப்பெருந்தெரு - அரசவீதி.

[4] பாலொழுக்கின் - இன் - ஒப்புப்பொருளது.

[5] இருட்குழாத்திடை என்றதனால், தண்கதிரெழுச்சியின் தொடக்கம் புலப்படும். அத்தொடக்கத்தால் இருள் சிறிதுசிறிதாகக் கழிகின்றதென்பதாம்.

[காதலோடு] நங்காய்! வசந்தசேனே! இது நின்னில்லம். உள்ளே புகுக.

[வசந்தசேனை காதலோடு சாருதத்தனைப் பார்த்துக்கொண்டே போகின்றாள்.]

சாருதத்தன்—நண்ப! வசந்தசேனை போய்விட்டாள். ஆதலின் வருக; நம்மில்லம் எய்துவோம்.

வெண்பா.

56. இக்கோப் பெரும்வீதி யாரு மிலரன்றித்
தக்கோராங் காவலர்க டாமுறினு—மிக்க
இரவு [1]பலதீங் கியைதலான் வேண்டும்
கரவு தவிரவுறுங் காப்பு. (ருசு)

[சுத்திவத்து] இப்பொற்பணியை இரவில் நீயும், பகலில் வருத்தமானகனும் காத்தல்வேண்டும்.

விதூடகன்—பெருமான்கட்டளைப்படியே.

[என்று இருவரும் போகின்றனர்.]

"அணிகலன் அடைக்கலம்" என்னும்

முதல் அங்கம் முற்றிற்று.

---

[1] பலதீங்கு - சனவழக்கமில்லாமை, கள்வர்திரிதல், இருட்குற்றம் முதலியன.

# இரண்டாம் அங்கம்.

## சூதர் நிலை.

[வெளிவந்து]

சேடி—வசந்தசேனையினிடத்துத் தெரிவிக்கவேண்டுவ தொன்றின்பொருட்டு அவள்தாய் என்னை ஏவினாள். ஆதலின், வீட்டினுட்புகுந்து பெருமாட்டியின் அருகில் அடைகின்றேன். [சுற்றிப்பார்த்து] இப்பெருமாட்டி நெஞ்சத்தால் ஏதோவொன்றை ஊன்றி நினைத்துக்கொண்டிருக்கின்றாள். ஆதலின், அருகிற்செல்கின்றேன்.

[அதன்பின் இருக்கையிலிருந்தவண்ணமாய்ப் பிரிவாற்றாமைமிக்க வசந்தசேனையும், மதனிகையும் வருகின்றனர்.]

வசந்தசேனை—ஏடி! அதன்பின், அதன்பின்.

சேடி—பெருமாட்டி! யான் ஒன்றும் கூறவில்லையே! "அதன்பின் அதன்பின்" என்பதென்ன?

வசந்தசேனை—யான் சொல்லியதென்ன?

சேடி—"அதன்பின் அதன்பின்" என்று.

வசந்தசேனை—[புருவநெரிப்புடன்] ஆம் அப்படியே.

[அணிமைக்கண்வந்து]

முதலாவது சேடி—பெருமாட்டி! தங்கள் அன்னையார் "நீராடித் தெய்வங்களுக்குப் பூசையை நிறைவேற்றுக" என்று கட்டளையிடுகின்றார்கள்.

வசந்தசேனை—எடி! "இன்று நீராடல்செய்யேன்; ஆதலின், புரோகிதரே பூசையை நிறைவேற்றல்வேண்டும்" என்று தாயினிடத்து அறிவிப்பாயாக.

சேடி—பெருமாட்டியின் கட்டளைப்படியே.

[என்று போகின்றாள்.]

மதனிகை—பெருமாட்டி! நட்புப்பற்றிக் கேட்கின்றேன்; குற்றத்தை அறியவேண்டும் என்பதுபற்றியன்று. ஆதலின், இப்படியிருத்தலென்னை?

வசந்தசேனை—மதனிகே! என்னை எத்தகையளாகக் காண்கின்றாய்?

மதனிகை—பெருமாட்டியின் நெஞ்சம் புலனுகர்ச்சியின்றியிருத்தலால், உள்ளத்தின்கட் புகுந்த ஓராடவன்பால் விருப்பம்வைத்திருக்கின்றீர்களென்று காண்கின்றேன்.

வசந்தசேனை—நன்கு அறிந்தனை. பிறர் உள்ளத்தை அறிவதிற் பண்டிதையாகிய மதனிகையன்றே! நீ!

மதனிகை—ஈது எனக்கு மிக்க மகிழ்ச்சிதருகின்றது. இக் காமதேவன் பகவானன்றே! இவனால் இளம்பருவத்தாடவர்களுக்குத் தங்களை அடையவேண்டுமென்னும் மகிழ்ச்சி சாலவும் வளர்கின்றது. ஆதலின், பெருமாட்டி, அரசனையா? அன்றி அமைச்சர்முதலியோருள் ஒருவனையா? போற்றக்கருதியது கூறல்வேண்டும்?

வசந்தசேனை—சேடி! இன்பமெய்த விரும்புகின்றேன்; [1]போற்றுதற்கன்று.

---

[1] போற்றுதல் - பொருளாளர்களை உபசரித்தல். இது விலைமாதர் இயல்பு; யான் அந்நிலையளல்லள்; குலமகளிர்போல இன்பம் உறுதற்கே விரும்புகின்றேன் என்பதாம்.

மதனிகை—சிறந்த கல்வியணிகலன்களையுடைய இளைஞனாகிய ஓர் அந்தணனை விரும்புகின்றீர்களா?

வசந்தசேனை—அந்தணர்களென்றால்வணங்கத்தக்கவர்களன்றோ!

மதனிகை—பற்பல நகரங்களிற்சென்று ஈட்டிய பொருட்பெருக்கத்தையுடைய இளைஞனாகிய ஒரு வணிகனை விரும்புகின்றீர்களா?

வசந்தசேனை—சேடி! தம் இல்லக்கிழத்தியர் அளவின் மிக்க அன்புடையர்களாயினும், அவர்களைவிட்டு அயல்நாடு சேறலான், வணிகர்கள் பிரிவினாலுண்டாகும் பெருந்துன்பத்தை உண்டாக்குபவர்கள்.

மதனிகை—பெருமாட்டீ! அரசன், அமைச்சன், அந்தணன், வணிகன் இவருள் ஒருவனையும் காமுறவில்லையாயின், இப்பொழுது தலைவியாகிய தங்களாற் காமுறப்படும் தகுதியுடையான் யாவன்?

வசந்தசேனை—சேடி! நீ என்னுடன் "காமதேவாயதனம்" என்னும் உத்தியானத்தை அடைந்தாயன்றோ!

மதனிகை—பெருமாட்டீ! ஆம் அடைந்தேன்.

வசந்தசேனை—அங்ஙனம் வந்திருந்தும் ஒன்றும் அறியாதவள்போல வினவுகின்றாயே!

மதனிகை—அஃதறிந்தேன். இல்லத்துட்புகுந்த பெருமாட்டியாகிய தங்களுக்கு அருள்புரிந்த அப்பெருந்தகையினை விரும்புகின்றீர்களா?

வசந்தசேனை—அவர்பெயர் என்ன?

மதனிகை—அவரோ வைசியர்மறுகில் இருப்பவர்.

வசந்தசேனை—அவர்பெயரினையன்றோ கேட்டேன்.

மதனிகை—அவரோ மாட்சிமிக்க சாருதத்தர் என எல்லாராலும்அறியப்பட்ட விளக்கமான பெயரினையுடையார்.

வசந்தசேனை—[மகிழ்வோடு] நல்லது. மதனிகே! நல்லது. நீ நன்கு அறிந்திருக்கின்றனை.

மதனிகை—[தனக்குள்] [1]அப்படியே. [புறத்தே] பெருமாட்டி! அவரை வறியவரென்றன்றோ கேட்டிருக்கின்றேன்?

வசந்தசேனை—அதனாலேயே காமுறுகின்றேன். நல்குரவுமிக்க ஆடவனை நயந்த நெஞ்சத்தினளாகிய கணிகையே உலகத்தில் [2]இழிவில்லாதவளாகின்றாள்.

மதனிகை—பெருமாட்டி! மலர்கள் உதிர்ந்த மாமரம் உயர்ந்தசாதியாயினும், அதனை [3]வண்டுகள் எப்படிவிரும்பும்?

---

[1] அவரியல்பை நன்கறிந்திருக்கின்றேன்; அவரைவிரும்பியது பொருத்தமன்றென்பதாம்.

[2] பொருளாசைமிக்க கணிகையர் உண்மையன்பினராகார் என்னும் உலகாபவாதத்தினின்றும் நீங்குதலின், இழிவில்லாதவளாகின்றாள் என்பதாம்.

[3] அறிவில்லாத வண்டுகளும் விரும்பா எனின், அறிவுடைய நீ விரும்புதல் யாங்ஙனம் பொருந்துமென்பதாம்.

வசந்தசேனை—அதுகாரணமாகவே அவைகள் [1]மது கரங்கள் எனப் பெயர்பெற்றன.

மதனிகை—ஆரியே! அவரை விரும்பினையாயின், இப்பொழுது எக்காரணத்தைமுன்னிட்டு விரைந்து [2]அவர் பாற் சேர்ந்திலை?

வசந்தசேனை—சேடி! அப்பெருமான்பக்கல் விரைந்து எய்துவேனாயின், அவர் கைம்மாறுகத்தருதற்கு ஆற்றல் இல்லாமையான் மீண்டும் காண்டற்கு அரியராவர். [3]அங்ஙனமாகாமைகுறித்தே.

மதனிகை— [4]அக்காரணம்பற்றியேயோ நீ அணிந்திருந்த அணிகலன்களை அவர்கையிற் சேர்த்தனை?

வசந்தசேனை—சேடி! செவ்வையாக நீ உண்மைதெரிந்துளாய்.

---

[1] மதுகரங்கள்-மதுவையுண்டாக்குபவை. அவை அத்தேனைப் பிறர்பொருட்டு ஆக்குவன: அதுபோல விலைமகளிர் தம்நலத்தைப் பிறர்க்குரியவாக்குப. யான் அங்ஙனமின்றி எனக்கே இன்பம் உண்டாக முயல்கின்றேன் என்பதுதோன்ற இவ்வாறு கூறினள்.

[2] சேர்தற்கு எளியராகவும் சேராமைக்குக் காரணம் என் என்பதாம்.

[3] விரைந்தடைந்திலேன் என முடிக்க. யான் அவர்பாற் கைம்மாறுபெறும் விருப்பில்லாதவளென்பதில் அவர் நம்பிக்கை யடையும்வரை என்செலவைத் தாழ்த்தல் நன்றெனக்கொண்டேன் என்பதாம்.

[4] அவர் நம்பிக்கையெய்தும்பொருட்டேயோ.

[திரைக்குப்பின்னே]

[1] ஏ! ஐய! சூதில்தோற்றமையால் தரவேண்டிய பத்துப் பொற்காசின் நிமித்தம் பிடித்துவைக்கப்பட்ட சம்வாககன் ஓடிவிட்டான். ஓடிவிட்டான்.

ஆதலிற் பிடி. பிடி. [2]நில். நில். தூரத்திலேயே பார்க்கின்றேன்.

[திரையை உயர இழுத்தற்குமுன்னரே கலக்கத்தோடுவந்து]

சம்வாககன்—அந்தோ! இச் சூதுவிளையாடல் மிகக் கொடியது.

கலிவிருத்தம்.

57. [3]விரவிய காற்றளை விடுத்த வேசரி
புரைதரு கவற்றினாற் புன்க ணுற்றனன்
இரையெனக் கன்னன்வேற் செதிர்ப்பட் டாவியை
வரைகடோற் கசனென வல்லிற் பட்டனன். (க)

---

[1] இச்சொல் சபிகனுடையது. சபிகன் - சூதாடுவோர்க்கு நடுநின்று ஒழுங்குசெய்பவன். இவன்பெயர் மாதுரன் என்பதாம். இவன் சூதில் வென்றிகொண்ட சூதனைநோக்கிக் கூறுகின்றான்.

[2] நில் நில் என்பதுமுதலியன சூதில் தோற்றோடும் சம்வாககனை நோக்கிக் கூறப்பட்டனவாம்.

[3] காற்றளைவிடுவிக்கப்பட்ட கழுதை பின்கால்களால் வன்மை மிக உதைத்தல்போற் கவறுகள் பெரிதும் தோல்வியுறச்செய்து வருத்த அதனால் துன்புற்றேன் எனவும், கன்னன்வேற்படைக்கு எதிர்ப்பட்டு ஆவிநீங்கிய கடோத்கசனைப்போலச் சூதாடுகருவியால் அழிந்தேன் எனவும் பொருளாதல் அறிக. கவறு, வல்: இவை சூதாடுகருவிகள். படுதல் - அழிதல்.

கொச்சகக்கலிப்பா.

58. [1]சூதாடல் புரிவிப்போ னுறுமுமனம் வரைமுடங்கன்
மீதார வதுநோக்கி விரைந்துமறை தாலானேன்
மாதாரை யிவன்காணு வகையோடி யிவ்வமயம்
ஆதார மாயெவனை யடைக்கலம்புக் கமர்வேன்யான். (உ)

ஆதலின், இச் [2]சூதாடுகளத்தலைவனும் சூதனும் வேறிடத்து என்னைத்தேடி இங்குத் திரும்புதற்குள் யான் கால்களாற் பின்புறமாகநடந்து இப் பாழ்ங்கோயிலினுட் புகுந்து தெய்வவுருவம்போலாவேன். [பலவிதமாக நடித்து அங்ஙனம் ஆகின்றான்.]

[அதன்பின் மாதுரனும் சூதனும் வருகின்றனர்.]

மாதுரன்—ஏ! ஐய! சூதில்தோற்றமையால்தரவேண்டிய பத்துப்பொற்காசின் நிமித்தம் பிடித்துவைக்கப்பட்ட சம்வாககன் ஓடிவிட்டான். ஓடிவிட்டான். ஆதலிற் பிடி. பிடி. நில். நில். தூரத்திலேயே பார்க்கின்றேன்.

சூதன்—

கலிவிருத்தம்.

59. பொன்னுல கிறைவனைப் புகலின் றெய்தினும்
உன்னுபா தலம்புகுந் துறையி னும்மெனும்

---

[1] சூதாடல்புரிவிப்போன்-சபிகன். முடங்கல்-ஓலை. சபிகன் மனம் ஓலையெழுதுவதில்பற்றிநிற்ப அதுகண்டு விரைந்து மறைந்து ஓடினேன். தாரை-வழி. இவ்வழிக்கண் இவன் காணுவகை ஓடி யாரைப் புகலெய்துவே னென்பதாம்.

[2] இவனைச் சபிகனென்பர் முதனூலார்.

பன்னுமிச் [1] சபிகனிற் பற்றல் போக்கியம்
மன்னுருத் திரனுங்காத் தற்கு வல்லனே. (௩)

மாதுரன்—

ஆசிரியவிருத்தம்.

60. [2] நடுவனு மென்னையே மாற்றி
நாமுற நடுக்க மேற்கொள்
உடலினை யுடையா யேட
வன்புக ழொளியும் வந்த
குடியின தியல்பு மாசு
கொள்ளநல் வழிக்கொள் ளாதே
அடிதொறு மிடறி யெங்கெங்
கலைந்துநீ யோடு கின்றாய். (௪)

சூதன்—[அடிச்சுவடு நோக்கி] இவன் இதோ போகின்றான். இவ்வழி இடையில் மறைந்துவிட்டது.

மாதுரன்—[ஆராய்ந்துபார்த்து] ஓ! அடிகள் திருப்பப்பட்டிருக்கின்றன. இக்கோயில் திருவுருவில்லாதது. [[3] ஆலோசித்து] வஞ்சகனாகிய சம்வாககன் பின்புறமாகத் திருப்பப்பட்ட கால்களால் தேவாலயத்துட் புகுந்தான் போலும்.

---

[1] சபிகன் நின்னைப்பற்றுதலை விலக்கிக் காக்க உருத்திரனும் வல்லனல்லன் என்பதாம்.

[2] நடுவன் - சபிகன். நாம் - அச்சம். நடுக்கம் - துடிப்பு.

[3] ஆலோசனைப்பொருளாவது: உட்புகுந்தன்றே வெளியே வரல்வேண்டும்; உட்புகுந்த சுவடு காணப்படவில்லை; வெளிப்போந்த சுவடு காணப்படுகின்றது; இதனால் இது வஞ்சகச்செயலாகும் என்பதாம்.

சூதன்—அப்படியானால் தொடர்ந்துசெல்வோம்.

மாதுரன்—மிக நல்லது.

[இருவரும் தேவாலயத்தினுட்புகுகின்றனர்; சம்வாககனைப்பார்த்து ஒருவர்க்கொருவர் சங்கேதம்செய்துகொண்டு]

சூதன்—[1]ஈதென்ன? கட்டையுருவமான விக்கிரகமா?

மாதுரன்—எட! அன்று; அன்று. இது கல்லினால் இயன்ற உருவம். [என்று பலவிதமாக அசைக்கின்றான். கண்ணாற் குறிப்புச்செய்து] இது நிற்க. வருக. [2]சூதுவிளையாடல் செய்வோம்.

[என்று பலவிதமான சூதுவிளையாடலைச் செய்கின்றான்.]

சம்வாககன்—[சூதாடலின்வைத்த விருப்பத்தாலுண்டாகிய விகாரங்களைப் பலவகையானும் மறைத்துத் தனக்குள்] ஆ!

கலிவிருத்தம்.

61. அரிய தேய மிழந்த வரசனுக்
குருமு பேரிமுரசோதையை யொப்பவிக்
[3] கருவி யாமுரு ளோசைதன் கையிலோர்
பொருளி லான்மனம் போதர வீர்க்குமால். (ரு)

---

[1] இது விக்கிரகமன்று; புருடவுருவமேயாம் என்பதாம்.

[2] சூதுவிளையாட்டில் விருப்பமுள்ள ஒருவன், பிறர் அவ்விளையாட்டை மேற்கொள்ளுங்காற் பார்த்துக்கொண்டு வாளாவிருத்தல் இயலாதென்பது கருத்து.

[3] கருவியாம் உருளோசை - சூதாடுகருவியாகிய உருளும் கவற்றின் ஓசை. ஈண்டு உருள் கவற்றையுணர்த்தும்.

கலிவிருத்தம்.

62. மேருவி னுச்சியி னேற்றி வீழ்த்தல்போற்
சாருமிச் சூதினித் தவிர்தல் வேண்டுமென்
றோருமென் மனத்தையிக் கவற்றி னோசைநல்
லேருறு குயிலினின் னிசையி னீர்க்குமால். (௧)

சூதன்—[கவறுவீழ்ந்தது] என்பக்கத்தில். என்பக்கத்தில்.

மாதுரன்—இல்லை. என்பக்கத்தில். என்பக்கத்தில்.

சம்வாககன்—[சமீபமான வேறோரிடத்தில் விரைந்துவந்து] என்பக்கத்திலன்றோ வீழ்ந்தது.

சூதன்—இம்மனிதன் அகப்பட்டான்.

மாதுரன்—[பிடித்துக்கொண்டு] எட! பணயப்பொருள் கொடாதவனே! பிடிக்கப்பட்டாய். அப் பத்துப்பொற்காசுகளையும் கொடுத்துவிடு.

சம்வாககன்—ஐயா! தருவேன்.

மாதுரன்—இப்பொழுதே தரல்வேண்டும்.

சம்வாககன்—தருவேன். [2]அருள்செய்தல்வேண்டும்.

மாதுரன்—எட! இப்பொழுதே தரல்வேண்டும்.

சம்வாககன்—தலையால் வணங்குகின்றேன்.

[என்று நிலத்தில் வீழ்கின்றான்.
இருவரும் பலவாறாக அடிக்கின்றனர்.]

---

[1] சூதினுண்டாம்வென்றி மேருவினுச்சியிலேற்றல்போலவும் தோல்வி அதனினின்று வீழ்த்தல்போலவுமா மென்க.

[2] அருள்செய்தல் - காலந்தாழ்த்தலைப் பொறுத்துக்கோடற் கண்ணும்.

மாதுரன்—இத்தகைய நீயோ [1]சூதுவிளையாடுவோரின் கூட்டத்தாராற் பிடிக்கப்பட்டாய்.

சம்வாககன்—[எழுந்து கவலையோடு] சூதாடுவோரின் கூட்டத்தினுலேயா பிடிக்கப்பட்டேன். ஐயோ! சூதாடுவோராகிய நம்மவரது இக்கொள்கையைக் கடத்தலாகாதே! ஆதலின் எவ்வாறு கொடுப்பேன்?

மாதுரன்—எட! பிணைகொடு. பிணைகொடு.

சம்வாககன்—அங்ஙனமே செய்கின்றேன். [[2]சூதன் பக்கலெய்தி] நினக்குப் பாதிதருகின்றேன். பாதியை எனக்கு விடல்வேண்டும்.

சூதன்—அவ்வண்ணமேயாக.

சம்வாககன்—[[3]மாதுரன்பக்கலெய்தி] பாதிக்குப் பிணை செய்கின்றேன். ஐயன் எனக்குப் பாதியை விடல்வேண்டும்.

மாதுரன்—இதனுற் குறைவென்? அங்ஙனமேயாக.

சம்வாககன்— [[4]வெளிப்படையாக] ஐய! தாங்கள் பாதியை விட்டீர்களன்றே.

---

[1] நின் ஒழுக்கம் சூதாட்டக்குழுவினரனைவராலும் வெறுக்கப் பட்டதொன்று; ஆதலின் உன்னைப்பிடித்தது அக்குழுவின்பாலதாம்; என்னுன்மாத்திரமன்று என்பது கருத்து.

[2] தன்சொல் மாதுரன்செவியிற் படாவண்ணம் என்பது கருத்து.

[3] தன்சொல் சூதன்செவியிற் படாவண்ணம் என்பது கருத்து.

[4] இருவரும் கேட்கும்படி.

மாதுரன்—ஆம். விட்டேன்.

சம்வாககன்—[சூதனைக்குறித்து] நீயும் பாதியைவிட்டனை யன்றோ?

சூதன்—ஆம். விட்டேன்.

சம்வாககன்—[1] இப்பொழுது போகின்றேன்.

மாதுரன்— [2] எங்கேபோகின்றாய்? அப் பத்துப்பொற் காசுகளைக் கொடு.

சம்வாககன்—ஐயன்மீர்! பாருங்கள். பாருங்கள். ஆ! இப்பொழுதே [3] ஒருவன் பாதிக்குப் பிணைசெய்துவிட்டமை யால் அவன் பாதியைவிட்டான்; மற்றொருவன் தானே அப் பாதியைவிட்டான். இங்ஙனம் முழுதும் விட்டபின்னும் துணையில்லாதவனாகிய என்னை இப்பொழுதே முழுதும் கேட்கின்றான்.

மாதுரன்— [பிடித்துக்கொண்டு] வஞ்சக! மாதுரனாகிய யானோ நிபுணன். இவ்வஞ்சகத்தில் ஏமாற்றமடையேன்.

---

[1] கடன்தொகையாகிய பத்துப்பொற்காசுகளில் ஒருபாதி சபிகனாலும் மற்றொருபாதி சூதனாலும் விடப்பட்டமையால், கடன் முழுவதுந் தீர்ந்துவிட்டது. இனி என்னைத் தடைப்படுத்தல் தகாது என்பது கருத்து.

[2] நீ இப்பொழுதே கையில் தருவதாயிருந்தால் பாதியைத் தள்ளி வாங்குவேன். கொடாமலிருப்பதால் முற்றும் தாவேண்டும் என்பதாம்.

[3] ஒருபாதி சூதனால் விடப்பட்டது; அவனுக்குப் பிணை கொடுக்கப்பட்ட மற்றொருபாதி மாதுரனால்விடப்பட்டது. ஆதலின் இருவராலும் முழுதும் விடப்பட்டதென்பது கருத்து.

ஆதலின், பணயப்பொருள் கொடாதவனே! அவ் வெல்லாப் பொருள்களையும் இப்பொழுதே தரல்வேண்டும்.

சம்வாககன்—எப்படித்தருவேன்!

மாதுரன்—நின் தந்தையை விற்றுத்தா.

சம்வாககன்—எனக்குத் தந்தையெங்கே?

மாதுரன்—நின் தாயை விற்றுத்தா.

சம்வாககன்—எனக்குத் தாய் எங்கே?

மாதுரன்—நின்னை விற்றுத்தா.

சம்வாககன்—அருள்செய்க. என்னை அரசவீதிக்கட் கொண்டுசெல்வீர்களாக.

மாதுரன்—செல்.

சம்வாககன்—அங்ஙனமே. [சுற்றிவருகின்றான்.] ஐயன் மீர்! இச் சூதுகளத்தலைவனிடத்தினின்றும் பத்துப்பொற் காசுகளுக்கு என்னை விலைக்குவாங்குவீர்களாக. [ஆகாயத்தை நோக்கி] "என்ன வேலைசெய்வாய்" என்று கேட்கிறீர்கள்? நும் இல்லத்தில் ஏவலாளாக இருப்பேன். என்ன மறு மொழிதாராமற் போய்விட்டானே! இதுநிற்க. மற்றொருவ னாகிய இவனை நோக்கிப்பேசுகின்றேன். [1][மீண்டும் அதனையே சொல்கின்றான்.] இவனும் மறுமொழி தாராமல் என்னை அவ மதித்துப்போய்விட்டானே. ஆ! மாட்சிமிக்க சாருதத்தர் செல்வமிழந்திருக்குங்கால் இப் பேறிலனாகிய யான் சீவித் திருக்கின்றேன்!

மாதுரன்—எட! கொடு.

---

[1] ஐயன்மீர் என்று முன்கூறிய சொற்றொடர்களையே கூறுகின்றான்.

சம்வாககன்—எப்படிக்கொடுப்பேன்? [என்று வீழ்கின்றான்.]

[மாதுரன் இழுக்கின்றான்.]

சம்வாககன்—ஐ ய ன் மீ ர் ! காப்பாற்றுங்கள்; காப்பாற்றுங்கள்.

[அதன்பின் தருத்துரகன் வருகின்றான்.]

[1] தருத்துரகன்—சூதாடலோ ஆடவனுக்கு அரியணையொன்றுமாத்திரம் நீங்கிய அரசியலேயாகும்.

ஆசிரியவிருத்தம்.

63. [2] மானத்தி னழிவி யாண்டு
மதித்தலில் வண்ணத் தானும்
வானுற்ற பொருளை யென்றும்
வழங்கலோ டழித்த லானும்
தானத்திற் பெருமா யத்திற்
றகுநெறி காண்ட லானும்
ஈனுற்ற சூது செல்வ
ரிசைவுறூஉ மரசை யொப்பாம். (எ)

---

[1] தருத்துரகன் மற்றொரு சூதனுவான்.

[2] இப்பாட்டில் சூது அரசையொப்பாம் என்பது விளக்கப்பட்டுள்ளது. மானக்கேட்டைப் பொருட்படுத்தாமையானும், மானக்கேடு வருமெனச் சிறிதும் எண்ணாமையானும், பொருளை ஆக்கலும் அழித்தலும் செய்தலானும், நிலப்பரப்பினின்றும் பெரிய ஊதியத்தைப் பெறுதற்குரிய நெறியைக் காண்டலானும், சூதாடுகளத்திற் பெரிய வஞ்சகத்திற்குரிய வழியைப் பார்த்தலானும், முறையே அரசும் சூதும் ஒப்பாம் என்பது. தானம் - நிலப்பரப்பு; சூதாடுகளம்; பெரும்ஆயம் எனவும், பெருமாயம் எனவும் கொள்க. ஆயம் - ஊதியம். மாயம் - வஞ்சகம். ஈன் - இவ்வுலகம். செல்வரிசைவறல் இரண்டிற்குமாம்.

இன்னும்,

கலிவிருத்தம்.

64. [1]பொருள்வரல் சூதினுற் பொருந்து நண்பரும்
மருள்விழிப் பெண்டிரும் வாய்ப்பர் சூதினுல்
அருள்கொடை போகமு மமையுஞ் சூதினுல்
உருவுறு மிவையெலா மொழியுஞ் சூதினுல். (அ)

இன்னும்,

இதுவுமது

65. [2]எதிரிக் கோரிருக் கால்விழ வென்பொருள்
உதிரு மென்மெ யுலரும் பகடையாற்
பதியும் பன்னிரண் டீயும் படர்வழி
விதியிற் கட்டலின் வீவுற் றிரிவனுல். (கூ)

[எதிரிற்பார்த்து] முன்னர்நமதுசூதாடுகளத்துக்குத் தலைவனுக இருந்த இம்மாதுரன் இதோ இங்கே வருகின்றுன். நேர்வன நேர்க. கடத்தற்கு ஆற்றலில்லாதவனுக இருக்கின்றேன். ஆதலின், என் உடலை ஆடையான் மறைத்துக்கொள்வேன். [தன்னைக் காணக்கூடாதவாறு பலவகையாக அபிநயஞ்செய்து மறைத்துக்கொள்ளும் துணிவுடனிருக்கின்றுன். மேலாடையைப் பார்த்து,]

வெண்பா.

66. [3]நூலிற்ற திவ்வாடை நொய்ய பலதுளைக
ளாலுற் றிலங்குமிவ் வம்பரமே—சாலப்

---

[1] பொருள்வரல் முதலிய எல்லாம் வென்றியானும், அவ்வெல்லாம் ஒழிதல் தோல்வியானும் ஆமென்க.

[2] எதிரிக்குப் பன்னிரண்டுவீழ்ந்தால் அஃது யான் செல்லும் வழியைக் காட்டும்; தோற்றேடுவேன் என்பதாம்.

[3] இதனுல் சூதாடுவோரின் வறுமைநிலை புலப்படும் என்பதாம்.

பிடித்துடலிற் போர்த்தநிலாப் பெற்றியா மீது
மடித்துச் சுருக்கவுறு மற்று. (கo)

அன்றி ஏழையாகிய [1] இவன் என்செய்வான்? யானே,

கலிவிருத்தம்.

67. [2] பாத மொன்றுவின் பற்றவு மொன்றுதாஅய்ப்
பூத லத்திற் பொருந்தவு மிங்ஙனம்
ஆத வன்னுதித் தண்ணிய மேல்கடற்
போதுங் காறும் புறத்திற் றிரிவனல். (கக)

மாதுரன்—கொடுக்கச்செய்; கொடுக்கச்செய்.

சம்வாககன்—எவ்வாறு கொடுப்பேன்.

[மாதுரன் இழுக்கின்றான்.]

தருத்துரகன்—ஓ! ஈதென்ன எதிரில் நிகழ்வது? [ஆகாயத்தை நோக்கி] "சூதாடியாகிய சம்வாககனைச் சூதுகளத் தலைவன் அல்லற்படுத்துகின்றான்; விடுவிப்பார் ஒருவருமிலர்" என்று நீங்கள் சொல்லுகின்றீர்கள்? இத் தருத்துரகனாகிய யான் விடுவிப்பேன். [அணிமைக்கண் எய்தி] வழி விடுங்கள்; வழிவிடுங்கள். [பார்த்து] ஆ! வன்கண்ணனாகிய மாதுரனா? இச் சம்வாககனும் வலியிழந்தவன்.

---

[1] யான் என்செய்வேன் என்பது பொருள்.

[2] இடைவிடாமற் பகற்காலமுழுதும் அலைந்துதிரிவேன் என்பான், ஒருகால் விண்ணிலும் மற்றொருகால் நிலத்திலுமாக உள்ளேனென்றான். இவ் வெளியநிலையிலுள்ள யான் யார்க்கும் அஞ்சேன் என்பது கருத்து.

ஆசிரியவிருத்தம்.

68. [1]இரவெலாங் கொம்ப ரிடையசை வற்றே
யிருந்தலே கவிழவுற் றுறங்கி
விரவிய சொறியை யோட்டின னுராய்த்து
மிகுவடு முதுகெலாம் படைத்துப்
புரைதரு நாய்க ளுடொறு முழந்தாட்
பூட்டினிற் கௌவினின் றுட
விரவுமிச் செயலான் மெல்லிய னுமிவ்
வீணற்குச் சூதினாற் பயனென். (கஅ)

நிற்க. மாதுரனையே சாந்தப்படுத்துகின்றேன் [அணிமைக் கண் எய்தி] மாதுர! வந்தனஞ்செய்கின்றேன்.

மாதுரன்—[எதிர்வணக்கஞ்செய்கின்றான்.]

தருத்துரகன்—ஈதென்னே?

மாதுரன்—இவன் பத்துப்பொற்காசு கடன்செலுத்தல் வேண்டும்.

தருத்துரகன்—இக்காசு [2]பழஞ்சோற்றளவினதே.

மாதுரன்—[தருத்துரகன் தோளிடுக்கிற் சுருட்டிவைத் திருக்கும் மேலாடையை இழுத்து] ஐயன்மீர்! பாருங்கள்!

---

[1] செல்வம், கவலையின்மை, உடலுழப்பின்மை, மென்மைத் தன்மை, செல்வக்குடிப்பிறப்பு முதலியவையுடையார்க்கே சூதாடல் நன்றாம். இவையொன்றுமில்லாத இவற்கு வரக்கடவ பயன் யாதும் இன்றென்பதாம். மெல்லியன் என்பது இகழ்ச்சிக்குறிப்பு; வல் லுடலுடையான் என்பதாம்.

[2] பழஞ்சோறுபோல மிகச்சிறியதென்பதாம்.

பாருங்கள்! கந்தையையுடுத்தும் இம்மனிதன் பத்துப் பொற்காசுகளைப் பழஞ்சோறென்று இழித்துக்கூறுகின்றான்.

தருத்துரகன்---எட! மடவோய்! அப் பத்துப் பொற்காசு களையும் யான் கவறாடலினால் வென்று தருவேன். [1]பொரு ளுடையான் அதனைத் தன்மார்பின்கண்ணே வைத்துக் கொண்டு வெளிக்காட்டுகின்றானா? எட!

கலிவிருத்தம்.

69. [2]ஐயிரு காசினு லான னஞ்சிவங்
தெய்தினை தனைத்தெறற் கேற்ற தீவினை
செய்தியைம் பொறியொடு சேர்ந்து வாழுமிங்
கொய்யவன் றன்னைநீ நோவக் கொல்கின்றாய். (கூ)

மாதுரன்—ஐய! நினக்குப் பத்துப்பொற்காசுகள் பழஞ் சோறாகும். எனக்கு இவையே நிறைந்தசெல்வம்.

தருத்துரகன்--அங்ஙனமாயின் கேட்பாயாக. இவனுக்கே வேறாக இன்னும் பத்துப் பொற்காசுகளைக்கொடு. இச் சம் வாககன் மீண்டும் சூதாடல்செய்வானாக.

மாதுரன்—அதனாலாவதென்?

---

[1] ஒருவன்பால் ஆரவாரத்தாலும் அஃதின்மையாலும் பொரு ளினது உண்மை இன்மைகளைத் துணிதல் இயலாதென்பதாம்: பொருளுடையான் அடக்கமாகவும்இருத்தல்கூடும் என்பதுகருத்து.

[2] ஐம்பொறியுணர்ச்சியுடைய நீ அவ்வுணர்வுடைய நின் இன மாகிய இச் சம்வாககனைக் கொல்கின்றாயாதலால், உனக்கே கேடு பயக்கும் தீவினைபுரிபவனாகின்றாய் என்பதாம்.

தருத்துரகன்—வெற்றியடைவானாயின் அப்பொழுதே கொடுத்துவிடுவான்.

மாதுரன்—வெற்றியின்றேல்?

தருத்துரகன்—கொடுக்கமாட்டான்.

மாதுரன்—இனிப் பயனின்றிமொழிதல் தக்கதன்று. வஞ்சக! இங்ஙனம் நயைகூர்ந்துபேசுகின்ற நீ கொடு. சிறந்த சூது அறிவினையுடைய மாதுரனாகிய யானே சூதுமுறையைப் [1]பொய்ப்படுத்துவேனோ? வேறெவனுக்கும் அஞ்சுவேனல்லேன். தூர்த்த! நீயே சூதுவிதிக்கு மாறுபட்டு ஒழுக்கம் தவறினவனாகின்றாய்.

தருத்துரகன்—எட! யார் ஒழுக்கந்தவறினவன்?

மாதுரன்—நீயே ஒழுக்கந்தவறினவன்.

தருத்துரகன்—உன் அப்பன் ஒழுக்கந்தவறினவன். [சம்வாககனைத் தப்பியோடும்படி குறிப்பிடுகின்றான்.]

மாதுரன்—தேவடியாள்மகனே! [2]இவ்வாறோ நீ சூதாடல் செய்தனை?

தருத்துரகன்—யான் [3]இவ்வாறே சூதுவிளையாடல் செய்தேன்.

---

[1] வென்றவனுக்குத் தோற்றவன் கொடுக்கவேண்டிய பணத்தைக் கொடுக்கச்செய்தலே சபிகனாகிய என்கடமை. அவன் கொடாமல் ஓடவிட்டுவிடுதல் சூதுமுறைமையன்று. சிறந்த சூதனாகிய யானே அம்முறை பிழைபடச்செய்யேன் என்பது கருத்து.

[2] நெடுநாளாக இங்ஙனம் அறநெறி பிறழ்ந்து சூதாடினையோ என்பதாம்.

[3] பிறர்க்குத் துன்பம் விளைவியாமலே என்பதாம்.

மாதுரன்—எட! சம்வாகக! அப்பத்துப்பொற்காசு களைக்கொடு.

சம்வாககன்—இப்பொழுதே கொடுத்துவிடுவேன். எப்படியேனும் முழுதும் கொடுத்துவிடுவேன்.

[மாதுரன் இழுக்கின்றான்.]

தருத்துரகன்—மூர்க்க! யான் இல்லாதபொழுது நீ இவனைத் துன்புறுத்தலாம்; என் முன்னிலையில் அவ்வாறு செய்தல் கூடாது.

[மாதுரன் சம்வாககனை இழுத்து முடக்கியகையினால் மூக்கிற் குத்துகின்றான். சம்வாககன் இரத்தமொழுக மயக்கமுறுதலை அவிநயஞ்செய்து நிலத்தில் வீழ்கின்றான். தருத்துரகன் அணிமைக்கண் எய்தி மீண்டும் அடிவிழாமல் தடைப்படுத்துகின்றான். மாதுரன் தருத்துரகனை அடிக்கின்றான். தருத்துரகன் திருப்பி அவனைப் புடைக்கின்றான்.]

மாதுரன்—எட! எட! வியபிசாரிமகனே! என்னை அடித்ததற்குப் [1]பயனையும் அடைவாய்.

தருத்துரகன்—எட! அறிவிலாய்! வழியிற் செல்லுகின்ற என்னை நீ அடித்தாய்; நாளை நீதிமன்றத்தில் அடிப்பாயாயின் அப்பொழுது [2]பார்ப்பாய்.

மாதுரன்—யான் பார்ப்பேன்.

தருத்துரகன்—எவ்வாறு பார்ப்பாய்?

மாதுரன்—[கண்களைத் திறந்துகொண்டு] இவ்வாறு பார்ப்பேன்.

---

[1] பயன் - அரசதண்டம்.

[2] அவ்வரசதண்டம் யார்க்குக் கிடைக்குமென்பதை அறிவாய் என்பதாம்.

[தருத்துரகன் மாதுரன்கண்களைப் புழுதியினால் நிரப்பிச் சம்வாககனை ஓடும்படி குறிப்பிடுகின்றான். மாதுரன் கண்களை மூடிக்கொண்டு நிலத்தில் வீழ்கின்றான். சம்வாககன் ஓடுகின்றான்.]

தருத்துரகன்—[தனக்குள்] சூதுகளத்தலைவருட் சிறந்த மாதுரனோடு எனக்குப் பகைமையுண்டாயிற்று. ஆதலின் இங்கு இருத்தல் நன்றன்று. "ஆரியகன் என்னும் பெயரினையுடைய இடைச்சிறுவன் அரசனாவான் என்று பொருளுரையாளனாகிய சித்தன் கட்டளையிட்டுள்ளான். நம்போன்றாரெல்லோரும் அவ் ஆரியகனைப் பின்பற்றுவார்கள்" என்று என் அன்புள்ள நண்பனாகிய சருவிலகன் கூறினான். ஆதலின் யானும் அவன்பக்கலையே எய்துகின்றேன். [என்று போகின்றான்.]

சம்வாககன்—[அச்சத்தோடு சுற்றிப்பார்த்து] இது முன்னர் அறியப்படாத ஒருவருடைய இல்லம்; இதன்பக்கவழி திறக்கப்பட்டிருக்கின்றது. ஆதலின், இதன்கட் புகுகின்றேன். [உட்புகுதலையவிநயித்து வசந்தசேனையைப்பார்த்து]பெருமாட்டி! அடைக்கலம்புகுகின்றேன்.

வசந்தசேனை—அடைக்கலம்புகுந்த நீ அஞ்சவேண்டா. சேடி! பக்கவழியை மூடு.

[சேடி அங்ஙனஞ் செய்கின்றாள்.]

வசந்தசேனை—நீ யார்க்கு அஞ்சுகின்றாய்?

சம்வாககன்—பெருமாட்டி! [1]பொருளாளனுக்கு.

---

[1] பொருளாளன் - கடன்கொடுத்தவன்.

வசந்தசேனை—சேடீ! [1]அப்படியானால் பக்கவழியைத் திறந்துவை.

சம்வாககன்—[தனக்குள்] பொருளாளனால் எனக்குண்டாகிய அச்சத்தின்காரணம் இவளுக்கு எப்படி எளிதாயிற்று? பின்வரும் இது நன்றுணர்ந்து கூறப்படுகின்றது.

கலிவிருத்தம்.

70. ஒருங்கிய தன்வலி யளவை யோர்ந்துபின்
[2]சுருங்கிய சும்மையைச் சுமக்கு மாடவன்
நெருங்கிய தருவன நெடிது சொல்லினும்
வருந்தலும் வீழ்தலும் வாய்த்தி லானரோ. (கச)

இவ்விடத்தில் என்னை இவள் [3]நன்கறிந்திருக்கின்ருள்.

மாதுரன்—[கண்களைத்துடைத்துச் [4]சூதனைநோக்கி] எட! கொடு. கொடு.

சூதன்—ஐய! நாம் தருத்துரகனேடு கலகஞ்செய்து கொண்டிருக்குங்காலத்திலேயே அச் சம்வாககன் ஓடிவிட்டான்.

---

[1] கடன்கொடுத்தவனுக்குக் கடனைச்செலுத்தி இருவர்க்கும் நலம்புரிவோம் என்பது கருத்து.

[2] சுருங்கியசும்மை - தன்வலிக்குக்குறைந்த சுமை. பொருளாளற்குக் கடனைக்கொடுத்து இவனைக் காத்தல் இவள்செல்வநிலைக்கு எளிதாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

[3] யான் சூதில் தோற்றுவந்தேன் என்பதை நன்கறிந்துளாள் என்பதாம்.

[4] சூதனைச் சம்வாககனுக மயங்கிக் கூறுகின்றுன்.

மாதுரன்—அச் சம்வாககனது மூக்கு என் கைக்குத்தால் உடைந்துபோயிற்று. ஆதலின், வா. இரத்தந்தோய்ந்த வழியைத்தொடர்ந்து செல்வோம்.

[தொடர்ந்துசென்று.]

சூதன்—ஐய! அவன் வசந்தசேனையின் இல்லத்தை அடைந்தான்.

மாதுரன்—[1]பொற்காசுகள் தொலைந்தனவோ!

சூதன்—நீதிமன்றஞ்சென்று தெரிவித்துக்கொள்வோம்.

மாதுரன்—இவ் வஞ்சகனாகிய சம்வாககன் இவ்வில்லத்தினின்றும் வேறிடத்திற்கு நாம் காணாதவாறு போய்விடுவான். ஆதலின் தடைப்படுத்திப் பிடித்துவிடுவோம்.

[[2]வசந்தசேனை மதனிகைக்குக் குறிப்பில் தெரிவிக்கின்றாள்.]

மதனிகை—ஐய! எவ்விடத்திருந்து வருகின்றீர்? நீர் யார்? யாரைச்சார்ந்தவர்? எத்தொழில்கொண்டு சீவிக்கின்றவர்? யார்க்கு அஞ்சுகின்றீர்?

சம்வாககன்—அம்மா? கேளுங்கள். பெருமாட்டி! யான் பாடலிபுத்திரம் என்னும் நகரிற் பிறந்தவன்; கிராமத்தலைவன் மகன்; உடம்புபிடிக்குந்தொழிலாற் சீவிப்பவன்.

வசந்தசேனை—ஐய! பிறர்க்கு இன்பந்தரும் நல்லகலையிற் பயின்றிருக்கின்றீர்.

---

[1] ஒகாரத்தால் சம்வாககனிருப்பிடம் அறியப்பட்டமையால் மெக்குவரவேண்டிய பணம் போய்விடாதென்பது போதரும்.

[2] சம்வாககன்வரலாற்றை வினவுக என்று குறிப்பிடுகின்றாள்.

சம்வாககன்--பெருமாட்டி! இதுவும் [1] அறியத்தக்க கலை யென்று பயின்றேன். அது வாழ்க்கைத் தொழிலாக ஆயிற்று.

சேடி—ஐய! மிகவும் வெறுப்புடன் மறுமொழி கூறு கின்றீர். அப்புறம். அப்புறம்.

சம்வாககன்—பெருமாட்டி! அதன்பின்னர், யான் என் தந்தையில்லத்தின்கண்வந்த துறவி முதலிய வழிச்செல்வோர் கூறக்கேட்டு, முன்னர்ப் பழகியறியாத நாட்டைக் காண்ட லில் விருப்பமுடையனாய் இங்கு வந்தேன். இந்நாட்டில் இவ்-உச்சயினிநகரத்தையடைந்து ஒப்பற்ற பெருந்தகையொரு வர்க்குப் பணிவிடைசெய்தேன். அப்பெருந்தகையினரோ காண்டற்கு எல்லாரானும் விரும்பத்தக்கவர்; இன்சொலாளர்; தம் கொடைப்பெருமையைப் பிறரிடங் கூறுபவரல்லர்; நன் றல்லது அன்றே மறப்பவர்; பலவாறு விரிப்பதென்? கண்ணோட்டத்தால் தம் உடல் பொருள் முதலிய எல்லாம் பிறர்க்குரியனவென்றே உணர்ந்தவர்; அடைக்கலம்புகுந் தார்க்கு அருள்செய்யும்வள்ளல்.

சேடி—எம்பெருமாட்டியின் நெஞ்சத்துள் விளங்கு கின்ற [2]காதற்கிழவன் உயர்குணங்களைக் கவர்ந்து இப் பொழுது உச்சயினிநகரத்தை அலங்கரிப்பவன் வேறுயாவன்?

வசந்தசேனை—நல்லது! சேடி! நல்லது. இங்ஙனமே யானும் நெஞ்சத்தால் நினைந்தேன்.

---

[1] உடம்புபிடிக்கும் இத்தொழிலை அறியத்தக்ககலையென்று முதலிற் பயின்றேன். பின் அதுவே வாழ்க்கைத்தொழிலாயிற்று என்பதாம்.

[2] சாருதத்தன்.

சேடி—ஐய! அப்புறம், அப்புறம்.

சம்வாககன்—பெருமாட்டீ! அவர் இப்பொழுது அளியுடன்கூடிய கொடைகளால்,

வசந்தசேனை—செல்வமில்லாதவராயினார்கொல்?

சம்வாககன்—யான் கூறுதற்குமுன்னரே பெருமாட்டி அறிந்ததெப்படி?

வசந்தசேனை—இதன்கண் அறியவேண்டுவதென்ன? குணங்களும் செல்வமும் ஒருங்கமைதல் அரிது. [1]உண்ணுதற்குத் தகுதியில்லாத வாவியில் நீர் நிரம்பியிருக்கும்.

சேடி—ஐய! அவர் எப்பெயரினையுடையார்?

சம்வாககன்—அம்மா! நிலவுலகத்துத் திங்களஞ்செல்வராகிய அவர்பெயரை அறியாதார் யாவர்? அப்பெருந்தகையாளரோ வணிகர்தெருவில் வசிக்கின்றவர். "மாட்சிமிக்க சாருதத்தர்" என்று பாராட்டப்படும் பெயரினையுடையார்.

வசந்தசேனை—[மகிழ்ச்சியோடு இருக்கையினின்றும் இறங்கி] ஐய! [2]இவ்வில்லம் தங்களுடையதே. சேடி! இவர்க்கு இருக்கையைக் கொடு. சிவிறிகொண்டு இளைப்பாற்று. இவ்வையர் மிகவும் துன்புற்றிருக்கின்றார்.

[சேடி அவ்வணஞ் செய்கின்றாள்.]

---

[1] கொடைமுதலியவற்றாற் பிறர்க்குப் பயன்செய்யாதவன்பாற் செல்வம் நிரம்பியிருக்கும்; கொடையாளரிடத்துச் செல்வம் சுருங்கிவிடல் இயல்பேயாம் என்பதாம்.

[2] காதற்கிழவராகிய சாருதத்தர்க்குப் பணிசெய்தமையால் தன் இல்லத்தை அவனுடையதென்கின்றாள்.

சம்வாககன்—[தனக்குள்] ஈதென்ன? மாட்சிமிக்க சாருதத்தரதுபெயரைச் சொல்லிய அளவிலேயே எனக்கு இத்தகைய பெருமதிப்புக் கிடைத்தது. நன்று. ஐய! சாருதத்தரே! நன்று. நிலவுலகத்தில் தாங்கள் ஒருவரே [1]உண்மை வாழ்க்கையுடையீர். மற்றையமாக்களெல்லாம் வீணே உயிர்ப்புடையராவர். [என்று அடிக்கண்வீழ்ந்து] பெருமாட்டி! அமைக. அமைக. அமைக. இருக்கையில் இருத்தல் வேண்டும்.

வசந்தசேனை—[இருக்கையில் அமர்ந்து] ஐய! அப் பொருளாளன் எங்கேயுள்ளான்?

சம்வாககன்—

வெண்பா.

71. [2]நல்லோர் பிறர்க்குதவி நண்ணுங் குணச்செல்வர்
நில்லாப் பொருளெவர்க்கு நேராது—புல்லும்
பெருமை மிகப்பிறரைப் பேணுவோன் பேணும்
உரிமை பிறரா லுறும். (கரு)

---

[1] எவன்வாழ்க்கையால் உலகத்திற் பலர் நல்வாழ்வெய்துகின்றார்களோ அவனே உண்மையான வாழ்க்கையுடையனாவனென்பது கருத்து.

[2] அப்பொருளாளன் எங்கேயுள்ளான்? என்னும் வசந்தசேனை கேள்வி சம்வாககன்செவியிற்படாமையால்அவளுடைய உயர்குணங்களைப் பாராட்டுகின்றான். பிறர்க்கு உதவிபுரியும் குணச்செல்வர் நல்லோராவர்; நிலையில்லாதபொருள் எவர்க்குத்தான் நேராது;கீழாயினார்க்கும் நேரும் என்பதாம். பிறரைப் பெருமைமிகப் பேணுவோன் பிறரால் நன்கு பேணப்பெறுவான்; ஆதலால் பிறரைப் பேணுதல் முதலிய உயர்குணங்களமைந்த நீ என்றும் பூசிக்கத்தக்கவளாவாய் என்பது கருத்து.

வசந்தசேனை—அப்புறம்; அப்புறம்.

சம்வாககன்—அதன்பின் அப் பெருந்தகையாளர் அவ் வேலையையே எனக்குச் சீவனத்தொழிலாக இருக்கும்படி நியமனஞ்செய்தார். அவர் [1]சிலமாத்திரத்தால் எஞ்சியபின் யான் சூதாடலையே பிழைப்புக்குரியவழியாக மேற்கொண் டேன். பின்னர், ஊழின் மாறுபாட்டால் சூதில் பத்துப் பொற்காசுகளைத் தோற்றேன்.

மாதுரன்—[2]கெட்டேன்; பொருளிழந்தேன்.

சம்வாககன்—சூதாடுகளத்தலைவன் சூதன் ஆகிய இவ்விருவரும் என்னைத் தேடுகின்றனர். பெருமாட்டியாகிய தாங்கள் எல்லாம் கேட்டறிந்தீர்கள். ஆதலின், இனித் தங்கள்கருத்தின்வண்ணமாக.

வசந்தசேனை—மதனிகே! [3]தங்குதற்குரிய மரங்கள் அசைவற்றமையால் பறவைகள் இங்கும் அங்கும் சுழன்று திரிகின்றன. ஆதலின், சேடி! போ. சூதாடுகளத்தலைவன் சூதன் ஆகிய இவ் விருவரிடத்திலும் இவ்வையரே தந்தா ரென்று இக் கைவளையலை நீ கொடு.

[என்று கையினின்றும் வளையலைக் கழற்றிச்
சேடியினிடத்திற் கொடுக்கின்றாள்.]

---

[1] சிலமாத்திரத்தால் எஞ்சல்-பொருள்முழுதும் தொலைய ஒழுக் கத்தளவில் இருத்தல்.

[2] சம்வாககனைக் காணாமையால் இங்ஙனம் கூறுகின்றான்.

[3] ஆதாரவாகவுள்ள வள்ளல் சாருதத்தர் செல்வம் இழந்து வறி திருத்தலால் அவரைப் பற்றி வாழ்ந்தார் பலரும் பற்றுக்கோடின்றி வருந்துகின்றனர் என்பதாம்.

சேடி—[பெற்றுக்கொண்டு] பெருமாட்டியின் கட்டளைப் படியே. [என்று போய்விடுகின்றாள்.]

மாதுரன்—கெட்டேன். பொருளிழந்தேன்.

சேடி--இவ்விருவர்களும்உயரப்பார்த்துக்கொண்டிருத்தலாலும், பெருமூச்செறிதலாலும், அசைவற்றிருத்தலாலும், வாயில்வழியைநோக்கிப்பேசிக்கொண்டிருத்தலாலும்,சூதாடுகளத்தலைவனும் சூதனும் ஆவர் என்று எண்ணுகின்றேன். [அணிமைக்கண் எய்தி] ஐய! வந்தனஞ்செய்கின்றேன்.

மாதுரன்—நினக்கு நலமுண்டாக.

சேடி—ஐயன்மீர்! உங்களில் சூதாடுகளத்தலைவன் யார்?

மாதுரன்—

கலிவிருத்தம்.

72. [1]துடியிடை யுரிமையெத் தோன்றற் குற்றனை
கடைவிழி நோக்கிநற் கலவி யிற்சுவை
வடுவுற வயப்படா வாயி னுன்மனம்
உடைதர இனியசொ லுரைக்கின் றுயரோ. (கஉ)

[2]என்பாற் பொருளில்லை. வேறோராடவன்பாற் செல்.

---

[1] துடியிடை விளி. எத்தோன்றற்கு உரிமையுடையாய் என்க.

[2] என்பாற் பொருளில்லை யென்றது அவளை மகிழ்வித்தற்கியலாமைகுறித்து.

சேடி—இத்தகைய சொற்களைக் கூறுகின்றமையால் நீ [1]சூதனல்லன். உனக்குக் கடன்செலுத்தவேண்டியவன் யாரேனும் உளனோ?

மாதுரன்—உளன்; பத்துப் பொற்காசு கடன்செலுத்தல் வேண்டும். [2]அவனுக்கென்ன?

சேடி—அவனுக்காக வசந்தசேனை இக் கைவளையலைத் தருகின்றாள், அன்று; அன்று; [3]அச் சம்வாககனே கொடுக்கின்றான்.

மாதுரன்—[மகிழ்வோடு பெற்றுக்கொண்டு] ஏடி! அக் குலமகனிடத்து, "நின் பிணை தீர்ந்துவிட்டது; வருக; மீண்டும் சூதாடி இன்புறலாம்" என்று கூறுவாயா?

[என்று மாதுரனும் சூதனும் போய்விடுகின்றனர்.]

சேடி—[வசந்தசேனையின்பக்கலெய்தி] அம்மா! சூதாடு களத்தலைவனும் சூதனும் மகிழ்ச்சியுடையராய்ப்போயினர்.

வசந்தசேனை—ஆதலின், ஐய! [4]சுற்றத்தாரை ஆற்றுவித்தற்பொருட்டுச் செல்லுங்கள்.

---

1 "உங்களில் சூதாடுகளத்தலைவன் யார்" என்னும் வினாவிற்குத் தான் அல்லனாயின், "யானல்லேன்" என்றன்றே விடைகூறல் வேண்டும். அங்ஙனமின்றி, "என்பாற் பொருளில்லை"என்றமையால் நீ சூதனல்லன்; சபிகனே என்று கூறினாளென்க.

2 அவனுக்கு ஏதேனும் தீங்குநேர்ந்ததுண்டோ என்பதாம்.

3 சம்வாககனே கொடுக்கின்றான் என்று வசந்தசேனை கட்டளையிட்டதை நினைவுகூர்ந்து கூறுகின்றாள்.

4 கடன் தீர்க்கப்பட்டதுகூறி ஆற்றுவித்தற்கு என்க.

சம்வாககன்—பெருமாட்டி! அங்ஙனமாயின், யான் பயின்ற உடம்புவருடும் தொழிற்கல்வியை நின் ஏவலாளர்க்குப் பயிற்றவிரும்புகின்றேன்.

வசந்தசேனை—ஐய! இக் கலைப்பயிற்சி எவருக்குப் பயனும்படி முன்னர்ப் பணிசெய்தீர்களோ அப் பெருமாற்கே மீண்டும் அது செய்யத்தக்கது.

சம்வாககன்— [தனக்குள்] இவ்வம்மை சாமர்த்தியமாகத் தடுத்துவிட்டாள். எங்ஙனம் கைம்மாறுசெய்வேன்! [வெளிப்படையாக]அம்மா! யான் சூதனால்விளைந்த இம் மானக்கேட்டால் பௌத்தசந்நியாசியாவேன். ஆதலின், "சம்வாககனாகிய சூதன் பௌத்தசந்நியாசியாயினான்" என்னும் இத் தொடர்மொழியைப் பெருமாட்டி நினைவில்வைத்துக்கொள்ளல்வேண்டும்.

வசந்தசேனை—ஐய! ஆராயாது துணிதல்வேண்டா.

சம்வாககன்—அம்மா! இஃது ஆராய்ந்து துணிந்ததே.

[என்று அவ்விடத்தினின்றும் பெயர்ந்து]

கலிவிருத்தம்.

73. நலமறு சூதினா னன்னு [1]நோயொடிவ்
வுலகினர்க் கஞ்சியே யொளித்து றைந்தனன்
அலைவற விப்பொழு தரசர் நீணெறி
குலவியே மறைவறக் கூடிச் செல்வனால். (களா)

---

[1] நோய் - மனத்துன்பம்.

[திரைக்குப்பின்னே கலகலவொலி.]

சம்வாககன்— [கேட்டு] ஓ! ஈதென்ன? [ஆகாயத்தை நோக்கி] "வசந்தசேனையினது தறிமுறி என்னும் இக்கொடிய யானை சுற்றித்திரிகின்றது" என்று கூறுகின்றீர்கள்? ஓகோ! பெருமாட்டியினது மதயானையின்பக்கல்சென்றுபார்ப்பேன். அன்றி எனக்கு இதனாற் பயனென்? முன்னர்த் [1] துணிவுற்ற படி நிறைவேற்றுவேன். [என்று சம்வாககன் போகின்றான். அதன்பின்னர்த் திரையைநீக்குதற்குமுன்னரே அழகியஆடைஅணி கலன்களையுடையனாய் மகிழ்ச்சியோடு கன்னபூரகன் வருகின்றான்.]

கன்னபூரகன்—பெருமாட்டி! எங்கே? எங்கே?

சேடி—சிறியவ! நின் பரபரப்பின் காரணம் யாது? முன் னிலையிலிருக்கின்ற அம்மையைப் பார்க்கின்றாயில்லை!

கன்னபூரகன்—[பார்த்து] அம்மா! வணங்குகின்றேன்.

வசந்தசேனை—கன்னபூரக! மகிழ்ச்சியான் மலர்ந்த முக முடையனாய்க் காணப்படுகின்றாய். ஆதலின் ஈதென்ன?

கன்னபூரகன்— [வியப்போடு] பெருமாட்டீ! இப் பொழுது கன்னபூரகனது ஆண்மையை நீங்கள் பாராமையால் ஏமாற்றம் அடைந்தீர்கள்.

வசந்தசேனை—கன்னபூரக! என்ன? என்ன?

கன்னபூரகன்—அம்மா! கேளுங்கள். பெருமாட்டி யினது தறிமுறி என்னும் பெயர்விளக்கம்மிக்க கொடிய யானை, கட்டுத்தறியை முறித்துப் பாகனையும் கொன்று சனங் களுக்கு மிக்க அச்சத்தை விளைவித்து அரசவீதியைச்

---

[1] துணிவுற்றதாவது: பௌத்தசந்நியாசியாதல்.

சார்ந்தது. பின்னர் இவ்வமயத்தில் சனங்கள் பின்வருமாறு உரக்கக் கதறினர்.

நிலைமண்டில ஆசிரியப்பா.

74. நெறிதிரி சிறார்களைப் பிறிதிடங் கொணர்மின்
கொம்பரு மில்லத் தும்பரு மேறுமின்
பொல்லாக் களிறீண் டொல்லை யிற்கொதித்
[1]தண்டலை முன்னர்க் கண்டிலிர் கொல்லோ. (கஅ)

இன்னும்,

இதுவுமது.

75. மங்கைய ரணிசிலம் பெங்கணு மொருவின
மணியார் தாவொளி ரணிமே கலைகளு
[2]முளைநிகர் பன்மணி நளிதர வழுத்திய
எழின்மிகு வளையலும் பழுதுறீஇச் சிதைந்தன. ()

அதன்பின், தன் கை கால் தந்தங்களால், அலர்ந்த தாமரைத் தடாகத்தைக் கலக்குதல்போல், உச்சயினீநகாத்தைக் கலக்குகின்ற அக் கொடியயானை, ஒரு துறவியைப் பிடித்துக்கொண்டது. பின்னர் அச்சத்தால் முக்கோலும் காகமும் நழுவும்படி அச் சந்நியாசியைத் துதிக்கைநுனியுமிழும் நீர்த்துளிகளால் நனைத்துக் கோடுகளின்நடுவண் வைத்தது. அவனைப் பார்த்துச் சனங்கள் மீண்டும், "ஆ! சந்நியாசி கொலைசெய்யப்படுகின்றான்" என்று கதறினர்.

வசந்தசேனை— [நடுக்கத்தோடு] ஐயையோ! கேடுவிளைந்தது; கேடுவிளைந்தது.

---

[1] அண்டல் - நெருங்கிவருதல்.

[2] முளையைப்போல் ஒளிவிடும் பல மணி யென்க. நளிதா - நெருக்க.

கன்னபூரகன்—நடுங்கல்வேண்டா. பெருமாட்டி! முற்றும் கேட்டல்வேண்டும். அதன்பின்னர், அறுபட்டலை கின்ற சங்கிலிகளையும், கோடுகளின்நடுவண் வைக்கப்பட்ட சந்நியாசியையும் சுமக்கின்ற அவ் யானையைப் பார்த்துக் கன்னபூரகனாகிய யான்-இல்லை; இல்லை; பெருமாட்டியளித்த சோற்றால் வளர்ந்த ஏவலனாகிய யான், சூதாடுகளத்துள்ள ஒருவனைக் கூவிக்கூவி அவன் வாராமையால், கடையிலுள்ள இருப்புத்தடியை என் இடதுகாலால் விரைந்தெடுத்துக் கொண்டு அக் கொடிய யானையை அழைத்தேன்.

வசந்தசேனை—அப்புறம். அப்புறம்.

கன்னபூரகன்—

கலிவிருத்தம்.

76. விந்திய மலைக்குவ டெனச்சின மிகுத்தே
வந்தமத தந்திமிசை வல்லை [1]அய தண்டம்
உந்தியதன் வீற்றினையொ ழித்தென்வலி யாலே
தந்தநடு வட்புகு தவத்தனை விடுத்தேன். (உ௦)

வசந்தசேனை—நின்செயல் நன்று. அப்புறம். அப்புறம்.

கன்னபூரகன்—அதன்பின் அம்மா! "ஏ கன்னபூரக! நன்றுநன்று" என்னும் இதனைமாத்திரம் கூறிக்கொண்டு உச்சயினியிலுள்ள எல்லோரும் யானிருக்குமிடத்தில் ஒருங்குகூடிவிட்டனர். அதனால் அந்நகர் ஒருபக்கத்திற் சுமைமிக்க தோணியைப்போலாயிற்று. பெருமாட்டி! அதன் பின்னர் என்னால் அறியப்படாத ஒருவர் தம் உடலில் அணி

[1] அயதண்டம் - இருப்புத்தடி.

கலன்கள் அணிதற்குரிய உறுப்புக்களைத் தடவிப்பார்த்து, அவை வெறுமையுற்றிருத்தலான் உயரப்பார்த்து நெட்டுயிர்ப்பெறிந்து இம்மேலாடையை என்பாற் சேர்த்தனர்.

வசந்தசேனை—கன்னபூரக! இம்மேலாடை சாதிமலர்களின்மணமுள்ளதா? அன்றா? என்று அறிக.

கன்னபூரகன்—அம்மா! யானையின் மதமணத்தால் அச் சாதிமலர்மணத்தை நன்கு அறிகின்றேனில்லை.

வசந்தசேனை—பெயரையாவது பார்.

கன்னபூரகன்—இப்பெயரைப் பெருமாட்டியே படிக்க வேண்டும். [என்று மேலாடையை விரித்துக்காட்டுகின்றான்.]

வசந்தசேனை—"மாட்சி மிக்க சாருதத்தருடையது" [என்றுபடித்து அவாவுடன்வாங்கிப் போர்த்துக்கொள்ளுகின்றாள்.]

சேடி—கன்னபூரக! இம் மேலாடை நம் பெருமாட்டிக்கு அழகுசெய்கின்றதா!

கன்னபூரகன்—ஆம். இம் மேலாடை நம் பெருமாட்டிக்கு அழகுசெய்கின்றது.

வசந்தசேனை—கன்னபூரக! இவ் வணிகலன் நினக்குப் பரிசிலாகும். [என்று ஆபரணத்தைக் கொடுக்கின்றாள்.]

கன்னபூரகன்—[பணிவுடன் பெற்றுக்கொண்டு வணங்கி] இப்பொழுது பெருமாட்டிக்கு மேலாடை நன்றாக அழகு செய்கின்றது.

வசந்தசேனை—கன்னபூரக! இவ்வமயம் மாட்சிமிக்க சாருதத்தர் யாண்டுள்ளார்?

கன்னபூரகன்—இவ்வழியாகவே இல்லத்தைநோக்கிச் சென்றார்.

வசந்தசேனை—சேடீ! வீட்டின் மேற்றளத்து வாயிற் பக்கத்துள்ள மேடையிலேறி மாட்சிமிக்க சாருதத்தரைப் பார்ப்போம்.

[எல்லோரும் போய்விடுகின்றனர்.]

"சூதர்நிலை" என்னும்

இரண்டாம் அங்கம் முற்றிற்று.

---

# [1] மூன்ரும் அங்கம்.

## கன்னமிடல்.

[அதன்பின் [2]சேடன் வருகின்ருன்.]

கலித்துறை.

77. தூய சீலமுந் தொண்டுசெய்
வோரிடத் தருளும்
மேய நாயகன் பொருளில
னென்னினு மேலோன்
ஆய வப்பொருட் செருக்குறீஇப்
[3]பயன்செயு மமயம்
[4]காயுந் தியவன் றலைவனுக்
கருதுதற் கமையான். (க)

---

[1] இம் மூன்ரும் அங்கத்தில், வசந்தசேனையின் சேடியாகிய மதனிகையின்பாற் காதல்கொண்ட சருவிலகன் என்னும் களவுத் தொழிலையுடைய ஒரு பிராமணன், சாருதத்தன்பால்அடைக்கலமாக வைக்கப்பட்ட வசந்தசேனையின் அணிகலன்களைக் களவுசெய்தல் கூறப்படுகின்றது.

[2] சாருதத்தனுடைய ஏவலாளாகிய வருத்தமானகன்; அடைக் கலப்பணிகளைப் பகலிற் காக்கும்படி நியமிக்கப்பட்டவன்.

[3] பயன்செயுமமயம்-பணியாளர்க்குக் கூலிமுதலியன கொடுக் குங்காலம். [4] காய்தல் - வெகுளல்.

இன்னும்,

வெண்பா.

78. [1]பைங்கூழிரைமேயப் பற்றித் திரியெருதும்
தங்கா தயலான் றலைப்புகூஉம்—மங்கையரும்
சூது விழைவோருந் தொல்லியற்கை யாம்பிழையும்
ஓதுந் தடைக்க னுரு. (உ)

பெருமான் சாருதத்தர் இசைகேட்கச்சென்று நெடுநேரமாயிற்று; நடுநிசியும் கடக்கின்றது; இன்னும் வந்திலர். ஆதலின், வீட்டு வெளிவாயிற் புறந்திண்ணைக்கண் எய்தி உறங்குவேன். [என்று அங்ஙனம் செய்கின்றான்.]

[அதன்பின் சாருதத்தனும் விதூடகனும் வருகின்றனர்.]

சாருதத்தன்—ஆ! ஆ! இரேபிலன் பாடிய இசை நன்று. நன்று. யாழோ கடலிற்பிறவா இரத்தினம். என்னை?

ஆசிரியவிருத்தம்.

79. [2]காலமாற் றுது காமம்விஞ் சினர்க்குக்
கருத்துற விசைந்தநற் றோழி
கோலுமோர் குறிக்கட் கூடனீட் டிப்பிற்
கொளுமயர் வொல்லையி னொழிக்கும்

---

1 கொடைமுதலியவையும் அளவின்மிகிற் குற்றமாதலானும், அதனை இயற்கையின் மேற்கொண்ட தலைவன் நல்குரவுற்றும் ஒழிவெய்திலனாதலானும் சேடன் இங்ஙனம் கூறினான்.

2 தோழியாகுமென்க. இச்செய்யுளின் நான்கடிகளானும் முறையே யாழானது, கூட்டமின்றிக் காட்சிமுதலியவற்றாற் காதன்மிக்க தலைவன் தலைவி: ஆகியஇருவரையும் தோழியாம் நிலையினின்று உள்ளத்தை ஒன்றுபடுத்துக் கூட்டுவிப்பதென்பதூஉம், களவுப்

*மாலுறப் பிரிவா னோய்மிகுத் தவரை*
*மகிழ்தர வுடனிலை நிறுத்தும்*
*பாலுறு மன்பிற் கூடினர்க் காசைப்*
*பரவையை யுவகையிற் பெருக்கும்.* (௩)

**விதூடகன்**—ஓ! வருக; இல்லம் எய்துவோம்.

**சாருதத்தன்**—ஆ! இரேபிலன்பாடிய இசை மிக நன்றாக இருந்தது.

**விதூடகன்**—எனக்கோ இரண்டுசெயல்கள் நகைப்பை உண்டாக்குகின்றன. ஒன்று:—பெண்மகள் வடமொழியைப் படித்தல்; மற்றொன்று:—ஆண்மகன் சூக்கும இன்னிசை பாடுதல். வடமொழியைப்படிக்கும் பெண்மகள், புதிதாக மூக்குக்கயிறு கோக்கப்பட்ட இளம்பசுவைப்போல மிகவும் "சூ சூ" என்று ஒலிக்கின்றாள். சூக்கும இன்னிசைபாடும் ஆண்மகன் மெல்லியமலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்துகொண்டு மந்திரம்செபிக்கின்ற கிழப்பருவப்புரோகிதனை ஒக்கின்றான். இவ்விருவரும் எனக்கு இன்பம்பயப்பவரல்லர்.

---

புணர்ச்சியில் தலைவன் தலைவி இருவருள் ஒருவர் குறியிடத்து வரவு நீட்டிக்குங்கால் ஆங்கு முதற்கட்சென்று வரவெதிர்பார்த்து அச்சமும் காதலும் அதிகரிக்கப்பெற்ற மற்றொருவர்க்கு ஆறுதலளிப்பதென்பதூஉம், கூடிய காதலன் காதலி இருவர்க்கும் தெய்வவயத்தாற் பிரிவுநேர்ந்துழி அத்துன்பத்தால் அசைவுபிறவாது நிலையுறச் செய்வதென்பதூஉம், துன்பம்விலக்கன்மாத்திரையான் அமையாது கூடியின்புறுவார்க்கு மேன்மேலும் இன்பம்விளைவிப்பதென்பதூஉம் புலனாம்.

சாருதத்தன்—நண்ப! இன்று இரேபிலன்பாடிய இசை மிகவும் நன்றாகஇருந்தது. நீ மகிழ்கின்றாயல்லை.

ஆசிரியவிருத்தம்.

80. [1]கருவியு மிடறு மொன்றுதன் மதுரங்
கனிதரல் சமநிலை விளக்கம்
உரியபல் சுவையு மென்மையு முறுத
லுளத்தினைத் தன்வய மீர்த்தல்
மருவுமக் கிதப் பெருமையென் னுவான்
மனிதா வுரைத்தலிற் பயனென்
கருதுநல் லிசைதே ரிவையா னுருவிற்
கரந்தன ளோவென நினைந்தேன். (௪)

இன்னும்,

81. [2]வன்னத்தி னேற்றமோ டிழிவு தம்முள்
வயங்குநடு வீறுச்ச மந்த மாதல்
துன்னியதா ளத்திசைவி னடங்கன் மீண்டுந்
தொடங்கலிவை யெளிதமைதல் சுவையாற் பின்னும்

---

[1] கருவியும் மிடறும் ஒன்றுதல்-வீணையொலியும் மிடற்றொலியும் பிரிப்பின்றி இயைந்து நிகழ்தல். மதுரம் - இசை, கருத்து இவைகளுக்கேற்ற இனிய எழுத்துக்களும் சொற்களும் அமைதல். சமநிலை - இசை ஆளத்தியெடுக்குங்காலும், சுரங்களை அடுக்கிப் பாடுங்காலும் வேறுபாடுதோன்றாவண்ணம் ஒன்றுபடுதல். விளக்கம்-இசைபாடுங்கால் அவ்விசைநடைகளும் அவ்விசைப்பாடலின் சொற்பாகுபாடுகளும் விளங்கச்செய்தல். பல்சுவை - இன்பச்சுவை முதலியன.

[2] வன்னம் - இராகநிலையை நிருணயிக்கும் சுரங்களின் விசேடம். ஏற்றம்-ஆரோகம். இழிவு-அவரோகம். நடு ஈறு: உச்சம் மந்தம் என்பவற்றை நிரனிறையாகக்கொண்டு நடு உச்சம், ஈறு மந்தம் என இயைக்க. ஆளத்தியெடுக்குங்கால் மத்தியநிலையில் எடுத்தும், முடிவுநிலையிற் படுத்தும் பாடல்வேண்டும் என்பதாம். எளிதாதல்-அநாயாசமாதல். சுவைபற்றி மீண்டும் மீண்டும் கூறுதல் என்க.

பன்னுதலிந் நலமமையச் சுரங்கள் கூட்டிப்
பாடுபவன் மிடற்றிசையும் பகர்நல் யாழின்
மன்னிசையு மிசைக்காலங் கடந்துங் கேட்டு
மகிழ்பவன்போற் செல்கின்றே னுண்மை யீதால். ()

விதூடகன்—ஓ! நண்பரீர்! அங்காடித்தெருக்களிலுள்ள நாய்களும் நன்றாக உறங்கிவிட்டன. ஆதலின், இல்லம் எய்துவோம். [எதிரே பார்த்து] நண்பரீர்! பாருங்கள்; பாருங்கள். இத் திங்களஞ்செல்வன் இருள்வருதற்கு அவகாசங்கொடுப்பவன்போல் விட்புலமாகிய மேன் மாளிகையினின்றும் [1]இறங்குகின்றான்.

சாருதத்தன்—நீ நன்றுகூறினாய்!

கலித்துறை.

82. [2]நீரின் மூழ்கிய வனசரக்
களிற்றுடை முகத்திற்
கூரி யன்றவக் கோட்டிரு
நுனியென வொடுங்கிச்
சாரு மிம்மதி யிருட்குழா
முறவிடந் தந்தே
ஒரு முன்னதக் கலைநுனி
தெரிதர வொளிக்கான். (சு)

விதூடகன்—ஓ! ஓ! இது நமது இல்லம். வருத்தமானக! வருத்தமானக! வாயில்வழியைத் திற.

---

[1] மறைவடைகின்றான் என்பதாம்.

[2] நீரின்மூழ்கிய யானையின் கோட்டுநுனிகள் சிறிதுசிறிதாக மறைதல்போலத் திங்கட்செல்வன், இருட்குழாம் பரவ அதனிடைத் தன் கலைகளை ஒடுக்கி மறைவடைகின்றான் என்பதாம்.

சேடன்—ஐயராகிய மைத்திரேயரது குரலைக் கேட்கின்றேன். பெருமான் சாருதத்தர் வந்தனராதலின், இவருக்கு வாயில்வழியைத் திறக்கின்றேன். [அங்ஙனம் செய்து] பெருமானே! வணங்குகின்றேன். மைத்திரேயரே! தங்களுக்கும் வணக்கம் செய்கின்றேன். இங்கு விரிக்கப்பட்ட இருக்கையில் ஐயன்மீர் இருத்தல்வேண்டும்.

[இருவரும் உட்புகுந்து இருக்கின்றனர்.]

விதூடகன்—வருத்தமானக! பெருமான் சாருதத்தர் கால்களைக்கழுவுதற்கு இரதனிகையை அழை.

சாருதத்தன்—[தயையோடு] உறங்குகின்றவளை எழுப்ப வேண்டா.

சேடன்—ஐய! மைத்திரேயரே! யான் நீர்கொண்டு வருவேன். நீங்கள் கால்களைக் கழுவுங்கள்.

விதூடகன்—[சினத்தோடு] ஓ! நண்பரீர்! பிறப்பினாலேயே அடிமையாகிய இவன் இப்பொழுது நீர்கொண்டுவருபவனும். அந்தணனாகிய என்னைக் கால்கழுவ ஏவுகின்றான்.

சாருதத்தன்—நண்ப! மைத்திரேய! நீ நீரைக்கொணர்க. வருத்தமானகன் கால்களைக் கழுவுக.

சேடன்—ஐய! மைத்திரேயரே! நீர்கொடுங்கள்.

[விதூடகன் அவ்வண்ணம் செய்கின்றான். சேடன் சாருதத்தன் கால்களைக் கழுவிவிட்டுப்போகின்றான்.]

சாருதத்தன்—இவ்வந்தணனுக்கும் பாத்தியநீர் கொடுக்க வேண்டும்.

விதூடகன்—எனக்குப் பாதோதகத்தாற் பயனென்? யான் சுமை முதலியவற்றால் வருந்திய கழுதையைப்போல மீண்டும் நிலத்திற் புரளவேண்டும்.

சேடன்—ஐய! மைத்திரேயரே! அந்தணரன்றோ தாங்கள்.

விதூடகன்—பல விடப்பாம்புகளின் நடுவே நஞ்சில்லாத நீர்ப்பாம்புபோலப் பல அந்தணர்கள்நடுவில் யானுமோர் அந்தணன்.

சேடன்—ஐய! மைத்திரேயரே! அங்ஙனமாயினும் கழுவுவேன். [அவ்வண்ணம்செய்து] ஐய! மைத்திரேயரே! வசந்தசேனை அடைக்கலமாகவைத்த இப் பொற்பணிமுடிப்பைப் பகலில் நானும் இரவில் நீங்களும் காக்கவேண்டும். ஆகலின், பெற்றுக்கொள்ளுங்கள். [என்று கொடுத்துவிட்டுப் போய்விடுகின்றான்]

விதூடகன்—[பெற்றுக்கொண்டு] இன்னும் இஃதிருக்கின்றதா? என் உறக்கத்தைக் களவாடுகின்ற இழிந்த இப் பொற்பணிமுடிப்பைக் கவர்தற்குரிய கள்வன் இவ்-உச்சயினீ நகரத்தில் ஒருவனுமில்லையா? ஓ! நண்பரே! நான்குவாயில்கள் கூடும் உள்ளிடத்தே இதனை வைக்கின்றேன்.

சாருதத்தன்—

கலிவிருத்தம்.

83. விலைமக ளுடலணி மேவு மிக்கலன்
குலமக ளுறையுளிற் கூட லொல்லுமோ?
புலமு[illegible]னே! பூவை பின்கர
தல[illegible]கல் வேண்டுமால். (எ)

விதூடகன்—நீங்கள் துயில்கின்றீர்களா?

சாருதத்தன்—ஆம்.

ஆசிரியவிருத்தம்.

84. [1]கருவியாம் விழியைப் பற்றிக்
கவருமித் துயிலெ னெற்றித்
திருவுறுந் தலத்தி னின்றெற்
சேர்தரல் போலு மன்றி
உருவினைக் காட்டா தொல்லை
யுறுமுதிர் பருவம் போல
மருவிய மனித னுற்றன்
மறைதர வளரு மாலோ. (அ)

விதூடகன்—அங்ஙனமாயின் உறங்குவோம்.

[உறங்குதலை அவிநயஞ்செய்கின்றான்.
அதன்பின் சருவிலகன் வருகின்றான்.]

கலித்துறை.

85. [2]பரிய தேகநன் குட்புகப்
பயிற்சியின் வலியும்
உரிய வாற்றலுங் கொடுகள
வுறும்வழி யுஞற்றி

---

[1] துயில்கின்றவனுக்கு முதலில் மனத்தின் செயலொழிவும், அதன்பின் முறையே தலைசாய்தல் கண்மூடல் உடற்றளர்வு முதலியனவும் உண்டாமாதலின், நெற்றித்தலத்தினின்றும் சேர்கின்றது போலும் என்றான் என்க.

[2] பருத்தவுடல் நன்கு உட்புகுமாறு பருமையும் சிறுமையும் இன்றி அளவிற்பட்ட கன்னவழி யென்க.

உரைய மாவுட ஆறுப்பெலா
நிலமுற்இ யுடற்றேல்
இரியும் வெள்ளுரிப் பாம்பென
வினிதுசெல் குவனல். (கூ)

[ஆகாயத்தைப்பார்த்து மகிழ்ச்சியோடு]

ஓ! பகவானகிய இச் சந்திரன் அத்தவெற்பின் மறைகின்றன்கொல்! அதனலன்றே,

ஆசிரியவிருத்தம்.

86. [1]அன்னிய ரில்லக் திங்கை
யடைதாத் துணிந்து வீரம்
நன்னருற் றார்காப் பாளர்
நடுக்கத்தா லுழலு கின்ற
என்னைவல் லிருள்விக் கத்தா
லிலங்குதா ரகைம றைத்துத்
துன்னுமிவ் விரவு தாய்போற்
றுனைந்துபோர்த் தளிக்கு மாலோ. (கo)

உத்தியானத்தின் அணிமைக்கண் உள்ள இடத்திற் சுவர்த்துளைசெய்து இரண்டுசுவர்களின் இடைக்கட் புகுந்து விட்டேன்; ஆதலின், இப்பொழுது நான்குவாயில்கள் கூடும் உள்ளிடத்தையும் கெடுப்பேன். ஓ!

---

[1] ஊர் காப்பாளரால் நேரும் நடுக்கமென்க. துணிந்து உற்று உழலுகின்ற என்னை என்க.

ஆசிரியவிருத்தம்.

87. [1]இழிவிதெனப் பெரியோர்க ளியம்புவரா
 லுறங்குங்கா லிழைக்குந் தீங்கைப்
பழியிலரை வஞ்சித்தல் பரிபவமா
 தலிற்களவு பண்பன் றென்ப
ஒழிவில்பழி பிறர்க்கடங்கா மையினுறினும்
 ஊழியத்தி னுயர்வாஞ் சற்றே
அழிவுறமன் னவர்துயிலி னிந்நெறிமுன்
 மேற்கொண்டான் அசுவத் தாமன். (கக)

---

[1] மக்கள் உறங்குங்காலத்துச் செய்யப்படும் தீச் செயலாகிய களவைக்குறித்துப் பெரியோர்கள் இஃது இழிந்தசெயலென்ப. பழியிலர்-ஒருகுற்றமும் இழையாதவர்; நம்பிக்கையுடையார். பரிபவம்-மானக்கேடு. பண்பு - ஆண்மைக்குணம். பிறர்க்கடங்காமை - சுதந்திரம். அதன்கண் ஒழிவில் பழியுறுதல் களவுத்தொழிலாலும். அங்ஙனமாயினும் களவுத்தொழில், பிறர்க்கு அடங்கிநடக்கும் ஊழியத்தினும் சற்று உயர்வுடையதென்பதாம். மன்னவர்-உபபாண்டவரும் திருஷ்டத்யும்னனுமாவர்.

பாரதப்போர் முடிவெய்தியபின்னர்க் கண்ணபிரான் பாண்டவரை வேறோரிடத்திற் கொணர்ந்துவைத்திருத்தலை அறியாது, காழக இல்லத்துட்புக்குக் கவலைபற்றுத் துயின்ற உபபாண்டவர்களையும் திருஷ்டத்யும்னனையும் பாண்டவரெனக்கொண்டு, அசுவத்தாமன் கொலைப்படுத்தசெய்தி பாரதத்துட் காண்க.

கொலையினும் களவு குறைந்த குற்றமுடையதென்பது குறிப்பிற் புலப்படுத்தவாறு.

ஆசிரியவிருத்தம்.

88. நீருற நனைந்து சிதைந்ததாய்க் காவி
னெறிகுடை யோசைதோற் றுதாய்
நேருறக் காணு நெறியிடை யகன்று
நிலவுமத் துளையில தாகிக்
கூருவ ரித்துக் குறைதலாற் [1]சுடுமண்
குன்றிவீழ் நிலையதாய் [2]மகளிர்
பார்வைசார் விலதாய்ச் சுவர்த்தல மமையிற்
பயனுறுந் தொடங்குமிவ் வினையே. (கஉ)

[சுவரைத் தடவி] எப்பொழுதும் கதிரவன்கிரணம் படுத லானும், மழைநீரால் நனைதலானும், வன்மையற்று உப் பரிக்கப்பட்டுள்ளது இச் சுவர்த்தலம். இங்குப் பெருச்சாளி தோண்டிய துளையும் உள்ளது. ஆ! இவ் வேலைப்பயன் நிறைவேறிற்று. இதுவே, முருகக்கடவுளாற் செய்யப்பட்ட களவுநூல்களை வாழ்க்கைக்குரியனவாக மேற்கொண்ட கள வாசிரியர்களின் முதலாவது சித்தி இலக்கணம். இத் தொழிற் றொடக்கத்தில் இப்பொழுது எத்தகைய துளை வழியைச் செய்வேன். இவ்விடயத்தில் பகவானுகிய கனக சக்தியினுல் துளைவழியுண்டாக்கும் உபாயம் நான்கு வகை யாகக் கூறப்பட்டன. அவை:—சுடு செங்கலாயின் ஒவ் வொன்ருகப்பெயர்த்தல், சுடப்படாத செங்கலாயின் கல்லு

---

[1] சுடுமண்-செங்கல்.

[2] பெண்கள் அச்சமியல்பினராதலின் விரைவில் விழித்து அலறுவர் என்பதுபற்றி அன்னூர்பார்வை சார்விலதாய் என்று கூறப்பட்டது.

தல், மண்ணுருவாயின் நனைத்தல், மாவுருவாயின் அறுத்தல் என்பனவாம். ஆதலின், சுடுசெங்கல்லையுடைய இவ்விடத்து ஒவ்வொன்றாகப் பெயர்த்தலே செய்யத்தக்கது. அதன்கண்,

ஆசிரியவிருத்தம்.

89. [1]மலர்தருதா மரைவடிவம் வருமிரவி
யுருவமிள மதியம் வாவி
அலர்தரல்சு வத்திகமா மில்லுருவ
நிறைகுடம்போ லமைத லர்மால்
தலமுறைவோர் பிற்றைநாட் கண்டுபெரும்
வியப்பெய்தத் தக்க வென்றன்
வலமுறுசிற் பத்தொழிலின் மாட்சியினை
யெவ்விடத்து வயங்கச் செய்வேன். (௧௯)

ஆதலின், சுடுசெங்கலாணுகிய இவ்விடத்து நிறைகுடவுருவமேசெய்யத்தக்கதாகும். அதனை உண்டாக்குவேன்.

---

[1] கன்னத்துளை தாமரைமலர்போறல்முதலிய எழுவடிவங்களை உடையதாகும்:—(1) அலர்ந்த தாமரைமலர்போலச் சிறிது நீண்டும் குறுகியும் உள்ள வட்டவடிவம்: (2) சூரியமண்டலம்போலச் சமமான வட்டவடிவம். (3) பாதிமதி போன்ற வடிவம்: (4) அகன்ற சுவரிற் கிணறுபோற் குடையப்படும் வடிவம். (5) இயல்பாகவே வன்மையற்றசுவரில் வேண்டுமளவு அகற்சியாக அகழ்தலிற் பரந்த வடிவம். அலர்தரல்-பரந்தவடிவம். (6) சுவத்திகமாம் இல்லுருவம்:— இது சதுரமாகவும் நான்குபக்கங்களிலும் நடுவண் காதுபோற் சிறிது நீண்டுள்ள இல்லத்தின்வடிவம். (7) நிறைகுடம்போற் கழுத்துச் சிறுத்து மற்றைய பாகம் பெருத்துள்ள வடிவம். அமைதல்லாம் என்னும் பயனிலைக்குக் கன்னத்துளையென்பது எழுவாயாகும்.

ஆசிரியவிருத்தம்.

90\. முன்னைநா ளிரவிற் [1]பேர்த்த
வுவருற்இ முதுமை சாலத்
துன்னிய பிறசு வர்க்கட்
டுளைபல வுருவிற் செய்தேன்
உன்னுமச் செயலைப் பக்க
லுறுபவர் காலை நோக்கி
மன்னுமென் றிறத்தின் மாண்பும்
பிழைகளும் வயங்கச் சொன்னர். (கச)

வேண்டுவன அருளும் சிவகுமாரனும் முதலாசிரியனு மாகிய [2]முருகப்பிரானுக்கு வணக்கம். அந்தணரிடத்து அன்புமிக்க தேவனும், தேவர்களால் வணங்கத்தக்கவனு மாகிய கனகசக்தியாசிரியனுக்கு வணக்கம்; பாற்கரநந்தியாசிரி யனுக்கு வணக்கம்; என்னை முதன்மாணுக்கனுகக் கொண்ட யோகாசாரியனுக்கு வணக்கம். என்மாட்டு உவகைமிக்க அந்த யோகாசாரியன் பச்சிலைமையை எனக்கு உதவினன்.

ஆசிரியவிருத்தம்.

91\. அன்னபச் சிலைநன் மையை
யணியுடற் பூச லான்மற்
றென்னையிக் காவ லாளர்
காண்கில ரிதனுன் மற்றோர்

[1] பேர்த்த - பெயர்க்கப்பட்ட. பேர்த்த சுவர், உவருற்று முதுமை சாலத்துன்னிய பிற சுவர் என இயைக்க.

[2] முருகப்பிரான் களவுநூலாக்கிய முதலாசிரியராவர். கனக சக்தி முதலிய மூவரும் வழிநூலாசிரியராவர்.

மூன்னூற வென்பா லுய்க்கு
முனைப்படை யுடலின் கண்ணே
துன்னுபு புண்செ யாது
தொலையுமா லினிமற் றென்னே. (கரு)

[அங்ஙனம் பூசிக்கொள்கின்றான்.] ஆ! ஆ! எனது அளவு நூல் எடுத்துவர மறந்துவிட்டேனே. [நினைவுகூர்ந்து] ஆம். இப் பூணூல் அளவுநூலாக உபயோகப்படும். இம் முப்புரி நூலோ, பொதுவாக அந்தணர்களுக்குச் சிறந்த பெரிய உபகாரப்பொருளாகும்; என்போன்றார்க்கோ மிகச்சிறந்த உபகரணமாகும். எங்ஙனமெனின்,

வெண்பா.

92. சொன்முப் புரிநூல் சுவரிற் றுளையளக்கப்
பொன்மங் கலவணியின் பூட்டகற்ற-வன்மைத்தாழ்
தெற்றுங் கதவு திறக்க வகிதேனைஞ்
சுற்றவர்க்குக் கட்டவுத வும். (கசு)

அளந்துகொண்டு துளையுண்டாக்கத் தொடங்குகின்றேன். [அங்ஙனம் அளந்துபார்த்து] இத் துளைக்கண் ஒரு செங்கல் மாத்திரம் எஞ்சியிருக்கின்றது. ஆ! ஆ! பாம்பு கடித்து விட்டதே! [பூணூலால் விரலைக்கட்டி விடவேகத்தை அவிசயிக்கின்றான். சிகிற்சைசெய்து] சுகமுற்றேன். [மீண்டும் துளைத்து உள்ளே பார்த்து] ஓ! விளக்கு ஒளிர்கின்றது. அதனாலன்றோ,

கலிவிருத்தம்.

93. [1] துளைவழி நிலமுறீஇச் சுவணப் பொன்மையுற்
றொளிநெறி விலகிருள் சூழ வோங்கிய

---

[1] துளை வழியாக நிலத்தைப் பொருந்தித் தங்கம்போற் பொன்மைநிறம் உற்று இருள் பக்கத்தே சூழ ஓங்கிய

தெளிவிளக் குறுசிகை யுரைகல் சேர்பொனின்
மிளிர்தரு கோடுபோல் விளங்கு கின்றதால். (கள)

[மீண்டும் துளைவேலையைச் செய்துமுடித்து] இத் துளை வேலை நிறைவேறிற்று. நிற்க; உட்புகுகின்றேன்; அன்றி விரைந்து புகுதல்வேண்டா. புருடப்பிரதிமையை உள்ளே செலுத்துகின்றேன். [அங்ஙனம்செய்து] ஓ! ஒருவருமில்லை. முருகப்பிரானுக்கு வணக்கம். [உட்புகுந்து பார்த்து] ஆ! இரண்டு ஆண்மக்கள் துயில்கின்றனர். நிற்க. தற்காப்பின் பொருட்டு வாயில்வழியைத் திறந்துவைக்கின்றேன். என் செய்வேன்! இல்லம் சிதைவுற்றிருத்தலாற் கதவுமிக ஓசை யிடுகின்றது. ஆதலின் நீரைத் தேடுவேன். எங்கே நீர் இருக்கும்? [இங்கும் அங்கும் பார்த்து நீரைக்கொணர்ந்து தெளித் துக்கொண்டு ஐயத்தோடு] இது வேண்டா. நிலத்தில் வீழ் கின்ற நீரே ஓசையை உண்டாக்கும். இதுநிற்க; [பின்புறமாக மெல்லத் தாங்கிக் கதவைத்திறந்து] கதவு திறந்ததாக இருக்க. இப்பொழுதுஇவ்விருவரும் பொய்யுறக்கங்கொள்கின்றனரா? அன்றிஉண்மையாகவே உறங்குகின்றனரா? என்றுஇங்ஙனம் ஆராய்கின்றேன். [அச்சுறுத்திச் சோதித்து] ஆ! இவ்விரு வரும் உண்மையாகவே துயில்கின்றனர். ஆதலானன்றே;

ஆசிரியவிருத்தம்.

94. ஈங்கிவ ருயிர்ப்பு வெளிச்செலீஇக் கால
மிடைக்கனைத் தையுற விலதால்
ஊங்கிரு குறக்க ணிமைப்பில மூடி
யுள்ளசை வின்றியுற் றனவால்

---

விளக்கென்க. அவ்விளக்கின்சுடர் இருளின் நடுவில் கரிய உரைகல் லில் உரைத்த பொற்கோடுபோல் விளங்கித்தோன்றுகின்ற தென்ப தாம்.

தாங்கிய [1]உடனு மவயவங் குலைந்து
தளர்வுறீஇச் சயனத்தி னளவின்
ஒங்கிய துறக்கம் பொய்ம்மையேல் விளக்கி
னெளியெதிர் முகமுறப் பொருமால். (கஅ)

[நாற்புறமும் பார்த்து] ஓ! ஈதென்னை? [2]மத்தளம்! இது முரசு; இது படகம்; இது யாழ்; இவை குழல்கள்; இவை நாட்டியத்திற்கு உபயோகமான பிரதிமைகள்; இது நாட்டிய ஆசிரியன் இல்லமோ? சாருதத்தனில்லமென்னும் துணிவால் உட்புகுந்தேன். [3]இவன் உண்மையாகவே வறியவனே? அன்றி அரசர்பயத்தாலாவது கள்வர்பயத்தாலாவதுபொருளை நிலத்திற் புதைத்துவைத்திருக்கின்றான்கொல்! [4]அங்ஙனமாயின் சருவிலகனுகிய எனக்கும் புதைபொருளென்பதொன்று உண்டோ? நிற்க. [5]வித்துக்களை அபிமந்திரித்து இறைக்கின்றேன். [அங்ஙனம் செய்து] சிதறிக்கிடக்கும் வித்துக்கள் ஓரிடத்திலும் திரண்டு சேர்ந்தில. ஓ! உண்மையாகவே இவன் வறியவன். நிற்க. [6]போகின்றேன்.

---

[1] உடலும் ஓங்கியது என்க. ஓங்குதல்-மிகுதல்.

[2] மத்தளம், வீணை முதலிய கருவிகள் சாருதத்தனில்லத்திருத்தல் அவன் செல்வனுயுள்ளகாலத்தில் அவற்றின்பயனை நன்கு அனுபவித்தவனென்பதைப் புலப்படுத்தும்.

[3] இவன் - சாருதத்தன்.

[4] ஆற்றல்மிக்க யான் நிலத்திற் புதைந்துகிடக்கும்பொருளை எங்ஙனமாயினும் எளிதிற்கொள்வேன் என்பது கருத்து.

[5] மந்திரித்து இறைக்கப்பட்ட வித்துக்கள் பொருள்புதைந்த நிலத்தில் திரண்டு ஒன்றுசேரும் என்பது கொள்கை.

[6] என் அவா நிறைவேருமையால் வெளிச்செல்கின்றேன் என்பதாம்.

விதூடகன்— [கனவுகண்டு பேசுகின்றான்.] ஓ! நண்பரீர்! கன்னத்துளைபோலக் காணப்படுகின்றது. கள்வனைப்போலக் காண்கின்றேன். ஆதலின், இப் பொற்பணிமுடிப்பை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள்.

சருவிலகன்—இம் மனிதன் இவ் வில்லத்தினுள்ளே புகுந்த என்னைக் கள்வனென்றுணர்ந்து வறியவனாயினேன் என்று பரிகாசஞ்செய்கின்றான்போலும்! ஆதலின், இவனைக் கொன்றுவிடலாமா? அன்றி அச்சத்தாற் கனவிற் கள்வனைக் கண்டு பேசுகின்றான்கொல்! [பார்த்து] ஓ! நீராடுங்கால் உடுக்கப்படும் பழந்துகிலான் மறைக்கப்பட்டு விளக்கொளியான் ஒளிர்கின்ற இஃது உண்மையாகவேபொற்பணிமுடிப்பாகும். நிற்க; பெற்றுக்கொள்கின்றேன். அன்றி என்னோடு ஒத்த வறுமையாளனாகிய நற்குலத்துதித்த மனிதனைத் துன்புறுத்தல் தக்கதன்று. ஆதலின், செல்கின்றேன்.

விதூடகன்—ஓ! நண்பரே! இப் பொற்பணிமுடிப்பைப் பெற்றுக்கொள்ளவில்லையாயின் பசுவினதும், அந்தணனதுமாகிய விருப்பங்களைத் தடுத்தலான் உண்டாகும் பாவத்துக்கு ஆளாவீர்.

சருவிலகன்—மாண்புமிக்க ஆவின் விருப்பமும் அந்தணன் விருப்பமும் கடக்கத்தகாதவை. ஆதலின், பெற்றுக்கொள்வேன். அன்றி விளக்கு ஒளிர்கின்றதே. விளக்கை அவித்தற்குரிய தீவிழ் விட்டில் என்னிடம் உள்ளது. அதனைச் செலுத்துகின்றேன். அதற்குரிய இடமும் காலமும் இவையே. யான் விட்ட இவ் விட்டில் இவ் விளக்கின் மேற்பாகத்திற் பலவாறு சுழன்றுதிரிதற்கே செல்கின்றது.

பத்திரபீடமென்னும் பெயரையுடைய இவ்விட்டில், தன் சிறகுகளால் இவ் விளக்கை அவித்துவிட்டது. இஃது உண்டாக்கிய இருள் மிகவும் இழிந்ததே. அன்றி, யானும் நம் பிராமணகுலத்துக்கு இருளுண்டாக்கிவிட்டேன். இஃது இழிவே. யானே நான்குமறைகளையும் உணர்ந்து இரத்தவில் விருப்பமில்லாத ஓரந்தணன்புதல்வனாகிய சருவிலகன். மதனிகையென்னும் கணிகையின் நிமித்தம் செய்யத்தகாதனவற்றை மேற்கொண்டேன். இப்பொழுது அந்தணன் வேண்டுகோளை நிறைவேற்றுகின்றேன். [என்று பெற்றுக் கொள்ளத் தொடங்குகின்ருன்]

விதூடகன்—ஓ! நண்பரே! நம் நுனிக்கை குளிர்ந்திருக்கின்றதே.

சருவிலகன்—ஆ! மறந்துவிட்டேன்! [1]தண்ணீரில் தோய்ந்தமையால் என் நுனிக்கை குளிர்ச்சியுடையதாயிற்று. சூடாதற்பொருட்டுக் கைகளைக் கக்கங்களில் வைக்கின்றேன். [நிருத்தத்தால் இடக்கையைச் சூடுசெய்து [2]பெற்றுக்கொள்கின்ருன்.]

விதூடகன்—பெற்றுக்கொண்டனையா?

சருவிலகன்—இவ் வந்தணனது வேண்டுகோள் கடக்கத் தக்கதன்று. ஆதலிற் பேற்றுக்கோண்டேன்.

விதூடகன்—இப்பொழுது விலைப்பொருளை விற்றுவிட்ட வணிகனைப்போல் யான் சுகமாகத் தூங்குவேன்.

---

[1] கதவின் அடிப்பாகம் ஒலிசெய்யாமையின்பொருட்டுத் தண்ணீரள்ளி நனைத்ததைக்குறித்துக் கூறினன்.

[2] பொற்பணிமுடிப்பைப் பெற்றுக்கொள்கின்ருன் என்று முடிக்க.

சருவிலகன்—மகாப்பிராமண! நூறு யாண்டு உறங்குவா யாக. அந்தோ! மதனிகை என்னும் கணிகையின்பொருட்டு இங்ஙனம் பிராமணகுலத்தை நரகத்தில் வீழ்த்துகின்றேன். அன்றி [1]யானே வீழ்ந்தவனுகின்றேன்.

கலிவிருத்தம்.

95. [2]ஆண்மையின் றுணிவினை யடக்கி வாட்டுமிவ்
வேண்மைசா னல்குர விழிக்கத் தக்கதாம்
நாண்மிகு மிதனின்யா னன்றில் செய்கையைச்
சேண்மையிற் பழித்தலுஞ் செய்த லும்முளேன். ()

ஆதலின், மதனிகையை விலையிற்கோடற்கு வசந்த சேனையின் இல்லத்தைநோக்கிச் செல்லுகின்றேன். [சுற்றிப் பார்த்து] ஓ! பாதவொலிபோற் கேட்கப்படுகின்றதே? காவலர் வாராதிருக்கவேண்டும். நிற்க. தம்பம்போல அசைவற் றிருக்கின்றேன். அன்றிச் சருவிலகனுகிய என்னைக் காவ லாளர் என்செய்வர்? யானே,

---

[1] யான்செய்த தீமையின்பயனை யானே நுகரவல்லேன்; நம் குலத்தார்க்கு இஃது இழிவுசெய்யாதென்பதாம்.

[2] நல்லனவற்றின் மேற்கொள்ளத்தக்க ஆண்மையைக் களவுத் தொழிலாகிய தீயசெயலிற் பயன்படுத்தியமையால், அவ் வாண்மை யின்றுணிபை நல்குரவு அடக்கி வாட்டியதென்றான் என்க. நாண் மிகும் இதனின்-நாணத்தை மிகுவிக்கும் இந் நல்குரவினால். சேண் மையிற்பழித்தல் - தன்நிலைக்குச் சிறிதும் நெருங்கத்தகாதென்று பழித்தல். இத் தீத்தொழிலாகியகளவைப் பழித்தலோடு அதனையே மேற்கொள்ளவுஞ்செய்தேன் என்பதாம்.

ஆசிரியவிருத்தம்.

96. [1]பாய்தலிற் பூசை யோடலி னிரலை
பற்றுபு சிதைத்தலிற் பருந்து
வாய்மையிற் பொய்யிற் றுயில்பவ னிலையை
மதித்தலி ஞுயகி யூர்தல்
ஆய்பிற வுருவோ டுடல்கொளன் மாயை
யயன்மொழி யறிவின்வாக் கிறைவி
எய்விளக் கிரவி னுழைவழிப் பல்லி
யிருநிலத் தசுவநீர் நாவாய். (உ0)

இன்னும்,

ஆசிரியவிருத்தம்.

97. [2]ஓடலிற் பாம்பு நிற்பி
னுறுமலை சுழன்றி யாண்டும்
ஆடலிற் கலுழன் யாரு
மறிவுறா விடத்திற் றங்க

---

[1] பூசை - பூனை. இரலை - மான். அகி-பாம்பு. யானே பாய்தலிற் பூனையாகவும், துள்ளியோடுதலில் மானாகவும், பற்றிச் சிதைத்தலிற் பருந்தாகவும், துயில்பவன்நிலையை மோந்தறிதலில் நாயாகவும், ஊர்ந்துசெல்லுவதில் பாம்பாகவும், பிறவுருவங்களையும் உடல்களையும் கோடலில் மாயையாகவும், வேற்றுமொழியறிதலில் வாக்கிறைவியாகவும், இரவில் விளக்காகவும், குறுகியதுவாரத்திற் புகுந்துமறைதலில் பல்லியாகவும், நிலத்தில் விரைந்தோடுதலிற் குதிரையாகவும், நீரில் தோணியாகவும் உள்ளேன் என்பதாம்.

[2] இந் நிலையணுகிய என்னைக் காவலர் என்னசெய்வர் என்பதாம்.

நாடலின் முயலை யொப்பே
னண்ணிய பிறரைப் பற்றிக்
கோடலிற் செங்நா யஞ்சாக்
குணத்தினன் மடங்க லொப்பேன். (உக)

[வந்து]

இரதனிகை—அந்தோ! அந்தோ! வீட்டு வெளிவாயிற் றிண்ணையில் வருத்தமானகன் உறங்கினன். இவ்விடத்தில் அவன் காணப்பட்டிலன். நிற்க. ஐயர் மைத்திரேயரைக் கூவி அழைக்கின்றேன். [என்று சுற்றிவருகின்றாள்.]

சருவிலகன்—[இரதனிகையைக் கொல்லவிரும்புகின்றான். உற்றுநோக்கி] என்னே? பெண்பாலோ? நிற்க. போகின்றேன். [என்று போய்விடுகின்றான்.]

இரதனிகை--[அச்சத்தோடு சென்று] அந்தோ! அந்தோ! நம் இல்லத்திற் கன்னத்துளையுண்டாக்கிக் கள்வன் வெளிச் செல்கின்றான். நிற்க. மைத்திரேயரை அடைந்து எழுப்பு கின்றேன். [விதூடகன்பக்கல் எய்தி] ஐய! மைத்திரேயரே! எழுந்திருங்கள். எழுந்திருங்கள். நம் வீட்டிற் கன்னத் துளையுண்டாக்கிக் கள்வன் வெளிச்செல்கின்றான்.

விதூடகன்—[எழுந்து] ஆ! [1]இழிந்தவளே! "[2]கள்வனைச் செய்து கன்னத்துளைவழிச் சென்றது" என்று சொல் கின்றாய்?

---

[1] உறக்கத்திற்குத் தடைசெய்தமையால் உண்டாகிய சினத்தால் இங்ஙனம் கூறினன்.

[2] இங்ஙனம் மாற்றிக்கூறியது இரதனிகை வீணாக அஞ்சுகின்றாளென்று அவளைப் பரிகசிக்க என்க.

இரதனிகை—வீரைரே! பரிகாசம்வேண்டா! இக் கன்னத்துளையைப் பார்க்கவில்லையோ?

விதூடகன்—ஆ! இழிந்தவளே! என்னசொல்கின்றாய்? "இரண்டாவது வாயில்வழிபோலக் கன்னவழி திறக்கப்பட்டது" என்றன்றே சொல்லல்வேண்டும். ஓ! நண்பராகிய சாருதத்தரே! எழுந்திருங்கள். எழுந்திருங்கள். நம் இல்லத்திற் கன்னமிட்டுக் கள்வன் வெளிச்சென்றுவிட்டான்.

சாருதத்தன்—நிற்க. ஓ! பரிகாசம்வேண்டா.

விதூடகன்—ஓ! பரிகாசமன்று. நீங்கள் பாருங்கள்.

சாருதத்தன்—எவ்விடத்தில்.

விதூடகன்—ஓ! இதுவே.

சாருதத்தன்— [பார்த்து] ஆ! ஆ! இக் கன்னத்துளை அழகாக இருக்கின்றது.

கலிவிருத்தம்.

98. [1]மேலிடந் தொடங்கியிச் சுடுமண் வீழ்த்தலிற்
சூலிது நடுவகல் சுருக்க மாந்தலை
சாலுநற் றகவிலர் சார்பி ளுல்வெரீஇ
யேலுமா ணில்லநெஞ் சிடிந்த தொக்குமால். (உஉ)

இத்தொழிற்கண்ணும் பயிற்சிவன்மை இருக்கின்றதா?

---

[1] சுடுமண்-செங்கல். சூலுதல்-குடைதல். இது இக் கன்னத்துளை. நடுவண் அகற்சியையும் தலைக்கண் சுருக்கத்தையும் உடையதென்றதனால் இக் கன்னத்துளை குடவுருவமுடைத்தென்பது போதரும். தகவிலர்-கள்வர். இக் கன்னத்துளை கள்வரின் சார்பினால் அஞ்சி ஓர் அழகிய பெரிய இல்லம் நெஞ்சு பிளக்கப்பெற்றாற்போலக் காணப்படுகின்றதென்பதாம். தீயவர்சார்பை அஞ்சி நல்லோர் இதயம் பிளவுறும் என்னும் தொனிப்பொருள் தோன்றலும் உணர்க.

விதூடகன்—ஓ! நண்பரே! இக் கன்னத்துளேயானது, புதிதாக வந்த கள்வன், அன்றி இத் தொழிற்பயிற்சியில் விருப்பமுள்ள மற்றொருவன்: ஆகிய இவ்விருவருள் ஒருவனாற் செய்யப்பட்டதாகும். இன்றேல் இவ்-உச்சயினீநகரத்தில் எவன் நம் இல்லத்தின் செல்வமில்லைமையை அறியாமலிருக்கின்றான்?

சாருதத்தன்—

ஆசிரியவிருத்தம்.

99. வேற்றுநாட் டிருந்து தொழில்பயில் பவனென்
வீட்டினிற் றுளைவழி புரிந்தோன்
போற்றுமப் பொருளின் டின்மையா லினிது
புரிதுயி லுடையெமை யுணரான்
தேற்றமாய் முன்னர் நமதுய ரில்லச்
செழுமையைக் கண்டவா வுற்றின்
டாற்றுமித் துளையை நெடிதுருன் றெய்த்தே
யவாவறப் பின்னர்விட் டகன்றான். (உகூ)

அதன்பின் இவ்-ஏழைக்கள்வன், தன் நண்பர்களுக்கு "[1]வைசியகுமாரனில்லத்துட் புகுந்து யான் ஒன்றையும் அடைந்திலேன்" என்று கூறுவானேன்?

விதூடகன்—ஓ! ஆகூழில்லாத அக்கள்வனையேகுறித்து எதற்காக வருந்துகின்றீர்கள்? அவன் இது பெரியவீடு என்று நினைந்து இங்கிருந்து இரத்தினஅணிகலன்களையாவது

---

[1] சாருதத்தன் வாணிகத்தொழிலுடையனாதலின் "வைசியகுமாரன்" என்று கூறப்பட்டான்.

பொற்பணிமுடிப்பையாவது எடுத்துச்செல்லலாம் என்று துணிந்துவந்தவன். [நினைவுற்றுத் துன்பத்தோடு தனக்குள்] அப் பொற்பணிமுடிப்பு எங்குள்ளது? [மீண்டும் நினைவுற்று வெளிப்படையாக] ஓ! நண்பரே! நீங்கள் எப்பொழுதும் "மைத்திரேயன் மூர்க்கன்; அறிவில்லாதவன்" என்று கூறுவதுண்டு. அப் பொற்பணிமுடிப்பை உங்கள்கையில் தந்துவிட்டமையால் யான் நன்கு ஆராய்ந்துசெய்தவனாகின்றேன். இன்றேல் அந்த இழிந்த கள்வனாற் கவரப்பட்டிருக்கும்.

சாருதத்தன்—பரிகாசம்வேண்டா.

விதூடகன்—ஓ! யான் அறிவிலனாயினும் பரிகாசஞ் செய்தற்குரிய இடம் காலம் இவை அறியாதவனா?

சாருதத்தன்—எப்பொழுது தந்தாய்?

விதூடகன்—ஓ! யான் தங்களைநோக்கி "உங்கள் நுனிக்கை குளிர்ந்திருக்கின்றது" என்று கூறியபொழுது தந்தேன்.

சாருதத்தன்— ஒருவாறு [1] இங்ஙனமும் இருக்கலாம். [நாற்புறமும் பார்த்து [2] மகிழ்ச்சியோடு] நண்ப! தெய்வவசத்தால் நினக்கு உவப்பாவதொன்றைத் தெரிவிக்கின்றேன்.

---

[1] கை கால் கழுவியமையால் நுனிக்கை குளிர்ந்திருத்தல் கூடும் என்பதாம்.

[2] தன்வீட்டிற்புக்க கள்வனும் பொருட்பயனுடையனாய்ச் சென்றான் என்பதுபற்றிய மகிழ்ச்சி.

விதூடகன்—கள்வன் கவர்ந்திலனே?

சாருதத்தன்—கவர்ந்துவிட்டான்.

விதூடகன்—அங்ஙனமாயின் உவத்தல் எதுபற்றி?

சாருதத்தன்-இக்கள்வன் பயனெய்தினான்என்பதுபற்றி.

விதூடகன்—இப் பொற்பணிமுடிப்பு அடைக்கலப் பொருளன்றோ!

சாருதத்தன் — அடைக்கலப்பொருளா? [மயக்கமுறு கின்றான்.]

விதூடகன்—நீங்கள் தேறுதலெய்துங்கள். அடைக்க லப்பொருளைக் கள்வன் கவரின் நீங்கள் எதற்காக மயங்கு கின்றீர்கள்?

சாருதத்தன்— [தெளிவுற்று] நண்ப!

வெண்பா.

100. [1]எல்லோரு மென்னை யெளிமைப் படுத்துரைப்பர்
அல்லா தெவனுண்மை யாதரிப்பான்--பொல்லாவிவ்
வையந் தனிலாண்மை மாற்றும் வறுமைபிறர்
ஐய முறற்கேது வாம். (௨௪)

அந்தோ! கலிவிருத்தம்.

101. அருளறு தீயவூ ழைய கோவெனைப்
பொருளற வன்பினிற் பொருந்த லன்றியென்
மருளறு மொழுக்கமும் [2]மலின மாகவின்
றிருளுறச் செய்யுமா லீதென் வண்ணமே. (௨௫)

---

[1] உண்மை - கள்வர்கவர்ந்தது. பொருளோடு ஆண்மையும் அழிந்தமையால் அந்நிலை உலகத்துள்ளாரெல்லோரும் ஐயுறுதற்கு இடனும் என்பதாம்.

[2] மலினமாக - அழுக்குற.

விதூடகன்—கொடுத்தவன் யார்? வாங்கினவன் யார்? சான்று யார்? என்று யானே மறுத்துவிடுவேன்.

சாருதத்தன்—யான் இப்பொழுது பொய்யுரைப்பேனு?

கலிவிருத்தம்.

102. ஏற்றநல் லடைக்கல மினிதின் [1]ஈதரா
வேற்றிடத் திரப்பினுன் மீண்டு மீட்டுவல்
போற்றுநல் லொழுக்கமாம் பொருட்குக் கேட்டினை
ஆற்றுமிப் பொய்யுரை யாடல் கில்லெனே. (உசூ)

இரதனிகை—அடைக்கலப்பொருளிழந்தமையால் பெருமாட்டியாகிய [2]தூதையின்பாற்சென்று தெரிவிப்பேன். [என்று போய்விடுகின்றுள்.]

[சாருதத்தன்மனைவி சேடியோடு வருகின்றுள்.]

மனைவி— [பரபரப்போடு] ஏடி! பெருமானுகிய நம் தலைவர், மைத்திரேயரோடு உண்மையாகவே உடற்றீங்கின்றி யிருக்கின்றுரா?

சேடி—பெருமாட்டி! உண்மையாகவே தீங்கின்றியிருக்கின்றுர். ஆனுல், விலைமகளுடைய அணிகலன்கள்மாத்திரம் கள்வர்களாற் கவரப்பட்டன.

[மனைவி மயக்கமுறுதலை அவிநயஞ்செய்கின்றுள்.]

சேடி—எம்பெருமாட்டியாகிய தூதை ஆறுதலடைய வேண்டும்.

தூதை—[தெளிவுற்று] சேடி! "பெருமான் உடற்றீங்கின்றியுள்ளார்" என்று கூறுகின்றுய்? அவ் வண்ணல் இப்

[1] ஈதரா-திருப்பிக்கொடுக்க. [2] தூதை-சாருதத்தன்மனைவி.

பொழுது உடற்றீங்குற்றுளாரெனினும் நன்றே. ஒழுக்கங் கெடுதல் நன்றன்று. இப்பொழுது உச்சயினீநகரத்துள்ளார், ‘வறுமைமிகுதியால் பெருமான் சாருதத்தரே இத்தகைய தீச்செயலைச் செய்தவர்” என்று இங்ஙனம் கூறுவர். [மேலே பார்த்து நெட்டுயிர்ப்பெறிந்து] ஏ! பகவானுகிய விதியே! தாமரை யிலையில் வீழ்ந்த நீர்த்துளிகளைப்போல் சலிக்கின்ற வறுமை யாளரின் வினைப்பயன்களால் விளையாடுகின்றனை? தாய்வீட்டி லிருந்துபெற்ற இவ் விரத்தினமாலையொன்று என்பால் எஞ்சி யுள்ளது. இதனைப் பெருமான் சாருதத்தர் தம் பெருந் தன்மைக்குணத்தால் ஏற்றுக்கொள்ளார். சேடி! ஐயர் மைத் திரேயரைக் கூப்பிடு.

சேடி—எம்பெருமாட்டியின் கட்டளையின்வண்ணம் செய்வேன். [விதூடகன்பக்கல் எய்தி] ஐய! மைத்திரேயரே! தூதையம்மையார் நும்மை அழைக்கின்றார்கள்.

விதூடகன்—அவ் வம்மையார் யாங்குள்ளார்?

சேடி—இதோ இருக்கின்றார்கள். செல்லுங்கள்.

விதூடகன்—[அணிமைக்கண் எய்தி] தங்களுக்கு மங்கல முண்டாகுக.

தூதை—ஐய! வணங்குகின்றேன். ஐய! [1]கிழக்குநோக் கிய முகமுடையராயிருங்கள்.

விதூடகன்—அம்மா! யான் இதோ கிழக்குநோக்கிய முகமுடையனாயிருக்கின்றேன்.

---

[1] தானம்பெறுவோர் கிழக்குமுகமாக இருக்கவேண்டுமென்பது பற்றிக் கூறப்பட்டது.

தூதை—ஐய! இதனைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

விதூடகன்—ஈதென்ன?

தூதை—யானே, "இரத்தினசட்டி" என்னும் நோன் பினை மேற்கொண்டிருந்தேன். அந்நோன்பில், தத்தம் பொரு ளளவிற்கேற்ப அந்தணர்க்குத் தானஞ்செய்தல்வேண்டும். அவ்வமயத்தில் அவ்வாறு அந்தணர்க்குத் தானஞ்செய்தி லேன். ஆதலின், அதன்பொருட்டு இவ் விரத்தினமாலையைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

விதூடகன்—[பெற்றுக்கொண்டு] மங்கல முண்டாக. போகின்றேன். அன்புமிக்க நண்பருக்கு அறிவிப்பேன்.

தூதை—ஐய! மைத்திரேயரே! [1] என்னை நாணமுடையவ ளாகச்செய்தல்வேண்டா. [என்று போய்விடுகின்றாள்.]

விதூடகன்—[வியப்போடு] ஆ! இவ்வம்மையின் பெருந் தன்மையென்னே!

சாருதத்தன்—ஆ! மைத்திரேயன் காலந்தாழ்க்கின்றான். தைரியமின்மையால் [2] செய்யத்தகாததைச் செய்யாதிருத்தல் வேண்டும். மைத்திரேய! மைத்திரேய!

விதூடகன்—[அணிமைக்கணெய்தி] இதோ இருக்கின் றேன். இதனைப்பெற்றுக்கொள்ளுங்கள். [இரத்தினமாலையைக் காட்டுகின்றான்.]

சாருதத்தன்—ஈதென்னை!

---

[1] பெரும் வள்ளலாகிய சாருதத்தர்முன்னிலையில் இச் சிறு கொடையைத் தெரிவித்தல் எனக்கு நாணம் தருவதாம் என்றாள்.

[2] தன் நிலையைத் தெரிவித்துத் தேவியின்பால் யாதும் கேளா திருத்தல்வேண்டும் என்பதாம்.

விதூடகன்—ஓ! தாங்கள் பண்பொத்த மனைவியை எய்தியதன் பயன் இதுவாகும்.

சாருதத்தன்—ஓ! பார்ப்பனி என்மாட்டு அருள்புரிகின்றாள். அந்தோ! [1] இப்பொழுதுதான் வறியவனாகின்றேன்.

வெண்பா.

103. போகூழாற் றன்பாற் பொருணீங்கப் பொற்றொடிதன்
ஆகூழ்ப் பொருளா லருள்பெறுவோன்—வாகாரும்
ஆடவனே யாயினும்பெண் ணாகும் பயனுறலால்
ஆடவனே யப்பெணத னால். (உஎ)

அன்றி யான் வறியவனல்லன்; யானே,

வெண்பா.

104. [2] எற்றவள மோர்ந்தொழுகு மில்லுடையே னின்பதுன்பம்
ஆற்றுமக நட்பினைநின் னுலடைந்தேன்—மாற்றமிலா
வாய்மை யமைந்துளது வாயாவா விம்மூன்றும்
தீமைதரு நல்குரவிற் சேர்ந்து. (உஅ)

மைத்திரேய! இரத்தினமாலையை எடுத்துக்கொண்டு வசந்தசேனையின்பக்கலிற் செல். "நீ அடைக்கலமாகவைத்த பொற்பணி முடிப்பை நம்பிக்கைகாரணமாக நம்மதெனக்

---

[1] பெண்மகளால் அருள்செய்யப்படல் தாழ்வுதரும் என்பது கருத்து.

[2] எற்றவளம் ஓர்ந்து ஒழுகும் இல் என்றது, "மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான் - வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" என்னும் திருக்குறளை நினைவுறுத்துகின்றது.

கொண்டு [1]சூதில் தோற்றுவிட்டேன். அதன்பொருட்டு இவ் விரத்தினமாலையைப் பெற்றுக்கொள்ளல்வேண்டும்" என்னும் இச் சொற்களை யான்கூறியனவாக அவள்பாற் கூறல் வேண்டும்.

விதூடகன்—நம்மால் விற்றுண்ணப்படாததும், அனுபவிக்கப்படாததும், சிறுவிலையுடையதும், கள்வனாற் கவரப்பட்டதுமாகிய அவ்வணிகலத்தின் நிமித்தம் கடல்வலயத்திற் சிறந்த இவ் விரத்தினமாலையைக் கொடுத்தலாகாது.

சாருதத்தன்—நண்ப! இங்ஙனம் கூறவேண்டா.

கலிவிருத்தம்.

105. [2]நம்முழை யுயர்குண நன்று பற்றுபு
செம்மையி னவளணி சேமஞ் செய்தனள்
அம்மவவ் விலையிலா வுறுதி யன்பிற்கே
இம்மணி மாலையா மிசைவி னீதலே. (உசு)

ஆதலின், நண்ப! என் உடம்பைத் தொட்டுச் சூளுறல் செய்கின்றேன்: இதனை அவளிடம் சேர்ப்பியாமல் இங்கு வரக்கூடாது. வருத்தமானக!

---

[1] கள்வனாற் கவரப்பட்டதென்றுகூறினால் இதனைப் பெற்றுக் கொள்ளமாட்டாள் என்று சூதினால் தோற்றுவிட்டேனென்று தெரிவிக்கச்சொல்லினான் என்பதாம்.

[2] இவ் விரத்தினமாலையை யான் அவளுக்குக் கொடுத்தல் அவள் நம்மாட்டுவைத்த அன்புரிமையோடுகூடிய நம்பிக்கைக்கு விலையாகவேயாம்; அவள் அடைக்கலமாகவைத்திழந்த பொற்பணிகளின்பொருட்டன்று.

கலிவிருத்தம்.

106. [1]விளங்குமிச் சுடுமணல் விரைந்து சந்தியை
உளங்கொள மறைவுற வுஞற்றி யன்னதாற்
றுளங்குமிவ் வுலகினர் சொல்லுங் கூர்பழிக்
களங்கம்யான் காப்பது கைவி டாவணம். (௩௦)

நண்ப! மைத்திரேய! நீ கிளர்ச்சிகுன்றுமற் கூறல்வேண்டும்.

விதூடகன்—ஓ! வறியவன் எங்ஙனம் எளிமையின்றிக் கூறுவான்?

சாருதத்தன்—நண்ப! யான் வறியவனல்லன்; எனக்கோ, [“எற்றவள மேர்ந்தொழுகும்” (செய்யுள் 28) இது முதலியவற்றை மீண்டும் படிக்கின்றான்.] ஆதலின், நீ செல்வாயாக. யானும் தூய்மைசெய்துகொண்டு சந்தியை உபாசிக்கின்றேன்.

[எல்லோரும் போய்விடுகின்றனர்.]

“கன்னமிடல்” என்னும்

மூன்றாம் அங்கம் முற்றிற்று.

---

[1] சந்தி - கன்னத்துளை. உஞற்றி - செய்க; இகரவீற்று வியங்கோள். களங்கத்தை யான் காப்பது கைவிடாவண்ணம் விரைந்து சந்தியை மறைவுறச்செய்க என்று முடிக்க.

# [1] நான்காம் அங்கம்.

## சருவிலகன் பேறு.

[அதன்பின் [2]சேடி வருகின்ருள்.]

சேடி—பெருமாட்டியாகிய வசந்தசேனையின்பக்கல் எய்தும்வண்ணம் தாய் எனக்குக் கட்டளையிட்டாள். இவ்வம்மை [3]ஓவியப்பலகையிலூன்றிய கண்களையுடையளாய் மதனிகையோடு ஏதோவொன்றைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கின்ருள். ஆதலின், அவள்பக்கல் செல்கின்றேன். [என்று சுற்றி வருகின்ருள்.]

[அதன்பின் முன்னர்க் குறிப்பிட்டவண்ணம் வசந்தசேனையும் மதனிகையும் வருகின்றனர்.]

வசந்தசேனை—ஏடி! மதனிகே! மாட்சிமிக்க சாருதத்தரது இவ் வோவியவுருவம் நன்கு [4]ஒத்திருக்கின்றதா?

---

1 இதன்கண், வசந்தசேனையின்பால், மதனிகையின் விலைப்பொருட்டுக் களவிற்கொணர்ந்த பொன்மயமான அணிகலன்களைச் சருவிலகன் சேர்த்தலும், இழந்த அடைக்கலப்பொருணிமித்தம் சாருதத்தன் உய்த்த இரத்தினமாலையை மைத்திரேயன்சேர்த்தலும் கூறப்படும்.

2 வசந்தசேனையின்தாயால் அனுப்பப்பட்டவள்.

3 வசந்தசேனை ஓர் ஓவியப்பலகையில் சாருதத்தரது உருவத்தைத் தானேவரைந்து காதன்மிகுதியால் அதனையேஉற்றுநோக்கியவண்ணமாக இருக்கின்ருளென்பதாம்.

4 அவர் உருவத்தை ஒத்திருக்கின்றதா என்பது கருத்து.

மதனிகை—நன்கு ஒத்திருக்கின்றது?

வசந்தசேனை—நீ [1] எங்ஙனம் அறிகின்றாய்?

மதனிகை—எம்பெருமாட்டியின் அன்புநீரொழுக்கும் [2] கண்கள் ஊன்றிப் பதிந்திருக்கின்றமையால்.

வசந்தசேனை—எடி! மதனிகே! பரத்தையர்சேரியி னிருத்தலால் உண்டாகிய கண்ணோட்டத்தால் இங்ஙனம் கூறுகின்றாய்கொல்?

மதனிகை— அம்மா! பரத்தையர்சேரியினிருப்போர் எல்லோருமே பொய்ம்மையான கண்ணோட்டமுடையவர்க ளாகவா இருக்கின்றனர்?

வசந்தசேனை—எடி! [3] பற்பல ஆடவர்களின்கூட்டத் தால் விலைமகளிர் பொய்ம்மையான கண்ணோட்டமுடையவர்க ளாகின்றனர்.

---

[1] நீ காமதேவாயதனம் என்னும் உய்யானத்திற் பொதுப் பார்வையாற் கண்ட சாருதத்தரது உருவத்தை முழுதும் ஒத்திருப்ப தாக எப்படிக்கூறமுடியும் என்பதாம்.

[2] சாருதத்தரது உருவத்தினின்றும் இவ் வோவியஉருவம் சிறிதுவேறுபடினும் நின்கண்கள் ஊன்றிநோக்காவாகலின், இது கொண்டே துணியலானேன் என்றாள் என்க.

[3] உருவம், சீலம், குலம், பருவம், வேடம் முதலியவற்றால் ஆடவர் பலவேறுவகைப்படுவர். அவரவர்க்கு ஏற்ப நடக்கவேண்டி யது விலைமகளிர் இயல்பாதலின் பொய்ம்மையான கண்ணோட்ட முடையவராவரென்பதாம்.

மதனிகை—இவ் [1]வோவியத்தில் அம்மையின் கண்களும் நெஞ்சமும் இன்புறுகின்றனவே. அதற்குக் காரணம் என்ன? தங்களையே கேட்கின்றேன்.

வசந்தசேனை—ஏடி! [2]தோழிமார் பரிகாசஞ்செய்தலைத் தடுத்தற்கே [3]இங்ஙனம் கூறினேன்.

மதனிகை—அம்மா! இங்ஙனம் உள்ளக்கிடக்கையை மறைத்தல் தக்கதன்று. [4]பெண்மக்கள் தோழிமார்களின் மனத்தைப் பின்பற்றிநடப்பவர்களாவர்.

முதற்சேடி—[அணிமையிலெய்தி] பெருமாட்டீ! "திரையான் மறைவுசெய்யப்பட்ட வண்டி ஒன்று வாயிலின்கண் நிறுத்தப்பட்டிருக்கின்றது. ஆதலின், செல்" என்று அன்னை கட்டளையிடுகின்ருள்.

வசந்தசேனை—ஏடி! பெருமான் சாருதத்தர் என்னை அழைத்துச்செல்வார்கொல்?

---

[1] அன்பன் உருவொப்பின்றேல் கண்ணும் மனமும் ஊன்றி நோக்கற்குக் காரணமின்று என்பது கருத்து.

[2] நட்புப்பற்றிச் சேடியரைத் தோழியரென்று உபசரித்தாள்.

[3] இதனுல் மதனிகையின்பேச்சு வசந்தசேனைக்கு உடன்பாடு என்பதாம்.

[4] ஒரு தலைவி தலைவன்பால் தானே சேறல் எளிமையையும் நாணின்மையையும் தருதலானும், இருமுதுகுரவர்களிடத்தும் தானே தன் காதலைத்தெரிவித்துக்கொள்ள இயலாமையானும், இவ்வெல்லாவற்றையும் தோழிமார்முகமாகவே நிறைவேற்றிக்கொள்ள வேண்டுதலின், பெண்மக்கள் அத் தோழிமார்மனத்தைப் பின்பற்றி நடக்கவேண்டியவராவர் என்பதாம்.

சேடி—அம்மா! எவர் வண்டியோடு பதினுயிரம்பொன் விலையுள்ள அணிகலன்களை அனுப்பியிருக்கின்ருரோ அவர் நின்னை அழைத்துச்செல்வார்.

வசந்தசேனை—அவர் யாவர்?

சேடி—அவர்தாம் மன்னவன்மைத்துனராகிய சகாரர் என்னும் சமத்தானகர்.

வசந்தசேனை—[சினத்தோடு] போ. மீண்டும் இங்ஙனம் கூறவேண்டா.

சேடி—எம்பெருமாட்டி! அருள்செய்க. அருள்செய்க. தூதாக அனுப்பப்பட்டவளாகின்றேன்.

வசந்தசேனை—யான் தூதுகுறித்தே சினக்கின்றேன்.

சேடி—ஆயின், அன்னையின்பால் எவ்வாறுதெரிவித்துக் கொள்வேன்?

வசந்தசேனை—"யான் உயிரோடிருக்கவிரும்பின் [1]இவ்வாறு மீண்டும் அன்னை எனக்குக் கட்டளையிடலாகாது" என்று இவ்வாறு தெரிவித்துக்கொள்.

சேடி—பெருமாட்டி விரும்பியவண்ணமே. [என்று போய்விடுகின்ருள்.]

---

[1] சகாரன்பாற் செல்லும்படி அன்னை இனிக் கட்டளையிட லாகாது என்பதாம்.

[வந்து]

சருவிலகன்—

கலிவிருத்தம்.

107. [1]இரவினுக் குலகுரை பழியை யீந்தெனை
விரவிய துயிலையும் வென்று காவலர்க்
கரியனு யிருள்புல ரமய மாதவன்
வரவொளி மழுங்கிய மதியம் போன்றனன். (க)

இன்னும்,

ஆசிரியவிருத்தம்.

108. [2]எதிலர் சிலவ ரோடு மென்னையைய மின்றி நோக்கக்
காதரத் திருப்பேன் பக்கல் கடிதுதஞ் செயலிற் செல்லத்
தீதுசா லுளமன் னுரைத் தேர்தர வெருவிப் பற்றும்
பேதுறு மொருவன் றன்பாற் பிழைபல வுண்மை யாலே.()

யான் மதனிகையின் நிமித்தம் இவ் வன்செயலை மேற்கொண்டேன்.

---

[1] பழியை ஈதல் - தான் கள்வனுகி உலகுக்குக் கேடுசெய்தற் பொருட்டு இரவு இடந்தரலானும். ஒளிமழுங்கியமதியம்போறல் - பகற்காலத்தில் தன்தொழில்வன்மை செல்லாமையானும். ஈந்து, வென்று, அரியனுய், மதியம்போன்றனன் என முடிக்க.

[2] எதிலர் - அயலார். ஓடும் என்னை என்க; பெயரெச்சம். ஓடுதல் தன் களவுத்தொழினிலைகுறித்து நிகழ்வதாம். காதரம் - அச்சம். அஞ்சியிருக்கும் என்பால் சிலர் தம்செயல்குறித்துப்போதர. தீதுசால் உள்ளம் - குற்றம் நிறைந்த என்மனம். தேர்தர-உண்மை யாராய. ஒருவன் தன்பாற் பலபிழையுடையனுயின் எவரைக்கண் டாலும் கலக்கம் எய்துவன் என்பதாம். பேது - மனக்கலக்கம்.

ஆசிரியவிருத்தம்.

109. [1]வினையாளர்க் கிடும்பணியை விளம்புமொரு
மனிதனிலங் கண்டு மீண்டேன்
மனையாளுந் தலைமையொரு பெண்பாற்கண்
டவளில்ல மருவா துற்றேன்
துனையாளுங் காவலரென் பக்கலுற
மனைவெளியிற் றூண்போ னின்றேன்
இனையாதே யின்னபல வினைத்தொடக்காற்
பகல்போல விரவைச் செய்தேன். (௩)

வசந்தசேனை—எடி! இவ் வோவியப்பலகையை என் படுக்கையில்வைத்துவிட்டுச் சிவிறியை எடுத்துக்கொண்டு விரைவில் வா.

மதனிகை--பெருமாட்டியின் கட்டளைப்படியே. [என்று பலகையை எடுத்துக்கொண்டு போய்விடுகின்றாள்]

சருவிலகன்—இது வசந்தசேனையின் இல்லம். ஆதலின், உட்புகுகின்றேன். [புகுந்து] மதனிகையை எங்கேகாண்பேன்?

[அதன்பின் சிவிறியைக் கையிலேந்தி மதனிகை வருகின்றாள்.]

சருவிலகன்—[பார்த்து] ஆ! இவள் மதனிகை!

---

[1] இலம் - இல்லம். மீடற்குக்காரணம் அவ்வில்லத் தலைவன் பணியாளரோடு பேசிக்கொண்டு விழித்திருத்தல்பற்றியாம். மற்றோரில்லத்தில் பெண்பாலாரேயுள்ளமையால் அன்னார்அச்சமும் அதனால் சிறுதுயிலும் விரைந்துவிழித்தலும் ஊத்துக்கூவுதலும் உடையராதலின், ஆங்குப் புகுதலையும் ஒழிந்தேன் என்பதாம். துனைதல் - விரைவு. இன்னோரன்ன பலசெயல்களின் முயன்று இளைப்பாறுதலின்றி அலைந்தமையால் இராப்பொழுதைப் பகல்போலச்செய்தேனென்றான் என்க. இனைதல் - சலித்தல்.

கட்டளைக்கலித்துறை.

110. காணு முருக்கொ ளிரதியை யொப்பக் கவினுமிவள்
பேணுங் குணங்க ணிறைவான் மதனனும் பேணநின்ருள்
[1]நாணு மெனதகங் காமாக் கினியி னனிவெதும்பும்
பூணு நறுஞ்சந் தனம்போற் குளிரப் பொருந்தினளே. (ச)

மதனிகே!

மதனிகை—[பார்த்து] ஆச்சரியம்! ஆ! சருவிலகனு? சருவிலக! நின்வரவு நல்லதாக. நீ எவ்விடத்துச் சென்றிருந்தாய்?

சருவிலகன்—சொல்லுவேன்.

[என்று ஒருவரையொருவர் காதலோடு நோக்குகின்றனர்.]

வசந்தசேனை—[2]மதனிகை தாழ்க்கின்ருள். ஆதலின், அவள் எவ்விடத்துச் சென்றிருப்பாள்? [சாளரத்தின்வழி நோக்கி] ஈதென்ன? இவள் யாரோ ஓராடவனேடு அளவளாவிக்கொண்டிருக்கின்ருள். மிக்க அன்புநிரம்பிய கண்களால் இமைப்பின்றிப் பருகுகின்றவள்போலப் பார்க்கின்ருள். இதனல், இம்மதனிகையை அடிமைத்தொழிலினின்றும் விடுவிக்க இம்மனிதன் விரும்புகின்ருன் என்று உய்த்துணர்கின்றேன். ஆதலின், இன்புறுக. யாருக்கும் இன்பம் குறைவுறல்வேண்டா. அழைப்பேனல்லேன்.

மதனிகை—சருவிலக! சொல்லு.

---

[1] காமாக்கினியி னனிவெதும்பும் அகம், நாணும் எனது அகம் என இயைக்க.

[2] இதுமுதல் இவ்வங்கத்தின் உக-ஆம் செய்யுள்வரையுள்ள வசந்தசேனையின் கூற்றுக்கள், அவள் தனக்குள் கூறியனவாகக் காணப்படுகின்றன. முதனூலில் அங்ஙனம் குறிக்கப்படவில்லை.

[சருவிலகன் அச்சத்தோடு திசைகளைப் பார்க்கின்றான்.]

மதனிகை—சருவிலக! ஈதென்னே? அச்சமுள்ளவனைப் போற் காணப்படுகின்றாய்?

சருவிலகன்—நின்பாற் சிறிது இரகசியம் கூறுவேன். ஆகலின், இது யாருமில்லாத தனியிடந்தானே?

மதனிகை—ஆம்.

வசந்தசேனை—இது மிக்க இரகசியமோ; ஆதலின் யான் கேட்கமாட்டேன்.

சருவிலகன்—மதனிகே! வசந்தசேனை, விலையாகப் பொருள்பெற்றுக்கொண்டு நின்னை விடுவாள்கொல்?

வசந்தசேனை—என்னைப்பற்றியசெய்தியோ! ஆயின் இச் சாளரத்தின்பின்னே என் உடலை மறைத்துக்கொண்டு கேட்கின்றேன்.

மதனிகை—சருவிலக! பெருமாட்டியின்பால் இதனை முன்னமே யான் கூறியதுண்டு. பின்னர் அவ்வம்மை "யான் கருதுவேனாயின் விலைப்பொருளின்றியே ஏவலாளர்களெல்லோரையும் அடிமையினின்றும் விலக்கிவிடுவேன்" என்று கூறினள். ஆனால், சருவிலக! என்னை வசந்தசேனையினிடத்திருந்து அடிமையை விலக்குதற்குரிய அவ்வளவுசெல்வம் நினக்கு எவ்வாறுகிடைத்தது.

சருவிலகன்— நேரிசைவெண்பா.

111. நல்குரவு பற்ற நனிவாடி நின்பொருட்டுப்
புல்லவுறுங் காதலாற் போதருவேன்—மெல்லியலாய்
இன்றிரவில் யார்க்கு மியலா வருஞ்செயலை
நன்று புரிந்தேன் நயந்து. (ரு)

வசந்தசேனை—இவன் உருவத்தால் விரும்பத்தக்கவன்; அருங்கொடுஞ்செயலால் அஞ்சி வெறுக்கத்தக்கவன்.

மதனிகை—சருவிலக! பழஞ்சோற்றளவு பயன்தரும் பெண் காரணமாக இரண்டும் ஐயத்தின்பாலுள்ளன.

சருவிலகன்—யாது? யாது?

மதனிகை—உடலும், ஒழுக்கமும்.

சருவிலகன்—அறிவிலாய்! துணிந்துபுரியுஞ்செயலின் கண்ணே திருமகள் வீற்றிருக்கின்றாள்.

மதனிகை--சருவிலக! நின்னை ஒருவரும் காணாமையால் நின் ஒழுக்கம் கண்டிக்கப்பட்டிலது. ஆதலின், அருங்கொடுஞ்செயல்செய்த நீ என் நிமித்தம் மிகவும் மாறானசெயலைச் செய்யவில்லையே?

சருவிலகன்—

ஆசிரியவிருத்தம்.

112. பூங்கொடிபோ லணிகலன்கள் புனைமகளிர்
தமைக்கவரப் பொருந்தேன் வேள்விக்
கோங்குறுமப் பெரும்பொருளு மோதுமறை
யவர்பொருளு முள்ளே னன்னை
தாங்குமடித் தலமகவைத் தனங்குறித்தெத்
துன்புறினுஞ் சாரேன் கொள்ளப்
பாங்குளவென் மதிநாளுங் களவுறினும்
விதிவிலக்கைப் பகுக்கு மாலோ. (கூ)

ஆதலின், வசந்தசேனையின்பாற் பின்வருமாறு தெரிவிப்பாயாக.

கலிவிருத்தம்.

113. [1]உன்னுடை னுறுப்பள வோர்ந்து செய்தெனத்
தன்னுமிவ் வணிகலன் றேகை யன்புசால்
என்னுழை நண்பினு லேற்று நின்னெழில்
பொன்னுற மறைவினிற் புனைதி யாலென. (எ)

மதனிகை—சருவிலக! அணிகலன்களோ மறைவிற் புனையத்தக்கவை; இவளோ விலைமகள்; இவ்விரண்டும் பொருத்தமில்லை. ஆதலிற் கொடு; இவ்வணிகலன்களைப் பார்க்கின்றேன்.

சருவிலகன்—இவைதாம் அணிகலன்கள். [என்று அச்சத்தோடு கொடுக்கின்றான்.]

மதனிகை—[பார்த்து] இவ்வணிகலன்கள் முன்னர்ப் பார்க்கப்பட்டவைபோல் உள்ளன. ஆதலின், இவ்வணிகலன்களை எவ்விடத்து அடைந்தாய்? சொல்லு.

சருவிலகன்—மதனிகே! இதனல் உனக்கென்ன? பெற்றுக்கொள்.

மதனிகை—[சினத்தோடு] என்மாட்டு நம்பிக்கையில்லையாயின் எதற்காக என்னைப் பொருள்கொடுத்துப் பெறுகின்றாய்?

சருவிலகன்—ஏடி! [2]காலையில் வைசியர்தெருவில் "வாணிகத்தொழிலையுடைய சாருதத்தரில்லத்திற் களவு நிகழ்ந்தது" என்று சொல்லக்கேட்டேன்.

[வசந்தசேனையும் மதனிகையும் மயக்கமுறுகின்றனர்.]

---

1 தோகை-விளி. புனைதியாலெனத்தெரிவிப்பாயாகஎனமுடிக்க. பொன்னுற - விளக்கமுற. மறைவினில்-யாரும் அறியாவண்ணம்.

2 காலையில் என்றதனல் இரவில் பலவாறு அலைந்து திரிந்து ஏதோ ஒருவீட்டிற் புகுந்தேனதலின் இன்னவீடு என்று அறிந்திலன்; பின்னர் நகரத்துமக்களால் தெரிந்துளேன் என்றான் என்பதாம்.

சருவிலகன்—மதனிகே! தெளிக. ஈதென்ன? இப்பொழுது நீ,

கலிவிருத்தம்.

114. அடிமையாந் தொழினிலை யடையப் பெற்றுடல்
கொடியவெந் துயரினாற் குலைய நெஞ்சமுள்
ஒடிதர விழித்துணை யுலைய [1] இத்தொழில்
விடல்குறித் தஞ்சுதி விருப்பஞ் செய்திலை. (அ)

மதனிகை—[தெளிந்து] கொடுஞ்செயலாள! என்நிமித்தம் இத் தீயசெயலைச்செய்த நீ அச் சாருதத்தரில்லத்தில் ஒருவரையும் கொன்றுவிடவில்லையே? உடற்கு ஊறுசெய்யவும் இல்லையே?

சருவிலகன்—மதனிகே! அச்சமுற்றவனையும் உறங்குகின்றவனையும் சருவிலகன் துன்புறுத்துவதில்லை; ஆதலின், யான் ஒருவரையும் கொல்லவுமில்லை; ஊறுசெய்யவுமில்லை.

மதனிகை—உண்மையே?

சருவிலகன்—உண்மை.

வசந்தசேனை—[தெளிவெய்தி] ஆ! மீண்டும் உயிர் பிழைத்தவளாகின்றேன்.

மதனிகை—நன்று.

சருவிலகன்—[[2] பொறாமையோடு] மதனிகே! நன்றென்று கூறியதென்னை?

---

[1] இத்தொழில்-இவ்வடிமைத்தொழில். என்மாட்டு விருப்பஞ் செய்திலை யென்க.

[2] பிறர்நலத்தில் இவள் பற்றுவைத்திருக்கின்றாள் என்பதுபற்றிப் பொறாமையுடையனாயினான் என்பதாம்.

ஆசிரியவிருத்தம்.

115. ஒழுக்கமுற் றுடைய முன்னோ
ருதித்தநற் குலத்தில் வந்தும்
இழுக்குறு செயலை நின்பா
லேய்மனத் திசைவாற் செய்தேன்
பழுக்குமன் புரையெற் கிங்கே
பற்றினை பிறனைக் காமம்
விழுக்குண மொழித்த தேனு
மானத்தை விடுவே னல்லேன். (கூ)

[கருத்திற் குறித்து]

நேரிசைவெண்பா.

116. [1]இவ்வுலகிற் பல்பொருளா மின்பக் கனிநிறைந்த
செவ்வியோ ராய செழுமரங்கள்—வெளவும்
பொருண்மகளி ரென்னும்பல் புள்ளுண்ணச் சால
மருவும் வெறுமையினை மற்று. (கo)

117. [2]காதல் விறகிற் கலவிக் கொழுந்தொளிரப்
போதுமிக் காமப் புணரெரியில்—வீதவிலா
எமமுஞ் செய்ய விளமையு மாடவரால்
ஓமஞ் செயப்படுமா லூங்கு. (கக)

---

[1] பொருளாசையால் ஓராடவனிடத்தினின்றும் மற்றோராடவனையடையும் விலைமகளிர்க்கு ஓரிடத்தும் நிலையில்லையென்பது இவ் வுருவகத்தாற் கொள்ளப்படும் குறிப்புப்பொருளாகும்.

[2] காமத்தின்பயன் கலவியாதலின் அது தீக்கொழுந்தாகவும், அத்தீக்கொழுந்துக்குக் காதல் காரணமாக இருத்தலின் அது விறகாகவும், உள்ளினும் உள்ளத்தை வெதுப்புதலிற் காமம் நெருப்பாகவும், இளமையும் பொருளும் அவிப்பொருளாகவும், அவற்றின்அழிவு வேள்வியினையாகவும் உருவகமாக்கப்பட்டன.

வசந்தசேனை—[புன்முறுவலோடு] ஆ! இவன் காரணமின்றிப் பதறுகின்றான்.

சருவிலகன்—எவ்வாற்றானும்,

கலிவிருத்தம்.

118. மண்ணியன் மகளிரு மலர்ம டந்தையும்
[1]பெண்ணராச் செலவினைப் பெரிது மொத்தலால்
நண்ணிதி மகளிரை நம்பு மாந்தரை
எண்ணுமா லறிவில ரென்றெ னெஞ்சமே. (கஉ)

119. காமுறு மனிதனைக் [2]கடைப்ப டுத்தலான்
ஏமுறு மகளிர்பா லிச்சை முற்கொளல்
தோமுறு நயந்தவர்த் தோய்த லின்பமாம்
தாமுற விலரெனிற் றவிர்த னன்றரோ. (கரு)

பின்வரும் இது நன்குணர்ந்து கூறப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

120. [3]ஏமமா மேது வானே யின்புறல் வருந்த லோடு
தாமுற வின்றி நம்புந் தன்மையா டவரைச் செய்வா

---

[1] பெண்ணரவின்செலவு மிக்க விரைவுடையது; அதனால் அது வெளிப்பட்ட மறுகணத்திலே மறையும் இயல்பினதாம். அதுபோலத் திரு ஓரிடத்தும் நிலைத்திராது; மகளிருள்ளமும் அங்ஙனமே.

[2] கடைப்படுத்தலான் இச்சைகொளல்தோமுறுமெனமுடிக்க.

[3] ஏமம் - பொன். இன்புறல் வருந்தல்: உம்மைத்தொகை. அவை முறையே பொன் கைவரப்பெறுதலானும் பெருமையானும் நிகழ்வன. ஆடவரை நம்புந்தன்மையைத் தாம் எய்துதலின்றித் தம்மை அவர் நம்புமாறுசெய்பவராமென்க.

ராமவர்நிலைமையோர்ந்தே யருங்குலவொழுக்கம்பூண்டோர்
[1]ஈமமார் மாலை போல விழித்தனர் கணிகை மாரை. (கச)

இன்னும்,

ஆசிரியவிருத்தம்.

121. [2]நெடுங்கடற் றிரையை யொப்ப
நிலையிலா மனத்த ரந்தி
படும்புய னிரையிற் சற்றே
பதியிரா கத்தர் காமத்
திடும்பொருள் பறிக்கு மாத
ரீகையின் மகனைச் செம்பஞ்
சொடுங்கிய சாறு கொண்டே
யொழித்தல்போ லொழிப்ப ரம்மா. (கரு)

[3]மகளிரோ நிலையற்றவர்.

---

[1] "ஈமஞ்சேர் மாலை போல விழித்திடப் பட்ட தன்றே" (சீவகசிந்தாமணி - நாமகளிலம்பகம். செய்யுள் 181.) என்பது ஈண்டு நினைவுறத்தக்கது.

[2] மனத்தர் இராகத்தராகிய மாதரென்க. அந்திக்காலத்து மேகம் சூரியகிரணம் முழுதும் மறையுங்காறும் செந்நிறம்பெற்றுப் பின் ஒழிதல்போலப் பொருளுள்ளவரையும் ஒருவன்பால் அன்பு வைத்துப் பொருளற்றவிடத்து அன்பு ஒழியப்பெறுவர் என்பதாம். ஈகை-பொருள். செம்பஞ்சின்சாற்றைப் பிழிந்துகொண்டு சக்கையை விலக்குதல்போலப் பொருளாளரின் பொருளைக் கவர்ந்துகொண்டு அவரை ஒழித்துவிடுவர் என்பதாம்.

[3] மகளிரென்பது ஈண்டுப் பரத்தையரைக் குறிக்கும்.

கலிவிருத்தம்.

122. ஒருத்தனை யகத்துளே யுன்னிப் பின்னர்மற்
றொருத்தனைக் கண்களா லூன்றி யீர்ப்பர்வே
றொருத்தனை வீரிய மொழுக்கு விப்பர்பின்
ஒருத்தனை யுடலினாற் றழுவி யூக்குவார். (கசு)

ஒரு புலவர்கூற்றுப் பின்வருமாறு உள்ளது.

கலிவிருத்தம்.

123. தாமரை மலைநுனி தன்னிற் றோன்றலில்
காமரு பரிநுகங் கழுதை தாங்குறா
வேமுற வித்திய [1]யவநெல் லாதலில்
தோமுறு கணிகையர் தூய ரல்லரால். (கஎ)

ஆ! ஆ! [2]கொடியவனாகிய சாருதத்த! இத்தகைய நீ வாழ்தல் அரிது. [என்று சில அடி நடக்கின்றான்]

மதனிகை—[ஆடைநுனியைப்பற்றி] பொருத்தமின்றிப் புகல்வோய்! [3]நினைக்கத்தகாதநிகழ்ச்சியிற் சினமுறுகின்றாய்.

சருவிலகன்—நினைக்கத்தகாததென்பதென்னை?

மதனிகை—இவ் வணிகலன்கள் பெருமாட்டியைச்சார்ந் தவை.

---

[1] யவம் - ஒருவகைத்தானியம். அதனை விதைத்தால் அது நெல்லாகாதென்பதாம்.

[2] மதனிகையின் அன்புக்கு உரியனாதல்பற்றிச் சாருதத்தனைக் கொன்றுவிடநினைந்து இவ்வாறு கூறினான்.

[3] என் தலைவியின் காதலன்மாட்டு எனக்கு எங்ஙனம் காதல் நிகழும்? என்பதாம்.

சருவிலகன்—அதனால் என்ன?

மதனிகை—அவ் வணிகலன்கள் அப்பெருமான்கையிற் கொடுக்கப்பட்டவை.

சருவிலகன்—எதற்காக?

மதனிகை—[செவியில்] [1] இவ்வண்ணம்.

சருவிலகன்—[நாணத்தோடு] ஆ! துன்பம்.

நேரிசைவெண்பா.

124. [2]வேனின் முதிர்வான் மிகவெதும்பி நன்னிழற்கா
வான கிளையெதனை யண்ணினேன்—வானமுற
நீண்ட வதனிலைக ணீங்கப் பறித்தனன்மற்
றூண்ட வறிவின்மை யான். (கஅ)

வசந்தசேனை—ஈதென்னே? இவனும் வருந்துகின்றான்: ஆதலின், இவன் உண்மையறியாமலே இங்ஙனம் செய்துவிட்டான்.

சருவிலகன்—மதனிகே! இப்பொழுது செயற்பாலது யாது?

மதனிகை—இவ்விடயத்தில் நீயே சதுரன்.

---

[1] வசந்தசேனைக்குச் சாருதத்தன்பாற் காதலுண்மை இரகசியமாகப் புலப்படுத்தவாறு.

[2] வெயிலின்கொடுமையால் வெதும்பி நிழலின்பொருட்டு எம்மரத்தை அடைந்தேனோ அம்மரத்தின் பசியஇலைகளை அறிவின்மையாற் பறித்தனன் என்னும் இதனால், காமத்தால் வெதும்பி அதுதணித்தற்குரிய நின்னைப்பெற வசந்தசேனையைப்புகலெய்தினேன். அங்ஙனம் எய்தப்பட்ட வசந்தசேனையின் அணிகலன்களையே களவு செய்தனன். இது அவளுக்கே தீங்கிழைத்ததாகும் என்பதாம்.

சருவிலகன்—இவ்விதமன்று. பார்.

நேரிசைவெண்பா.

125. [1] இம்மகளி ரன்றே யியற்கை யறிவாளர்
செம்மைதரு நூலின் றிறமோர்ந்தே—யம்மவோர்
ஆசிரியன் கற்பிக்க வாடவர்க ளவ்வழியே
மாசிரியக் கொள்வார் மதி. (கக)

மதனிகை—சருவிலக! என்சொல்லைக் கேட்பாயாயின், அப்பெருமானாகிய சாருதத்தரிடத்தே திருப்பிக்கொடுத்தல் வேண்டும்.

சருவிலகன்—மதனிகே! அச் சாருதத்தர் நீதிமன்றத்தில் என்னை அறிவிப்பாராயின்?

மதனிகை—திங்களஞ்செல்வனிடத்திருந்து வெயில் தோன்றுமா?

வசந்தசேனை—நன்று. மதனிகே! நன்று.

சருவிலகன்—மதனிகே!

கொச்சகக்கலிப்பா.

126. [2] இம்மாயத் தொழிற்கண்ணே
யிடுக்கணிலே னச்சமிலேன்
அம்மான்றன் குணம்பலநீ
யடுத்துரைத்த லெதன்பொருட்டோ

---

[1] செய்யத்தக்க காரியங்களைப்பற்றி ஆராய்தற்கு இயற்கையறிவே பயன்படும். மகளிர் இயற்கையறிவு நன்குவாய்ந்தவர். இயற்கையறிவு இல்வழிக் கல்வியறிவு பயன்படா தென்பதாம்.

[2] மாயத்தொழில் - வஞ்சகத்தொழிலாகிய களவு. இடுக்கண்- துன்பம்; கழிந்ததற்கு இரங்கல். அச்சம் - அரசதண்டத்தால் உண்டாவது. அம்மான் - அப்பெருமானாகிய சாருதத்தன். அவன் குணங்களைப் பாராட்டுதல்பற்றி யான் வருந்தேன் என்பதாம்.

கைம்மாறிவ் விழிவினையென்
கருத்துறநாண் டருவதுகொல்
எம்மானுங் காவினரை
யிறையீண்டுப் புரிவதெவன். (உ0)

[1]அங்ஙனமாயினும், இது [2]நியாயவிரோதம். வேறோர் உபாயத்தைக் கருதுக.

மதனிகை—பின்வரும் இது மற்றோர் உபாயம்.

வசந்தசேனை—வேறோர் உபாயமாவது யாதாகும்?

மதனிகை—அப் பெருமானது தூதனாய்ச்சென்று பெருமாட்டியின்பால் இவ்வணிகலன்களைக் கொடுப்பாயாக.

சருவிலகன்—இங்ஙனம் செய்யின் [3]என்னாகும்?

மதனிகை—நீயோ கள்வனாகமாட்டாய்; அப்பெருமானும் கடனில்லாதவராவர்; பெருமாட்டிக்கும் தன் அணிகலன்கள் தன்பால் வந்தனவாகும்.

---

கைமாறு-ஒழுக்கம் மாறுபடுதற்குக் காரணமான; கை-ஒழுக்கம். இழிவினை-களவு. எனக்கு நாணம் தருவதன்று. எம்மானும் காவினர்-எம்மையொத்த வஞ்சகர்கள். இறை-அரசன். புரிவது எவன்-செய்வதென்? முதலாவது நாம் பிடிபடமாட்டோம்; பிடிக்கப்படினும் குற்றத்தைக் கடப்பதற்குரிய உபாயம் அறிவோம் என்பதாம்.

[1] அணிகலன்களைச் சாருதத்தன்பால் திருப்பிக்கொடுப்பது என்றால் இயலுமாயினும்.

[2] செருக்குடையான் ஒருவன், யான் களவுசெய்தேன் என்று பொருளுடையான்பாற் கூறுதற்கு ஒருப்படான் என்பதாம்.

[3] என்ன பயன் உண்டாம்.

சருவிலகன்—[1]இது மிகவும் ஆராய்ச்சியில்லாத துணி செயலாகும்.

மதனிகை—எட! கொடுத்துவிடு. இன்றேல் [2]அக் கொடாமையே மிகவும் ஆராய்ச்சியில்லாதசெயலாகும்.

வசந்தசேனை—நன்று. மதனிகே! நன்று. [3]பணிப் பெண்ணும் நிலைமையில் இல்லாதவள்போற் கூறினாய்.

சருவிலகன்—

நேரிசைவெண்பா.

127. [4]நல்லாய்நின் சார்பா நலத்தால்யா னண்ணினேன்
எல்லா வழியானு மேற்றமதி—புல்லுநில
வேரார் மதிய மிழந்த விரவின்கண்
யாரே வழிகாட்டு வார். (உக)

மதனிகை—அங்ஙனமாயின், நீ இக் காமவேள்கோட்டத்திற் சிறிதுநேரம் நில். அதற்குள் பெருமாட்டியின்பால் நின்வரவைத் தெரிவிப்பேன்.

---

[1] இது-திருப்பிக்கொடுத்தல். களவுசெய்யும் துணிவினும் அப் பொருளைத் திருப்பிக்கொடுக்கும் துணிவு பெரிதாதலின், மிகவும் ஆராய்ச்சியில்லாத துணிசெயலாகும் என்றான் என்க.

[2] வசந்தசேனையின் அணிகலன் என்பதை யான் அறிந்தும் கொடுக்கப்படவில்லையாயின் அதுவே ஆராய்ச்சியில்லாதசெயலாகும் என்பதாம்.

[3] பணிப்பெண்ணும் நிலைமையில் உள்ளார்க்கு இத்தகைய விவேகம் இராதென்பதாம்.

[4] ஏற்றமதியை நின்சார்பால் நண்ணினேன் எனவும், நிலவு புல்லும் மதியம் இழந்த இரவில் வழிகாட்டுவார் நின்னையன்றி யாரே எனவும் இயைக்க. எதிர்காலநிகழ்ச்சியை அறியாமையின் தன் நிலை மதியிழந்த இரவுக்கு ஒப்பாயிற்று என்றான்.

சருவிலகன்—அவ்வண்ணமேயாக.

மதனிகை—[அணிமையில் எய்தி] அம்மா! சாருதத்தர் பக்கலிருந்து இவ் வந்தனர் வந்திருக்கின்றார்.

வசந்தசேனை—சேடி! அவரைச் சார்ந்தவரென்று நீ எங்ஙனம் அறிகின்றாய்!

மதனிகை—அம்மா! [1] நம்மைச் சார்ந்தவரையும் அறியாதிருப்பேனா?

வசந்தசேனை—[[2] தலையையசைத்து முறுவல்செய்து தனக்குள்] பொருத்தமானதே. [புறத்தே] உள்ளேவருக.

மதனிகை—அம்மையின் கட்டளைப்படியே. [பக்கல் வந்து] சருவிலகர் உள்ளேவருக.

சருவிலகன்—[[3] நாணத்தோடு பக்கலெய்தி] நினக்கு மங்கலமுண்டாக.

வசந்தசேனை—ஐய! வணங்குகின்றேன். ஐயன் இருக்க வேண்டும்.

சருவிலகன்—வாணிகத்தொழிலையுடைய சாருதத்தர், "இல்லம் சிதைவுற்றிருத்தலான் இப் பொற்பணிமுடிப்பைப்

---

[1] சாருதத்தரைச்சார்ந்தவர் வசந்தசேனையைச்சார்ந்தவ ராவர் என்பதுபற்றி நம்மைச் சார்ந்தவரை என்றாள்.

[2] மதனிகைக்குச் சமயத்திக்கு ஏற்பத் தோன்றிய அறிவுடைமைநோக்கித் தலையசைத்தும், அவ்விருவரும் பேசிய செய்திகளைத் தானுணர்ந்திருப்பதை அவள்அறிந்திலள் என்பதுபற்றிப் புன்முறுவல்செய்தும் தனக்குள் பேசுகின்றாள்.

[3] பொய்யுரைக்கநேர்ந்ததுபற்றி நாணமுடையனாகின்றான்.

பாதுகாக்கக்கூடவில்லை; ஆதலின் பெற்றுக்கொள்ளல்வேண்டும்" என்று நின்பால்தெரிவிக்கின்றார். [என்று [1]மதனிகையின்பால் அதனைச் சேர்த்துப் புறப்படமுயல்கின்றான்.]

வசந்தசேனை—ஐய! எனதுமாற்றத்தையும் அச் சாருதத்தர்பாற் சேர்த்தல்வேண்டும்.

சருவிலகன்—[தனக்குள்] எவன் அங்குச்செல்வான். [புறத்தே] மறுமொழியாவது யாது?

வசந்தசேனை—ஐயன் மதனிகையைப் பெற்றுக்கொள்ளல்வேண்டும்.

சருவிலகன்—அம்மா! எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

வசந்தசேனை—யான் தெரிந்திருக்கின்றேன்.

சருவிலகன்—எப்படி?

வசந்தசேனை—பெருமான் சாருதத்தர், "எவர் இவ்வணிகலன்களைச் சேர்ப்பவரோ அவர்க்கு நீ மதனிகையைக் கொடுத்தல்வேண்டும்" என்று என்பாற் கூறினர். ஆதலின், அவரே இவளை உமக்குக் கொடுக்கின்றார் என்று ஐயராகிய நீர் தெரிந்துகொள்ளல்வேண்டும்.

---

[1] வசந்தசேனை இஃது யாது? எவ்வாறுவந்தது? என்று ஆராயநினையின், அதுபற்றி நீண்டநேரம் தாழ்க்கநேரும்; அங்ஙனம் தாழ்ப்பின் யாராவது ஒருவன்வந்து நம் குற்றத்தை வெளிப்படுத்திவிடுவான் என்னும் அச்சத்தால் வசந்தசேனையின்பெருமைக்கு ஏற்ப நடந்து கொள்பவன்போல வெளிக்காட்டி அவள்பாற்கொடாமல் தனக்கு இயைந்த மதனிகையின்பால் அணிகலன்களைக் கொடுத்துவிட்டு விரைந்து புறப்பட முயல்கின்றான் என்பதாம்.

சருவிலகன்—[தனக்குள்] ஆ! இவள் என்னை அறிந்து விட்டாளே. [புறத்தே] நன்று. ஐய! சாருதத்தரே! நன்று.

நேரிசைவெண்பா.

128. [1]மக்கண் முயற்சி மறுவில் குணம்பலவான்
மிக்கநிலை யெய்தற்கே வேண்டுமால்—தக்க
குணமுடையா னல்கூர்ந்தா னென்னினு மொவ்வான்
பணமுடையா னின்றேலப் பண்பு. (உஉ)

இன்னும்,

129. நற்குணத்தா லெய்தாப் பொருளின்று நல்லோரம்
முற்குணத்தைச் சார முயல்வாரே—[2]அற்கிறைவன்
யார்க்கு மரிய [3]இறைதலைக்க ணெய்தினன்
ஓர்க்கு முயர்குணங்க ளூற்று. (உங)

வசந்தசேனை—யார் இங்கே வண்டிக்காரன்?

[வண்டியோடு வந்து]

சேடன்—வண்டி சித்தமாக இருக்கின்றது.

வசந்தசேனை—சேடி! மதனிகே! என்னை [4]நன்றாகப் பார். நின்னைக் கொடுத்துவிட்டேன். வண்டியில் ஏறு. என்னை நினைத்துக்கொள்வாயா?

---

[1] பலகுணங்களால் மேம்பட்டநிலையெய்தற்கே மக்களுக்கு முயற்சிவேண்டும். ஏகாரம் நிலையற்ற பொருளீட்டற்கு முயற்சி வேண்டாவென விலக்கிநின்றது. குணமுடையான் நல்கூர்ந்தானுயினும் அவனைஒவ்வான், அக்குணமில்லாத பணமுடையான் என்க.

[2] அற்கு - இரவுக்கு. இறைவன் - தலைவனாகிய சந்திரன்.

[3] இறை - சிவபெருமான்.

[4] என்பால் அன்புநிறைந்தபார்வையோடு என்றும் இருத்தல் வேண்டும் என்பதாம்.

மதனிகை—[[1]அழுகின்றவளாய்] எம் பெருமாட்டியால் விலக்கப்பட்டேன். [என்று அடிக்கண் வீழ்கின்றாள்.]

வசந்தசேனை—[2]நீயே இப்பொழுது வணக்கங்கோடற்கு உரியவளாகின்றாய். ஆதலின், செல்க. வண்டியின்கண் ஏறு. என்னை நினைத்துக்கொள்வாயா?

சருவிலகன்—நினக்கு மங்கலமுண்டாக. மதனிகே!

நேரிசைவெண்பா.

130. [3]ஆய குலமகள்போ லாடை புனைபெறு
தாயி னிவளினிது தந்தமையான்—மேயவிவள்
தன்னைநின் கண்குளிர நோக்கித் தலையாலே
மன்ன வடிவணங்கு வாய். (உச)

[என்று மதனிகையோடு வண்டியிலேறிச் செல்லுதற்கு முயல்கின்றான். திரைக்குப்பின்னே.]

[4]ஓ! இங்கே யார்? "'இடைச்சிறுவனாகிய இவ் ஆரியகன் அரசனாவான்' என்று சித்தன் கட்டளையிட்டதை நம்பி அச்சமுற்றுப்பாலகன் என்னும் மன்னன், இடைச்சேரியினின்றும்

---

[1] குணநலமிக்கார்க்குப் பணிசெய்தலினின்றும் பிரிவுநேர்தல் பற்றி அழுகின்றாள்.

[2] அந்தணனுக்கு உரியளானமையால் வணக்கங்கோடற் குரியள் நீயே என்றாள் என்க.

[3] குலமகளிர்க்கும் பணிப்பெண்களுக்கும் ஆடையுடுக்கும் முறையில் வேறுபாடுண்டு. முக்காடிட்டுக்கொள்ளுதல் குலமகளிர்க் குரியது.

[4] இஃது அரசன் மைத்துனனாகிய அதிகாரியைச் சார்ந்தோன் கூற்று.

அவ்வாரியகனைக் கொணர்ந்து சிறைசெய்தான். ஆதலின், நீவிரெல்லிரும் தத்தம் அதிகாரங்களில் விழிப்புடையவர்களாக இருத்தல்வேண்டும்" என்று ஓர் அதிகாரி கட்டளையிடுகின்றான்.

சருவிலகன்—[கேட்டு] ஈதென்ன? பாலகன் என்னும் அரசனால் என் அன்புமிக்க நண்பன் ஆரியகன் சிறைப்பட்டான்கொல்! இல்லாளனாகவுமிருக்கின்றேன். ஆ! [1] துன்பம்! அன்றி,

கலிவிருத்தம்.

131. [2] நண்பரும் பெண்டிரு நரர்க்கிப் பூமியில்
ஒண்பொரு ளென்பவா றுற்ற விப்பொழு
தென்படு மன்பினு லியைந்த நண்பனை
பெண்பலர் தம்மினும் பெரிய னுவனால். (உரு)

நிற்க. இறங்குகின்றேன். [என்று வண்டியிலிருந்து இறங்குகின்றான்.]

மதனிகை—[கண்ணீரோடு கைகூப்பி] இஃது இங்ஙனம் செயற்பாலதன்று. ஆதலின், பெருமான் என்னை இருமுது குரவர்பக்கலிற் சேர்ப்பித்தல்மாத்திரம் செய்தல்வேண்டும்.

சருவிலகன்—காதலி! நன்று. நன்று. என் நெஞ்சத்துக்கு ஒத்தவண்ணம் கூறினாய்! [சேடனைநோக்கி] நல்லோய்!

---

[1] ஒருபால் நண்பனுக்கு நேர்ந்த கேடுபற்றியும் மற்றொருபால் மனைவியின் பாதுகாப்புப்பற்றியும் துன்பம் உண்டாயிற்றென்பதாம்.

[2] இல்லாள் நலமுடையளாகவும் நண்பன் கேடுற்றுமிருப்பதால் இப்பொழுது மனைவியின்பாதுகாப்பை விடுத்து நண்பனையே காத்தல்வேண்டுமென்பது கருத்து.

[1]இரேபிலன் என்னும் வணிகனது இல்லத்தை அறிந்திருக்கின்றாயன்றோ?

சேடன்—ஆம்.

சருவிலகன்—ஆங்கு என் காதலியைச் சேர்க்க வேண்டும்.

சேடன்—ஐயன் கட்டளைப்படியே.

மதனிகை—பெருமான் சொல்லியவண்ணமே. எம் பெருமான் விழிப்புடையராக இருத்தல்வேண்டும். [என்று போய்விடுகின்றாள்.]

சருவிலகன்—யான்,

ஆசிரியவிருத்தம்.

132. மறமிகுதங் தோள்வலத்தாற் புகழெய்தி
மன்னவன்செய் மதிப்பின் மையான்
உறவகல வொழுகு[2]மவன் படைவீரர்
ஞாதிவிட ருவரைத் தூண்டி
அறமிகுசீர் [3]உதயணனை யௌகந்த
ராயணனு மமைச்சன் முன்னர்ச்
சிறைவிடுத்தாங் கெனதன்பன் ஆரியகன்
சிறைவீடச் செய்வ னின்றே. (உ௬)

---

[1] இவன் மூன்றும் அங்கத்தில் சாருதத்தனாற் பாராட்டப் பெற்றஇசைப்பாடகனுவான்.

[2] அவன் படைவீரர் - அவ்வரசனுடைய போர்வீரர்.

[3] உச்சயினிநகரத்துத் தலைவனாகிய சண்டமகாசேனனாற் சிறைப்படுத்தப்பட்ட வற்சநாட்டரசனாகிய உதயணன், யௌகந்தராயணன் என்னும் அமைச்சனால் விடுவிக்கப்பட்டவரலாறு ஈண்டு நினைக்கத்தக்கது.

இன்னும்,

ஆசிரியவிருத்தம்.

133. நன்னரில் செயலும் [1]தாமே
நண்ணிய பயமு முற்ற
ஒன்னலர் மதியந் தன்னை
யுரகம்வாய்க் கொள்ளு மாபோற்
பன்னுகா ரணமொன் றின்றிப்
[2]பற்றின ரன்பின் நட்டோன்
றன்னையான் கடிதிற் போந்தே
சார்சிறை விடுவிப் பேனால். (உஎ)

[என்று போய்விடுகின்றான்.]

[வந்து]

சேடி—பெருமாட்டி! தெய்வவயத்தால் நலம் மிக உடையவளாகின்றாய். பெருமான் சாருதத்தர்பக்கலிருந்து ஓர் அந்தணர் வந்திருக்கின்றார்.

வசந்தசேனை—ஆ! இந்நாள் மிக்க எழில்நலம் பொருந்தியதே. ஆதலின், சேடி! அவ்வந்தணரைப் [3]பந்துலனோடு உபசரித்தழைத்து உட்புகும்படிசெய்.

சேடி—பெருமாட்டியின் கட்டளைப்படியே. [என்று போகின்றாள்.]

---

[1] தாமே நண்ணிய பயம்-தம் குற்றத்தால் உலகத்தார்வெறுப்புக் காரணமாகத்தோன்றிய அச்சம்.

[2] அன்பின் நட்டோனைப் பற்றினர்; அவனைக் கடிதில் விடுவிப்பேன் என்றான் என்க.

[3] பந்துலன் இன்னனென்பதைப் பின்வரும் 28-வது செய்யுளிற் காண்க.

[விதூடகன் பந்துலனோடு வருகின்றான்.]

விதூடகன்—ஆ! ஆ! அரக்கர்தலைவனாகிய இராவணன் வருந்திச்செய்த தவத்தால் வெற்றியிற்பெற்ற புட்பகவிமானத்தில் ஏறிச்சென்றான். அந்தணனாகிய யானோ தவஞ்செய்தலாகிய வருத்தம் ஒருசிறிதுமின்றி ஆடவர்பெண்டிர் என்னும் பரிசனங்களோடு [1]செல்கின்றேன்.

சேடி—ஐயன் எங்களில்லத்தின வாயில்வழியைப் பார்க்கவேண்டும்.

விதூடகன்—[பார்த்து வியப்போடு] ஆ! வசந்தசேனையின் வீட்டு வெளிவாயில், கண்கவர் வனப்பு வாய்ந்தது: இவ்வாயில் நீரால்நனைத்து அலகிட்டு நிலமெல்லாம் மெழுக்கிடப்பட்டுள்ளது; நறுமணமுடைய பல்வகை மலர்க்குழுவான் வரைந்த கோலங்களையுடைய நிலப்பகுதியை உடையது; விட்புலஎல்லையைக் காணும் அவாவினான் மிகவுயர நிமிர்ந்த தலைப்பாகத்தை உடையது; காற்றான்அலைந்து நீண்டுதொங்குகின்றதும், ஐராவணம் என்னும் யானையின் துதிக்கைகொலோ என்னும் ஐயத்தை விளைவிப்பதும், ஆகிய மல்லிகைமாலைகளால் அலங்கரிக்கப்பட்டுளது; உயர அமைத்த யானைக்கோடுகளானாகிய [2] தோரணங்களால் விளக்கமுற்றுளது; உயர்சாதிமணிகளின் ஒளிப்பிழம்பால் விளங்குகின்றதும், காற்றின்வன்மையால் அசைந்துதிகழும் எழின்மிக்க ஆடைநுனியால், “இங்குவருக” என்று என்னை அழைப்பது

[1] புட்பகவிமானம்போன்ற வசந்தசேனையின் இல்லத்தின்கட் செல்கின்றேன் என்பதாம்.

[2] தோரணம் - வீட்டுவாயிலின்முன் விற்போல் வளைந்தமைந்த மேற்பாகம்.

போன்றதும் ஆகிய செல்வநிலை தெரிக்கும் கொடிக்குழுவால் திகழ்கின்றது; தோரணத்துக்கு ஆதாரமாகவுள்ள தூண்களின் முற்புறமுள்ள திண்ணைகளில் வைக்கப்பட்டனவும், விளங்குகின்ற புதிய மாவின் இளந்தளிர்களான் அலங்கரிக்கப்பட்டனவுமாகிய படிகமயமான மங்கல நிறைகுடங்களை இருபக்கங்களிலும் உடையது; பெரிய அசுரர்களின் மார்பிடம் போலப் பிறரால் பிளக்கவொண்ணாததும், வயிரமணிகள் இடைவெளியின்றிப் பதிக்கப்பட்டதுமாகிய பொற்கதவினை உடையது; எளியவர்களின் எண்ணங்களுக்கு அடைதற் கருமையால் துன்பஞ்செய்யும் இயல்பினது. அத்தகைய இது விருப்பு வெறுப்பில்லார் பார்வையையும் வன்மையால் ஈர்க்குந் தன்மைத்தென்பது உண்மையே.

சேடி—வருக. வருக. ஐயன் இம் முதற்கட்டிற் புகவேண்டும்.

விதூடகன்—[புகுந்துபார்த்து] ஓ! ஆச்சரியம்! இம் முதற்கட்டிலுள்ள மேன்மாளிகைநிரைகள், திங்கள் சங்கம் தாமரைத் தண்டு இவைகளையொத்த வெள்ளிய ஒளியையுடையனவாய்க் கோலமாக இடப்பட்ட கைச்சுண்ணங்களால் வெண்ணிறமுற்றுப் பல்வகைமணிகள் அழுத்திய பொற்படிகளால் திகழ்ந்து, தொங்குகின்ற முத்துமாலைகளையுடைய படிகமயமான பலகணிகளாகிய முகமதிகளால் உச்சயினிநகரத்தைக் காண்பனபோலும்; வாயில்காப்பவன் வேதியனைப்போற் கவலையற்றிருந்து உறங்குகின்றான். தயிரோடுபிசைந்த நெற்சோற்றையுண்டற்குஅழைக்கப்பட்டகாகங்கள் சுண்ணும்புத் திரள்போல் வெண்மையாக இருத்தலால் அதனை உண்டில. அம்மை! வேறிடத்தைக் காட்டுக.

சேடி—ஐயன்! வருக. வருக. ஐயன் இவ் விரண்டாங் கட்டிற் புகவேண்டும்.

விதூடகன்—[புகுந்துபார்த்து] ஆ! ஆ! இவ் விரண்டாங் கட்டில், தம் பக்கத்தில் இடப்பட்ட புல், உழுந்துச்செடி முதலிய இரைகளை உண்டு பருத்திருக்கின்றவைகளும் எண்ணெய் பூசிய கொம்புகளையுடையவைகளுமாகிய சிறுபாண்டில் இழுக்கும் காளைகள் கட்டப்பட்டிருக்கின்றன. மற்ரேர் எருமைக் கடா இழிவுபடுத்தப்பட்ட நற்குடிக்கட் பிறந்தவனைப்போல மிகவும் நெட்டுயிர்ப்பெறிகின்றது. வேரோரிடத்திற் போர் செய்து மீண்ட ஆட்டுக்கடாவின்பிடர், மல்லர்களின் கழுத்தைப்போலப் பிடிக்கப்படுகின்றது. இங்கும் அங்கும் தனித்தனி நிற்கின்ற குதிரைகளுக்கு மயிர்வெட்டுதல் செய்யப்படுகின்றது. வேறொரு குரங்கு குதிரைச்சாலையிற் கள்வனைப்போல நன்றாகக் கட்டப்பட்டிருக்கின்றது. [வேரோரிடத்திற் பார்த்து] யானைப்பாகர்கள் சோற்றினின்றொழுகுகின்ற நெய்யொடுகலந்தகவளத்தை யானைக்கு ஊட்டுகின்றனர். அம்மை! வேறிடத்தைக் காட்டுக.

சேடி—ஐயன்! வருக. வருக. இம் மூன்றாங்கட்டிற் புக வேண்டும்.

விதூடகன்—[உட்புகுந்துபார்த்து] ஓ! ஓ! ஆச்சரியம்! இம் மூன்றாங்கட்டிற் காணப்படுகின்ற இவ் வெல்லாக்கட்டில்களும் இயற்கையாகவே நற்குடியிற்பிறந்த செல்வர்கள் இருத்தற்கு நிரைநிரையாக வைக்கப்பட்டுள்ளன. பாதி படிக்கப்பட்ட புத்தகம் [1] பாசகபீடத்தில் இருக்கின்றது. சூதாடு

[1] சூதாடுதற்குரிய பலகை, அல்லது கயிற்றாணுகிய புத்தகபீடம்.

தற்குரிய இப்பலகையும்இயற்கையாகவே உருளும் இரத்தின மயமான கவறுகளோடுகூடியிருக்கின்றது. மற்றும் இக் கிழப்பருவக் காமுகர்களும் கணிகையர்களும் பல்வகைநிறங்க ளால் தீட்டப்பட்ட ஓவியப்பலகைகளைக் கைந்நுனியில்தாங்கி மன்மதனது [1]சந்திவிக்கிரகங்களில் வன்மைவாய்ந்தவர்களாய் இங்கும் அங்கும் சுற்றித்திரிகின்றனர். அம்மை!வேறிடத் தைக் காட்டுக.

சேடி—ஐயன்! வருக. வருக. இந் நான்காங்கட்டில் ஐயன் புகுக.

விதூடகன்—[புகுந்துபார்த்து] ஆ! ஆ! இந் நான்காங் கட்டில் இளம்பெண்களின் கைகளால் அடிக்கப்படும் மத்த ளங்கள் மேகங்களைப்போல் கம்பீரமாக ஒலிக்கின்றன. வெண் கலத்தாலாகியதாளங்கள், நல்வினைப்பயன் ஒழிந்து ஆகாயத்தி னின்றும் வீழ்கின்ற விண்மீன்களை யொப்ப வீழ்கின்றன. புல்லாங்குழல் வண்டினொலிபோல இனிமைபெற வாசிக்கப் படுகின்றது. இந்த யாழ் பொறுமையின்மையால் ஊடிச் சினக்கும் காதற்கிழத்தியையொப்ப மடித்தலத்து இருத்தப் பெற்று விரல்நகங்களால் தொட்டுத் தைவரப்படுகின்றது. மலர்களிலுள்ள தேனை உண்டு களித்து உலவும் பெண்வண்டு களைப்போல மிக இனிமையாகப் பாடுகின்ற இக் கணிகைச் சிறுமிகள் ஆட்டுவிக்கப்படுகின்றனர். இன்பச்சுவை மிக்க நாட்டியநூல்கள் பயிற்றப்படுகின்றனர். காற்றைக் குளிர் விக்கச் சாளரங்களில் நீர்க்கரகங்கள் தூங்கி அசைகின்றன. அம்மை! வேறிடத்தைக் காட்டுக.

---

[1] உடன்படுத்தல், வேறுபடுத்தல்.

சேடி—ஐயன்! வருக. வருக. இவ் வைந்தாங்கட்டில் ஐயன் புகுக.

விதூடகன்---[புகுந்துபார்த்து] ஆ! ஆ! இவ் வைந்தாங்கட்டில் நல்குரவுமிக்கார்க்கு அவாவைவிளைவிக்கும் பெருங்காயம், எண்ணெய் முதலியவற்றின் மிகுமணம் என் மூக்கைக் கவருகின்றது. தீயின்கூடு இடைவிடாதுள்ள அடுக்களை பல்வகை நறுமணங்கமழும் புகையைவெளிப்படுத்துதல், புகைபோதற்குரிய துளைவழிகளால் பெருமூச்செறிதல்போலும். செய்யப்படுகின்ற பற்பலவகையான சிற்றுண்டிகள், அன்னம், முதலியவைகளிலிருந்து உண்டாகும் மணம், எனக்கு மிகவும் அவாவைப் பெருக்குகின்றது. தசைவினைஞனாகிய இவ் வேடச்சிறுவன், ஆடு முதலியவற்றைக் கொன்று அவற்றிலுள்ள தசைகளைக் கந்தைகளைப்போற் கழுவிஅலம்புகின்றான். அடிசில்வினைஞர் பலவித உணவுகளின் வகைகளை ஆக்குகின்றனர். கொழுக்கட்டைகள் பிண்டமாகத் திரட்டப்படுகின்றன. அப்பம் வடைகள் பக்குவஞ்செய்யப்படுகின்றன. [தனக்குள்] "இப்பொழுது இவ்விடத்திற் செவ்விதின் ஆக்கப்பட்ட உணவை உண்ணுக" என்று சொல்லப்பட்டுப் பாதோதகத்தைப் பெறுவேனு! [மற்றொருபக்கத்திற் பார்த்து] கந்தருவர்களையும் தெய்வமகளிரையும்போலப் பலவகை அணிகளால் இங்கு விளங்குகின்றவர்களாகிய கணிகையர்களாலும் பந்துலர்களாலும் இவ்வில்லம் உண்மையாகவே விண்ணவருலகை ஒக்கின்றது. ஓ! பந்துலர்களாகிய நீங்கள் யாவர்?

பந்துலர்கள்—யாங்களோ,

ஆசிரியவிருத்தம்.

134. [1]வேற்று மகளிர் பாற்கூடி
வேற்று டவர்க டரப்பிறந்து
வேற்று மனையில் விளையாடி
வேற்றோ ருணவா னனிவளர்ந்தேம்
போற்றிக் காப்பேம் பிறர்பொருளைப்
பொருந்துங் கடன்க ளொன்றுமிலேம்
சாற்றுங் களிப்பிற் பந்துலர்வன்
றந்தா வளக்கன் றெனத்திரிவேம். (உஅ)

விதூடகன்—அம்மை! வேறிடம் காட்டுக.

சேடி—ஐயன்! வருக. வருக. இவ் வாறுங்கட்டில் ஐயன் புகுக.

விதூடகன்—[புகுந்துபார்த்து] ஆ! ஆ! இவ் வாறுங்கட்டில் பொன்னாலும் மணிகளாலும் நிருமிக்கப்பட்டனவும், சிறப்பாக நீலமணிகள் அழுத்தப்பட்டனவுமாகிய செயற்கைத் தோரணங்கள் இந்திரவிற்போலக் காணப்படுகின்றன. இரத்தினசிற்பிகள், வைடூரியம், முத்து, பவளம், புட்பராகம், இந்திரநீலம், கருக்கேதரகம், பதுமராகம் முதலிய இரத்தின வகைகளை ஒருவர்க்கொருவர் கலந்து சோதித்து ஆராய்கின்றனர். மாணிக்கங்கள் உயர்ந்தபொன்னிற் சேர்த்துக் கட்டப்படுகின்றன. பொற்பணிகள் செய்யப்படுகின்றன. முத்து

---

[1] வேறுவேறு தாய்தந்தையர்பால் தோன்றி வேற்றுமனையிற் பிறருணவுண்டு வளர்ந்து பிறர்பொருட்காப்புக்கு ஆளாகிப் பிதிரர் கடன் முதலியன இன்றி யானைக்கன்றுபோலக் களித்து விலைமாதர்கள் இல்லங்களில் திரிபவர் பந்துலராவர் என்பதாம்.

மாலைகள் செந்நிறநூலாற் கோக்கப்படுகின்றன. வைடூரியங்கள் மிக நெருக்கித் தேய்க்கப்படுகின்றன. சங்கங்கள் அறுக்கப்படுகின்றன. பவளங்கள் சாணைகளில் தேய்க்கப்படுகின்றன. நனைந்த குங்குமப்பெட்டிகள் உலர்த்தப்படுகின்றன. கத்தூரிமணப்பொருள் கலத்தற்கு நனைக்கப்படுகின்றது. சந்தனக்கலவை விசேடமாக அரைக்கப்படுகின்றது. மணப்பொருள்கள் சேர்க்கப்படுகின்றன. கணிகையர்க்கும் காமுகர்களுக்கும் கருப்பூரத்தோடுகூடிய வெற்றிலைச்சுருள் கொடுக்கப்படுகின்றது. விலைமகளிர் கடைக்கண்ணால் நோக்குகின்றனர்; முறுவல்செய்கின்றனர். ஆரவாரத்தோடு இடைவிடாமற் கள் உண்ணப்படுகின்றது. இவர்கள் சேடர்கள்; இவர்கள் சேடியர்கள். கட்கலயத்தாற் கள்ளுண்ணும் விலைமாதர்களாற் பொருளின்மைபற்றி விடப்பட்டவர்களும் மனைவி மக்கள் செல்வங்களைஇழந்தவர்களுமாகிய இவர்கள் தனிப்பட்டுக் கட்குடிக்கின்றனர். அம்மை! வேறிடம் காட்டுக.

சேடி—ஐயன்! வருக. வருக. இவ் வேழாங்கட்டில் ஐயன் புகுக.

விதூடகன்—[புகுந்துபார்த்து] ஆ! ஆ! இவ் வேழாங்கட்டில் மிக்க வனப்புவாய்ந்த புறவுமாடங்களில் இன்புற்றிருக்கின்ற மாடப்புறாவிணைகள் ஒன்றுக்கொன்று முத்தமிட்டு இன்பம் நுகர்கின்றன. தயிரன்னத்தால் நிரம்பிய வயிற்றினையுடைய அந்தணனைப்போலக் கூட்டிலிருக்கும் கிள்ளை நன்மொழிகளைப் படிக்கின்றது. மன்மதன்தூதாகிய இந்நாகணவாய்ப்புள், தலைவன் பெருமைப்படுத்தியமையால் இறுமாந்த வீட்டுவேலைக்காரியைப்போல மிகவும் ஓசையிடுகின்றது. பல

வகைப்பட்ட பழச்சாற்றை உண்டமையால் இனிமைமிக்க குரலையுடைய குயில் இடைவிடாது நீரெடுக்கும் சேடியைப் போலக் கூவுகின்றது. சுவர்த்தலங்களில் உள்ள மூலைக் கட்டைகளில் புட்கூடுகளின்நிரைகள் தூங்குகின்றன. இலாவகப்புட்கள் போர்செய்ய ஏவப்படுகின்றன. சிச்சிலிப்பறவைகள் மொழிபயிற்றப்படுகின்றன. கூட்டிலுள்ள புறவினங்கள் போர்குறித்து அனுப்பப்படுகின்றன. பலவகைமணிகளாற் சித்திரிக்கப்பட்டதுபோல இங்கும் அங்கும் ஆடித் திரியும் இவ்வீட்டு மயில், கதிரவன் கிரணங்களாற் சூடுற்ற தன்னிருப்பிடத்தைச் சிறகடித்தலால் விசிறுதல்போலும். [மற்றோரிடத்திற் பார்த்து] இவ்விடத்தில் திரட்டப்பட்ட சந்திரகிரணங்களை ஒத்த அரசன்னத்துணைகள் கால்நடையைக் கற்பிப்பனபோல இளம்பெண்களின் பின்புறத்தே திரிகின்றன. வீட்டில்வளரும் இச் சாரசப்புட்கள், கிழப்பருவச்சேவகர்களைப்போல நாலுபக்கத்தும் உலவுகின்றன. ஆ! ஆ! பலவகைப்பட்ட பறவைக்கூட்டங்களால் இவ் விலைமாது புகழை நிலைபெறச்செய்திருக்கின்றாள். உண்மையாகவே இக் கணிகையின் இல்லம் இந்திரனது உத்தியானவனம்போல எனக்குப் புலப்படுகின்றது. அம்மை! வேறிடம் காட்டுக.

சேடி—ஐயன்! வருக. வருக. இந்த எட்டாங்கட்டில் ஐயன் புகுக.

விதூடகன்— [புகுந்துபார்த்து] அம்மா! பட்டினுன் ஆகிய மேலாடையைப் போர்த்துக்கொண்டு, மிக அதிகமும் மிக்க அற்புதமுமான ஒருவகையிற் பலவான அணிகலன்களைப் புனைந்து, உடல் பருத்துச் சரிந்திருத்தலால் தடுமாறி நடந்து சுற்றித்திரிகின்ற இவன் யாவன்?

சேடி—ஐய! இவன் பெருமாட்டியின் உடன்பிறந்தானவான்.

விதூடகன்—எத்துணைத் தவங்களைச்செய்து வசந்தசேனைக்கு உடன்பிறந்தவனாயினான்? அன்றி,

கலித்துறை.

135. அணிக லத்தினாற் றிகழ்பவ னுடலெழி லமைந்தோன்
மணமு ளானிவ னென்னினுஞ் சுடலையின் வழிக்கட்
டணிவில் [1]யாணரிற் றோன்றிய சண்பக மென்ன
[2]நணிய வெண்ணில ருலகினர் [3]தவப்பய னயவான். (உக)

[மற்றோரிடத்திற்பார்த்து] அம்மா! பொன்னிழைகளான் மலருருவமைத்த மேலாடையைப்போர்த்து, எண்ணெய்பூசிய அழகிய கால்களைப் பாதுகைகளில் ஊன்றிக்கொண்டு உயர்ந்த இருக்கையில் இருக்கின்ற இவள் யாவள்?

சேடி—இவள் நம் பெருமாட்டியின் நற்றாய்.

விதூடகன்—ஓ! தூய்மையில்லாதஉணவையுண்ட பார்ப்பானைப்போன்ற இடாகினிப்பேயாகிய இவளது வயிற்றின் பருமையென்னே! பெரிய தெய்வவுருவத்தைப்போன்ற இவளை முதலில் உள்ளே புகுத்திப் பின்னர் இவ்வீட்டின் வாயில்வழி நிருமிக்கப்பட்டதுகொல்?

சேடி—பேறிலாய்! நம் தாயை இங்ஙனம் பரிகாசம் செய்தல்வேண்டா. இவளோ நான்காநாள் முறைக்காய்ச்சலால் [4]பீடிக்கப்பட்டிருக்கின்றாள்.

---

[1] யாணர் - அழகு. [2] உலகினர் நணிய எண்ணிலர். நணிய - நண்ணிய - அடைய. [3] தவப்பயனை நயந்தவனல்லன்.

[4] காய்ச்சல்நோயாலே வயிறு வீக்கங்கொண்டுள்ளாள் என்பதாம்.

விதூடகன்—பகவன்! நான்காமுறைக்காய்ச்சலே! [1] இவ்வுதவியால் அந்தணனாகிய என்னையும் நோக்குவாயாக.

சேடி—பேறிலாய்! இறந்துவிடுவாய்.

விதூடகன்—[பரிகாசத்தோடு] தேவடியாள்மகளே! இத்தகையபருத்தகன்றவயிற்றினையுடையவள் இறத்தலே நன்று.

ஆசிரியவிருத்தம்.

136. பலவித மாய கள்ளின்
பானத்தாற் களித்துத் தேகம்
மலையெனப் பருக்கு மாறு
வாய்த்தவிந் நிலையை யன்னை
அலைவறப் பெற்றாண் மற்றிவ்
வாவியிந் நிலையின் கண்ணே
உலைவுறு வாளேற் பல்லா
யிரநரி யுண்ணு மாலோ. (௩௦)

அம்மா! நுங்கட்கு மரக்கலங்கள் ஓடுகின்றனவா?

சேடி—ஐய! இல்லை. இல்லை.

விதூடகன்—இவ்விடயத்தில் கேட்கவேண்டியதென்னை? காமமாகிய தெளிந்த நீர்ப்பெருக்கையுடைய மதனசமுத்திரத்தில் நுங்கள் தன [2] நிதம்ப [3] சகனங்களே நெஞ்சத்தை ஈர்க்கும் எழின்மிக்க மரக்கலங்களாகும். இங்ஙனம் கூறப்பட்ட பல்வகைநிகழ்ச்சிகளையும் எட்டுக்கட்டுக்களையும் உடைய வசந்தசேனையின் இல்லத்தைப் பார்த்து உண்மை

---

[1] வயிறுபருத்தலாகிய இவ் வுபகாரத்தால்.

[2] நிதம்பம் - இடையின் பின்பக்கம்.

[3] சகனம் - இடையின் முன்பக்கம்.

யாகவே மூன்றுலகமும் ஓரிடத்துக் காணப்பட்டதாக அறிகின்றேன். இது விலைமகளில்லமோ! அன்றிக் குபேரன் கிருகத்தின் அளவோ! என்று சிறப்பாக வருணித்துக் கூறுதற்கு எனக்குச் சொல்வன்மையின்று. நுங்கள் தலைவி எங்கேயிருக்கின்றாள்?

சேடி—ஐய! இவள் வீட்டின்பக்கத்திலுள்ள உபவனத்தில் இருக்கின்றாள்; ஆதலின், ஐயன் போதல்வேண்டும்.

விதூடகன்—[புகுந்துபார்த்து] ஆ! ஆ! உபவனத்தின் எழில் என்னே! நேர்மையான நிரையினையுடைய மலர்கள் மிக்க பலவகை மரங்கள் வளர்க்கப்பட்டுள்ளன. பட்டு நூற் கயிறுகளையுடைய ஊஞ்சல்கள் இளம்பெண்களின் இடையளவாக மரங்களின் அடிக்கிளைகளில் இடைவெளியின்றிக் கட்டப்பட்டிருக்கின்றன. தாமே வீழ்ந்துகிடக்கும் சண்பகம், யூதிகை, சேபாலிகை, முல்லை, மல்லிகை, நவமாலிகை, மருதோன்றி, அதிமுத்தகம்: இவை முதலிய மலர்களால் இவ்வுபவனம் இந்திரனது உத்தியானத்தின் எழிலைச் சிறுமைப்படுத்துவதுபோற் காணப்படுகின்றது. [வேறிடத்திற் பார்த்து] இங்கும் இக்குளம் உதயசூரியனை ஒத்த ஒளியினையுடைய செந்தாமரை செங்குவளை மலர்களால் காலைநேரத்தை ஒக்கின்றது. இன்னும்,

கலிவிருத்தம்.

137. செறிதரு மாத்தமாஞ் சேறு பூசியே
நெறிதரு போரிடை நின்ற வீரன்போல்
வெறிபடு புதுமலர் மென்மை யாந்தளிர்க்
குறிபட நிலவுமாற் குளிர்செம் பிண்டியே. (௩௧)

நிற்க. நுங்கள் தலைவி யாங்குள்ளாள்?

சேடி—ஐய! கண்ணைத் திழிறக்குங்கள். பெருமாட்டியைப் பாருங்கள்.

விதூடகன்—[பார்த்துப் பக்கல் அணுகி] நினக்கு மங்கலமுண்டாக.

வசந்தசேனை-ஓ! மைத்திரேயரா! [எழுந்து] நல்வரவாகுக. இஃது இருக்கை. இதன்கண் இருத்தல்வேண்டும்.

விதூடகன்—தாங்களும் இருத்தல்வேண்டும்.

[இருவரும் இருக்கின்றனர்.]

வசந்தசேனை—வணிககுமாரர் நலமுடையரா?

விதூடகன்—அம்மா! நலமுடையரே.

வசந்தசேனை—ஐய! மைத்திரேயரே! [1] இப்பொழுதும்,

ஆசிரியவிருத்தம்.

138. [2] கருதுமுயர் நம்பிக்கை வேர்வீழ்த்து
வினையமெனுங் கவடுபோக்கி
யரியகுணத் தளிரீன்று பெருமிதமா
மலர்பூத்தே யடைந்தோர்க் கெல்லாம்

---

[1] 'இப்பொழுதும்' என்றது 138ஆம்செய்யுளின் கடைச்சீராகிய 'வதியுமேகொல்', என்பதனோடு முடியும். இப்பொழுதும் - பொருளற்ற இவ்வமயத்திலும்.

[2] பறவைகள் பழமில்லாத மரத்தை அடையாமைபோல உறவினர் பொருளில்லாதவனை அணுகார். பொருளற்ற இந்நிலையிலும்

தருமளிசால் கொடையாகுங் கனிநிறைந்த
சான்றோனாந் தருவின் கண்ணே
மருவியவன் புறவினராம் புட்களெலா
மின்புற்று வதியு மேகொல்! (௩௨)

விதூடகன்—[தனக்குள்] இப் பொல்லாத விலைமகள் நன்கு [1]அறிந்திருக்கின்றாள். [வெளிப்படையாக] ஆம்.

வசந்தசேனை—ஓ! நும் வரவின்பயன் யாது?

விதூடகன்—அம்மா! கேட்க. பெருமைமிக்க சாருதத்தர் [2]தலையிற் கைகூப்பி நினக்கு அறிவிக்கின்றார்.

வசந்தசேனை— [கைகூப்பி வணங்கி] என்ன கட்டளையிடுகின்றார்?

விதூடகன்—"அப் பொற்பணிமுடிப்பை நின்மாட்டுள்ள நட்புரிமையால் எனதெனக்கொண்டு யான் சூதில் அதனை இழந்துவிட்டேன். [3]அச் சூதாடுகளத்தலைவன் அரசன் தூதனாக எவ்விடம் சென்றானென்பது அறியக்கூடவில்லை."

---

குணம்நோக்கிச் சாருதத்தரை உறவினர் அடைகின்றார்களா? என்று வசந்தசேனை சாருதத்தரது குணநலப்பெருமைபற்றிக் கேட்டனள் என்பதாம். சான்றோன் - சாருதத்தன்.

[1] சாருதத்தர்குணங்களையும் உறவினர் இயல்பையும் அறிந்திருக்கின்றாள் என்பது கருத்து.

[2] ஒரு காமுகன் தன் காதற்கிழத்திக்குச் செய்யும் வணக்கம் முதலியன முறைப்பிறழ்ச்சியில்லனவாம்; காதம்பரியும் சந்திராபீடனும் ஒருவரையொருவர் வணங்கினர் என்று கூறப்பட்டுளது.

[3] இச்செய்தி சாருதத்தன் கூறியதன்று, அவன் கருத்திலுள்ளதாக விதூடகன் உணர்ந்து கூறியதாகக் கொள்ளவேண்டும்.

சேடி—பெருமாட்டீ! [1]தெய்வவயத்தால் நலம்வளரப் பெறுகின்றாய். சாருதத்தர் சூதாடுபவராயினர்.

வசந்தசேனை—[தனக்குள்] எப்படி? கள்வனாற் கவரப் பட்டும் பெருந்தன்மையால் சூதில் இழக்கப்பட்டதென்று கூறுகின்றார். இதனாலேயே விருப்பஞ்செய்கின்றேன்.

விதூடகன்—ஆதலின், அக்காரணத்தால், அம்மை, இவ் விரத்தினமாலையை ஏற்றுக்கொள்ளல்வேண்டும்.

வசந்தசேனை—[தனக்குள்] அவ் வணிகலன்களைக் காட்டு வேனா? [நினைவுற்று] [2]வேண்டா.

விதூடகன்—அம்மா! இவ் விரத்தினமாலையைப் பெற்றுக்கொள்ளாமையென்?

வசந்தசேனை— [தோழியின்முகத்தைப்பார்த்துச் சிரித்துக் கொண்டு] மைத்திரேயரே! இரத்தினமாலையைப் பெற்றுக் கொள்ளாமலிருப்பேனா? [என்று வாங்கிப் பக்கத்தில்வைக்கின் றாள்.] [தனக்குள்] [3]மலரின்றி வறிதிருக்கும் மாமரத்தினின் றும் தேன்றுளிகள் எங்ஙனம் வீழும்? [வெளிப்படையாக] ஐய! அச் சூதராகிய சாருதத்தர்பால், "யானும் மாலைக்காலத் திறுதியில் பெருமானைக் காண்டற்கு வருவேன்" என்று யான்கூறியதாகத் தெரிவித்தல்வேண்டும்.

---

[1] கணிகையரைச்சார்ந்த காமுகர் சூதாடுமியல்பினராதல் அக் கணிகையர்வாழ்க்கைக்கு நலமாகும் எனக்கொண்டு கூறுகின்றாள்.

[2] சாருதத்தரை நேரேகாண்டற்கு இஃது இருத்தல் நன்று; ஆதுவன்முகமாகப் போக்குதல் தக்கதன்று என்பதாம்.

[3] செல்வமின்றி வறியராக இருக்கும் சாருதத்தரிடத்தினின் றும் இவ் விரத்தினமாலை எவ்வாறுகிடைக்கும் என்பது கருத்து.

விதூடகன்—[தனக்குள்] ஆங்கு வந்து வேறு எதனைப் பெறுவாளோ! [வெளிப்படையாக] அம்மா! சொல்லுவேன். [தனக்குள்] "இக் கணிகையின் சேர்க்கையினின்றும் ஒழி வெய்துக" என்றுசொல்லுவேன். [என்று கூறிப் போகின்றான்.]

வசந்தசேனை—சேடீ! இப்பணிகளை எடுத்துவை. சாருதத்தரை மகிழ்வித்தற்குச் செல்வோம்.

சேடி—பெருமாட்டீ! பார். பார். அகாலத்தில் மேகம் பொழிதற்கு மேலே கிளம்புகின்றது.

வசந்தசேனை—

கட்டளைக்கலித்துறை.

139. விண்ணிற் செறிந்து கருமுகி
றோன்றினு மிக்கமழை
மண்ணிற் பொழியினுங் காரிரு
டோன்றி மயக்கினுமென்?
எண்ணித் துணிந்தவென் காதற்
கிழவ னியைபமர்ந்தே
அண்ணிக்கு முள்ளமிவ் வெல்லாத்
தடையு மகற்றிடுமே. (௩௩)

சேடீ! இரத்தினமாலையை எடுத்துக்கொண்டு விரைவில் வா. [என்று எல்லோரும் போகின்றனர்.]

"சருவிலகன் பேறு" என்னும்
**நான்காம் அங்கம் முற்றிற்று.**

---

# [1]ஐந்தாம் அங்கம்.

## புயன்மறைப்பு.

[வேட்கையுடையனாய் இருக்கையிலிருந்தவண்ணம் சாருதத்தன் வருகின்றான்.]

சாருதத்தன்— [உயரப்பார்த்து] அகாலத்தில் முகிற்கூட்டம் உம்பரிற் படர்ந்துசெல்கின்றது. இஃது,

ஆசிரியவிருத்தம்.

140. [2]இல்லத்தின் வளர்மயில்க ளுளங்களித்துச்
சிறைவிரித்தங் கினிது நோக்க
மெல்லத்த மிடம்பெயர்ந்து மேற்படர
விரும்புமனம் வெறுத்து நீங்கப்
புல்லற்கங் குரிமையிலாக் காலமதிற்
செறிந்தமுகில் பொருந்து காம
மல்கத்தங் துணைபிரிந்தோர் மனத்தொடுவிட்
புலத்தினையு மறைக்கு மாலோ. (க)

---

[1] இவ்வைந்தாம் அங்கத்தில் ஒருநாள் மாலைக்காலத்திறுதியில் மழைபொழியுங்கால் வசந்தசேனையினிடத்து இரத்தினமாலையைச் சேர்த்து மீண்ட மைத்திரேயன் சாருதத்தனைச்சார்ந்து நிகழ்ந்தன கூறுதலும், அதன்பின் வசந்தசேனை, விடன் சேடி இவர்களுடன் அம்மழையில் நனைந்து சாருதத்தனது இல்லம் எய்தி மதனிகையின் பொருட்டுச் சருவிலகன் தன்பால் தந்த பொற்பணியை வெளிப்படுத்துக்காட்டுதலும், சாருதத்தனும் வசந்தசேனையும் கூடி இன்புறுதலும் ஆகிய இச்செய்திகள் கூறப்படும். இதன்கண் வான் பெயல்வருணனையை விரிவாகக் காணலாம்.

[2] மேற்படர - மானதவாவிக்குச்செல்ல. அனம் - அன்னம். புல்லற்கு - பொருந்துதற்கு. உரிமையிலாக்காலம் - அகாலம்.

இன்னும், ஆசிரியவிருத்தம்.

141. [1]நீருற நனைந்த வெருமையி னகடு
நெருங்களி போலுநீ னிறத்த
தேருறு மின்ன லொளியினாற் பொன்னி
னியன்றமே லாடைய தாகிச்
சார்வுறு வலாக சங்கமாஞ் சங்கந்
தாங்கிவிட் புலனுறீஇத் தகைந்த
காரொரு திருமா னெடியனுய் நிறைந்த
கவின்றரு காட்சிய தாமே. (உ)

இன்னும், நேரிசைவெண்பா.

142. [2]மாயோன் றிருமேனி போற்கறுத்து வால்வளைபோற்
சாய்வோடு கொக்கினங்க டாம்வளைந்து—மீயோடப்
பொன்னம் பரம்போற் பொலிமின் னொளிரமுகின்
மன்னம் பரநிறைந்த வால். (௩)

---

[1] எருமையின் அகடுபோலும் நெருங்கு அளிபோலும் நீல்நிறத்தது. அகடு-வயிறு. வலாக சங்கம்-கொக்குக்கூட்டம். கார்காலத்திற் கொக்கினங்கள் விண்ணிற் பறந்துதிரிதல் இயல்பு. நீலநிறத்ததும் மேலாடையதுமாகிச் சங்கம் தாங்கி விட்புலன் உறீஇத் தகைந்தமையால் கார் நீணிலம் அளந்த நெடுமுடியண்ணலாகிய திருமாலைப்போற் காணப்படுகின்றதென்பதாம். விட்புலனுறீஇத் தகைந்த - விண்ணுலகத்தைப்பொருந்தி அதனைத் தன்னுள் அடக்கிய.

[2] வளைபோற் கொக்கினங்கள் வளைந்து மீயோட, அம்பரம்போல் மின் ஒளிர, முகில் திருமேனிபோற் கறுத்து அம்பரம்நிறைந்த என முடிக்க. வளை - சங்கு. பொன் அம்பரம் - பொன்னுடை. அம்பரம் - ஆகாயம். இச் செய்யுட்பொருளும் மேற்செய்யுட்பொருளும் ஒன்றே. மேற்செய்யுளிற் பொதுவாகவும், இதன்கட் சில சிறப்பாகவும் விதந்து விளக்கியிருத்தலாற் கூறியதுகூறலாகாதென்க. கொக்கினங்கள் சாய்வாக ஓடுதல் முதலியன ஈண்டுச் சிறப்பாகும்.

நேரிசையாசிரியப்பா.

143 [1] உருகிய வெண்பொனி னொழுக்கை யொப்பக்
கருமுகி லகட்டின் விரைவொடு வீழ்ந்து
மின்விளக் கொளியின் வெளிப்பட் டொருகண
மன்னுபு மறையுமிம் மழையின் றாரைகள்
கிழிந்தவின் னுடையி னுனியென விழிந்து
வீழ்வன வன்றியுந் தாழ்விருப் போடணைந்
தொன்றித் தோன்று மன்றிற் புட்குழு
விண்ணிற் பறந்துசெ லன்ன நண்ணுபு
சுழன்மீன் மகரத் தொகுதி பழுதின்
மீயுயர் மாளிகை யாயவிவ் வுருவொடு
வேறுபல் லுருவின் விரிவினை யுடையவாய்ப்
பெருங்காற் றுந்தலிற் பிரிந்து மேற்செலீஇ
வருங்கார் மஞ்சின் மன்னுமிவ் விடத்துவிண்
ஓவியப் படிமந் தாவறப் பொறித்தெனத்
திகழுமான் மற்று முகிலா னிருண்டவிவ்
விண்ணிட மீண்டக் கண்ணிலி யாய
திருதராட் டிரன்முகம் பொருவுமான் மிக்க

---

[1] மின்விளக்கு-மின்னலாகியவிளக்கு. ஒருகணம் நிலைபெற்று மறைதல் - மின்னலுண்டாங்காற் காணப்பட்டுப் பின் மறைதல். அன்றில் அன்னம் மீன் மகரம் மாளிகையாகிய இவ்வுருவங்களோடு வேறுபலவுருவங்களையும் உடையவாய்ப் பிரிந்துசென்று வரும் கரிய மேகங்களால் இவ்விடத்து விண், ஓவியப்படிமங்கள்பொறிக்கப்பட்டதெனத் திகழுமென்க. விண், ஞாயிறு திங்களின் ஒளியிழந்திருத்தலால் கண்ணொளியிழந்த திருதராட்டிரன்முகத்தை ஒக்கும் என்பதாம்.

செருக்கொடு பலமுடைச் சிகியச் சுயோதனன்
நேரவுண் மகிழ்ந்திங் காரவா ரிக்கும்
கவறுடைச் சூதிற் றவறுபடு தருமன்
மகனெனக் குயில்க டகவிசை யாறுநீஇச்
சென்றன பொலஞ்சிறை யொன்றுமன் னங்கள்
பாண்டவர் போல வீண்டிய,
வனத்தினின் றறிதரா விடத்துறைந் தனவே. (ச)

[நினைவுகூர்ந்து] மைத்திரேயன் வசந்தசேனையின்பக்கல் எய்திக் காலம் மிக ஆயிற்று. இதுகாறும் வந்திலன்.

[வந்து]

விதூடகன்—ஆ! விலைமகளின் பொருளாசையும், கண்ணோட்டமின்மையும் மிக்க வியப்பைத் தருகின்றன. [1]வேறொருசொல்லும் பேசப்பட்டிலது. [2]நட்புமுறைபற்றிப் பலவாறு என்னென்னவோபேசிவிட்டு இங்ஙனமேஇரத்தினாவளியைக் கவர்ந்துகொண்டாள். இவ்வளவு செல்வப்பெருக்குடையளாயிருந்தும் என்னைநோக்கி, "ஐய! மைத்திரேயரே!

---

சிகி - மயில். தருமன்மகன், தகஇசைஆறு - (சூதில்தோற்றுப்) பொருந்துமாறு இசைந்த காட்டுவழி. குயில், தகவு இசை ஆறு - தகுதிவாய்ந்த ஒலியடக்கம். வனம் - காடு; நீர். அறிதரா இடம் - அஞ்ஞாதவாசத்தலம்; காணப்படாத மானததடாகம்.

1 சூதில் தோற்கப்பட்ட பொற்பணிகள் கைவிடப்பட்டனவா? திரும்பிக் கிடைக்கக்கூடியனவா? சூதாடுகளத்தலைவன் எப்பொழுது திரும்பிவருவான்? என்னும் இச் செய்திகளுள் ஒன்றேனும் வினவப் பட்டிலது என்பது கருத்து.

2 சிறுவிலையுள்ள பொற்பணிக்கு மாற்றுப்பொருளாகப் பெருவிலையுள்ள இரத்தினமாலையைக் கவர்ந்துகொள்ளுதற்கே அவள் நட்புப்பற்றிப் பலவாறு பேசினள் என்பதாம்.

இளேப்பாறுங்கள்; இக்கிண்ணத்துள்ள நீரை அருந்திச்செல்லுங்கள்" என்று இதுதானும் கூறினுளல்லள். ஆதலின், அவ்விழிதகையளாகிய விலேமகளின்முகத்தையும் இனிப் பாரேன். [வெறுப்போடு] கிழங்கின்றியுண்டாய தாமரையும், வஞ்சகமில்லாதவணிகனும், திருடுதல்இல்லாத பொற்கொல்லனும், கலகமில்லாத சிற்றூர்க்கூட்டமும், அவாவற்ற கணிகையும் எஞ்ஞான்றும் இல்லையென்று இங்ஙனம் உலகம் கூறும். ஆதலின் என் நண்பரையடைந்து இவ் விலேமகள்பால் அவர் வைத்துள்ள பற்றை ஒழித்துவிடுவேன். [சுற்றிப்பார்த்து] என் அன்புமிக்க நண்பர் இவ் விளமரப்பூங்காவில் இருக்கின்றார். செல்கின்றேன். [அருகிற்சென்று] நுமக்கு மங்கலம் உண்டாக. நும் நலம் வளர்க.

சாருதத்தன்—[பார்த்து] ஓ! என் நண்பனுகிய மைத்திரேயன் வந்துவிட்டான். தோழ! நின்வரவு நல்லதாக. இருக்க வேண்டும்.

விதூடகன்—இருக்கின்றேன்.

சாருதத்தன்—நண்ப! [1] அக் காரியத்தைச் சொல்.

விதூடகன்—அக்காரியம் [2] இழக்கப்பட்டது.

சாருதத்தன்—அவள் இரத்தினுவளியை [3] ஏற்றுக் கொள்ளவில்லேயா?

---

[1] அடைக்கலப்பொருளுக்கு மாற்ருகக்கொடுக்கப்பட்ட பொருளேப்பற்றிய செயல்.

[2] இரத்தினுவளியை அவள் கவர்ந்துகொண்டாள் என்பது கருத்து.

[3] ஏற்றுக்கொள்ளாவிடின் மாற்றுச்செயல் பயனிலதாகும் என்று கருதி இவ்வாறு கூறினுன்.

விதூடகன்—[1] இவ்வளவுபாக்கியம் நமக்கு எவ்வாறுண்டாம்? புதிய தாமரைமலர்போன்ற அழகிய கைகளைத் தலையிற்கூப்பி வணக்கத்தோடு பெற்றுக்கொண்டாள்.

சாருதத்தன்—அங்ஙனமாயின் இழக்கப்பட்டதென்று கூறியது என்னை?

விதூடகன்—ஓ! ஏன் இழக்கப்பட்டிலது? நம்மால் விற்றுண்ணப்படாததும், உபயோகிக்கப்படாததும், கள்வராற் கவரப்பட்டதும், சிறுவிலையுடையதுமாகிய பொற்பணி முடிப்பின் நிமித்தம் கடல்வலயத்தில் மிகச் சிறந்த இரத்தின மாலை அவளாற் கவரப்பட்டதன்றோ?

சாருதத்தன்—தோழ! அங்ஙனமன்று.

கலிவிருத்தம்.

144. நம்முழை யுயர்குணம் நன்று பற்றுபு
செம்மையி னவளணி சேமஞ் செய்தனள்
அம்மவவ் விலையிலா வுறுதி யன்பிற்கே
யிம்மணி மாலையா மிசைவி னீதலே. (ரு)

விதூடகன்—ஓ! நண்பரீர்! வசந்தசேனை, தன் தோழிமார்களுக்குக் குறிப்பில் தெரிவித்துத் தன் முகத்தை ஆடை நுனியால் மறைத்துக்கொண்டு என்னைநோக்கி நகைத்தாள். இதுவும் எனக்குத் துன்பம்விளைவிக்கும் இரண்டாவது காரணமாகும். ஆதலின், யான் அந்தணனாகஇருந்தும் இப்பொழுது தங்களைத் தலையால் வணங்கித் தெரிவித்துக்கொள்ளுவதாவது! "பற்பல தீங்குகளை விளைவிக்கும் இவ் விலை

---

[1] போகூழாற் பற்றப்பட்டிருக்கும் இந்நிலையில் இரத்தினமாலை அவளால் ஏற்றுக்கொள்ளப்படாமல் எங்ஙனமிருக்கும்? என்பதாம்.

மகள்பால் வைத்துள்ள மனத்தை மீட்டல்வேண்டும்” என்பதே. விலைமகளோ பாதகுறட்டினுட்புகுந்த சிறிய பரற்கற் போல மீண்டும் வருத்தமுற்று விலக்கத்தக்கவள். இன்னும் ஓ! நண்பரீர்! பொருட்பெண்டிர், யானை, கணக்கன், துறவி, கீழ்மகன், கழுதை [1] இவர்கள் உள்ள இடங்களிற் கொடியவர்களும் வாழ்க்கைபெறமாட்டார்கள்.

சாருதத்தன்— நண்ப! பலவாறு பழித்துரைத்தல் வேண்டா. அமைக. என் நிலைமையே என்னை மீட்கின்றது. பார்க்க.

கலித்துறை.

145. [2] கடுக வோடலின் முயலுமவ் விவுளிதன் கால்கள்
முடுகு மூப்பினல் வலிதப முன்னியாங் குளுற்ரு
அடரு மெண்ணங்கள் வறியற்கெப் பொருளினு மணுகி
முடிவிற் கேடுறீஇ யவற்றின்மீண் டுள்ளத்தே மூழ்கும். ()

தோழ! இன்னும்,

---

[1] பொருட்பெண்டிர் இன்பவிளையாடல்களாற் பொருளைக் கவர்தலானும், யானை மிகுபொருட்செலவாற் பரிபாலிக்கத்தக்கதாகலானும், கணக்கன் கணக்கால் வஞ்சித்தலானும், துறவி பற்றொழித்தலை உபதேசித்து எல்லோரையும் மடியாளராகச்செய்தலானும், கீழ்மகன் இழிந்தசெயல்களிற்புகுத்திக் கேடுசெய்தலானும், கழுதை எல்லாப் பைங்கூழ்களையும் உண்டு அமங்கலகாமாக இருத்தலானும் இவர்கள் உள்ள இடங்களில் வாழ்தல் நலந்தருவதன்ரு மென்க.

[2] இவுளி - குதிரை. அவற்றின் - அவ்வப்பொருளினின்றும். ஒருவன் வறியவனுக இருப்பின் அவன் எண்ணங்கள் பலபொருள்களினும்சென்று ஆற்றலின்மையாற் பயன்பெருமற் கேடுற்று மீண்டு அவன் உள்ளத்தே அடங்கிவிடும் என்பதாம்.

நேரிசைவெண்பா.

146. இப்பெண் பொருட்கே யிவையடவண்மற் றுதலினால்
அப்பொருண்மிக் குள்ளாற் கவளுரியள்—

[தனக்குள்] இல்லை. இவள் குணத்தாற் பெறற்பாலளே.

[வெளிப்படையில்] —செப்பும்
பொருளிழந்தே னாதலினாற் பூவை புரியும்
அருளிழந்தே னாயினேன் யான். (எ)

விதூடகன்—[கீழ்நோக்கித் தனக்குள்]இவர் மேனோக்கிப் பெருமூச்செறிதலால் என்னால் தடுக்கப்பட்ட இவருக்குக் காதல் மிகவும் பெருகிற்றென்று ஊகிக்கின்றேன். ஆதலா னன்றே "காமம் கடத்தற்கரியது" என்று பெரியோர் கூறுவர். [வெளிப்படையில்] ஓ! நண்பரீர்! "இன்று மாலைக்காலத்தில் யான் அங்கு வருவேன் என்பதைச் சாருதத்தர்பாற் சொல்லுக" என்று அவள் கூறினாள். ஆதலின், இரத்தின மாலையைப் பெற்றுக்கொண்டஅளவின் மகிழ்ச்சியுறாது மற்றொன்றைப் பெறுதற்கும் வரக்கூடுமென்று எண்ணுகின்றேன்.

சாருதத்தன்—தோழ! அங்ஙனமே வருக. [1]மகிழ்ந்து செல்வாள்.

சேடன்—[வந்து] ஐயன்மீர்! யான் சொல்வதை உற்றுக் கேளுங்கள்.

---

[1] அவள் விரும்பியதைக் கொடுப்பேன் என்பது கருத்து.

நிலைமண்டில ஆசிரியப்பா.

147. எங்ஙன மெங்ஙன மெழுமுகிற் கண்டம்
பொழிதரு மங்ஙனம் புறந்தோ னலையும்
எங்ஙன மெங்ஙன மிளந்தண் காற்றிவ்
வுடற்க ணுன்று மங்ஙனஞ் சடக்கென
வென்னுள நடுங்குமா லென்னே! என்னே! (அ)

[சிரித்து]

148. எழுதுளை யோடுநல் லிசைதரு குழலும்
எழுநரம் போடிசை யாழும்வா சிப்பனக்
கழுதையி னொலியெனக் கானமும் பாடுவேன்
தும்புரு நாரத னென்போ ரிருவருள்
என்போற் கான மிசைப்பவர் யாரே? (கூ)

"கும்பிலக! நீ சென்று எனது வரவை மாட்சிமிக்க சாருதத்தர்பால் தெரிவி" என்று பெருமைமிக்க வசந்தசேனை எனக்குக் கட்டளையிட்டிருக்கின்றாள். ஆதலின், மாட்சி மிக்க சாருதத்தரது இல்லத்தை அடைகின்றேன். [சுற்றி வந்து வாயில்வழி நுழைதலை அபிநயித்துப் பார்த்து] இதோ சாருதத்தர் இளமரப்பூங்காவில் இருக்கின்றார். அந்தப் பொல்லாச் [1]சிறுபையனும் இதோ இருக்கின்றான். ஆதலின், அருகிற் போகின்றேன். இச் சிறுமரப்பொழிலை அடைதற்குரிய வழி மூடப்பட்டிருக்கின்றதே! நிற்க. இந்தப் பொல்லாச் சிறுபையனுக்குக் குறிப்புக் காட்டுகின்றேன். [என்று சிறிய பரற்கற்களை எறிகின்றான்.]

[1] விதூடகன்.

விதூடகன்—ஆ! இப்பொழுது வேலிசூழ்ந்த விளா மரத்தையெறிதல்போல என்னைச் சிறுகற்களால் எறிகின்றவன் யார்?

சாருதத்தன்—இச்சோலைக்கண் உள்ள மேல்வீட்டுப் புறந்திண்ணையில் விளையாடுகின்ற புறாக்களால் வீழ்த்தப்பட்டிருக்கும்.

விதூடகன்—இழிவுமிக்க பொல்லாப் புறாவே! இரு. இரு. முதிர்ந்து பழுத்த மாம்பழத்தை வீழ்த்தல்போல இம்மரத்தடியால் நின்னை இம் மேல்வீட்டினின்றும் நிலத்தில் வீழ்த்துவேன். [என்று மரத்தடியை ஓங்கிக்கொண்டு ஓடுகின்றான்.]

சாருதத்தன்—[பூணூலை இழுத்து] தோழ! இரு. இதனால் என்ன? வருந்தத்தக்க இப் புறா, பேடையோடுகூடியிருக்கட்டும்.

சேடன்—ஈதென்னே? புறாவைப் பார்க்கின்றான். என்னைப் பார்க்கின்றானில்லை. மற்றொரு சிறுகல்லால் மீண்டும் எறிகின்றேன். [அங்ஙனமே செய்கின்றான்.]

விதூடகன்—[நாற்புறமும் பார்த்து] கும்பீலகனா? அப்படியாயின் அருகிற்செல்கின்றேன். [பக்கல் அணுகி வாயில் வழியைத் திறந்து] எட! கும்பீலக! வா. உன்வரவு நல்லதாக.

சேடன்—[உட்புகுந்து] ஐய! வந்தனம்.

விதூடகன்—எட! இம் மழைக்காலிருட்டில் நீ எதற்காக வந்தாய்.

சேடன்—எட! [1] இதோ அவள்.

விதூடகன்—[2] யார்? இவள் யார்?

சேடன்—இதோ அவள்.

விதூடகன்—இழிதகவ! இப்பொழுது ஈதென்ன? வறுமைக்காலத்திற் கிழத்துறவிபோல [3] ஸா ஸா என்று மேல் மூச்செறிகின்றாய்?

சேடன்—எட! நீயும் இப்பொழுது இந்திரவிழாவிற் பலிவிருப்பமுள்ள காக்கைபோலக் [4] கா கா என்று எதற்காக நன்றாகக் கத்துகின்றாய்?

விதூடகன்—இனி இன்னதென்று சொல்.

சேடன்—[தனக்குள்] இவ்வாறு சொல்லுவேன். [வெளிப்படையில்] எட! நின்பால் ஒன்று வினவுகின்றேன்.

விதூடகன்—[5] யான் வென்று உன்தலையிற் காலைவைத்து விடுவேன்.

---

[1] வசந்தசேனையின்வருகையை விதூடகன் முன்னரே அறிந்தவன் என்பதாலும் அவள்வருகையை வெளிப்படையாகக் கூறலாகாதென்பதுபற்றியும் 'இதோ அவள்' என்று குறிப்பாகக் கூறினன்.

[2] இன்னளென வெளிப்படக்கூறவில்லையென்னுஞ் சினத்தால் 'யார்? இவள் யார்?' என்றான்.

[3] ஸா என்பதற்கு வடமொழியில் அவள் என்பது பொருள். ஈண்டு இது மூச்சின் அநுகரண ஒலியாகக்கொண்டு கூறப்பட்டது.

[4] கா என்பதற்கு வடமொழியில் யாவள் என்பது பொருள். இது காக்கையொலியாகக்கொண்டு கூறப்பட்டது.

[5] யான் விடைகூறி வென்றுவிடுவேன் என்பது கருத்து.

சேடன்—அடே! அப்படியானல் அறிந்து சொல். எக்காலத்தில் மாமரங்கள் அரும்புகின்றன!

விதூடகன்—அடே! இழிதகவ்!முதுவேனிற்காலத்தில்.

சேடன்—[நகைத்து] அடே! இல்லை இல்லை.

விதூடகன்—[தனக்குள்] இப்பொழுது இவ்விடயத்தில் என்னசொல்லுவேன்! [நினைவுகூர்ந்து] நிற்க. சாருதத்தரை யடைந்து கேட்கின்றேன். [வெளிப்படையில்] அடே சிறிது நேரம் நில். [சாருதத்தர்பக்கல் அணுகி] ஓ! நண்பரீர்! ஒன்று வினவுகின்றேன். எக்காலத்தில் மாமரங்கள் அரும்புகின்றன?

சாருதத்தன்—மூட! வசந்தகாலத்தில்.

விதூடகன்—[சேடனருகிற்சென்று] [1]மூட! வசந்த காலத்தில்.

சேடன்—நின்பால் இரண்டாவதாக ஒன்றை வினவுகின்றேன். நல்ல செல்வப்பெருக்குடைய கிராமங்களைக் காப்பது எது?

விதூடகன்—அடே! வீதி.

சேடன்—[நகைப்போடு] அடே! இல்லை இல்லை.

விதூடகன்—நிற்க. ஐயத்தில் வீழ்ந்துவிட்டேன். [நினைவுற்று] நிற்க. சாருதத்தரை மீண்டும் கேட்கின்றேன். [மீண்டும் திரும்பிச்சாருதத்தரைநோக்கிஅங்ஙனமேகேட்கின்முன்.]

சாருதத்தன்—நண்ப! சேனை.

விதூடகன்—[சேடன்பக்கல் அணுகி] அடே! இழிதகவ! சேனை.

---

[1] சாருதத்தர் 'மூட' என்று தன்னை விளித்ததையேகொண்டு தானும் சேடனைநோக்கிக் கூறுகின்முன்.

சேடன்—இரண்டனையும் ஒருதொடராக்கி விரைந்து சொல்.

விதூடகன்—சேனை வசந்த.

சேடன்—அடே! மாற்றிச்சொல்.

விதூடகன்-[உடம்பைத் திருப்பிக்கொண்டு] சேனை வசந்த.

சேடன்—அடே! மூடப்பயலே! பதங்களைமாற்றிக்கூறு.

விதூடகன் — [[1]கால்களைத் திருப்பிக்கொண்டு] சேனை வசந்த.

சேடன்—அடே மூட! எழுத்துப்பதங்களை மாற்றிச் சொல்.

விதூடகன்—வசந்தசேனை.

சேடன்—அத்தகைய இவள் வருகின்றாள்.

விதூடகன்—அப்படியாயின் சாருதத்தர்பால் தெரிவிக்கின்றேன். [அருகிற்சென்று] ஓ! சாருதத்தரே! தங்களுடைய [2]தனிகன் வருகின்றான்.

சாருதத்தன்—நம் [3]வீட்டில் தனிகன் எங்கே?

விதூடகன்—நம் வீட்டின்கண் இல்லையாயின் வாயிலின்கண் இருக்கின்றான். இதோ வசந்தசேனை வந்துவிட்டாள்.

---

[1] பதங்கள் என்பதற்குக் கால்கள் எனப் பொருள்கொண்டு கால்களைத் திருப்பிக்கொண்டு கூறினன்.

[2] தனிகன்-கடன்கொடுத்தவன். வசந்தசேனை பொருள்கவர வருகின்றாளென்று கருதி அவ்வாறு கூறினன்.

[3] நம்வீட்டைநோக்கி இத் தனிகன் வரவேண்டியதென்? யான் யாரிடத்திலும் கடன்வாங்கியதில்லையே? என்பதாம்.

சாருதத்தன்—நண்ப! என்னை [1]ஏமாற்றுகின்றாயா?

விதூடகன்—என்சொல்லில் நம்பிக்கையில்லையாயின் இக் கும்பீலகனைக் கேளுங்கள். அடே! இழிதகவ! கும்பீலக! அருகில்வா.

சேடன்—[அருகிற்சென்று] ஐய! வந்தனம்.

சாருதத்தன்—நல்லோய்! நின்வரவு நல்லதாக. சொல். உண்மையாகவே வசந்தசேனை வந்துவிட்டாளா?

சேடன்—இதோ அவ் வசந்தசேனை வந்துவிட்டாள்.

சாருதத்தன்—[மகிழ்ச்சியோடு] நல்லோய்! யான் ஒரு பொழுதும் அன்புரையைப் பயனில்லாததாகச் செய்வதில்லை; ஆதலின்,மகிழ்ச்சியோடு தரும் இப்பரிசிலைப் பெற்றுக்கொள். [என்று மேலாடையைக் கொடுக்கின்றான்.]

சேடன்—[பெற்றுக்கொண்டு வணங்கி மகிழ்ச்சியுடையனாய்] பெருமாட்டியிடம் தெரிவிக்கின்றேன். [என்று போய் விட்டான்.]

விதூடகன்—ஓ! ஓ! இத்தகைய மழைநேரத்தில் எதற் காக வந்தாளென்று அறிகின்றீர்களா?

சாருதத்தன்—நண்ப! நன்குதுணிகின்றேனில்லை.

விதூடகன்—யான் அறிவேன். இரத்தினமாலை சிறு விலையுடையது; பொற்பணிமுடிப்புப் பெருவிலையுடையது என்றுகொண்டு மகிழ்ச்சியடையாமல் மற்றொன்றைப் பெறு தற்கு நாடி வந்தாள்.

---

[1] பொய்யுரையால் எனக்குக் காதலை வளர்விக்கின்றாய் என்பது கருத்து.

சாருதத்தன்—[1]மகிழ்ச்சியுடையளாய்ச் செல்வாள்.

[பின்னர் ஆடை அணிகள்திகழ [2]அவிசாரிகைவேடம்பூண்டு காதல்மிக்க வசந்தசேனையும் குடைபிடிக்கும் சேடியும் விடனும் வருகின்றனர்.]

விடன்—[வசந்தசேனையைநோக்கி]

ஆசிரியவிருத்தம்.

149. [3]காமுகராய் வழிச்செல்வோர் கணங்தொடா
வின்பநுகர் காலத் தேநாண்
ஏமமுறீஇச் சுரதநில மெனுமரங்கில்
விளையாட்டி னேகு மிம்மான்
தாமரைநீங் கியதிருவோ தனிமதனர்
மென்படையோ தகைசால் கற்பின்
றூய்மையுறு குலமகளிர்க் குறுதுயரோ
மதனதருத் துலங்கும் பூவோ. (கo)

வசந்தசேனே! பார்! பார்!

---

[1] அவளுக்குக் கொடுக்கத்தகாதபொருள் யாதுளது? என்பது கருத்து.

[2] அவிசாரிகை - காமநோயாற் பற்றப்பட்டுத் தலைவனிருக்கு மிடத்தை நாடிச் செல்கின்றவள்.

[3] நாண் ஏமம் உறீஇ - நாணுகிய காவலை எய்தி. விலைமகளிர்க்குச் சுரதகாலத்தில் நாணம் பூணுமென்ப. சுரதநிலமாகியஅரங்கம் - இன்பம் நுகர்தற்குரிய இடம். மதனர்மென்படை-மலர். முதலிற் காமனை வீரனுகக்கொண்டு அவனதுபடைக்கலமாகவும், பின்னர் அவனை மரமாகக்கொண்டு மலராகவும் உருவகப்படுத்தமையால், கூறியதுகூறலின்ருமெனக் கொள்க.

நிலமண்டில ஆசிரியப்பா.

150. [1]பிரிந்துறை மகளிர் வருந்துள மொத்த
பிறங்கற் சிமயத் திறங்கித் தூங்கும்
உருவுடைப் புயல்க ளூரற்றின வவ்வொலி
கேட்டுளங் களித்துக் கிளர்சிறை விரித்து
விரைந்தெழூஉ மயில்கள் மிளிர்மணிச் சிவிறியின்
விண்ணினை விசிறுதல் போலு நண்ணிய
சேற்றிற் றேய்ந்து தோற்று முகமுடைத்
தவளைகண் மழையிற் றுக்குறீஇத் திவளும்
அந்நீ ருண்ணுவ முன்னுவெங் காம
மீதுறு மயில்கள் வாய்திறந் தகவுவ
செந்நிறக் கடம்பு பொன்விளக் கிடுவன
குலவொழுக் கிறந்த நலமில் லோர்கொண்
மாணறு துறவிற் சேணுறு முகிலின்
மதிமறை தருமால் விதிமுறை யிழுக்கிய
தாழ்குடிப் பிறந்த தருணி போல
வலைமின் ஞேரிட நிலையுத வின்றே. (கக)

---

[1] வருந்து உள்ளம் ஒத்த புயல்கள் எனவும், இறங்கித் தூங்கும் உருவுடைப் புயல்கள் எனவும் கூட்டுக. பிரிவின் வருந்தும் மகளி ருள்ளம் கருமைநிறம்பற்றி யொப்பாம். பிறங்கல் - மலை. சிமயம் - குடுமி. குலவொழுக்கிறந்த கீழ்மக்கள்பால் துறவுநிலை விளக்க முறுமைபோல முகிற்படலத்தில் மதி மறையுமென்க.

வசந்தசேனை—ஐய! [1]நன்றுகூறினீர். [2]இப்பெண், [3]அறிவிலாய்!

கலிவிருத்தம்.

151. [4]நெருங்கிய பயோதரத் தென்னி னேயன்மிக்
கொருங்கியின் புறினுனக் கென்னென் றேலமிட்
டருஞ்சின முற்றெனத் தகைந்த டிக்கடி
மருங்கிரா மாற்றவள் வழிம றைக்குமால். (கஉ)

விடன்—நிற்க. இங்ஙனம் செய். இரவாகிய இப்பெண்ணைப் பழித்துரைப்பாயாக.

வசந்தசேனை—ஐய! பெண்பாலார்க்கு இயற்கையாக வமைந்த [5]கெட்டஎண்ணம்வாய்ந்த இவ் விராமகளைப்பழித்தலால் வரும் பயன் யாது? ஐய! பார்க்க.

---

[1] "தாழ்குடிப்பிறந்த தருணிபோல மின்னல் ஓரிடத்து நிலையுதல் இன்று" என்று முற்செய்யுளின் இறுதியிற் கூறியதைப் பாராட்டுகின்றாள்.

[2] இப்பெண் என்பது பின்வருஞ்செய்யுளில் இரா மாற்றவள் என்பவற்றோடு இயையும். மாற்றவளாகிய இரவென்னும் இப்பெண் எனப் பொருள்கொள்ளவேண்டும்.

[3] வசந்தசேனையைக்குறித்து.

[4] பயோதரம் - மேகம்; நகில். நேயன் சந்திரனைக்குறிக்கும்; இரவுக்கு நாயகன் அவனாகலின். இரா மாற்றவள்-இரவாகிய ஸபத்தினி. இரவு இன்பநுகர்தற்கு ஏற்றதாகலின், மாற்றவள் எனப்பட்டது. வசந்தசேனை, தன்னைநோக்கி இரவாகிய மாற்றவள் கூறியதாகக்கொண்டு கூறியது.

[5] இயற்கைக்குணத்தை மாற்றல் அரிது என்பதாம்.

நேரிசைவெண்பா.

152. [1]மங்குல் பொழிக வுறுமுக மாவசனி
இங்கு விடுக விவற்ருனென்?—பொங்கிய
தண்மையொடு வெம்மையினைத் தாமதியார் தம்மன்பர்க்
கெண்மையுறச் சென்மகளி ரேற்று. (கரு)

விடன்—வசந்தசேனே! பார்க்க, பார்க்க. இது மற்றென்று.

ஆசிரியவிருத்தம்.

153. [2]காற்றெனும் வினைவ னுற்கடு வேகங்
கலந்துநீர்த் தாரையாம் பெரிய
கோற்றிர ளரவப் போர்ப்பறை முழக்குங்
குலவுமின் பதாகையுங் கொண்டு
சாற்றுமக் கொண்மூ வரசுவிண் ணிடமாந்
தரியலர் நகர்நடுச் சார்ந்தங்
காற்றலில் பகைவ னஞ்செழு மதியி
னமைகர மனைத்தையும் பெறுமால். (கச)

---

[1] இடையூறு பலவுறினும் அவற்றைக் கடந்து காதலன்பாற் சேர்தற்குக் காமன்துணையுண்டென்பது கருத்து.

[2] மேகமாகிய வல்லரசு, காற்றெனும் அமைச்சனுற் கடுவேக முற்றுத் தாரையாகிய அம்புத்திரளையும் இடிமுழக்கமாகிய பறையையும் மின்னலாகியகொடியையும் கொண்டு விண்ணுகிய பகைவர்நகர் நடுவண் புக்குத் திங்களாகிய பகைவனிடத்தினின்றும் திறைமுழுதும் பெறுகின்ருன் என்பதாம். வினைவன் - அமைச்சன். கோல்- அம்பு. தரியலர் - பகைவர். கரம் - திறை; கிரணம். ஒரு வல்லரசு பகைவனிருக்கும் நகர்நடுப்புக்கு அவனைத் தாழ்வித்துத் திறைபெறுதல்போலச் சந்திரனுக்கு இருப்பிடமாகிய விண்ணிற் பரந்து அவனொளியைத் தடுத்தலான் மேகத்தின்பெருமை புலப்படுத்தவாறு.

வசந்தசேனை—இஃ திங்ஙனமாக. ஆ! இது மற்றொன்று.

ஆசிரியவிருத்தம்.

154. [1]களிற்றா சென்னக் கருமையுற் றகடு
காலினு னிரம்பலி னூன்று
பிளிற்றிமின் பகத்தா னிறம்பல வமைந்து
பிறங்குமிப் புயலினெஞ் சுடைகால்
அளித்துறு மகிழ்நர்ப் பிரிந்துறை மகளிர்க்
கன்னுசாப் பறையென வஞ்ச
வுளப்பக முப்பைப் புண்ணிலிட் டென்ன
வுாற்றுமா விதனவா வொழிக. (கரு)

விடன்—வசந்தசேனே! இஃது இங்ஙனமாக. மற்றொன்றைக் காண்க.

நேரிசைவெண்பா.

155. [2]கொக்கினங்க ளேவெண் டலைப்பாகாக் கூரொளிமின்
றக்கவா மேலசைக்குஞ் சாமரையா—மிக்க

---

[1] யானைபோலக் கருமைநிறம்பெற்று, வயிறு காற்றால் நிரம்புதலால் தொங்கிப் பேரொலிசெய்து, மின்னலானும் கொக்குக்களானும் பன்னிறம்வாய்ந்து விளங்கும் இம் முகிலால் நெஞ்சம் உடைந்திருக்குங்கால், இவ் வஞ்ச உள்ளத்தையுடைய கொக்கு, உப்பைப் புண்ணிலிட்டாங்கு மகிழ்நரைப் பிரிந்துறையும் மகளிர்க்குச் சாப்பறையெனப் பேரொலிசெய்யும்; ஆ! இதன் அவாக் கெடுக என்பதாம். அகடு - வயிறு. கால் - காற்று. நான்று - தொங்கி. பகம்-கொக்கு. அளித்து உறம்-அருள்புரிந்து கூடும். வஞ்ச உளப் பகம் ஊற்றும் என்க. ஊற்றல் - பேரொலிசெய்தல்.

[2] கொக்கினம் வளைந்துசுற்றுதலால் தலைப்பாகு ஆகவும், மின்னல் மறைந்து வெளிப்படுதலானும் வெண்ணிறத்தானும் சாமரையாகவும் கொள்ளப்பட்டன. பட்டத்து யானைக்குத் தலைப்

மதவா ரணவுருக்கொள் வாஞ்சை யுறல்போற்
பதவா னகம்விளங்கல் பார். (கசு)

வசந்தசேனை—ஐய! பார்க்க. பார்க்க.

ஆசிரியவிருத்தம்.

156. [1]வானனை தமால பத்திர நீலம்
வயங்குமிம் முகில்களுண் கதிரைத்
தானுடைத் தம்பு படவிழுங் கரிபோற்
றரையால் விழும்பல புற்று
மேனிலத் துறும்பொன் விளக்கென மின்னல்
விளங்கும்வெண் ணிலவினை மேகம்
ஆனவன் றிறலி றலைவனை யோட்டி
யவன்மனை கவர்ந்தெனக் கவரும். (கஎ)

விடன்—வசந்தசேனே! பார்க்க. பார்க்க.

---

பாகும் சாமரையும் உண்டென்ப. விண் யானையுருக்கோடலில் விருப்பமுள்ளதுபோற் காணப்படுதலைப் பார் என இயைக்க.

[1] தமாலபத்திரம்போல் நீலநிறம்வயங்கும் இம் முகில்களால் உண்ணப்பட்ட கதிரை வான் தானுடைத்து. அம்புகளால் தாக்கப் பட்டு யானை வீழ்தல்போல மழைத்தாரைகளால் தாக்கப்பட்டுப் புற்றுக்கள் விழுகின்றன. வன்றிறலில்லாத் தலைவனை யோட்டி அவன் மனைவியை வலியானொருவன் கவர்தல்போல, மேகம் சந்திரனை ஓட்டிச் சந்திரிகையைக் கவர்ந்துகொண்டது என்பதாம். தமாலம் - பச்சிலை. வான் தானுடைத்தென்பதனல் வானிடமெல்லாம் மேகங்கள் பரந்து சூரியனை மறைத்தன என்பது போதரும். மேகங்கள் சூரியனை மறைத்தலோடு சந்திரனையும் மறைத்தல் ஈண்டுக் கூறப் படுதலால் இக்காலத்தை மாலைப்பொழுதின் இறுதியாகக் கொள்ள வேண்டும்.

ஆசிரியவிருத்தம்.

157. [1]மின்னலாங் கச்சை யாப்பு
மிளிர்தரக் களிறு போலத்
துன்னிநின் றெங்கு மோடித்
துளையொழுக் குடையிக் கொண்மூப்
பொன்னில வேந்த ஞணை
பூண்டுபின் ஞனி லத்தை
யுன்னுவெண் பொற்க யிற்ற
லுயர்நிலத் தீர்ப்ப போன்ற. (கஅ)

இன்னும் காண்க.

158. [2]மிகுங்காற்ற னிறைந்தொலித்து மேதியினம்
போற்கறுத்து மின்ன லாய
தகுஞ்சிறகால் விண்பறக்குஞ் சலதியெனத்
தயங்குமுகில் சாருங் கந்தம்

---

[1] மின்னலாகிய உதரபந்தனக்கட்டு விளங்கக் களிறுபோல நெருங்கி யாண்டும் ஓடி நெருங்கிய நீரையொழுக்கும் இம்மேகங்கள், இந்திரனுணையைத்தாங்கி நிலத்தை வெள்ளிக்கயிற்றல் மேனிலத் தீர்ப்பபோற் காணப்படுகின்றன என்பதாம். யானைக்கு ஒழுக்கு மத நீராகும். மழைத்தாரைகள் விண்ணினின்று நிலம்வரை இடை யருதுறுதலானும், வெண்ணிறமுடைமையானும் வெள்ளிக்கயிறு போன்றன. இந்திரன் தன்னுற் காக்கப்படும் நிலம் சேய்மையி லிருத்தலை அணிமையிற்கொணரக் கட்டளைதர, மேகங்கள் ஈர்ப்பன போலும் என்பது உவமையைத் தன்னுளடக்கிய தற்குறிப்பேற்ற அணியாகும்.

[2] மேதி - எருமை. பறக்குங் கடல்போல விளங்கும் முகில். புதுமழை பெய்யுங்கால் நிலத்தில் மண்மணம் தோன்றும்.

புகுந்த்மையான் வீறுற்றுப் புதியபசும்
புன்முளையாற் பொலியும் பூமிக்
குகுந்தாரை பலவீழ்த்த லொளிர்வயிர
மணிப்படையாற் பிளத்த லொக்கும். (கசு)

வசந்தசேனை—ஐய! இது மற்றென்று.

ஆசிரியவிருத்தம்.

159. [1]கேகையினல் வருகவரு கெனவகவி
மயில்களெலாங் கிளர்ந்த ழைப்ப
ஓகைமிகுங் கொக்கினங்கள் விரைந்துயரப்
பறந்துதழீஇ யொளிர வஞ்சிச்
சோகமிக வுறவெகினந் தாமரைப்பூ
வமளியினைத் துறந்துநோக்க
மேகமிது மைக்குழம்பாற் றிசைதீற்றி
யெனவிருண்டு மிசைக்கட் செல்லும். (உ௦)

---

பூமிக்கு-நிலத்தின்கண். பிளத்தற்குச் செயப்படுபொருள் நிலமாகும். உருவம் ஒலி பரப்பு நீருடைமை என்னும் இவற்றான் மேகத்துக்குக் கடல் ஒப்பாகும். வெண்மையானும் கூர்மையானும் மழைத்தாரைகளுக்கு வச்சிரப்படை ஒப்பாகும். நிலம் தன்னுளடக்கிய பயனை முழுதும் நெடுநாளாக மக்களுக்கு வழங்கவில்லை என்னும் சினத்தால் பிளக்கத் துணிந்ததுபோலும் என்பது குறிப்புப்பொருள்.

[1] கேகை-மயிலின்குரல். எகினம்-அன்னம். முகிலெழுச்சியில் மயில்களும் கொக்குக்களும் உவகையுறுவன. அன்னம் துன்புறும். பெரியோர்க்கு நலமுண்டாய அளவில் அவரைச் சார்ந்தார்க்கு ஆக்கமும் சாராதார்க்குக் கேடும் உண்டாம் என்னும் உண்மையைக் குறிப்பிற் புலப்படுத்தவாறு.

விடன்—இஃது இங்ஙனம். ஆதலிற் பார்க்க.

ஆசிரியவிருத்தம்.

160. [1]அசைவறுதா மரைக்குழுவாங் கண்முகிழ்த்துப்
பகலிரவை யறியா தல்லும்
மிசைவருமின் ஞான்மறைந்து மறுகணத்தில்
வெளிப்படமே தினியா நங்கை
திசைமுகம்போர்த் தசைவின்றிக் குடைபோலச்
செறிந்தமுகில் விதான மாக
இசைவுறச்சூழ் மழைசுவரா வியைந்தவொரு
நீர்த்தாரை யில்லிற் றூங்கும். (உக)

வசந்தசேனை—ஐய! இஃது இங்ஙனமன்றே. ஆதலிற் பார்க்க, பார்க்க.

ஆசிரியவிருத்தம்.

161. [2]பொல்லாதா ரிடைப்புரிந்த நன்றியென
வொளியிழந்து பொன்றும் விண்மீன்
அல்லாருந் திசையனைத்து மன்பினியல்
காதலனை யகன்ற பெண்போல்

---

[1] மேதினியாம்நங்கை நீர்த்தாரையாகியஇல்லிற் றூங்குவது போலும் என்க. கண்முகிழ்த்தலும், இரவு பகல் அறியாமையும், கனவு தோன்றி மறைதலும், போர்த்துக்கோடலும், அசைவற்றுக் கிடத்தலும், பக்கச்சுவர் மேன்மூடலுள்ள வீட்டிற் படுத்தலும் உறங்குவோர்க்குள்ளன. அல் - இருள். விதானம் - மேற்கட்டி. மேலே நெருங்கிய முகில் விதானமாகவும், பக்கத்தே சூழ்ந்த முகில்கள் சுவராகவும் அமையப்பெற்ற இல்லில் என்க. நீர்த்தாரை - இடையறாத நீர்வீழ்ச்சி.

[2] காதலனையகன்ற பெண்போல் திசையனைத்தும் அல்லாரும் என்க. அல் ஆர்தல்-இருள் நிறைதல்.

[1]எல்லாரு மமரர்பதி படைநெருப்பான்
மிகவுமக மியைந்து வெம்பி
ஒல்லாத நீருருவின் விசும்புருகி
வீழ்தருமென் றுளங்கொள் கின்றேன். (உஉ)

இன்னும் பார்க்க.

ஆசிரியவிருத்தம்.

162. [2]வறுமையிற் புதிய செல்வம்
வாய்த்தவன் போலச் சால
உறுமிமே னோக்கித் தாழ்ந்திவ்
வுலகிற்பல் லிடத்தும் பெய்து
சிறுமைசெய் யிருள கத்திற்
செறிதரப் புரிந்தி யாரும்
அறிதர வுருவம் பல்வே
றமைந்திவட் டோன்று மிவ்வான். (உந)

விடன்—இஃ திங்ஙனம்.

---

[1] எல்-ஒளி. அமரர்பதி படை-வச்சிராயுதம். முகில் பொழிதல், விசும்பு வச்சிரப்படையின் நெருப்பால் உள்வெதும்பி உருகி நீருருவின் வீழ்தல்போற் காணப்படுகின்றது என்பதாம்.

[2] இவ்வான் புதியசெல்வம் வாய்த்தவன்போலத் தோன்றும் என்க. முகில், இடியொலிசெய்து மேற்சென்றும் கீழறங்கியும் பெய்து வானிடமெல்லாம் இருள்செறியப்புரிந்து யானை, மலை, மாளிகை முதலிய பல்லுருவெய்தித் தோன்றும் என்பதும், புதியசெல்வன், வன்சொற்கூறிச் செல்வக்களிப்பால் மேல்நோக்கி எதிர்நின்றோரை அவமதித்தும் பார்க்கவிரும்பாமல் கீழ்நோக்கித் தகாதஇடங்களில் தற்பெருமைகுறித்துப் பொருள்வழங்கியும் அஞ்ஞான இருளை அகத்திற்கொண்டு பல்வேறு இயல்புகளைப் பொருந்தியும் நிற்பன் என்பதும் புலப்படுதல் உணர்க.

நிலைமண்டில ஆசிரியப்பா.

163. [1]மின்னலின் விசும்பெரி மேவுதல் போலும்
துன்னிய கொக்கினஞ் சூழ்தர லானனி
சிரிப்பது போலுமிவ் வுருப்புனற் றுரையாம்
உந்துபல் சரந்தரு மிந்திர தனுவால்
போமர் முருக்கிய பெயர்தரல் போலும்
உலறிய விடியினு லலறுதல் போலும்
நலிதரு காற்றினு னடுங்குதல் போலும்
நீருண் டிருண்டு சார்தரு முகில்களாற்
பெருங்கரும் பாம்பும் ஒருங்குசெறி புகையும்
நெருங்குதல் போலும் நேருறத் தோன்றுமால். ()

வசந்தசேனை—

கலிவிருத்தம்.

164. [2]அன்பியல் காதல னகத்தைச் சாருவேன்
முன்புறு கொண்டனின் முழக்கி னச்சுறீஇ
நின்பெருந் தாரையா நீள்க ரங்களால்
என்புரந் தீண்டலி னிகத்தி நாணமே. (உரு)

---

[1] விசும்பு, போலும்; நேருறத்தோன்றும்; என்க. விசும்பு எழுவாய். முருக்கிய - அழிக்க.

[2] கொண்டல் - மேகம்; விளி. சாருவேனை அச்சுறுத்திக் கைகளால் என்உடம்பைத் தொடுதலின் நாணமில்லாயாயினை என்க. புரம்-உடம்பு. விருப்பமில்லாத ஒருத்தியை வலிந்துதீண்டல் நாணில் செய்கையாகும் என்பதாம்.

ஓ! இந்திர!

நேரிசைவெண்பா.

165. [1]கொண்டன் முழக்காற்கு முறுதிநின்னேடெனக்குப்
பண்டுபயில் காமப் பரிசுண்டோ—அண்டி
விழிநோக்குங் காதலன்பான் மேவுமென்னை மாரி
வழிமறித்தன் மாண்பன் றுனக்கு. (உகூ)

இன்னும்,

166. அகலியை தன்பொருட்டால் யான்கோ தமனென்
றிகலுமதி காமத் தியைந்து—புகலுமுறை
பொய்யன்றே யிந்திர [2]அப் புன்கணெனக்குமுள
தையோ மழையை யகற்று. (உஎ)

இன்னும்,

167. பேரொலியைச் செய்துமழை பெய்திங்கசனிபல
[3]ஆர விடுக்கினுமென் னுபிரங்கண்—நேர்மகவ
காதலனைச் சாரக் கருதிப் படர்மகளிர்க்
கேதுந் தடையாவ தில். (உஅ)

---

[1] மாரி - மழையால். பெண்பாலாரிடத்து வீரங்காட்டல் ஆண்மையன்றாதலின், "மாண்பன்று" என்று கூறப்பட்டது.

[2] அப் புன்கண்-அவ் வருத்தம். கோதமன்சினத்தையறிந்தும் உள்ளத்தால்நினைந்தஅகலியையைக்கூடுதற்குநீ கொண்ட வருத்தம், காதலனைக் கூடுதற்குச் செல்லும் எனக்கும் உண்டென்பதாம்.

[3] ஆர - நிறைய.

கலிவிருத்தம்.

168. [1] ஆடவர் வன்கணா ராத லான்முகில்
மாடுறப் பேரொலி செயினுஞ் செய்கமன்
எடவிழ் கூந்தலார்க் கியையு மின்னலை
நாடிலை மின்னலா நங்கை நீயுமே. (உகூ)

விடன்—அம்மே! பழித்துரைத்தல் வேண்டா. தங்களுக்கு இம்மின்னல் உதவிசெய்வதாகும்.

கொச்சகக்கலிப்பா.

169. [2] மன்னுமயி ராவதத்தின் மார்பினலை பொற்கயிறும்
துன்னுமலை யுச்சியின்கட் டோன்றுதுகிற் கொடியுமுயர்
நன்னர்மக வானில்லி னடுவணுறு தீபமும்போல்
மின்னிநின துயிரனையான் மேவுமிடம் விளம்புறுமால். ()

வசந்தசேனை—ஐய! அஃது உண்மையே. இதோ தோன்றுகின்றது அவ்வில்லம்.

---

[1] முகிலை ஆடவனாகவும் மின்னலைப் பெண்மகளாகவும் கொண்டு கூறியது. இன்னல் - துன்பம். மின்னல் அடிக்கடி கண்களுக்குப் புலப்பட்டு மறைதலால் வழிச்செல்லுதற்கு இடையூறுசெய்கின்றதென்பது கருத்து.

[2] முகில்கள், ஐராவதம் மலைச்சிகரம் இல்லம் இவற்றின் வடிவங்களாகக் காணப்படுதலானும், மின்னல், வெண்மை பொன்மை நிறமுடையதாகத் தோன்றுதலானும் ஒப்புமை அறியப்படும். முகில் நீலநிறமுடையதாயினும், மின்னுத் தோன்றும்பொழுது வெண்மையாகக் காணப்படும்; ஆதலின் ஐராவதமாகக் கூறப்பட்டது. ஒரு சமயம் மேகத்துக்குக் கீழும், மற்றொருசமயம் மேலும், பிறிதொரு சமயம் நடுவிலும் மின்னல் வெளிப்படுதலின் மூன்றுவிதமாக உவமிக்கப்பட்டது.

விடன்—எல்லாக்கலைகளையும் உணர்ந்த தங்களுக்கு இப்பொழுது உபதேசிக்கற்பாலது ஒருசிறிதுமின்று. ஆயினும், நட்புரிமை சிறிது கூறத் தூண்டுகின்றது. இக் காதலனில்லத் துட்புகுந்தபின் சினத்தை மிகுதியாகக்கொள்ளல் கூடாது.

கலிவிருத்தம்.

170. [1]ஊடனீட் டிப்பினின் பொழியு மென்னினும்
ஊடலின் றெனிற்சுக முறுத லெங்ஙனம்?
ஊடுதி சினங்கொள வுறுத்தி காந்தனைக்
கூடுதி யன்னதா லுவகை கூட்டுதி. (கூக)

நிற்க. இனிச் செயற்பாலது இது. ஓ! ஓ! யார்? மாட்சிமிக்க சாருதத்தர்க்குப் பின்வருமாறு அறிவித்தல்வேண்டும்.

ஆசிரியவிருத்தம்.

171. [2]செங்கிறவெண் ணிறக்கடம்பின் மலர்மணமும்
புயற்குழுவுந் திகழிக் காலம்
மின்னலினம் புதவொலியின் மிகநடுங்கி
நினைக்காணும் வேட்கை யாற்றன்
பொன்னெளிர்நூ புரவடியிற் படிந்தகருஞ்
சேறுகழீஇப் பொருவில் காம
மன்னியுள மகிழ்ந்தளக நனைதரக்கா
தலனுநின் மனைக்க ணுற்றாள். (கூஉ)

---

[1] ஊடல் நீட்டித்தல் துனியாகும். அதனால் இன்பமின்றாம். ஊடுதல் இன்பவளர்ச்சிக்கு ஏதுவாகும். "ஊடுதல் காமத்திற் கின்பம்" (திருக்குறள் 1330.) "துனியும் புலவியு மில்லாயிற் காமங், கனியுங் கருக்காயு மற்று" (திருக்குறள் 1306) என்பன ஈண்டு ஒப்பு நோக்கற்பாலன.

[2] அம்புதம்-மேகம். சிவிகை முதலியவற்றில் ஏறிவரும் தகுதியுடையளாயிருந்தும் காலான் நடந்து மழையால் நனைந்து நேர்ந்த அச்சத்தையும் பொருட்படுத்தாமல் வந்ததற்குக் காரணம் அவள் காதலன்மாட்டுள்ள காதல்நிறைவென்பது கருத்து.

சாருதத்தன்—[கேட்டு] நண்ப! இஃது என்னவென்று அறிக.

விதூடகன்—தங்கள் கட்டளைப்படியே. [வசந்தசேனையின் பக்கல்அணுகி அன்போடு] அம்மே! தங்களுக்கு மங்கலம் உண்டாக.

வசந்தசேனை—ஐய! வந்தனம். ஐயன்வரவு நலமுடையதாக. [விடனைநோக்கி] ஐய! குடைபிடிக்கும் இவள் தங்களுக்கே இருக்கட்டும்.

விடன்—[தனக்குள்] என்னைத் திரும்பிப்போம்படி செய்தற்கு இவ்வுபாயத்தைத் திறமையோடு மேற்கொள்ளுகின்றாள். [வெளிப்படையாக] அங்ஙனமே ஆக. அம்மே! வசந்தசேனே!

ஆசிரியவிருத்தம்.

172. [1]பொல்லாமை யுருவினதாய்ச் செருக்கொடுவஞ்
சகமாயை பொய்ம்மை யாதி
யெல்லாமுண் டாவதற்கோர் பிறப்பிடமா
யின்பவிளை யாட்டிற் கில்லாய்ச்
சொல்லாருஞ் சுரதவிழாப் பேறுடைய
தாய்த்துலங்குங் கணிகைக் கூலத்
தொல்லாத கண்ணோட்ட மெனும்பண்டக்
கெளிதின்விலை யுறுவ தாக. (௩௩)

---

[1] கணிகையாகிய கடைத்தெருவில் கண்ணோட்டமாகிய பொருட்கு விலை எளிதின் உறுவதாக என இயைக்க. கண்ணோட்டம் ஈண்டு ஆடவர்மனத்தை இன்புறுத்தலாகும். அதற்கு விலையாக அவர்பொருளை எளிதின் அடைக என்றான்.

வசந்தசேனை—ஐய! மைத்திரேயரே! உங்களுடைய சூதர் எங்கிருக்கின்றார்?

விதூடகன்—[தனக்குள்] ஓ! ஓ! இவள் கூறிய சூதர் என்னும் சொல்லால் நம் நண்பர் [1]அலங்கரிக்கப்பட்டுள்ளார். [வெளிப்படையில்] அம்மே! இவர் உலர்ந்த மரங்களையுடைய உபவனத்தில் இருக்கின்றார்.

வசந்தசேனை—ஐய! உங்களுடைய உலர்ந்த மரங்கள் சூழ்ந்த உபவனம் என்று சொல்லப்படுவது யாது?

விதூடகன்—பெருமாட்டி! எவ்விடத்தில் உண்ணுதலும் பருகுதலும் இல்லையோ அவ்விடமே யாம்.

[வசந்தசேனை புன்முறுவல்செய்கின்றாள்.]

விதூடகன்—ஆதலின் பெருமாட்டி உட்புகுக.

வசந்தசேனை-[[2]மறைவிற் சேடியைநோக்கி] இவ்விடத்து உட்புகுந்து யான் [3]என்னசொல்லுவேன்?

---

[1] சாருதத்தர் அடைக்கலப்பொருளைச் சூதில் தோற்றார் என்னும் பொய்ம்மொழியை வசந்தசேனை ஏற்றுக்கொண்டு அவரைச் "சூதர்" என்று கூறியதாக நினைந்து அடைக்கலப்பொருளைக் கவர்ந்தார் என்னும் பழியை அச்சொல் ஒழித்தலின், அதனை அணிகலனாகக்கொண்டு கூறினான்.

[2] விதூடகன் அறியாவண்ணம்.

[3] அன்புண்மையும் என் எளிமையின்மையும் புலப்படுதற்குரிய எச்சொல்லைக் கூறுவேன்? என்பது கருத்து.

சேடி—[1]"சூதரே! இம் மாலைப்பொழுது தங்களுக்கு இன்பமுடையதாக இருக்கின்றதா?" என்று சொல்லுங்கள்.

வசந்தசேனை—[2]அவ்வளவு சொல்லுவதற்கு ஆற்றலுடையேனா?

சேடி—அவ் [3]வமயமே தங்களை ஆற்றலுடையளாகச் செய்யும்.

வசந்தசேனை—[உட்புகுந்து அருகிற்சென்று [4]மலர்களால் தட்டி] ஏ! சூதரே! இம்மாலைப்பொழுது தங்களுக்கு இன்பமுடையதாக இருக்கின்றதா?

சாருதத்தன்—[பார்த்து] ஆ! வசந்தசேனை வந்துவிட்டாள். [மகிழ்ச்சியோடெழுந்து] ஏடி! காதலீ!

---

[1] "சூதரே" என்னும் விளியால் என்வரவு அணிகலன்களின் நிமித்தமாகும்; கூடல்கருதி வலியவந்ததாகக் கொள்ளற்க என்பது போதரும். இஃது எளிமையின்மையைப் புலப்படுத்தும். 'தங்களுக்கு இன்பமுடையதாக இருக்கின்றதா?' என்னும் இதனால் எனக்குக் கூடலின்மையால் இன்பந்தந்திலது என்பது போதரும். இஃது அன்புண்மையைப் புலப்படுத்துவதாகும்.

[2] முதற்காட்சியில் இவ்வளவு சொல்ல இயலுமா? என்பதாம்.

[3] சாருதத்தனைக் கண்டஅமயம், நாணத்தைப்போக்கிக் காதலை விரிவுறச்செய்யும் என்பதாம்.

[4] மலர்களால் தட்டுதல் தன்னைக் காமனம்புகள் தாக்குகின்றன என்பதைப் புலப்படுத்தற்காம்.

நேரிசைவெண்பா.

173. [1]என்றுமிம் மாலை விழித்திருப்ப வேகுகின்ற
தென்றும் பெருமுச் செறியவிராப்-பொன்றினவால்
மாதுன் னுடனு மகிழ்வேற் ககல்விழியிப்
போதயர்வு போக்கும் பொழுது. (௱௭௩)

ஆதலின் நின்பொருட்டு நல்வரவுகூறுகின்றேன். இதோ இருக்கையுள்ளது. இதன்கண் இருக்கவேண்டும்.

விதூடகன்—இதோ இருக்கையுள்ளது. பெருமாட்டி இருக்கவேண்டும்.

[வசந்தசேனை இருக்கையில் இருக்கின்றாள். அதன்பின் எல்லோரும் இருக்கின்றனர்.]

சாருதத்தன்—நண்ப! பார்க்க. பார்க்க.

கலிவிருத்தம்.

174. [2]ஒருசெவி நுனியிடைத் தூங்கு மொண்கடம்
பரசிளங் குமரனுக் காட்டு மஞ்சனம்

---

[1] விழித்திருப்ப ஏகுகின்றதென்பது வறிதே கழிகின்றதென்னும் பொருள் தரும். நிகழும் மாலைப்பொழுதும் அங்ஙனமேயாமென்பான் 'கழிகின்ற' தென நிகழ்காலத்தானும், வரும் இரவு இன்பந் தருதற்கு ஏதுவாமென்பான் சென்றஇரவுகளைப் 'பொன்றின' என இறந்தகாலத்தானும் கூறினன். பொழுது - இம் மாலைப்பொழுது. இப்போது அயர்வுபோக்கும் - இவ்வமயம் நின்வரவால் துன்பத்தை ஒழிப்பதாகும்.

[2] கடம்பு-கடப்பமலர். நீராட்டப்படும் ஒரு நகில் இளவரசனை ஒக்குமென்றமையால் மற்றொன்று இருக்கையிலிருக்கும் பேரரசனைப்

புரைதரு மழைதரும் புனலி னுலொரு
திருமுலை நனைதர வாட்டுஞ் சீர்மையே. (௩௫)

ஆகலின், நண்ப! வசந்தசேனையின் ஆடைகளிரண்டும் நனைந்துபோயின. வேறு இரண்டு சிறந்த ஆடைகளைக் கொண்டுவருக.

விதூடகன்—பெருமான் கட்டளைப்படியே செய்வேன்.

சேடி—ஐய! மைத்திரேயரே! நீங்கள் இருங்கள். [1] யானே நம் பெருமாட்டிக்குரிய பணிவிடைகளைச் செய்வேன். [அங்ஙனமே செய்கின்ருள்.]

விதூடகன்—[மறைவிற் சாருதத்தனைநோக்கி] ஏ! நண்பரீர்! பெருமாட்டி வசந்தசேனையின்பால் ஏதாவது ஒன்றைப் பற்றி [2]வினவுகின்றேன்.

சாருதத்தன்—அங்ஙனமேசெய்க.

விதூடகன்—[வெளிப்படையில்] சந்திரனது ஒளி மறைந்திருக்கும் இத்தகைய மழைக்காலத்து இருளில் பெருமாட்டி இங்குவந்தது எக்காரணத்தைமுன்னிட்டு?

சேடி—பெருமாட்டி! இவ்வந்தணர் [3] அநாகரிகர்.

---

போல உள்ளதென்பது போதரும். கடம்பு புனலினுல் நகில் நனைதர ஆட்டும் சீர்மை இளவரசற்கு ஆட்டும் மஞ்சனத்தை ஒப்பாம் என இயைக்க.

[1] யான் உடன்கொண்டுவந்த ஆடைகளைக் கொடுத்து உபசரிப்பேன் என்பதாம்.

[2] வினவுதலால் உரையாடல் நிகழுமென்பதாம்.

[3] காமுகர்களின் இரகசியநிலை வினவத்தக்கதன்று, ஆதலின்.

வசந்தசேனை—அடி! [1]நிபுணர் என்று சொல்.

சேடி—இப்பெருமாட்டி "அவ் விரத்தினமாலையின்விலை எவ்வளவு?" என்று கேட்பதற்காக இங்கு வந்தாள்.

விதூடகன்—[[2]மறைவில்] ஓ! ஓ! "இரத்தினமாலை சிறுவிலையுடையது; பொற்பணி பெருவிலையுடையது என்று கருதி மகிழ்ச்சியடையாதவளாய், மற்றொன்றைத் தேடுதற்பொருட்டு இங்கு வந்திருக்கின்றாள்" என்று முன்னமே யான் கூறினேனன்றோ?

சேடி—இப்பெருமாட்டி அவ்விரத்தினமாலை தன்னதென்றுகூறிச் சூதில் தோற்றுவிட்டாள். அச் சூதாடுகளத் தலைவனும் அரசன்கட்டளையைமேற்கொண்டு எங்குச்சென்றானென்பது தெரியவில்லை.

விதூடகன்—அம்மே! யான் சொல்லியதே நின்னாலும் சொல்லப்பட்டது.

சேடி—சூதாடுகளத்தலைவனைத் தேடிக் காணும்வரை இப்பொற்பணியை எற்று வைத்துக்கொள்ளுங்கள். [என்று அதனைக் காட்டுகின்றாள்.]

விதூடகன்—[சிந்திக்கின்றான்.]

சேடி—ஐய! மிகவும் உற்றுப்பார்க்கின்றீர்; இதனை முன்னர்க் கண்டிருக்கின்றீரோ?

விதூடகன்—அம்மே! சிற்பத்திறமையால் இஃது என் கண்களைக் கவர்கின்றது.

---

[1] இன்பவளர்ச்சிக்கு இவ்வினை, தலைக்கீடாக உள்ளதாகலின்.

[2] சேடியறியாவாறு சாருதத்தனைநோக்கிக் கூறியது.

சேடி—ஐய! கண்களால் [1]வஞ்சிக்கப்பட்டீர். நும்பால் அடைக்கலமாகவைக்கப்பட்ட அப் பொற்பணி இதுவே.

விதூடகன்—[மகிழ்ச்சியோடு] ஓ! நண்பரீர்! நம் இல்லத்தினின்றும் கள்வராற் கவரப்பட்ட பொன் அணிகலமே இது.

சாருதத்தன்—நண்ப!

நேரிசைவெண்பா.

175. [2]அடைக்கலமா மப்பொருட்கி யாமாறு செய்யப்
படைத்த காவியனம் பாலே—எடுத்திவடான்
சொன்னவிது வாய்மைத் துணிவோ விளையாட்டோ
இன்ன தெனவறியேன் யான். (௱௭௫)

விதூடகன்—ஓ! நண்பரீர்! அப் பொற்பணி இதுவே யென்று என் பிராமணத்தன்மையாற் சூளுறவுற்று உறுதி கூறுகின்றேன்.

சாருதத்தன்—அங்ஙனமாயின் எனக்கு மிகவும் [3]மகிழ்ச்சியே.

விதூடகன்—[மறைவில்] ஓ! "எங்கிருந்து இப்பொற்பணியை அடைந்தீர்கள்" என்று வினவுகின்றேன்.

சாருதத்தன்—அதனால் என்னகுற்றம்?

---

[1] முன்னர்க்கண்டது நினைவுக்கு வாராமையான், கண்களால் என்றது ஔபசாரிகம்.

[2] களவுசெய்யப்பட்ட அடைக்கலப்பொருட்கு எதிராக நாம் படைத்துக்கொண்ட வஞ்சகத் தன்மையையே இவள் எடுத்துக் கூறினள்; இஃது உண்மையோ? விளையாட்டோ? அறியேன் என்பதாம். காவு இயல் - வஞ்சகவொழுக்கம்.

[3] அவ்வடைக்கலப்பொருள் திருடப்படவில்லை என்பதுபற்றி.

விதூடகன்—[சேடியின்செவியில்] [1] இங்ஙனமன்றே?

சேடி—[விதூடகன்செவியில்] [2] இங்ஙனமன்றே?

சாருதத்தன்—என்னபேசுகின்றீர்கள். யான் அதற்குப் புறம்பானவனு?

விதூடகன்—[சாருதத்தன்செவியில்] [3] இங்ஙனமன்றே!

சாருதத்தன்—நலமுடையாய்! உண்மையாகவே அது தானு இப்பொற்பணி?

சேடி—ஐய! ஆம்.

சாருதத்தன்—நலமுடையாய்! எனக்கு இனியதொன்றை அறிவிப்பின் அதனை யான் ஒருபொழுதும் [4] வறிதாகச்செய்வதில்லை. ஆதலின் மகிழ்ச்சிக்கு அறிகுறியாகத் தரப்படும் இக்கணையாழியைப் பெற்றுக்கொள். [என்று மோதிரமில்லாத கையைப்பார்த்து நாணம் எய்துகின்றான்.]

வசந்தசேனை—[தனக்குள்] இதனாலன்றே விரும்பப் படுகின்றீர்கள்.

சாருதத்தன்—[மறைவில் விதூடகனைநோக்கி] ஆ! துன்பம்!

---

[1] இப்பொற்பணி எங்கிருந்துகிடைத்தது என்பதாம். கள்வராற் கவரப்பட்டதைப்பற்றியதாதலின் செவியில் மறைவாகக் கூறப்பட்டது.

[2] சருவிலகன் களவிற்கொண்டு மதனிகைக்குச் சேர்த்த செய்தியும் இரகசியமாதலின், செவியிற் கூறப்பட்டது.

[3] உண்மை இவ்வாறென்பதாம்.

[4] அதற்குப் பரிசில் அளித்தல் என் இயல்பு.

கலிவிருத்தம்.

176. [1]பொருளி லார்க்குயிர் வாழ்க்கையிப் பூமியிற்
கருதி லென்பயன் காய்தலு வத்தலாம்
இருமை யும்பய னில்லன வாமெதிர்
புரிய வெண்ணிற் பொருளில்லை யாதலின். (கள)

இன்னும், நேரிசைவெண்பா.

177. வற்றன் மரமு மணிநீ ரிலாக்குளமும்
துற்று மிறகிழந்த சோர்குருகும்—உற்றவிடப்
பல்லிழந்த வல்லரவும் பாரிற் கருதுங்கால்
நல்குரவா ளற்பொருவும் நன்று. (கஅ)

இன்னும், ஆசிரியவிருத்தம்.

178. [2]பண்டுணர்ந்து பயின்றோரைக் கூடியதா
னிலைமறந்த பண்பு ளேனுக்
கெண்டகுநற் பரிசீதற் கியைகாலம்
பயனிலதா யிருந்த திங்ஙன்
அண்டியநல் குரவாளர்க் கரியபுன
லறுகிணறு மடிக்க ணிற்று
விண்டுநிலம் வீழ்மரமும் பாழ்மனையு
மொப்பாக விளம்ப லாமால். (கசு)

---

[1] இப்பூமியிற் பொருளிலார்க்கு உயிர்வாழ்க்கை என்னபயன் உடையது? யாதும்இன்று என்பதாம்: வறியவனருளாலும் சினத்தாலும் பிறர்க்குவரக்கடவ இன்பதுன்பங்கள் இல்லை என்பதுகருத்து.

[2] பழையநண்பரைக்கூடியதால். நிலைமறந்த – மகிழ்ச்சிமிகுதியால் தம் வறியநிலையை மறந்த. புனலறுகிணறும், வீழ்மரமும், பாழ்மனையும் முறையே நீர்வேட்கையுடையார்க்கும், பறவைகளுக்கும், ஐயமேற்றுண்போர் முதலியோர்க்கும் பயன்செய்யாமைபோல, வறியவர் தம்மையடைந்தோர்க்கு வேண்டுவனசெய்ய இயலார் என்பது கருத்து.

விதூடகன்—ஆ! மிக்க வருத்தமுறுதல் வேண்டா. [வெளிப்படையிற் பரிகாசமாக] பெருமாட்டி! யான் நீராடுங்காலுடுத்தும் என் ஆடையைத் தரல்வேண்டும்.

வசந்தசேனை—ஐய! சாருதத்தரே! இவ் [1]இரத்தின மாலையால் இவளை நிறுத்துணர எண்ணியது தக்கதன்று.

சாருதத்தன்—[[2]நாணத்தோடு புன்முறுவல்செய்து] வசந்தசேனே! பார்க்க பார்க்க.

நேரிசைவெண்பா.

179. [3]எல்லாரு மென்னை யெளிமைப் படுத்துரைப்பர்
அல்லா தெவனுண்மை யாதரிப்பான்—பொல்லாவிவ்
வையந் தனிலாண்மை மாற்றும் வறுமைபிறர்
ஐய முறற்கேது வாம். (சo)

விதூடகன்—அம்மே! தாங்கள் இவ்விடத்திலேயே உறங்கவேண்டுவதுதானே?

சேடி—[சிரித்து] ஐய! மைத்திரேயரே! இப்பொழுது உங்கள் [4]அநாகரிகத்தன்மையை மிகுதியாகப் புலப்படுத்து கின்றீர்.

---

[1] சிறுவிலையுள்ள பொற்பணிக்கு எதிராக மிகுவிலையுள்ள இரத்தினமாலையைத் தந்தது, யான் பேராசையுடையளா அல்லளா என்பதை ஆராய்தற்கேபோலும். இவளை என்பது தன்னைப் படர்க்கையாகக்கூறியது.

[2] சூதில் தோற்றேனென்று பொய்கூறி அடைக்கலப்பொருளுக்கு ஈடுசெய்தல் அன்புடைமைக்கு ஒத்ததாகாது என்பதுபற்றி நாணமுடையனாயினன்.

[3] இது, 3-ம் அங்கத்து 24-ம் செய்யுளாகவந்துள்ளது காண்க.

[4] எங்கள் கருத்துணராமல் இங்ஙனம் வெளிப்படையாகக் கூறியது அநாகரிகமாகும் என்பதாம்.

விதூடகன்—ஏ! நண்பரீர்! மகிழ்ச்சியோடு வீற்றிருக்கும் மக்களை மிக்க நீர்த்தாரைகளால் ஓட்டுதல்போல இம் மேகங்கள் மீண்டும் பொழிகின்றன.

சாருதத்தன்—நீ நன்றுகூறினை.

ஆசிரியவிருத்தம்.

180. [1]சேற்றிடைக் கமல நாளஞ் செறிநிதி யென்ன விண்ணில்
தோற்றுமிம் முகிலைக் கீண்டு தூயநீர்த் தாரை வீழ்தல்
தேற்றுமத் திங்கட் செல்வன் மறைதலாற் சேணு நங்கை
யூற்றுடைத் துன்பக் கண்ணீ ரொழுக்குதல் போலு மன்றே.

இன்னும்,

181. [2]அலமுறு படையோ னுடைபோற் றிகழு
மம்புதம் அருச்சுனன் கணைபோற்
பலமிகு கூர்மை படைத்துநல் லொழுக்கிற்
பயில்பவ ருளமெனத் தெளிந்த
நிலவுவெண் ணிறத்த தாரைகள் விரைவி
னிலமிசை வீழ்த்தன்மே னிலத்திற்
குலவுமிந் திரன்ற னிதிக்கணித் திலத்தின்
குழுவினைச் சொரிதலை யொக்கும். (சஉ)

காதலி! பார். பார்.

---

[1] கமலநாளத்தின் நிதி சேற்றிடைப் பிளந்து வெளிப்பட்டாற் போல இம்முகிலைக் கீண்டு நீர்த்தாரைகள் வீழ்தல், சேணுகிய நங்கை, தன் நாயகனுகிய திங்களஞ்செல்வனைக் காணுமையால் வருந்திக் கண்ணீர் ஒழுக்குதல்போலாம்.

[2] அலம் உறு படையோன் - கலப்பைப்படையையுடைய பலராமன். அவன் ஆடை நீலநிறமுடையது. படைத்துத் தெளிந்த தாரைகள், வெண்ணிறத்த தாரைகள் எனக் கூட்டுக. நிதி-கருவூலம்.

ஆசிரியவிருத்தம்.

182. [1]கலவையாங் தமால பத்திரக் குழம்பிற்
கவினுமிப் புயற்குழுத் திமிர்ந்து
மலர்மணஞ் சீத மலிதர நெருங்கு
மாலைவந் தினிதுமேல் விசிற
இலகுமிவ் விண்ணை முகில்வர வின்ப
வுவகையி னிராகமுற் றிம்மின்
வலியவந் தன்பன் றனைத்தழீஇ மகிழும்
மங்கையைப் போற்றமு வுறுமால். (சஉ)

[வசந்தசேனை இன்பச்சுவைதோன்ற அவிநயித்துச் சாருதத்தனைத் தழுவுகின்றாள்.]

சாருதத்தன்—[ஊற்றின்பத்தை அனுபவித்துத் தானும் அவளைத் தழுவிக்கொண்டு]

---

[1] தமாலபத்திரம்-பச்சிலைமரத்தின் இலை. இன்-ஒப்புப்பொருளது. புயற்குழுவைத் திமிர்ந்து, மாலைக்காலத்து இளங்காற்று மேல் விசிற, இலகும் விண் என்க. திமிர்தல் - பூசுதல். வந்து - காற்று. முகில் ஆகுபெயர்; கார்காலத்தையுணர்த்தும். இராகம்-ஆசை; செந்நிறம். விண்ணை இம் மின் மங்கையைப்போல் தழுவுமென்க. அன்பன் வேண்டாமலிருக்குங்கால் வலியவந்து அவனைத் தழுவும் மங்கை போல் என்றதனால், விண் வேண்டாமலிருக்குநிலையில் அதன்கண் மின் இயைந்ததென்பது புலனும்.

நேரிசைவெண்பா.

183. [1]விண்முகில்காண் மிக்கொலிமின் மேவு நுமதருளாற்
கொண்மதன நோயிற் குறையெனுடல்—தண்மைமிகும்
ஊற்றின்பத் தாற்புளக முற்றவ் விராகத்தால்
எற்குங் கடம்பி னியல். (சச)

விதூடகன்—இழிதகவுடைய மேகபடலமே! பெருமாட்டியாகிய வசந்தசேனையை மின்னலினால் அச்சுறுத்துகின்றாய். ஆதலின், இப்பொழுது நீ மிகவும் பொல்லாங்குடையையாகின்றாய்.

சாருதத்தன்—நண்ப! நீ இங்ஙனம் பழித்துரைத்தல் தகாது.

நேரிசைவெண்பா.

184. [2]என்போல்வார்க் கெட்டா வினிய ளெனைத்தழுவிப்
பொன்போற் கொளத்தாம் புரிந்தமையான்—மின்னலொடு
வீழுநீர்த் தாரை விடாஅப் புயற்குழுவும்
வாழ்கநூ றாண்டு மகிழ்ந்து. (சரு)

---

[1] கடம்பு-செங்கடம்பு; ஈண்டு அதன் மலரையுணர்த்தும். என் உடம்பு கடப்பமலரின் தன்மையையுடையதாகும் என்க. கடம்பு ஊற்று இன்பம் உறுதல்-கார்காலத்து நீர்ஃதோய்தலாற் செழிப்புறுதல். புளகமுறுதல்-அகவிதழ் விரியப்பெறுதல். இராகம்எய்தல்-செந்நிறமடைதல். இதனால் என்னையும் கடம்பையும் பயனுறச் செய்த நின் பேரொலி சிறப்புற்றுத் திகழ்வதாக என்பதாம்.

[2] தாம் - முகில்களும் மின்னலும். மின்னலோடு புயற்குழுவும் எற்கு உதவிபுரிந்தமையான் நூறாண்டு மகிழ்ந்து வாழ்க என்பதாம். வசந்தசேனையை இங்குவரச்செய்ததோடு அமையாது திரும்பிப் போகவொட்டாமலும் செய்தது பேருதவியாகும் என்பதாம்.

இன்னும் தோழி!

கலிவிருத்தம்.

185. [1] ஆடவர் தம்மனை யடைந்த மங்கையர்
சாடிய மழையினா னனைந்த தண்ணுடல்
பீடுறத் தழீஇக்கொளப் பெறுவ ரேலவர்
நாடிய வாழ்க்கையே நலத்தின் மிக்கதாம். (௪௬)

காதலீ! வசந்தசேனே!

ஆசிரியவிருத்தம்.

186. நிறுவியவித் தூண்களின்மேல் [2]நிலைபிறழ்ந்த
[3]வேதியின்க ணொருங்கிச் சார்ந்த
மறுமிகுமேற் பரப்புநிலஞ் சிதைவுற்று
வீழ்நிலையில் வயங்கும் வெண்மை
பெறுசுதைநீர் தீற்றியொளிர் சித்திரமார்
[4]பித்தியிது பிளந்து விண்ணிற்
செறியுமுகில் பொழிநீரா னனைதரலி
னீங்கிருத்தல் செவ்வி தன்றால். (௪௭)

[உயரப் பார்த்து] ஆ! இந்திரவில்! காணப்படுகின்றது; காதலீ! பார்க்க பார்க்க.

---

1 மழையால் நனைதலையும் பொருட்படுத்தாமல்வந்ததனால் அவளது காதலின்சிறப்புப் புலனாகும். இந்நிலையிற் கூடுதலே ஆடவர்க்குக் கிடைத்தற்கரிய பேறாகும் என்பதாம்.

2 நிலைபிறழ்தல் - சிதைதல். 3 வேதி - தூண்களின்மேல் விதானத்துக்கு ஆதாரமாகக் கட்டப்பட்ட செங்கற்கட்டு. 4 பித்தி-சுவர்.

நேரிசைவெண்பா.

187. [1]மின்னலா நாவு மிளிரிந் திரதனுவாம்
துன்னுமுயர் நீள்காமுந் தோன்றவே—மன்னுமுகில்
தட்டா வகல்கதுப்பாச் சார விசும்பொளிர்தல்
கொட்டாவி கொள்ளுதல்போ லும். (சஅ)

ஆதலின் வருக; இல்லத்தினுட் புகுவோமாக.

[எழுந்து சுற்றிவருகின்றனர்.]

ஆசிரியவிருத்தம்.

188. [2]ஓலையின் மாத்திற் கல்வி னுற்றநீர்ப் பாப்பிற் றாக்கி
ஆலுகற் றுர மந்த மதிவிரை வோடு சண்டம்
ஏலுற மீட்டப் பட்டிங் கிசைதரு மினிய யாழைப்
போலவிம் மழையின் றுரை தாளத்திற் பொருந்தி வீழ்வ.

[எல்லோரும் போய்விடுகின்றனர்.]

"புயன்மறைப்பு" என்னும்

## ஐந்தாம் அங்கம் முற்றிற்று.

---

[1] கொட்டாவிகொள்ளுவோன் நாவை வெளிப்படுத்திக் கைகளை உயரத்தூக்கி அலகை விரிப்பன் என்பது ஈண்டு உணரற் பாலது.

[2] நீர்வீழ்ச்சி, ஓலை மாம் கல் நீர்நிலை இவற்றில் தாக்குதலால் முறையே சுரங்களின் உச்சம் மந்தம் விரைவு சண்டம் என்னும் நிலைகள் தோன்றுவன. யாழ், இசை வெளிப்படுத்துங்கால் இங்ஙனம் ஆகும். ஆதலின், அதனைப்போலத் தாளத்தோடுபொருந்தி நீர்த் தாரைகள் வீழ்வன என்க. ஆலல்-ஒலித்தல். ஏலுற-பொருந்த.

# [1] ஆறாம் அங்கம்.

## வண்டிமாற்றம்.

[அதன்பின் [2] சேடி வருகின்றாள்.]

சேடி—ஏன் இன்னும் பெருமாட்டி துயில்நீத்தெழுந்திலள்? நிற்க. உட்புகுந்து எழுப்புவேன்.

[என்று நிருத்தத்தால் உட்புகுதலை அவிநயிக்கின்றாள்.]

[அதன்பின் உடலை ஆடையாற்போர்த்துத்
துயில்கின்ற வசந்தசேனை வருகின்றாள்.[3]]

சேடி—[உற்றுப்பார்த்து] பெருமாட்டி! எழுந்திருங்கள். எழுந்திருங்கள். விடியற்காலம் வந்துவிட்டது.

வசந்தசேனை-[கண்விழித்து] என்ன! [4] இராப்பொழுதே விடியற்காலமாயிற்று?

---

1 வசந்தசேனை வருதற்குப் பூந்தோட்டத்திலிருந்து சாருதத்தனால் அனுப்பப்பட்ட வண்டியில் விலங்கை முறித்துச் சிறையினின்றும் வெளிப்பட்ட ஆரியகன் என்னும் இடைச்சிறுவன் ஏறிக்கோடலும், வண்டிமாற்றத்தாற் சகாரன்வண்டியில் வசந்தசேனை ஏறிக்கோடலும் இவ்வங்கத்திற் கூறப்படும்.

2 இன்பவிளையாட்டினாற் காலைப்பொழுதில் அயர்ந்து உறங்கும் வசந்தசேனையை எழுப்புதற்குச் சாருதத்தருடைய சேடி வருகின்றாள்.

3 வருகின்றாள் என்பது ஈண்டு இலக்கணையால் தோன்றுகின்றாள் என்னும் பொருளதாகும். இன்னோரன்ன பிறஇடங்களிலும் இவ்வாறே சந்தர்ப்பம்நோக்கி வருதல் என்பதற்குப் பொருள் கொள்க.

4 இரவின் காலஅளவே குறுகிற்றோ என்பது கருத்து.

சேடி—[1]என்போன்ருர்க்கு இது விடியற்காலமே. [2]பெருமாட்டிக்கோ இராப்பொழுதேயாம்.

வசந்தசேனை—ஏடி! உங்கள் சூதர் எங்கே போய்விட்டார்?

சேடி—பெருமாட்டீ! மாட்சிமிக்க சாருதத்தர், வருத்தமானகன்என்னும் சேடனுக்குக் கட்டளையிட்டுப் பின் [3]புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட்டத்தை அடைந்தார்.

வசந்தசேனை—எவ்வாறு கட்டளையிட்டார்?

சேடி—"இரவிலேயே வண்டியைச் சித்தப்படுத்திவை. வசந்தசேனை போகவேண்டும்" என்று கட்டளையிட்டார்?

வசந்தசேனை—ஏடி! [4]யான் எங்கேபோகவேண்டும்?

சேடி—பெருமாட்டீ! சாருதத்தர் இருக்கும்இடத்திற்கு.

வசந்தசேனை—[சேடியைத் தழுவிக்கொண்டு] இரவில் நன்ருகப்பார்க்கப்பட்டிலர். ஆதலின், இப்பொழுது விளக்கமாகக் காண்பேன். ஏடி! இப்பொழுது நாற்கட்டில்லத்தினுள்ளே புகுந்துவிட்டேனே!

---

[1] இன்பநுகர்ச்சி யில்லாதவர்களாகிய என்போன்ருர்க்கென்க.

[2] இன்பச்சுவையின் ஈடுபட்டு ஒழிவுபெருமையின்.

[3] கரண்டம் என்பது மூங்கில் முதலியவற்ருற் செய்யப்பட்ட பெட்டியை உணர்த்தும். மலர்நிறைந்த பெட்டிபோறலின், பூந்தோட்டம் புட்பகரண்டகம் என்று வழங்கலாயிற்று.

[4] தன் இல்லத்திற்குப்போகும்படி சாருதத்தர் ஆணைதந்தனரோவென்று ஐயுற்றுப் பிரிவச்சமுடையளாய் இங்ஙனம் வினவுகின்ருள்.

சேடி—நாற்கட்டில்லத்தினுள்ளேமாத்திரமன்று; எல்லோருடைய [1]நெஞ்சத்தினுள்ளும் நுழைந்துவிட்டீர்கள்.

வசந்தசேனை—சாருதத்தருடைய பரிசனங்கள்[2] வருந்துகின்றனரோ?

சேடி—இனி வருந்துவர்.

வசந்தசேனை—எப்பொழுது?

சேடி—பெருமாட்டி [3]வெளிச்செல்லுங்கால்.

வசந்தசேனை—அங்ஙனமாயின் யானே முதலில் வருத்தமுறுதற்குரியளாவேன். [வேண்டிக்கொண்டு] ஏடி! இவ்விரத்தினமாலையைப் பெற்றுக்கொள். என் உடன்பிறந்தாளாகிய பெருமாட்டி தூதையின்பக்கல் எய்தி இதனைக் கொடுத்துப் பின்வருமாறு சொல். "யான் மாட்சிமிக்க சாருதத்தருடைய குணங்களுக்குத் தோற்று ஈடுபட்ட பணிப்பெண் ஆவேன். அங்ஙனமே தங்களுக்கும். ஆதலின், இவ்விரத்தினமாலை தங்கள்கழுத்திற்கே அணிகலனுதல்வேண்டும்."

---

1 ஒழுக்கநலத்தால் இல்லறநிலையினரெல்லாரானும் பாராட்டப் படுகின்றீர்கள் என்றவாறு.

2 எல்லோருடைய நெஞ்சத்தினுள்ளும் நுழைதல் வருத்தம்பற்றியோ மகிழ்வுபற்றியோ என்பதை அறியவிரும்புகின்றவளாய் இங்ஙனம் கேட்டனள். மாற்றவள்வரவால் துன்புறும்நிலையினளாகிய சாருதத்தர்மனைவியைச்சார்ந்த பரிசனங்களாதலின் அவர்க்கும் அவ் வருத்தம் உண்டாகியிருக்கலாம் என்பதாம்.

3 தங்கள்பிரிவே வருத்தந்தருவதாகும் என்றவாறு.

சேடி—அம்மே! சாருதத்தர் பெருமாட்டி தூதையை அவசியம் [1]கோபிப்பார்.

வசந்தசேனை—போ. கோபிக்கமாட்டார்.

சேடி— [பெற்றுக்கொண்டு] கட்டளைப்படிசெய்வேன். [என்றுகூறி வெளிச்சென்று மீண்டும் வருகின்றாள்.] அன்னாய்! பெருமாட்டி தூதை பின்வருமாறு கூறுகின்றாள். "இவ்விரத்தினமாலை எம்பெருமானால் நமக்குப் பரிசிலாகத் தரப்பட்டதாகும்; இதனை யான் பெற்றுக்கொள்ளுதல் தகுதியன்று; எம்பெருமானே எனக்குச் சிறந்த அணிகலனாவர்; என்பதனை நீங்கள் அறிந்துகொள்ளல்வேண்டும்."

[அதன்பின் [2]சிறுவனை அழைத்துக்கொண்டு
இரதனிகை வருகின்றாள்.]

இரதனிகை—குழந்தாய்! வருக. சிறுதேருருட்டி விளையாடுவோம்.

சிறுவன்—[வருத்தத்தோடு] இரதனிகே! எனக்கு இம் மண்வண்டி எதற்காக? [3]அப் பொன்வண்டியைத் தா?

இரதனிகை—[துன்பத்தோடு பெருமூச்செறிந்து] குழந்தாய்! நமக்குப் பொன்னைப்பற்றிய பேச்சு ஏது? தந்தையார்க்கு மீண்டும் செல்வம்வந்து நிறைந்தபின் பொன்வண்டி

---

[1] அடைக்கலப்பொருட்கு ஈடாகக் கொடுக்கப்பட்டதைத் திருப்பி வாங்கிக்கொள்ளுதல் தவறாகும் என்பதுபற்றிக் கோபிப்பார் என்பதாம்.

[2] சிறுவன் - சாருதத்தன்புதல்வனாகிய உரோகசேனன்.

[3] சுட்டு அயல்வீட்டுக்குழந்தையாற் கொண்டுவரப்பட்டது என்பதை உணர்த்தும்.

யால் விளையாடுவாய். [1]இவனைப் பிறிதொன்றால் மகிழ்விப்பேன். பெருமாட்டி [2]வசந்தசேனையின்பக்கல் எய்துவேன். [அருகிற்சென்று] அன்னாய்! வந்தனம்.

வசந்தசேனை—இரதனிகே! நின்வரவு நல்லதாக. இச்சிறுவன் யாருடையகுழந்தை? அணிகலன்களால் அலங்கரிக்கப்படாத உடலையுடையனாயினும், மதிமண்டிலம்போல் திகழ்கின்ற முகத்தையுடையனாய் என் இதயத்தை மிகவும் இன்புறுத்துகின்றான்.

இரதனிகை—இவன் மாட்சிமிக்க சாருதத்தருடைய புதல்வன்; உரோகசேனன் என்னும் பெயருடையான்.

வசந்தசேனை—[கைகளைநீட்டி] என் அருமைமகனே! வருக. தழுவுக. [என்று கூறி மடித்தலத்தே இருக்கவைத்து] இவன் தந்தையின் உருவத்தை ஒத்து விளங்குகின்றான்.

இரதனிகை—உருவத்தைமாத்திரமன்று; சீலத்தையும் அங்ஙனமேயுடையான் என்று எண்ணுகின்றேன். இவனால் மாட்சிமிக்க சாருதத்தர் [3]அகமகிழ்ந்து இன்புறுவார்.

வசந்தசேனை—இவன் எதற்காக அழுகின்றான்?

இரதனிகை—இவன் அடுத்த இல்லத்தில் வாழும் ஒரு செல்வனுடையகுழந்தையின் பொன்வண்டியை உருட்டி விளையாடினான். அச்சிறுவன் அப்பொன்வண்டியைக்

---

[1] பின்னர்த் தான் செயற்பாலதைக் கூறுகின்றாள்.

[2] வசந்தசேனையின்பக்கல் சென்றால் வேறுநிகழ்ச்சிகளால் இது மறக்கப்படும் என்பது கருத்து.

[3] வறியநிலையில் இவனால் ஆறுதலடைவரென்றவாறு.

கொண்டுபோய்விட்டான். அதன்பின் அப்பொன்வண்டியை விரும்பித் தேடும் இவனுக்கு இம் மண்வண்டியை யான் செய்துகொடுத்தேன். அதன்மேல் இவன் என்னைப்பார்த்து "இரதனிகே! எனக்கு இம் மண்வண்டி எதற்காக? அப்பொன் வண்டியையே தரல்வேண்டும்" என்று சொல்லுகின்றான்.

வசந்தசேனை—ஆ! துன்பம்! இவனும் பிறர்செல்வங் கண்டு வருந்துகின்றானே! ஆ! தெய்வமே! தாமரையிலைக் கண்வீழ்ந்த [1]நீர்த்திவலைகளைப்போன்ற மக்களுடைய செல்வங்களால் நீ விளையாடுகின்றாய். [என்று கண்ணீருதிர்த்து] குழந்தாய்! அழவேண்டா. பொன்மயமான வண்டியினால் விளையாடுவாய்.

சிறுவன்—இரதனிகே! இவள் யார்?

வசந்தசேனை—நின் தந்தையின்குணங்களால் ஈடுபடுத்தப்பட்ட பணிப்பெண்.

இரதனிகை—குழந்தாய்! இப்பெருமாட்டி உன் தாயாவாள்.

சிறுவன்—இரதனிகே! நீ பொய்சொல்லுகின்றாய். [2]இவ்வம்மை என் தாயாயின் எப்படி அலங்காரமுடையளாயினாள்?

வசந்தசேனை—குழந்தாய்! அழகியமுகமுடையனாய் மிகவும் வருந்திக் கூறுகின்றாய் [நாட்டியத்தால் அணிகலன்களைக்

---

[1] நீர்த்திவலை, நிலையின்மையையும் சுருக்கத்தையும் புலப்படுத்தும் உவமையாம்.

[2] என்தாய்க்கு அணிகலன் இல்லையே என்றுகருதிக் குழந்தை கூறியது.

கழற்றி அழுதுகொண்டு] [1]இப்பொழுது யான் உன் தாயாயி னேன். ஆதலின் இவ் வணிகலன்களைப் பெற்றுக்கொள். பொன்மயமான வண்டியைச் செய்துகொள்.

சிறுவன்—பார். நான் வாங்கிக்கொள்ளமாட்டேன். [2]நீ அழுகின்றாய்.

வசந்தசேனை—[கண்ணீரைத் துடைத்துக்கொண்டு] குழந் தாய்! யான் அழவில்லை. போ. விளையாடு. [அணிகலன்களால் மண்வண்டியை நிறைவித்து] குழந்தாய்! பொன்மயமான வண் டியைச் செய்துகொள்.

[இங்ஙனம் குழந்தையை எடுத்துக்கொண்டு
இரதனிகை போய்விடுகின்றாள்.]

[வண்டியில் ஏறிக்கொண்டு [3]சேடன் வருகின்றான்.]

சேடன்—இரதனிகே! இரதனிகே! நம் பெருமாட்டி வசந்தசேனைக்கு "வீட்டின்பக்கத்துவாயிலில் வண்டி திறக் கப்பட்டுச் சித்தமாகஇருக்கின்றது" என்று தெரிவி.

[வந்து]

இரதனிகை—பெருமாட்டீ! இவ் வருத்தமானகன் "வீட்டின் பக்கவாயிலில் வண்டி சித்தமாகஇருக்கின்றது" என்று தெரிவிக்கின்றான்.

---

[1] அணிகலன்கள் இல்லாமையால், "தாய்ஆயினேன்" எனவும், தாயின்பொருள் கொள்ளுதற்குத் தகுதியுடையதாதலின் "பெற்றுக் கொள்" எனவும் கூறினள்.

[2] அழுதுகொண்டுகொடுத்தலைப் பெற்றுக்கொள்ளலாகாதென் பது கருத்து.

[3]சேடன் - வருத்தமானகன் என்னும் பெயரினன்; சாருதத்த ருடைய பணியாள்.

வசந்தசேனை—சேடி! யான் என்னை அலங்கரித்துக் கொள்ளும்வரையில் சிறிதுநேரம் நிற்கட்டும்.

இரதனிகை—[வெளிப்பட்டு] வருத்தமானக! நம் பெருமாட்டி அலங்கரித்துக்கொள்ளும்வரை சிறிதுநேரம் நில்.

சேடன்—ஓ! ஓ! யானும் வண்டிவிரிப்பை மறந்துவிட்டேன். ஆதலின் அதனை எடுத்துக்கொண்டு வந்துவிடுவேன். இவ்வெருதுகள் மூக்குக்கயிறுகோக்கப்பட்டமையால் ஓரிடத்திற் பொறுமையோடு நிற்கமாட்டா. ஆதலின் வண்டியோடு போக்குவரவுசெய்வேன். [என்று சேடன் போய்விடுகின்றான்.]

வசந்தசேனை—எடி! என்னுடைய அலங்காரப்பொருள்களைக் கொண்டுவா. யான் அலங்கரித்துக்கொள்ளல்வேண்டும். [என்று அலங்கரித்துக்கொண்டிருக்கின்றாள்.]

[1]தாவரகன் என்னும் சேடன்—அரசனுடைய மைத்துனராகிய சகாரர் என்னைநோக்கித் "தாவரக! வண்டியை ஓட்டிக்கொண்டு [2]புட்பகரண்டகம் என்னும் பழமையான பூந்தோட்டத்திற்கு விரைவில் வா" என்று ஆணையிட்டுள்ளார். ஆதலின் அங்கே போகின்றேன். [3]எருதுகளே! சுமந்துசெல்லுங்கள்; சுமந்துசெல்லுங்கள். [சிறிதுதூரம் சென்றுபார்த்து] ஓ! கிராமத்துவண்டிகளால்வழிதடைப்படுத்தப்பட்டுள்ளதே! இப்பொழுதுஇவ்விடத்தில் என்னசெய்வேன்! [செருக்கோடு]

---

[1] இவன் சகாரனுடைய ஏவலாளன்.

[2] புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட்டம் நகரத்து மக்கள் இன்பம்நுகர்தற்கு எல்லோர்க்கும் பொதுவாக அமைந்தது.

[3] விலங்கினங்களோடு இவ்வாறு உரையாடுதல் இழிசனர்க்குரிய இயல்பாம்.

அடே! அடே! விலகிச்செல்லுங்கள். விலகிச்செல்லுங்கள். [கேட்டு] "இது யாருடையவண்டி" என்று கேட்கின்றீர்கள்? இஃது அரசன்மைத்துனராகிய சமத்தானகருடைய வண்டியாகும். ஆதலின் விரைந்து விலகிச்செல்லுங்கள். [[1]பார்த்து] சூதிற் பொருள்இழந்து ஓடும் சூதன்: தன்னைப் பிடிக்கவரும் சூதாடுகளத்தலைவனைக் கண்டு மறைந்துகொண்டுசெல்லுதல் போல, யாரோ இம்மனிதன் என்னைக்கண்டு விரைந்து தன்னை மறைத்துக்கொண்டு வேறுவழியிற் போய்விட்டான். ஆதலின் இவன்யார்? [2]இதனுல் எனக்கு வருவதென்ன? விரைவாகச் செல்லுவேன். அடே! அடே! அறிவில்லாதவர்களே! விலகிச்செல்லுங்கள். விலகிச்செல்லுங்கள். "சிறிதுநேரம் வரைபொறு. இவ்வண்டிச்சக்கரத்தை உடன்நின்று தள்ளு" என்று சொல்லுகின்றீர்கள்? அடே! அடே! அரசனுடைய மைத்துனரைச்சார்ந்த வீரனுகிய யானே வண்டிச்சக்கரத்தைத் தள்ளுபவன்! ஓ! இவ்வெளியவன் [3]தன்னந்தனியனுய் இருக்கின்றுன். ஆதலின் இவ்வாறு துணைசெய்கின்றேன். இவ்வண்டியை மாட்சிமிக்க சாருதத்தருடைய சிறுமரச்சோலைக்கணுள்ள வீட்டின் பக்கவாயிலில் நிறுத்துகின்றேன். [என்று வண்டியை நிறுத்திவிட்டு] இதோ வந்துவிட்டேன். [என்று போய்விடுகின்றுன்.]

---

1 சிறையினின்றும் வெளிப்பட்ட ஆரியகன் என்னும் பெயரினையுடைய இடைச்சிறுவனைப் பார்த்து என்பது கருத்து.

2 இவ்விசாரணையால்.

3 தாவரகன் தன்வண்டிக்கு நேர்ந்ததடையைப் பொறுமல் அத்தடைசெய்தான் ஒருவனையே பலரென மயங்கி முன்னர்ப் பன்மையாற் கூறினுன்.

சேடி—பெருமாட்டி! வண்டியின் உருளொலி கேட்கப் படுகின்றது. ஆதலின் [1]வண்டி வந்துவிட்டது.

வசந்தசேனை—ஏடி! போ. என்னுள்ளம் விரைகின்றது. ஆதலின் பக்கத்துவாயில்வழியைக் காட்டு.

சேடி—பெருமாட்டி! வருக. வருக.

வசந்தசேனை—[சிறிது நடந்து] ஏடி! நீ இங்கே நில்.

சேடி—பெருமாட்டியின்கட்டளைப்படியே. [என்று போய் விடுகின்றாள்.]

வசந்தசேனை—[வலக்கண்துடித்தலை அவிநயத்தால் அறிவித்து வண்டியில் ஏறி] வலக்கண் துடிக்கின்றதே! ஈதென்னை! ஆயினும், என்? இத் தீநிமித்தத்தைச் சாருதத்தருடைய [2]காட்சியே போக்குவதாகும்.

[வந்து]

தாவரகன்—வண்டிகளை விலக்கிவிட்டேன். ஆதலிற் போகின்றேன். [என்று நாட்டியத்தால் வண்டியிலேறி இயக்கி] வண்டி பாரமாக உள்ளதே! அன்றி, வண்டியுருள்களைத் தள்ளிவிட்டமையால் இளைப்புற்ற எனக்கு வண்டி பாரமுடையதாகத் தோன்றுகின்றதுபோலும். நிற்க. போகின்றேன். எருதுகளே! செல்லுங்கள்; செல்லுங்கள்.

[வேடசாலையுள்]

ஏ! ஏ! காவலாளர்களே! நீங்கள் காத்தற்குரிய அவ்வவ்விடங்களில் விழிப்புடையவர்களாக இருத்தல்வேண்டும்.

---

[1] வருத்தமானகன்வண்டியே வந்துவிட்டதாகநினைந்து கூறுகின்றாள்.

[2] சாருதத்தருடையமுன்னிலையில் யாதும் தீங்குநேராதென்பது கருத்து.

இப்பொழுது இந்த இடைச்சிறுவன் சிறைக்கூடத்தைத் தகர்த்து அங்குள்ள சிறைக்கோட்டத்துக் காவலனையும் கொன்றுவிட்டு விலங்கைமுறித்துக்கொண்டு வெளிப்பட்டு ஓடுகின்றான். அவனைப் பிடியுங்கள்; பிடியுங்கள்.

[ஒருகாலிற்பொருந்திய விலங்கினையும் முக்காட்டினையுமுடைய ஆரியகன் அச்சமுடையனாய்த் திரை எடாதிருக்கப் பக்கத்துவழியாக வந்து சுற்றித்திரிகின்றான்.]

சேடன்—[தனக்குள்] இந்நகரத்திற் பெரிய பரபரப்பு ஒன்று உண்டாயிற்று. ஆதலின் அதிவிரைவிற் போவேன். [என்று போய்விடுகின்றான்.]

ஆரியகன்— ஆசிரியவிருத்தம்.

189. [1]சிறையிடுத லெனக்காட்டிக் கொலைபுரிவான்
துணிந்தரசன் செய்யுந் துன்ப
நிறைதருமக் கரையில்பெருங் கடல்கடந்தோர்
கணைக்காலி னெருங்க யாத்த
கறைநிகளத் தொருமுகமீர்த் தெப்பாலு
மலைந்துதிரி கைமேற் கொண்டேன்
உறையுமொரு தறியினைச்செற் றேடுமெத
மிகுகளிற்றை யொக்கின் றேனல். (க)

---

[1] கணைக்காலின் யாத்த நிகளத்தின் ஒருமுகம் ஈர்த்து என்றதனால், இரண்டுகால்களிலும் தளைந்து இடையுடனியைத்துப் பிணிக்கப்பட்ட சங்கிலியின் ஒருகாற்பிணிப்பைச் சருவிலகன் முறித்துவிட்டமையால் மற்றொருகாற் பிணிப்புடன் இழுத்துக்கொண்டு ஓடுகின்றான் என்பது போதரும். நிகளம்-விலங்கு. திரிகை-திரிதலாகிய ஒழுக்கம். களிற்றுவமையான் மீண்டும் பிடித்தல் அரிது என்பது போதரும்.

ஆ! சித்தபுருடன்கட்டளையால் நடுக்கமுற்ற பாலகன் என்னும்அரசன் என்னை இடைச்சேரியினின்றும்கொணர்ந்து கொலைக்களமாம்நிலையிலுள்ளதும் எவராலும் பார்த்தற்கு இயலாததுமாகிய இருட்டறையில்வைத்து [1]விலங்கிட்டுச் சிறைப்படுத்தினன். என்அன்புரிமைநண்பனாகிய சருவிலகன் அருளொடுபுரிந்த உதவியால் யான் அக்கொடுஞ்சிறையினின் றும் வெளிப்பட்டுளேன். [[2]கண்ணீரொழுக்கி]

ஆசிரியவிருத்தம்.

190. காடுறையுங் களிற்றினையாத் தெனத்தளையிட்
டெனையரசன் காவல் செய்தான்
பீடுறும்பே றெனக்குவரி னதனால்யா
னிவற்கிழைத்த பிழைதா னென்னே
மாடுறுமோர் நல்லூழான் வருபயனை
விலக்குதற்கு வலியார் யாரே
[3]நாடுமியல் பினனரசன் வலியவனோ
டுறுபகைமை நமக்கென் னம்மா. (உ)

---

[1] அவ்விருட்டறையுட்புகுதலே கொலைப்படும்நிலையின்அமைவ தாகவும் விலங்கிடல் மிகையென்பதாம்.

[2] ஒருகாரணமுமின்றித் தண்டித்தலா னுண்டாகிய துன்பத் தாற் கண்ணீர்தோன்றியது.

[3] அரசன் நாடும் இயல்பினன் - அரசன் எல்லோரானும் நாடி அடையத்தகுந்தவன். அத்தகைய வலியவனோடு சிறியேனாகிய எனக்குப் பகைமை யாதுளது? ஆதலின் என்னைச் சிறைப்படுத்திய தற்குக் காரணம் யாதும் இன்று என்பது கருத்து.

ஆதலாற் பேறிலனுகிய யான் யாண்டுச்செல்வேன்! [பார்த்து] இது யாரோ ஒரு நல்லோனது இல்லம். [1]கதவுசாத்தப்படாத பக்கவாயிலையுடையதாக இருக்கின்றது.

ஆசிரியவிருத்தம்.

191. சிதைவுறு மில்ல மீது செறிவிடை
வெளிவிட் டுள்ள
[2]கதவமோ பெரிது தாழக் கோலினைக்
கதுவிற் றில்லை
துதைதரு செல்வ னுய்ப்பின் வறுமையாந்
துன்ப வாழ்க்கை
விதிதர வென்போ லுற்று னிவனெனல்
விளங்கு மன்றே. (௩)

ஆதலின் இந்த [3]இல்லத்தினுட் புகுந்து இருக்கின்றேன்.

[வேடசாலையினுள்]

[4]எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள்.

---

[1] கதவு அடைக்கப்படாதது, பரோபகாரகுணத்தில் ஈடுபட்ட ஒரு பெரியோன்தன்மையைப் புலப்படுத்துகின்றதென்று கருதியவாறும்.

[2] கதவு பெரிது என்றதனல் முன்னைச் செல்வமும், சிதைவுற்றிருத்தலாற் பின்னை வறுமையும் புலப்படும். கதுவல் - பற்றுதல்.

[3] கதவுதிறந்திருத்தலால் உட்புகுதற்குஎளிதென்பதும், பெரிய மனிதன்வீடாதலால் அரசன்காவலர் முதலியோர் விரைந்து உட்புகுதற்குரியதாகா தென்பதும் நினைந்து தான் புகுந்து இருக்கலானுன்.

[4] விரிப்பெடுத்துத் திரும்பிவரும் வருத்தமானகன்கூற்று.

ஆரியகன்— [கேட்டு] ஓ! வண்டி இங்கேயே எதிராக வருகின்றது.

ஆசிரியவிருத்தம்.

192. [1] ஒத்தகுண மிலாரயோ ரொருங்கேறிச்
செல்லாத வூர்தி யாங்கொல்
தத்தைமொழி யாரிவர்ந்து செல்லவிவண்
டனிநிறுத்த பாண்டில் தானே
மெத்தியசெல் வர்க்குரித்தா யூழ்வலியால்
வெளிப்படுத்த வேண்டிற் றேயோ
இத்தனிமை வண்டியெனக் கினிதாய
தெய்வத்தா னியைந்த தாமே. (சு)

[அதன்பின் வண்டியோடு வந்து]

வருத்தமானகன்—வண்டியின்விரிப்பு என்னாற் கொண்டு வரப்பட்டது. இரதனிகே! பெருமாட்டி வசந்தசேனை யின்பால் "சித்தஞ்செய்து கொண்டுவந்துநிறுத்தப்பட்ட வண்டியில் ஏறிப் பெருமாட்டி புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட்டத்துக்குச் செல்லுங்கள்" என்று தெரி விப்பாயாக.

---

[1] குணநலம் வேறுபட்ட ஆடவர்சிலர் ஒருங்கேறிச்செல்வ ராயின் அவர் ஒருவர்க்கொருவர் பேசும் வம்புரைகள் வெளிப்படும். அங்ஙனம் இல்லாமையின் மகளிர் ஏறிச்செல்லுதற்கு நிறுத்தப்பட் டிருக்கலாம்; அணிகலன்களின் ஒலிமுதலியன இல்லாமையின் மக ளிரும் இல்லையென்பது புலப்படும்; ஆதலின் இவ்வழகிய வண்டி, நிறைந்த செல்வர்க்குரியதாகிக் கடன்கொடுத்தவர்முதலியோரால் வெளிப்படுத்தப்பட்டிருக்கலாம்போலும்; எனக்கு நேர்ந்த இந்நிலை யில் ஒருவரும் இல்லாத இத்தனிவண்டி கிடைக்கப்பெற்றது, என் நல்லூழ்ப்பயனேயாகும் என்பது கருத்து.

ஆரியகன்— [கேட்டு] இவ்வண்டி [1]கணிகைக்குரிய தாகும். நகர்ப்புறத்தே செல்லத்தக்கதும் ஆம். நல்லது. ஏறுகின்றேன். [என்று மெல்ல அருகிற் செல்லுகின்றான்.]

சேடன்—[2][கேட்டு] சிலம்பொலி கேட்கப்படுகின்றதே! ஆதலின் பெருமாட்டி வந்துவிட்டாள்போலும். அம்மா! இவ் வெருதுகள் மூக்குக்கயிறு கோக்கப்பட்டமையால் ஓரிடத்தில் நிலைத்துநிற்பனவல்ல. ஆதலின் பெருமாட்டி பின்புறத்தே ஏறுதல்வேண்டும்.

[ஆரியகன் அங்ஙனமே ஏறுகின்றான்.]

சேடன்—கால்களைத் தூக்கிவைத்தலால் அசைந்த சிலம்பு களின் ஒலி ஒழிவுற்றது; வண்டியும் பாரம் நிறைந்துளது; ஆதலின் இப்பொழுது பெருமாட்டி வசந்தசேனை வண்டியில் ஏறிவிட்டாள் என்று எண்ணுகின்றேன்; ஆதலாற் போகின் றேன். எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள் [என்று வண்டியைச் செலுத்திக்கொண்டு போகின்றான்.]

[வந்து]

[3]வீரகன்—அடே! அடே! [4]சயன், சயமானன், சந்தன கன், மங்கலன், புட்பபத்திரன் முதலியோர்களே!

---

[1] இதனால் அவன் தான் ஏறுதற்குத்தக்கதென்று கருதினான் என்பது போதரும்.

[2] கேட்டது ஆரியகனது விலங்குச்சங்கிலியின் ஒலியை.

[3] இவன் அரசனுடைய படைத்தலைவன்.

[4] சயன்முதலியோர் படைவீரர்கள்.

கலிவிருத்தம்.

193. சிறையுறு மிடையர்தஞ் சிறுவ னோர்கணத்
திறைவன துளத்தையும் யாத்த வான்றொடர்
முறையுறு தளையையு முறித்துப் போயினன்
உறைதரு நீவிரிங் குறங்கு கின்றிரால். (ரு)

அடே! [1]நீ கிழக்குக்கோட்டைவாயிலிலும், நீ மேற்குக்கோட்டைவாயிலிலும், நீ தெற்குக்கோட்டைவாயிலிலும், நீ வடக்குக்கோட்டைவாயிலிலும் நிற்கவேண்டும். யான் இம்மதிற்சுவரின் ஒருபாகத்தில் சந்தனகனோடு ஏறிச்சென்று தேடிப்பார்க்கின்றேன். சந்தனக! வா, இங்கே வா.

[பரபரப்புடன் வந்து]

சந்தனகன்—அடே! அடே! [2]வீரகன், விசல்லியன், வீமாங்கதன், தண்டகாலன், தண்டசூரன் முதலியோர்களே!

நேரிசைவெண்பா.

194. வம்மின்! கடுக முயன்மின்! மனத்தின்கட்
டம்மி னுறுதியினைத் தாழாது—செய்ம்மின்கள்
[3]உற்ற திருவரச னேங்கு குலமொழிந்து
மற்றோர் குலம்புகுதா வாறு. (சு)

இன்னும், ஆசிரியவிருத்தம்.

195. இந்நகர் மன்றம் பூங்கா விடையர்தஞ்
சேரி தோறும்
பன்னுமா வணங்க டோறும் பலர்செலும்
வழிக டோறும்

---

[1] இங்ஙனம் தனித்தனியே படைவீரர்களை அழைத்துக் கட்டளையிடுகின்றான்.

[2] இவர்களும் படைவீரர்களேயாவர்.

[3] உற்றதிரு - அரசனுக்குப்பொருந்திய அரசியற்றிரு.

முன்னுபல் விடங்க டோறு முயன்று[1] வல்
வினைஞர் தம்மைத்
துன்னிநின் றேவித் தேடுந் தொழிலினை
விரைந்து கொண்மின். (எ)

நிலைமண்டில ஆசிரியப்பா.

196. எ! எ! வீரக! என்னென்ன வோவெளிக்
காட்டு கின்றனை கலக்கமின் றாகக்
கூறுதி யீண்டுக் கூசாது புகுந்து
தனிவிடுத் திடைப்பய றனைக்கொடு போயவன்
யாரவன் றெரிதியோ நேர்[2] மதிக் கெட்டிற்
கதிரவ னுன்கின் மதியமும் நிற்ப
ஆறில் வெள்ளியும் ஐந்திற் குசனும்
ஒன்றி லாறி லொன்றிய வியாழனும்
துனிசெயு மொன்பதிற் சனியுந் தங்கப்
பெற்றவ னுவன் உற்றசந் தனகன்
உயிருட னிருக்கச் செயிர்மிகு மிடைக்குலச்
சிறுவனைக் கொடுசெலுந் திறலின னெவனே. (அ)

வீரகன்—அடே! சந்தனக!

---

1 வல்வினைஞரையேவித் தேடுந்தொழிலை மேற்கொண்மின் என்பதாம்.

2 மதிக்கு-சந்திரனுக்கு. ஈண்டு இது சந்திரன் நின்ற இராசியை உணர்த்தும். அதற்கு எட்டில் சூரியனும், நான்கில் சந்திரனும், ஆறில் சுக்கிரனும், ஐந்தில் செவ்வாயும், ஒன்றிலும் ஆறிலும் வியாழனும், ஒன்பதில் சனியும் தற்காலம் தங்கப்பெற்றவனுவன் என்பதாம். போயவன் தங்கப்பெற்றவனுவன் என முடிக்க. இவ்விடங்களில் இக்கோள்கள் வருங்கால் தீயபலன்கள் உண்டாகும் என்று சோதிடநூல்கள் கூறும்.

கலிவிருத்தம்.

197. [1]கதிரவ னுருவரை காணுங் காலையில்
விதிர்தரு மிடைமகன் விலங்கை விட்டியே
குதுகலித் தியாவனோ கொண்டு சென்றனன்
உதுமினை துள்ளநன் குணரு முண்மையே. (௯)

சேடன்—எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள்.

சந்தனகன்—[பார்த்து] அடே! அடே! பார், பார்.

கலிவிருத்தம்.

198. [2]மன்னவர் நெறியிடை மறைவு மேற்கொடு
துன்னுமிவ் வண்டியைத் தொடர்ந்து மற்றிது
என்னுழிச் செல்வதி யாரைச் சார்ந்ததென்
றின்னன வினவிநன் கினிது தேர்கவே. (௰)

வீரகன்—[பார்த்து] அடே! வண்டிக்கார! இவ்வண்டியை ஓட்டாதே. இவ்வண்டி யாருடையது? இதன்கண் ஏறியிருப்பவர் யாவர்? எங்கே போகிறது?

சேடன்—இவ்வண்டி பெருமான் சாருதத்தருடையது. இதன்கட் பெருமாட்டி வசந்தசேனை ஏறியிருக்கின்றாள். புட்பகரண்டகமென்னும் முதிர்பூஞ்சோலைக்குச் சாருதத்தர் விளையாடுதற்பொருட்டுக் கொண்டுபோகின்றேன்.

---

[1] கதிரவன் உரு அரை காணுங்காலை - சூரியன் உருவம் பாதி வெளிப்படுங்காலம்; அதிகாலையில். யாவனோ ஒருவன் கொண்டுசென்றனன் என்றதனால் என்பால் ஐயுறவேண்டா என்பது புலப்படுத்தியவாறு.

[2] மன்னவர்நெறி - இராசவீதி.

வீரகன்—[சந்தனகன்பக்கல் அணுகி] இவ்வண்டிக்காரன் "பெருமான் சாருதத்தருடைய வண்டி; வசந்தசேனை ஏறியிருக்கின்றாள்; புட்பகரண்டகமென்னும் முதிர்பூஞ்சோலைக்குக் கொண்டுபோகின்றேன்" என்று கூறுகின்றான்.

சந்தனகன்—அங்ஙனமாயின், போகட்டும்.

வீரகன்—பார்க்கப்படாமலேயா?

சந்தனகன்—ஆம்.

வீரகன்—[1]எவர்பாலுள்ள நம்பிக்கையால்?

சந்தனகன்—பெருமான் [2]சாருதத்தர்பாலுள்ள நம்பிக்கையால்.

வீரகன்—பெருமான் சாருதத்தர் என்பவர் யாவர்? வசந்தசேனை என்பாள் யாவள்? [3]எதற்காகப் பார்க்கப்படாமலேபோகவேண்டும்?

சந்தனகன்—அடே! பெருமான் சாருதத்தரை அறியாயோ? வசந்தசேனையையும் அறியாயோ? நீ பெருமான் சாருதத்தரையும், வசந்தசேனையையும் அறியாயாயின் ஆகாயத்தில் [4]நிலவொளியோடுங்கூடிய திங்களஞ்செல்வனையும் அறியாதவனாவாய்.

---

[1] எல்லோரும் தம்மைக் காத்துக்கொள்ள ஏதோவொன்றைக் கூறுவர். இந்நிகழ்ச்சியில் நம்புவது எப்படி என்பது கருத்து.

[2] சாருதத்தர் நீதிதவறாதவர். அவர்வண்டியாதலின் அவர் அதனைத் தவறானசெயற்கு உபயோகப்படுத்தார் என்பது கருத்து.

[3] இத்தகைய அரசியற்காரியத்தில் ஆராய்ச்சிவேண்டாவென்பது எக்காரணம்பற்றி என்பதாம்.

[4] நிலவு வசந்தசேனையையும், சந்திரன் சாருதத்தரையும் குறிக்கும்.

நேரிசைவெண்பா.

199. நற்குணத்தேன் மிக்க நளினமலர் சீலவொளி
மிக்க மதியிடுக்கண் மேனிஞர்—ஒற்கமெலாம்
விட்டுவிடும் வேலையுட்சீர் மிக்கமணி யாமவரை
நாட்டிலறி யாரெவரோ நன்று. (கக)

200. தருமநிதி யாஞ்சாரு தத்தரெனும் வள்ளல்
திருவசந்த சேனையெனுஞ் செல்வி—இருவருமே
மன்னு திலகமென மாசிலொளி யாற்றிகழ்வர்
இந்நகரிற் போற்றவறி யார். (கஉ)

வீரகன்—அடே! சந்தனக!

நேரிசைவெண்பா.

201. சார்பு மிகுஞ்சாரு தத்தரையும் யானறிவேன்
சீர்கொள் குணவசந்த சேனையெனும்—நாரியையும்
நன்றறிவே னம் [1] அரச னல்குஞ் செயற்பணியில்
என்றந்தை யேனும் [2] அறி யேன். (கங)

ஆரியகன்—[தனக்குள்] இவ் வீரகன் எனக்கு [3] முன்னைப் பகைவனுவான். இச் சந்தனகன் எனக்கு முன்னை நண்பனுவான்.

---

[1] அரசன் நல்கும் செயற்பணி - அரசனிட்ட அரசியற்காரியமாகிய கட்டளை.

[2] அறியேன் என்பது ஈண்டு நம்பமாட்டேன் என்னும் பொருட்டு.

[3] முன்னை என்பது பழம்பிறப்பையுணர்த்தும்.

நேரிசைவெண்பா.

202. [1]மன்றல் வினைத்தீக்கு மாணிலீ மத்தெரிக்குந்
துன்று குணமொவ்வாத் தோற்றம்போல்—நின்றவிவர்க்
கெண்புகு மோர்செயலி லீடுறினு நெஞ்சத்துப்
பண்புரிமை யொன்று படா. (கஉ)

சந்தனகன்—நீ [2] அரசியல்நலத்திற் கருத்துடையவன்; படைத்தலைவன்; அரசற்கு நம்பிக்கை மிக்கவன். இவ்வெருதுகளை ஓட்டாமல் நிறுத்திவைக்கின்றேன். பார்.

வீரகன்—நீயும் அரசற்கு நம்பிக்கைமிக்க படைத்தலைவனவாய். ஆதலின் நீயே பார்க்கக்கடவை.

சந்தனகன்—என்னாற் பார்க்கப்பட்டது உன்னாற் பார்க்கப்பட்டதாகுமா?

வீரகன்—எது நின்னாற் பார்க்கப்பட்டதோ அது வேந்தன் பாலகனாற் பார்க்கப்பட்டதாகும்.

சந்தனகன்—அடே! [3] நுகத்தடியைத் தூக்கு.

[சேடன் அங்ஙனமே செய்கின்றான்.]

ஆரியகன்—[தனக்குள்] காவலர் என்னைக் காண்பார் கொல்? பேறிலனாகிய யானோ ஆயுதமில்லாதவனாக இருக்கின்றேன்; அதனால் என்ன?

---

[1] மன்றல்வினைத் தீ - திருமணச்செயற்குரிய தீ. மாண் இல் ஈமத்து எரி - பெருமையில்லாத சுடலைத் தீ. குணம் ஒவ்வாமை-சுபமும் அசுபமும் ஆதல்.

[2] இம் மூன்று காரணங்களாலும் நீயே பார்த்தற்குரியவன் என்பதாம்.

[3] நுகத்தடியைத் தூக்கினால் வண்டியின் பின்புறம் தாழும்; ஏறுதற்கு எளிதாமென்பதாம்.

நேரிசைவெண்பா.

203. வீம னருஞ்செயலை மேற்கொள்வேன் றேட்டுணையே
தாமப் படைக்கலங்க டாமாகும்—[1]மேன்மை
முறையிற் பகைவரொடு மோதுண்டு சாதல்
சிறைபுக் குயிர்நீங்க றீது. (கரு)

ஆயினும், ஆண்மைநிலையை வெளிப்படுத்தற்கு இஃது அமயமன்று.

[சந்தனகன் வண்டியிலேறிப் பார்த்தலை அவிநயிக்கின்றான்.]

ஆரியகன்—அடைக்கலம்புகுகின்றேன்.

சந்தனகன்-அடைக்கலம்புகுந்தவர்க்கு அச்சம் இன்றாக.

ஆரியகன்—

நேரிசைவெண்பா.

204. வெற்றித் திருவகலும் விட்டொழிவார் நட்டோரும்
சுற்றக் குழுவுந் தொடர்நீங்கும்—மற்றோரும்
மேவார் பரிகசிப்பர் வேண்டிப் புகலடைந்தாற்
காவா தொழிந்தானைக் கண்டு. (கசு)

சந்தனகன்—இடைச்சிறுவனாகிய இவ் ஆரியகன் பருந்தினால் துரத்தப்பட்டு வேடன்கையில் வீழ்ந்த பறவைபோல் எம் கைவயப்பட்டான்; [நினைவுகூர்ந்து] இவன் குற்றமில்லாதவன்; அடைக்கலமாகவந்தவன்; பெருமான் சாருதத்தருடைய வண்டியில் ஏறியிருக்கின்றான்; என் உயிரைக் காப்

[1] பகைவரொடு மோதுண்டுசாதல் மேன்மை, சிறைபுக்கு உயிர் நீங்கல் தீது என்பதாம். பகையொடுபொருதலால் இழிவும் இறப்பும் ஒருதலையாகவருமென்பதில்லை; ஒரோவமயம் வெற்றியும் பெருமையும் எய்தவுங்கூடும். சிறைபுகின் இழிவும் இறப்பும் எய்தல் ஒருதலையாகும் என்பது கருத்து.

பாற்றிய பெருமான் சருவிலகருக்கு நண்பன்; அரசனது ஆணையோ மற்றொருபுறம்உள்ளது. ஆதலின் இந்நிகழ்ச்சியில் இப்பொழுது மேற்கொள்ளத்தக்கது யாது? யாதாயினும் என்? வருவதுவருக. முதலிலேயே அபயமளித்துவிட்டேன்.

நேரிசைவெண்பா.

205. [1]அஞ்சி யடைந்தார்க் கபயப் பொருளளித்தே
எஞ்சு பிறர்க்குதவி யின்புறுநன்—னெஞ்சற்
கிறப்பு வரினும் இனிதுறுக பார்மேல்
அறப்புகழே யாகு மது. (கஎ)

[[2]அச்சத்தோடு இறங்கி]காணப்பட்டான் ஆரியன் [என்று [3]பாதி கூறியஅளவில்] இல்லை; ஆரியை வசந்தசேனை காணப் பட்டாள். அவள், "பெருமான் சாருதத்தரை அடைதற்குச் செல்லுகின்ற என்னை இராசவீதியில்வைத்து இங்ஙனம் அவமானப்படுத்துவது உங்களுக்குத் தக்கதா? இது பொருத்தமா?" என்று கூறுகின்றாள்.

வீரகன்—சந்தனக! நின்சொல்லில் எனக்கு ஐயப்பாடு உண்டாகின்றது.

சந்தனகன்—உனக்கு ஐயப்பாடு என்ன?

---

[1] அபயமளித்துப் பிறர்க்கு உதவிபுரிந்து இன்புறும் நெஞ்சனாகிய எனக்கு என்க. எஞ்சுதல் - குறைதல்.

[2] ஆரியகனை விடுத்தலால் உண்டாம் அச்சம்.

[3] ஆரியகனைக் கண்டநிலையில் மனங்கலங்கி ஆரியன் என்று பாதிகூறியஅளவில் நிறுத்திக்கொண்டு, பின் ஆரியையாகிய வசந்த சேனை என்றான் என்க.

வீரகன்—

நேரிசைவெண்பா.

206. ஆரியனென் றூற்காணப் பட்டா னெனச்சொலிப்பின்
சீரிய நல்வசந்த சேனையெனும்—ஆரியையென்
றோதினு யச்சத்தி ஞேங்கு குறறடைப்பட்
டோதிஞய் திண்ணியனீ யும். (கஅ)

இக்காரணங்களால் எனக்கு ஐயமுண்டாயிற்று.

சந்தனகன்—அடே! உனக்கு என்ன ஐயப்பாடு? தென்றேயத்திற்பிறந்த யாங்கள் விளக்கமில்லாத பேச்சுக்களையுடையேம். கசம், கத்தி, கடம், கடட்டோவிலம், கருநாடகம், கன்னம், பிராவரணம், திரவிடம், சோழம், சீனம், பருப்பரம், கேரம், கானமுகம், மதுகாதம் முதலிய தேயத்து [1]மிலேச்சசாதிகளுடைய பலவகைப்பட்ட தேயமொழிகளையும் அறிந்துளேம். ஆதலின் "காணப்பட்டான்" என்றுதல் "காணப்பட்டாள்" என்றுதல், "ஆரியன்" என்றுதல் "ஆரியை" என்றுதல், விரும்பியவண்ணம் பேசும் இயல்புடையேம்.

வீரகன்—ஓ! யானும் பார்க்கின்றேன். இது மன்னவன் ஆணையாகும். [2]யான் அரசனது நம்பிக்கைக்கு மிகவும் உரிமையுடையவன்.

சந்தனகன்—அங்ஙனமாயின் யான் நம்பிக்கையில்லாதவனுயினேனே?

---

[1] மிலேச்சர்கள் விளக்கமில்லாமல் பேசும் இயல்பினரென்பதாம்.

[2] ஒன்றை யான் சேரிற் பாராமற் செய்யவோ தவிர்க்கவோ மனம் ஒருப்படேன் என்பது கருத்து.

வீரகன்—ஓ! அது [1]தலைவன் கட்டளை.

சந்தனகன்—[தன்னுள்] ஆரியகனென்னும் இடைச் சிறுவன், பெருமான் சாருதத்தர துவண்டியில் ஏறிச்செல்லு கின்றானென்று அரசற்கு வீரகன் தெரிவிப்பானாயின், பெரு மான் சாருதத்தரை அரசன் தண்டிப்பான். ஆதலின் இந் நிகழ்ச்சியில் மேற்கொள்ளத்தக்க உபாயம் யாது? [நினைவு கூர்ந்து] பயன் இல்லாத ஒரு கலகத்தை விளைவிப்பேன். [வெளிப்படையில்] அடே! வீ ர க! சந்தனகனாகிய என்னாற் பார்க்கப்பட்டதொன்றை மீண்டும் பார்ப்பதற்கு நீ யாவன்?

வீரகன்—அடே! நீதான் யாவன்?

சந்தனகன்—அரசனாற் சிறப்பளித்துப் பாராட்டப் படும் நீ உன் சாதியை மறந்துவிட்டாய்போலும்!

வீரகன்—[சினத்தோடு] அடே! [2]என்னுடைய சாதி யாது?

சந்தனகன்—யார் சொல்வது?

வீரகன்—நீ சொல்.

சந்தனகன்—[3]நான் சொல்லமாட்டேன்.

---

[1] எல்லோரும் ஒன்றை நேரிற் கண்டு செய்தல்வேண்டும்; பிறர் கூறுவதில் நம்பிக்கைவைத்தலாகாது என்பது அ ர ச ன் கட்டளை என்றவாறு.

[2] என்னுடைய சாதியில் யாது குறை என்பதாம்.

[3] சொல்ல என்னால் இயலும், ஆயினும் சொல்லவிரும்பவில்லை என்பது கருத்து.

கலிவிருத்தம்.

207. நின்னுடைச் சாதியி னிலைமை யோர்ந்துளேன்
என்னினு மொழுக்கத்தி னேற்றத் தாற்சொலேன்
மன்னுக வென்னுடை மனத்தி லாங்கஃ
துன்னுநல் [1]விளங்கனி யுடைப்பி னென்பயன்? ()

வீரகன்—ஓ! சொல். சொல்.

[சந்தனகன் [2]சமிஞ்ஞை செய்கின்றான்.]

வீரகன்—அடே! ஈதென்ன?

சந்தனகன்—

கலிவிருத்தம்.

208. [3]திட்டுதற் குரியதாய்ச் சிதைந்த வோர்கலும்
காட்டிய கத்தரிக் கோலுங் கைக்கொடு
மாட்டுறு முகமயிர் வனப்பு மக்களுக்
கூட்டுநீ படைகளின் றலைமை யுற்றனை. (உ0)

வீரகன்—அடே! சந்தனக! நீயும் அரசனாற் சிறப்பிக்கப்பட்டவன். நின்சாதியை மறந்துவிட்டாய்போலும்.

சந்தனகன்—அடே சந்திரனைப்போல் தூய்மைமிக்க சந்தனகனாகிய என்னுடைய சாதி என்ன?

---

[1] விளங்கனியை உடைப்பதற்குமுன் அஃது உருட்சிமுதலிய வடிவழகும் நறுமணமும் உடையதாகக் காணப்படும்; உடைக்கப்படின் உலர்ச்சி உள்ளீடின்மை என்னும் இவற்றுள் ஒன்றுடையதாகும்; என்பது ஈண்டு உவமேயத்துக்கு இயைபுடைத்து.

[2] கையினால் மயிர்களைதலை அபிநயித்துக் காட்டுகின்றான்.

[3] கல், மயிர்களையுங் கத்தரிக்கோல் இவைகளைக்கொண்டு மக்களுக்கு முகமயிர் வனப்புச்செய்பவன் என்னும் இதனால் அம்பட்டன் என்பதைப் புலப்படுத்தினான்.

வீரகன்—யார் சொல்வது?

சந்தனகன்—சொல். சொல்.

[வீரகன் அபிநயத்தால் [1]சமிஞ்ஞைசெய்கின்றான்.]

சந்தனகன்—அடே! ஈதென்ன?

வீரகன்—அடே! கேள்.

நேரிசைவெண்பா.

209. [2]தாய்தந்தை பேரி படகங் காடகமே
யாய துடன்பிறப்பிங் காதலினாற்—றாய்மைத்
திடமுடைய துன்சாதி தீவாயோய் நீயும்
படைமுதல்வ னாயினையே பார். (உக)

சந்தனகன்—[சினத்தோடு] சந்தனகனாகிய யான் சக்கிலியனா? அங்ஙனமாயின் வண்டியைப் பார்.

வீரகன்—அடே! வண்டியோட்டுகின்றவனே! வண்டியைத் திருப்பு; யான் பார்க்கவேண்டும்.

[சேடன் அவ்வாறே செய்கின்றான். வீரகன் வண்டியில் ஏற முயல்கின்றான். சந்தனகன் விரைந்து தலைமயிரைப்பற்றி இழுத்து நிலத்தில் வீழ்த்திக் காலினால் உதைக்கின்றான்.]

வீரகன்—[சினமுற்றெழுந்து] அடே! நம்பிக்கையுடையனாய் அரசனதுகட்டளையைமேற்கொண்டு ஒழுகும் என்னை நீ விரைந்து தலைமயிரைப்பற்றி இழுத்து வீழ்த்திக் காலால்

---

[1] தோற்பறையடித்தலைக் காட்டுகின்றான்.

[2] பேரி, படகம், காடகம் இவை வாச்சியத்தோற்கருவிகளாகும். உனக்குத் தாய் பேரி, தந்தை படகம், உடன்பிறந்தார் காடகங்கள்: என்னும் இதனால் சக்கிலியன் என்பதைப் புலப்படுத்தினான்.

உரைத்தனை; ஆதலிற் கேள். அடே நீதிமன்றத்தின்நடுவில் வைத்து நின் வலிய உடலை வெட்டி வீழ்த்துவேன். அங்ஙனம் செய்யாதொழியின் யான் வீரகனல்லன்.

சந்தனகன்—அடே! அரண்மனை அல்லது நீதிமன்றத் துக்குவேண்டுமானாலும் போ. நாயைப்போன்ற உன்னால் என்னசெய்யமுடியும்?

வீரகன்—அப்படியா? [என்று போகின்றான்.]

சந்தனகன்—[நாற்புறமும் பார்த்து] போ. அடே! வண்டி யோட்டுகின்றவனே! போ. யாரேனும் உன்னைக் கேட்பா ராயின் "இவ்வண்டி சந்தனகனாலும் வீரகனாலும் பார்க்கப் பட்டுப் போகின்றது" என்றுசொல். [1]பெருமாட்டி! வசந்தசேனே! இவ் [2]அடையாளப்பொருளை உனக்குத் தரு கின்றேன். [என்று வாட்படையைக் கொடுக்கின்றான்.]

ஆரியகன்—[வாட்படையைப் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சி யோடு தனக்குள்]

நேரிசைவெண்பா.

210. வாட்படையும் பெற்றேன் வலத்தோள் துடிக்கின்ற
தாட்படுத்துக் காத்த தருந்தெய்வஞ்—சேட்படுத்தேன்
துன்பமெலாம் ஆவா தொடக்க முதல்[3]அனைத்தும்
இன்பால மாயினவா லெற்கு. (உல)

---

[1] வண்டியினுள் இருப்பவன் ஆரியகன் என்பது தெரிந்தும் "பெருமாட்டி! வசந்தசேனே!" என்றது வண்டியோட்டுபவனை ஏமாற்றுதற்காம்.

[2] வண்டி சோதிக்கப்பட்டதென்பதற்குரிய அடையாளமாகும்.

[3] அனைத்தும் - வண்டியில் ஏறப்பெற்றது முதலிய எல்லாம்.

சந்தனகன்—[1]பெருமாட்டி!

ஆசிரியவிருத்தம்.

211. ஈண்டெனை யறிவித் துள்ளே
வரியைந்தசந் தனக னென்று
நீண்டவன் புடைமை யாகி
நினைத்தியா லென்னை யென்றும்
பூண்டதோர் பொருளி னுசை
யாலிது புகன்றே னல்லேன்
தூண்டிய வினிய நட்பின்
றொடர்பினுற் சொல்லி னேனுல். (உக)

ஆரியகன்— நேரிசைவெண்பா.

212. [2]சந்திரன்போ லின்பந் தருங்குணமாஞ் செல்வநிறை
சந்தனனைத் தெய்வந் தரநட்டேன்—இந்தநாள்
அச்சமறச் சிந்நன் அருண்மொழிதான் பொய்த்திலதேல்
இச்சந் தனனைநினைப் பேன். (உச)

சந்தனகன்—

213. பன்னு சிவன்றிருமால் பங்கயத்தோன் பானுமதி
யென்னுமிவர் நிற்கபய மீந்தருள்க—முன்னைநாட்
சும்ப நிசும்பர்த் தொலைத்தருளுந் [3]தேவியைப்போல்
வெம்புபகை வென்றுவளர் க. (உரு)

---

[1] பெருமாட்டி! என வசந்தசேனையைநோக்கிக் கூறுவதாக வெளிப்படுத்திக்கொண்டு இனி வரும் அரசியற்றிருவுக்குரிய ஆரியகனை நோக்கித் தெரிவிக்கின்றான்.

[2] வண்டியோட்டுபவன் செவியிற்படாவாறு பின்புறத்தே நிற்கும் சந்தனகனைநோக்கிக் கூறியது.

[3] தேவி - கௌரி. தேவியைப்போல் என்று கூறியது வசந்தசேனை என்று சேடன் நம்புதற்காம்.

[சேடன் வண்டியோடு போய்விடுகின்றான்.]

சந்தனகன்— [வேடசாலேயை எதிர்நோக்கி] ஓ! யான் வீட்டிலிருந்து வெளிப்பட்டதுதொடங்கி என்னைப் பின் தொடர்ந்துவந்த என் அன்புரிமைநண்பனுகிய சருவிலகன் எங்கேயோபோய்விட்டான். நிற்க. படைத்தலைவருள் தலைவனும் அரசனது நம்பிக்கைக்கு உரியவனும் ஆகிய வீரகன் எனக்குப் பகைவனுயினுன். ஆதலின், யானும் புதல்வர் உடன்பிறந்தார் முதலியவர்களோடு இவ் ஆரியகனைப் பின்றெடர்ந்துசெல்கின்றேன். [என்று போகின்றான்.]

"வண்டிமாற்றம்" என்னும்

ஆரும் அங்கம் முற்றிற்று.

---

# [1] ஏழாம் அங்கம்.

## ஆரியகனைக் கோடல்.

[சாருதத்தனும் விதூடகனும் வருகின்றனர்.]

விதூடகன்—ஓ! புட்பகரண்டகம் என்னும் முதிர் பூஞ் சோலையின் எழில்நலங்களைப் பாருங்கள். பாருங்கள்.

சாருதத்தன்—நண்ப! இப் பூஞ்சோலையின் இயல்பு இவ் வாறுள்ளது:—

நேரிசைவெண்பா.

214.. [2]வணிகர்தமைப் போல்விளங்கு மன்மரங்க ளப்பூத்
தனிவில் விலைப்பொருள்போற் சாரும்—துணியும்
இறைப்பொருள் கோடற் கெழும்வினைஞர் போலச்
சிறைச்சுரும்பர் சென்றுலவு மால். (க)

விதூடகன்—ஐய! தூய்மைசெய்யப்படாமலே இயற்கை யில் அழகுவாய்ந்த இக்கல்லில் தாங்கள் இருத்தல்வேண்டும்.

சாருதத்தன்—[இருந்து] நண்ப! வருத்தமானகன் காலந் தாழ்க்கின்றனனே!

---

[1] இவ்வங்கத்தில் ஆரியகன் சிறைவிடுதிபெற்றுச் சாருதத்த னைச் சார்தல் கூறப்படும்.

[2] இறைப்பொருள் - வாணிகநிமித்தம் கடைத்தெருவிற் பரப் பப்படும் பொருட்கு வாங்கப்படும் அரசிறை. விலைப்பொருளாம் நிலையிலுள்ள மலர்களில் தேன்றுளிகளைமாத்திரம் வண்டுகள் முத விற் கோடலின் அஃது இறைப்பொருளாகக் கூறப்பட்டது.

விதூடகன்— "வசந்தசேனையை அழைத்துக்கொண்டு மிகவிரைவில் வரவேண்டும்" என்று வருத்தமானகனிடம் யான் சொல்லியிருக்கின்றேன்.

சாருதத்தன்— அப்படியானால் என் காலந்தாழ்க்கின்றனன்?

நிலைமண்டில ஆசிரியப்பா.

215. [1]மற்றொரு பாண்டி லுற்றவன் முன்னர்
மெல்ல மெல்லச் செல்லுகின் றதுகொல்?
ஆங்கத னிடைவெளி காண்கின் றனன்கொல்!
அச்சிடை முறிய வைச்சுமற் றொன்று
சேர்க்கின் றனன்கொல்! மூக்குக் கயிறு
சிதைந்தறுந் ததுகொல்! செம்மைசெய் வினைஞர்
வழியிடை யிட்ட கழிமரத் திரள்கள்
செறிதரத் தடையுறீஇப் பிறிதொரு வழியைத்
தேடுகின் றனன்கொல்! ஓடுத லின்றி
எருதுகள் மெல்ல வேகச் செலுத்தித்
தன்விருப் பின்படி சார்கின் றனன்கொல்! (உ)

---

[1] வருத்தமானகன் காலந்தாழ்த்தற்குக் காரணம் இவ்வாறிருக்குமோவென்று இச்செய்யுளிற் கூறப்பட்டபடி ஐயுறுகின்றான். இடைவெளிகாணல்-முன்னேசெல்லும் வண்டியை விலக்கிச்சேறற்குரிய இடைவெளியை ஆராய்தல். செம்மைசெய்வினைஞர் - அரசன் ஆணைமேற்கொண்டு வழியைச் செப்பனிடும் பணியாளர். கழிமரம்-புதிதாகச் செப்பனிடப்படும் வழிகளில் வண்டிகள்போதலைத் தடுத்தற்குக் குறுக்காகச் சேர்க்கப்படும் மரம். எருதுகளை மெல்லச் செலுத்தித் தன்விருப்பின்படி சார்தலாவது நம் நிலைமைத்தாழ்வால் நம்மைப் பொருட்படுத்தாமல் எருதுகளை மெல்ல நடத்திக்கொண்டு வருதல்.

[மறைந்திருக்கும் ஆரியகனையுடைய வண்டியை நடத்திக்கொண்டு வந்து]

சேடன்—எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள்.

ஆரியகன்—[தனக்குள்]

ஆசிரியவிருத்தம்.

216. மன்னவன்ற னேவலராங் காவலரைக்
கண்டஞ்சி மருண்டு காலிற்
றுன்னுவிலங் குடைமையினல் விரைந்துசெலற்
கியலாத துணையி லேன்யான்
தன்னிகரி லொருபெரியோன் வண்டியின்மற்
றவனறியா வகையிற் சார்ந்து
பொன்னியலுந் தன்குடம்பை தனிற்காக்கை
போற்றவளர் குயில்போற் போவேன். (௩)

ஆ! ஆ! நகரத்தினின்றும் [1]நெடுந்தூரம் கடந்துவந்துளேன். ஆதலின், இனி இவ்வண்டியினின்றும் இறங்கி இச்சிறுமரச்சோலையுள் மறைந்துசெல்லலாமா? அன்றி இவ் வண்டிக்குரிய தலைவரைப் பார்க்கலாமா? இச் சிறுமரச்சோலைக்கட்புகுதலாற் பயனென்? மாட்சிமிக்க சாருதத்தர், தம்மையடைந்தவர்பால் அன்புமிக வுடையவரென்று கேட்டிருக்கின்றேன். ஆதலின் அவரை [2]நேரிற்கண்டுசெல்வேன்.

---

1 நெடுந்தூரம்வந்ததால் அரசனுடையகாவலர் இனி என்னை அறியமாட்டார் என்பது கருத்து.

2 நேரிற் கண்டஅளவினனே நலமுண்டாம் என்பது கருத்து. செவிவாயிலாக அறியப்பட்ட பெருமானைக் கண்களாலும் காண்டல் நலமென்பது கருத்து.

நேரிசைவெண்பா.

217. [1]இத்துன்ப சாகரத்தி னின்றின் றெழுந்தவெனை
அத்தன்கண் டானந்த மாங்கெய்தும்—மெத்தியசீர்
அன்ண லவன்குணங்க ளாலேயித் துன்பநிலை
நண்ணுமுட ருங்கினனிந் நாள். (௪)

சேடன்—இஃது அப்பூஞ்சோலை. இதன்கட் புகுகின்றேன். [அருகிற்சென்று] ஐய! மைத்திரேயரே!

விதூடகன்—ஓ! தங்களுக்கு [2]உவப்பானதொன்றைத் தெரிவிக்கின்றேன். வருத்தமானகன் பேசுகின்றான். ஆதலின், வசந்தசேனை வந்திருக்கவேண்டும்.

சாருதத்தன்—மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன்.

விதூடகன்—இழிதகவ! என் இவ்வளவுகாலம் தாழ்த்தனை?

சேடன்—ஐய! மைத்திரேயரே! சினங்கொள்ளவேண்டா. வண்டியின்விரிப்பை எடுத்துவர மறந்துவிட்டதின்நிமித்தம் போக்குவரவுசெய்ததிற் காலந்தாழ்த்துவிட்டேன்.

சாருதத்தன்—வருத்தமானக! வண்டியைத் திருப்பு. நண்ப! மைத்திரேய! வசந்தசேனையை இறக்குவாயாக.

---

[1] ஆனந்தம் எய்தும் (பிறர்துன்பங்கண்டு பொறாத அருளாளராதலின் என் துன்ப ஒழிவுகண்டு) இன்பம் உறுவர். சாருதத்தருடைய வண்டி என்ற அளவில் சந்தனகன் என்னைப் பிடியாமல் விட்டான். இன்றேல் இறப்பே முடிவான பயனாகும். ஆதலின், அவர் உயர்குணங்களாலேயே உடல்தாங்கினேன் என்றவாறு.

[2] உவப்பானது - வசந்தசேனையின் நல்வரவுபற்றியது.

விதூடகன்—இவள் தானே இறங்கமாட்டாளா? இவள் கால்கள் விலங்கிடப்பட்டுள்ளனவா? [எழுந்து வண்டியைத் திறந்து] ஓ! வசந்தசேனையில்லை. [1]வசந்தசேனன் இவன்.

சாருதத்தன்—நண்ப! பரிகாசம் வேண்டா. காதல் காலந் தாழ்த்தலைப் பொறுது. [2]ஆனால் யானே இறக்குகின்றேன். [என்று எழுகின்றான்.]

ஆரியகன்—[பார்த்து] ஆ! இவரே இவ்வண்டியின் தலைவர். இவர் செவிக்குமாத்திரம் இன்பஞ்செய்பவரல்லர்; கண்களுக்கும் இன்பஞ்செய்கின்றனர். ஆ! [3]காப்பாற்றப்பட்டுள்ளேன்.

சாருதத்தன்—[வண்டியிலேறிப்பார்த்து] ஓ! இவன் ஆண்மகனு?

ஆசிரியவிருத்தம்.

218. [4]துதிக்கைபோ னீண்ட கைகளு மடங்கற்
றோளெனப் பருத்துயர் புயமும்
விதிப்படி யகன்ற சமனிலை மார்பும்
வெருளுறீஇச் சிவந்தநீள் விழியும்
மதிப்புற விங்ஙனமைதரு பெரியோன்
வடிவினுக் கியைதரா வாறு
விதிர்ப்புறு விலங்கோர் காலினிற் றூங்கும்
விதிக்குறு காரண மென்னோ? (ரு)

தாங்கள் யார்?

---

[1] இவன் ஓர் ஆடவன் என்பதாம்.

[2] பேசிக்கொண் டிருத்தலிற் பயனென்? என்பது கருத்து.

[3] இவரது காட்சியே துன்பத்தைப் போக்குவதென்பது கருத்து.

[4] இவன் உருவத்தைநோக்க அஃது அரசிலக்கணமுடையதாகக் காணப்படுகின்றது. அவ்விலக்கணத்துக்கு மாறாகக் காலில் தளைபூண்டிருத்தற்குக் காரணம் யாதோ? என்பதாம்.

ஆரியகன்—அடைக்கலம்புகுகின்றேன். யான் இடைக் குலச்சிறுவனாகிய ஆரியகனாவேன்.

சாருதத்தன்—பாலகன் என்னும் அரசனால் இடைச்சேரியினின்றுங் கொணர்ந்து சிறையிடப்பட்டவரோ தாங்கள்?

ஆரியகன்—ஆம்.

சாருதத்தன்— நேரிசைவெண்பா.

219. [1]நல்லூழே நின்னையிவ ணல்கியது நின்னுருவைப்
புல்லியென் கண்ணுவகை பூத்தனவால்—நல்ல
உயிரை விடினும் அடைக்கலத்தை யோம்பும்
பயனொழிய நின்னைவிடேன் பார். (௩)

[ஆரியகன் மகிழ்ச்சிக்குறிப்பை அவிநயிக்கின்றான்.]

சாருதத்தன்—வருத்தமானக! காலினின்றும் விலங்கைக் கழற்று.

சேடன்—தேவரீர் கட்டளைப்படியே. [அங்ஙனமேசெய்து] ஐய! விலங்கைக் கழற்றிவிட்டேன்.

ஆரியகன்—அன்புமயமான வன்மைமிக்க வேறு [2]விலங்குகளை அளித்துவிட்டீர்கள்.

விதூடகன்—[3]விலங்குகளை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள். இவ் வாரியகர் விடுதலைபெற்றார். இப்பொழுது நாம் [சிறைக்கோட்டம்] செல்வோம்.

---

[1] மிக முயன்று தரிசித்தற்குரிய பெரியோராகிய நீவிர் வலியக் காட்சியளித்தது என் நல்லூழ்ப்பயனாகும் என்றவாறு.

[2] அன்புவிலங்கு கழற்றவியலாதென்பது கருத்து.

[3] அரசதண்டனைக்கு மாறுபடச்செய்தமையால் நாமே தீமையைத் தேடிக்கொண்டோமென்பது கருத்து.

 

சாருதத்தன்—ஓ! தீமை நீங்குக.

ஆரியகன்—நண்பராகிய சாருதத்தரே! யான் தங்கள் குணங்களாலுண்டாகிய நம்பிக்கையால் இவ்வண்டியில் ஏறினேன். ஆதலிற் பொறுத்தருளவேண்டும்.

சாருதத்தன்—[1]வலிய மேற்கொண்ட நம்பிக்கையுடைய தங்களால் யான் அலங்கரிக்கப்பட்டுளேன்.

ஆரியகன்—தங்கள்பால் விடைபெற்றுச் [2]செல்லுதற்கு விரும்புகின்றேன்.

சாருதத்தன்—செல்லுங்கள்.

ஆரியகன்—நல்லது; இறங்குகின்றேன்.

சாருதத்தன்—அன்பரீர்! இறங்கவேண்டா. இப்பொழுது கழற்றப்பட்ட விலங்கினையுடைய தாங்கள் எளிதில் நடத்தற்கியலாது. மக்கள் இயல்பாகவே போக்குவரத்துச் செய்யும் இவ்விடத்தில் என் [3]வண்டி நம்பிக்கையை உண்டு பண்ணும். ஆதலின் இவ்வண்டியில் ஏறியே தாங்கள் செல்லல்வேண்டும்.

---

[1] முன் அறிமுகமில்லாத என்பால் முதலில்வைத்த நம்பிக்கையால் யான் அலங்கரிக்கப்பட்டுளேன் என்பதாம்.

[2] இங்கே தாழ்த்தால் இருவர்க்கும் துன்பமுண்டாம் என்பது கருத்து.

[3] நடந்துசெல்லின் விரைவாகப்போகநேரும்; அது பிறர்க்கு ஐயத்தை விளைவிக்கும். விரைந்துசெல்லவில்லையாயின், காவலர் பிடிப்பர் என்னும் அச்சம் விளையும். ஆதலின், எவ்வாற்றானும் நடந்துபோதல் நலமின்றென்றவாறும்.

ஆரியகன்—தாங்கள் சொல்லியவண்ணமே செல்கின்றேன்.

சாருதத்தன்— ஆசிரியவிருத்தம்.

220. [1]சுற்றத்தார் தமையினிது சேர்க—

ஆரியகன்—

[2]எனக் குறுசுற்றந் தாயோய் நீயே

சாருதத்தன்—

மற்றைக்கா ரியநிகழ்வி லென்னைநினைத்தி—

ஆரியகன்—

[3]தன்னைமறக்கும் வகைதா னுண்டோ

சாருதத்தன்—

உற்றுப்போம் நின்னெறியிற் றேவர்[4]புறந் தருக—

ஆரியகன்—

என்னை [5]ஓம்பி னாய்நீ

---

[1] இச்செய்யுள் சாருதத்தனும் ஆரியகனும் ஒருவர்க்கொருவர் உரையாடலாகக் கூறப்படுத்தப்பட்டு முடிந்தது.

[2] எனக்குநேர்ந்த இடையூற்றை ஒழித்தமையால் நீயே உறுசுற்றமாவாய்; நின்னினும் மேலான நெருங்கியசுற்றம் வேறில்லை, என்பதாம்.

[3] ஒருவன் தன்னை மறக்கும்வகையுண்டா? இல்லை என்பதாம். உடலுள்ளவரையும் உயிர்தந்த உபகாரியை எங்ஙனம் மறக்கவியலு மென்பது கருத்து.

[4] புறந்தால் - காத்தல்.

[5] நின்வண்டியினால் இடையூற்றைக் கடந்தேன்; ஆதலினால் நீயே எனக்குத் தெய்வம் ஆவாய் என்பது கருத்து.

சாருதத்தன்—

முற்றியநின் னல்லூழே நினைக்காத்தது—

ஆரியகன்—

எனினுமதன் [1]முதனீ யன்றோ! (எ)

சாருதத்தன்— பாலகன் என்னும் அரசன் முயன்று கொண்டிருக்குங்கால் அதற்கெதிராய பெருங்காப்புச்செய்தற் கியலாததாகும். ஆதலின், தாங்கள் விரைந்துசெல்லல் வேண்டும்.

ஆரியகன்—செல்கின்றேன். மீண்டுங் காண்பேன்.

[என்று போகின்றான்.]

சாருதத்தன்— ஆசிரியவிருத்தம்.

221. [2]மன்னவ னெஞ்சிற் கொவ்வா
மாபெருந் தீங்கு செய்திங்
கின்னுமோர் கணப்போழ் தேனு
மிருத்தலோ தகுதி யன்று
துன்னுபாழ்ங் கிணற்றி லிந்தத்
தொடரினை யெறிதி நண்ப
உன்னுமிச் செயலை வேந்த
ரொற்றராய் கண்ணிற் காண்பர். (அ)

---

[1] முதல்-காரணம். நின்வண்டியிலன்றி வேறுவண்டியில் ஏறியிருப்பேனுயின் எனக்கு நல்லூழ் எவ்வாறுண்டாம்? ஆதலின் என் நல்லூழும் நின்னைமுன்னிட்டே எனக்குப் பயன்அளித்தது என்பது கருத்து.

[2] தீங்குசெய்து - குற்றம்செய்தமையால். தொடர்-விலங்குடன் பிணைத்த சங்கிலி. நண்ப என்றது மைத்திரேயனைக் குறிப்பதாம். பாழ்ங்கிணறு, கல்லும் ஓடும் செடியும் நிறைந்து உபயோகமின்றியிருத்தலான் யாரும் காணமாட்டாரென்பது கருத்து.

[இடக்கண் அடித்தலை அவிசயித்து] நண்ப! மைத்திரேய! வசந்தசேனையைக் காண்பதில் யான் மிகவும் அவாவுடையனாகின்றேன். பார்க்க.

நேரிசைவெண்பா.

222. [1]காதலியை யிப்பொழுது காணேனென விடக்கண்
ஏதமுறத் துடித்த தென்கொலோ—ஓதப்
பொருந்துபய மின்றிப் புழுங்கி நடுங்கி
வருந்துகின்ற தென்றன் மனம். (சு)

ஆதலின் வருக. போவோம். [சுற்றிவந்து] தீங்கை விளைவிக்கும் பௌத்தசந்நியாசியின் தரிசனம் எதிர்முகமாகின்றதே. [ஆராய்ந்து] அவன் வருக. நாம் இவ்வழியே செல்வோம் [என்று போகின்றான்.]

"ஆரியகனைக்கோடல்" என்னும்

ஏழாம் அங்கம் முற்றிற்று.

---

[1] நிபம் - காரணம். நிமித்தம் காண்டலும் காரணமின்றி மனம் துன்புறுதலும் வரக்கடவ தீங்குகளைப் புலப்படுத்துவனவாம். ஆடவர்க்கு இடக்கண் அடித்தல் தீநிமித்தமாகும்.

# [1]எட்டாம் அங்கம்.

## வசந்தசேனை துன்பறிலே.

[நனைந்த சீவரமென்னும் துவராடையைக் கையிற்றூங்கிப் பௌத்தசமயத்துறவி வருகின்றான்.]

துறவி—அறிவில்லாதவர்களே! அறத்தைக் கடைப்பிடித்துச் செய்ம்மின்கள்.

நேரிசைவெண்பா.

223. [2]பற்று வயிற்றுப் பசியை யடக்குமின்சீர்
வற்றாத் தியானமெனும் மாபடகத்—தெற்றொலியால்
என்றும் விழிமின் இயைபில் புலக்கள்வர்
துன்றுமறங் கொள்வர் துணிந்து. (க)

இன்னும், உலகத்துள்ள எல்லாம் அழியும் இயல்பின என்பதைக் கண்டு யான் தனியனாகவே அறங்களுக்கு இருப்பிடமாகின்றேன்.

---

[1] இவ்வெட்டாம் அங்கத்தில், வண்டிமாற்றத்தாற் சகாரன் வண்டியில் ஏறிச்சென்ற வசந்தசேனைக்குத் தீங்குநிகழ்ந்தசெய்தி கூறப்படும். முன் அங்கத்தில் வேற்றுவழியாகச் சாருதத்தன் வெளிப்படுங்காற் குறிப்பிடப்பட்ட பௌத்தசந்நியாசியும் சகாரனும் ஒன்றுகூடுதலும் அதன்முகமாக அறிவிலார்செய்யும் தீங்கு வெளிப்படுதலும் இவ்வங்கத்தில் நிகழ்வனவாம்.

[2] பசிபொறுதார்க்குப் பொறியடக்கம் கைகூடா தென்பதாம். தியானம் மயக்க உறக்கத்தை யொழிக்குங் கருவியாம். படகம்—ஒரு வாத்தியம்.

நேரிசைவெண்பா.

224. [1]ஐவர் தமைக்கொன் றணங்கினையுங் கொன்றாங்கே
யுய்யக் கிராமத்தை யோம்பியே—செய்யவலி
யற்றவொரு சண்டாளன் றன்னையுங்கொன் றான்யாவன்
மற்றவன்பே ரின்பநுகர் வான். (உ)

225. [2]உள்ளம் மழியா ருவந்து தலைமழித்தும்
எள்ளும் முகமழித்து மென்பயனோ—உள்ளம்
மழித்தோனே நன்கு வனப்பிற் றலையை
மழித்தோ னெனப்படு வான். (ஙு)

---

[1] இச்செய்யுளின் உட்பொருள் வருமாறு:—ஐவர் தமைக் கொன்று ஐம்பொறிகளையும் தத்தம் புலனுகர்ச்சிகளிற் பற்றவிடாது அடக்கி. அணங்கு - அவிச்சை; அவித்யா. இது பஞ்சக்கிலேசங்களுள் தலையாயது. இதனை "மயக்கம்" என்பர் திருவள்ளுவர் (திருக்குறள்-360). அவித்யா என்பது வடமொழியில் பெண்பாலாகும், ஆதலின் அணங்கென்றுகூறப்பட்டது. கிராமம்-குழு; அஃது ஈண்டுத் தத்துவ தாத்துவிகங்களின் குழுவானமைந்த உடலையுணர்த்தும். உடலை யோம்புதலாவது தீயசெயல்களிற் புகாமற் பாதுகாத்தல். வலியற்ற சண்டாளன் என்பது, அவிச்சையும் அதன் காரியமும் ஆகிய துணைவலியிழந்த அகங்காரத்தை யுணர்த்தும். ஐம்பொறியடக்கம், அவிச்சை அகங்காரம் ஒழிதல், உடலைத் தீயசெயல்களிற் புகாமற் காத்தல் என்னும் இவற்றையுடையான் அழிவிலின்பமாகிய வீட்டுநிலையை எய்துவன் என்பதாம்.

[2] மழித்தல் - மொட்டையாக்குதல்; உள்ளம் மழியார் - உள்ளத்தைக் காம முதலிய அழுக்கறத் தூய்மைசெய்யார். தலை மழித்தும் முகம் மழித்தும் அழகுசெய்தலாற் பயனென்? உள்ளம் தூய்தாகப் பெற்றவனே அவ் வகவொழுக்கத்திற்கேற்ற தலைமழித்தலாகிய தவவேடப்பயனை யெய்தினோனவன் என்பதாம். "தவமறைந் தொழுகுந் தன்மையி லாளர்" (சிலப்பதிகாரம். இந்திரவிழவூரெடுத்த காதை அடி-128) என்பது ஈண்டு நினைவுறத்தக்கது.

இச் சீவர ஆடை துவர்நீர்தோய்ந்துள்ளது. அரசன் மைத்துனனாகிய சகாரனது [1] பூஞ்சோலைக்குட் புகுந்து அங்குள்ள புட்கரிணியில் இவ் வாடையைக் கழுவித் தூய்மை செய்துகொண்டு [2] மிகுவிரைவில் திரும்பிச் செல்வேன். [சுற்றிவந்து அங்ஙனமே செய்கின்றான்.]

[வேடசாலையில்]

நில். அடே! கொடியவனாகிய துறவியே! நில்.

துறவி—[அச்சத்தோடு பார்த்து] ஓ! ஓ! இதோ அரசன் மைத்துனனாகிய அச் சமத்தானகன் வந்துவிட்டான். ஒரு துறவி குற்றஞ்செய்வானாயின் மற்றைத் துறவிகளையும் எங்கெங்குக் காண்கின்றானோ அங்கங்கே எருத்தின் மூக்கைத் துளையிட்டாற்போல் அவர்கள்மூக்கைத் துளைத்துப் போக்குவான். ஆதலின், புகலில்லாத யான் யாரைப் புகலடைவேன். தலைவராகிய புத்ததேவரே எனக்கு இவ்வமயம்புகலிடமாவர்.

[வாட்படையேந்திய விடனோடு சகாரன் வருகின்றான்.]

சகாரன்—நில். அடே! கொடியவனாகிய துறவியே! நில். கட்குடிப்போர்கூட்டத்திற் கறியின் நிலைமையிற் கிடைத்த செந்நிற முள்ளங்கிக்கிழங்கின் தலைப்பாகத்தை முறித்தல்போல் உன் தலையை முறித்துவிடுவேன். [என்று சொல்லி அடிக்கின்றான்]

விடன்—காளின! உலகப்பற்றையொழித்துத் துவராடை மேற்கொண்ட இத்துறவியை அடித்தல் தகுதியன்று. இத

---

1 இப்பூஞ்சோலை புட்பகரண்டகமென்னும் உய்யானத்தின் ஒருபாலுள்ளது.

2 காவலர் காண்பாராயின் பிடித்துக்கொள்வரென்பது கருதி "மிகுவிரைவில்" என்றான்.

னுற் பயனென்! இன்ப நுகர்தற்பொருட்டு அடையப்பட்ட [1]இப்பூஞ்சோலையையே தாங்கள் பார்த்தல்வேண்டும். இஃது,

ஆசிரியவிருத்தம்.

226. [2]உறையுளி யில்லார்க் கில்ல
முறுமகிழ் வுறுத்தத் தோன்றிச்
செறிவன மரங்கள் செய்யுஞ்
சீரெழிற் செயன்மேற் கொண்டே
அறிவிலாக் கொடியார் தங்க
ளகமெனக் காவ லின்றி
யுறைபுதி தியறு டென்ன
வுரிமையி னுகர்ச்சிக் காமால். (ச)

---

[1] இப்பூஞ்சோலையைப் பாருங்கள் என்று பிறிதொரு நிகழ்ச்சியில் தலைப்படுத்தித் துறவிபாலெழுந்த சினத்தைத் தணிக்கின்றான்.

[2] உறையுள் - தங்குமிடம். இல்லார்-வழிச்செல்வோர். இல்லம் உறுமகிழ்வு - வீட்டை யெய்துதலானுண்டாம் உவகை. தோன்றிச் செறிந்த வனத்து மரங்கள். சீர் எழிற்செயல்-சிறந்த அழகிய செயல்; அஃதாவது தம்மை அடைந்தோரை வெப்பமொழித்துக் குளிர்விக்கும் செயல். கொடியவர் அகம் - தீயோருள்ளம். காவலின்றி என்றமையான் எல்லோரும் அனுபவித்தற்பொருட்டுத் தடையின்றி உட்புகுதற்குரியதென்பது போதரும். ஓர் அ ர ச ற் கு ப் புதிதாக வாய்க்கப்பெற்ற நாடுபோல உரிமையில்லாத நுகர்ச்சிக்குரியதுமாமென்க. புதியநாட்டில் உரிமையின்றியும் பயனுகர்தல் பொருந்தும். அதுபோல இப்புஞ்சோலை உரிமையின்றியும் பயன்நுகர்தற்குரியதென்பதாம். நுகர்ச்சிக்கு ஆம்-அனுபவித்தற் குரியதாகும். 'ஆம்' என்பது முற்போந்த இஃது என்னுஞ் சுட்டாற் கூறப்பட்ட புஞ்சோலைக்குப் பயனிலையாகும். செயன்மேற்கொண்டு காவலின்றி உரிமையில் நுகர்ச்சிக்கு ஆம் என முடிக்க. ஈண்டுத் துறவியை உட்புகுத்தவோவிலக்கவோ உனக்குஅதிகாரமில்லை என்பது உட்கோள்.

துறவி—[1]உபாசகரே! தங்கள்வரவு நல்வரவாக. அருள் செய்க.

சகாரன்—ஐய! பாருங்கள். பாருங்கள். என்னைப் பழித்துரைக்கின்றான்.

விடன்—என்னசொல்லுகின்றான்?

சகாரன்—உபாசகன் என்று என்னைக் கூறுகின்றான். யான் [2]நாவிதனா?

விடன்—புத்ததேவரை உபாசிப்பவரென்று தங்களைப் புகழ்ந்துகூறுகின்றான்.

சகாரன்—புகழ்ந்துசொல். பிட்சுக! புகழ்ந்துசொல்.

துறவி—நீங்கள் பொருளுடையீர். புண்ணியமுடையீர்.

சகாரன்—ஐய! பொருளுடையவன், புண்ணியமுடையவன் என்று என்னைக் கூறுகின்றான். யான் சாருவாகனா? தண்ணீர்த்தொட்டிவைப்பவனா? குயவனா?

---

[1] பௌத்தசமயத்தவர் இல்லறத்தாரை உபாசகர் எனவும், துறவறத்தாரைப் பிட்சுகர் எனவும் வழங்குவர்.

[2] உபாசகன் என்னுஞ் சொல் வினைசெய்வானையும் உணர்த்துமாதலின் மயிர்வினைஞன் எனத் தன் அறிவின்மையாற் பொருள் கொண்டு சகாரன் 'யான் நாவிதனா?' என்று கூறினான்.

[3] பொருளுடையவன் என்பதற்குப் பொருளினாற் பெறக்கடவது காமம் எனக்கொண்டு, காமமே சிறந்த உறுதிப்பொருளெனக் கொள்ளும் சாருவாகன் எனப் பொருள்கொண்டான். புண்ணியமுடையவன் என்பதற்கு, பசு முதலியன வுண்ணத் தண்ணீர்த்தொட்டிவைத்தலும், வேள்வி முதலியவற்றிற்குரிய மட்பாண்டங்களை ஆக்கிக்கொடுத்தலும் புண்ணியமாதலின் தண்ணீர்த்தொட்டி வைப்பவன் என்றும், குயவன் என்றும் பொருள்கொண்டான். புண்ணியச்செயல்கள் சகாரனுக்கு இழிவாயின என்பது கருத்து.

விடன்—காளின! "[1]நீங்கள் பொருளுடையீர். புண்ணியமுடையீர்" என்று உங்களைப் புகழ்ந்து பாராட்டுகின்ருன்.

சகாரன்--ஐய! அங்ஙனமாயின் எதற்காக இவன் இங்கு வந்தான்?

துறவி—இத்துவராடையைக் கழுவுதற்கு வந்தேன்.

சகாரன்—அடே! கொடுந்துறவி! எல்லாப் பூஞ்சோலைகளினுஞ் சிறந்த புட்பகரண்டகம் என்னும் இப் பூங்கா என் உடன்பிறந்தாள்கணவனால் எனக்குத் தரப்பட்டது. இதன்கண் உள்ள இப் புட்கரிணியில் நாய்களும் நரிகளும் நீர் உண்ணும். மிகச்சிறந்த [2]புருடனும் மனிதனுமாகிய யானும் இதன்கண் நீராடுவதில்லை. அத்தகைய இப் புட்கரிணியில் [3]பழைய கொள்ளுக்கஞ்சியை ஒத்த நிறத்தினையும் நாற்றத்தினையுமுடைய துவராடைகளைக் கழுவுகின்ருய். ஆதலின் உன்னை ஒரேஅடியிற் கொன்றுவிடுகின்றேன்.

விடன்—காளின! இவன் சமீபகாலத்தில் துறவியாயினன் என்று எண்ணுகின்றேன்.

சகாரன்—ஐய்! எப்படி அறிந்தீர்கள்?

விடன்—இதன்கண் அறியவேண்டுவதென்ன? பார்க்க.

---

[1] அரசன்மைத்துனனாதலின் பொருளுடையீர் என்றும், நல்லொழுக்கமுடையீர் ஆதலின் புண்ணியமுடையீர் என்றும் பாராட்டுகின்ருன் என்பது கருத்து.

[2] புருடனும் மனிதனும் என்பது பொருளின்மை.

[3] கொள்ளுத்தானியத்தாலாகிய பழைய கஞ்சி மிக்க செந்நிறமுடையதாகுமாதலின் ஈண்டு ஒப்பாயிற்று.

ஆசிரியவிருத்தம்.

227. [1]இன்னுமிவ னெற்றியொளி மயிர்களைந்த
வுடன்றிகழ்ந்தாங் கியையும் வெண்மை
துன்னுதுவ ராடையினு னியறழும்பு
நாள்சிலவாற் றேளி னின்றும்
அன்னதுவ ராடையினை யமைக்குமுறை
பயின்றிலனவ் வகற்சி யாலே
பன்னுறு முன்றானை சுருங்கிநெகிழ்ந்
தணிபுயத்திற் படாது வீழும். (ரு)

துறவி—உபாசகரே! அப்படியே. யான் சமீபகாலத்தில் துறவியாயினவன்.

சகாரன்—அப்படியானல் நீ [2]பிறந்தவுடனேயே ஏன் துறவியாகவில்லை? [என்று அடிக்கின்றான்.]

துறவி—புத்ததேவர்க்கு வணக்கம் ("நமோபுத்தாய")

விடன்—இவனை அடித்தலாற் பயனென்? விடுங்கள். போகட்டும்.

---

[1] நெற்றியொளி மழித்தவுடனே எங்ஙனம் வெண்ணிறமாகத் தோன்றுமோ அங்ஙனமே தோன்றுகின்றது. இவன் துறவியாகிச் சிலநாளாதலின் துவராடைபோர்த்ததனுலாம் வடு, தோளிற் காணப்பட்டிலது. அமைக்கும்முறை-செய்யும்முறை. அவ்வகற்சியாலே அவ்வாடை தன் அளவுக்குமேற்பட்டு அகன்றிருத்தலாற் சுருக்கப்பட்டு அடிக்கடி சரிந்து தோளில் தங்காது வீழ்வதாம். இன்ன குறிப்புக்கள் இவன் சமீபகாலத்தில் துறவியாயினன் என்பதைப் புலப்படுத்துவன.

[2] பிறந்தவுடனேயே ஏன் துறவியாகவில்லை என்பது நியாய விருத்தம்.

சகாரன்—அடே! யான் ஆலோசித்துத் துணியும் அளவு நில்.

விடன்—[1]எவனோடுகூடி ஆலோசிப்பது?

சகாரன்—என் நெஞ்சோடு ஆலோசிக்கின்றேன்.

விடன்—ஆ! அப்படியானாற் [2]போகவேண்டாவோ?

சகாரன்—மகனே! நெஞ்சமே! தலைவ! [3]மகனே! இத் துறவி போகலாமா? அன்றி நிற்கலாமா? [[4]தனக்குள்] போகவும்வேண்டாம். நிற்கவும்வேண்டாம். [வெளிப்படையில்] ஐய! என் நெஞ்சோடு ஆலோசித்துத் துணிந்துளேன். என் உள்ளம் இவ்வாறு கூறுகின்றது.

விடன்—என்னசொல்லுகின்றது?

சகாரன்—போகவுங்கூடாது; நிற்கவுங்கூடாது. மூச்சுக் காற்றை உள்ளே இழுத்தலுமாகாது; வெளியே விடுத்தலு மாகாது; இவ்விடத்திலேயே விரைவில் வீழ்ந்து இறத்தல் வேண்டும்.

துறவி—புத்ததேவர்க்கு வணக்கம். ("நமோபுத்தாய") அடைக்கலம்புகுகின்றேன்.

விடன்—செல்க.

சகாரன்—உறுதிசெய்து போகவேண்டும்.

---

[1] யான்முன்னரே விடும்படி கூறியுள்ளேன். என்னைத்தவிர வேறு யாரோடு ஆலோசிப்பாய் என்பது கருத்து.

[2] துறவி போகவேண்டாவோ என்பதாம்.

[3] கூறியதுகூறல். இவ்வெல்லா விளிகளும் நெஞ்சத்தைப் பற்றியன.

[4] நெஞ்சொடுகிளத்தலை அவிநயஞ்செய்கின்றான்.

விடன்—என்ன உறுதி?

சகாரன்—சேற்றினால் தண்ணீர் கலக்கமுறுவண்ணம் இப்புட்கரிணியிலுள்ள சேற்றை வெளிப்படுத்தல்வேண்டும். இன்றேல் தண்ணீரைத்திரட்டிப் பிரித்துவைத்துச் சேற்றை வெளிப்படுத்தல்வேண்டும்.

விடன்—ஆ! இவன் அறிவின்மை என்னே!

நேரிசைவெண்பா.

228. [1]மாறாய வுள்ளமும் மாண்பிலாத் தீச்செயலும்
கூறாய கல்விற் குலவுடலும்—வீறுக்கொண்
டேற்ற விறைச்சியுரு வேய்மர மாவார்தந்
தோற்ற நிலக்குச் சுமை. (௯)

[துறவி [2]அவிநயத்தாற் பழிக்கின்றான்.]

சகாரன்—என்னசொல்லுகின்றான்?

விடன்—தங்களைப் புகழ்கின்றான்.

சகாரன்—புகழ்ந்துசொல். புகழ்ந்துசொல். மீண்டும் புகழ்ந்துசொல்.

[அங்ஙனஞ்செய்து துறவி போகின்றான்.]

---

[1] கல்மரம்முதலியனசித்தவிருத்தியின்மையால்வேண்டுமென்று பிறர்க்குத் தீமைவிளைக்கா; அறிவிலாத மாக்கள் மாறுபட்ட எண்ணத்தையும் செயலையும் உடையராய்த் தீங்குவிளைப்பர்; என்னும் இக்கருத்தைப் புலப்படுத்தற்கே "மாறாயவுள்ளமு மாண்பிலாத் தீச்செயலும்" என்று கூறப்பட்டது. "ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர் போஒ மளவுமோர் நோய்" (திருக்குறள் 848.) என்பதும் அதன் உரையும் ஈண்டுக் கருதற்பாலன.

[2] பேச்சினாற் பழிப்பின் அடிப்பன் என அஞ்சி அவிநயத்தாற் பழித்தான்.

விடன்—கானினரே! இப்பூஞ்சோலையின் அழகைப் பாருங்கள்.

ஆசிரியவிருத்தம்.

229. [1]மலர்பழ மலியப் பெற்று
மன்னவ னாணை யாலே
உலவுசீர்க் காவ லாள
ரோம்பலு முடைய வாகி
அலைவற வலிய வல்லி
யணையுமிம் மரங்கள் பெண்டிர்
குலவுமா டவர்கள் போலக்
குறைவிலா வின்பந் துய்க்கும். (எ)

சகாரன்—தாங்கள் நன்குகூறுகின்றீர்கள்.

கலித்துறை.

230. [2]நிலத்தி லோவியம் பொறித்தெனப் பூப்பல நிரம்பும்
மலர்த்த னிப்பொறை மரங்களின் றலையினை வணக்கும்
நலத்த வம்மா நனியிளங் கொம்பரி னாலும்
பலத்த வானரம் பலவுடைப் பழமெனத் திகழும். (அ)

விடன்—கானினரே! இக்கல்லில் இருங்கள்.

சகாரன்—இதோ இருக்கின்றேன் [என்று விடனோடுகூட இருக்கின்றான்.] ஐய! இப்பொழுதும் அவ் வசந்தசேனையை

---

[1] அலைவு அற-அசைவு இல்லாமல். வலிய வல்லி-வன்மைமிக்க கொடி. வல்லி வலிய அணையும் இம்மரங்கள் எனினும் ஆம். உலகத்து மக்கள் அரசர்பாதுகாப்பிலிருந்தே வாழ்க்கையின்பம் எய்துவரென் பதும் புலப்படுத்தவாறு.

[2] மலர்ப்பொறை மரத்தலையை வளைக்கும். நாலுதல் - தொங்குதல். பலவுடைப்பழம் - பலாப்பழம்.

நினைக்கின்றேன். [1]நியவர் கூறுஞ் சொற்களைப்போல் என் உள்ளத்தினின்றும் அவள் விலகவில்லை.

விடன்—[தனக்குள்] அங்ஙனம் அவளால் விலக்கப் பட்டும் அவளையே நினைக்கின்முன்.

நேரிசைவெண்பா.

231. [2]மகளி ரவமதிப்பு வாய்ந்த சிறியார்
மிகவளருங் காமத்தால் வேவர்—தகவுடைய
நல்லோர்க் கவமான நண்ணி லவாக்குறைப்பர்
வெல்வ ரறவே வெறுத்து. (கூ)

சகாரன்—ஐய! "வண்டியை ஓட்டிக்கொண்டு மிகவிரை வில் வா" என்று தாவரகன் என்னும் சேடனுக்குச் சொல்லி நெடுநேரமாயிற்று. இன்னும் வந்திலன். நெடுநேரமாக வயிற்றுப்பசியுடையனுயிருக்கின்றேன். பகற்பொழுதிற் கால்களால் நடத்தற்கியலவில்லை. பாருங்கள். பாருங்கள்.

கலிவிருத்தம்.

232. [3]சினமுடைக் குரங்கெனச் சிவந்து விண்ணடு
வினனடை வுற்றனன் காண்டற் கேய்ந்திலன்
வினையுறு நூற்றுவர் மக்கள் வீடல்கண்
டனைமன மெனக்கொதித் தழலு மிந்நிலம். (கo)

---

[1] இழிந்தோர்க்கு இழிந்த உவமைகூறுதல் இயல்பு.

[2] நல்லோர்க்குப் பெண்பாலரால் அவமதிப்புநண்ணில், காம வேட்கையைத் தணித்துக்கொள்வர்; அல்லது வெறுப்புற்று அக் காமத்தை அறவே வெல்வரென்பதாம்.

[3] இனன் - சூரியன். நூற்றுவராகிய மக்கள் - துரியோதனன் முதலியோர். வீடல் - இறத்தல். அனை - அன்னை; காந்தாரி.

விடன்—இஃது அங்ஙனமே.

ஆசிரியவிருத்தம்.

233. [1]ஆவினங்கள் உண்டவிளம் புல்லையசை
மீட்டிநிழல் அயர்ந்து தூங்கும்
மேவியநீர் வேட்கையினல் வெதும்புமுழை
குளச்சுடுநீர் விரும்பி யுண்ணும்
தாவமுறு வெயிற்பயத்தா னகர்த்தெருவின்
மனிதர்நடை தவிர்ந்தார் வண்டி
யோவலிலாச் சுடுநிலத்தை யொருவியொரு
புறத்திருக்கு முதுவெ னெண்ணம். (கக)

சகாரன்—ஐய!

234. [2]என்றலையிற் கதிரவன்கால் வெயின்மிகவும்
படிந்துறைந்த தென்னே யைய
புன்றலைய புட்பறவை குருகினங்கள்
மரக்கிளையிற் புகுந்து தங்கும்
மன்றவெதுப் புற்றுநெடு மூச்செறியு
நார்புருடர் மனித ரெல்லாம்
ஒன்றியத முறையுள்ளா மில்லத்தி
லிருந்துவெயி லுருப்பந் தீர்வர். (கஉ)

---

[1] அசைமிட்டல் - தாம் உண்டஉணவை மீட்டுமென்று இரைப் பையினுட் செலுத்தல். உழை - மான். வண்டியின் வரவைப்பார்த் தற்பொருட்டு அடிக்கடி வெளிப்படுதலின் தலையில் கதிரவன் வெயில் படிந்தது என்பதாம்.

[2] கால்வெயில் - உக்கிய வெயில். வெயில் உருப்பம் - வெயிலின் கொடுமை. புள், பறவை, குருகு என்பனவும் நார், புருடர், மனிதர் என்பனவும் உறையுள் இல்லம் என்பனவும் கூறியதுகூறலாம்.

ஐய! இன்னும் அச்சேடன் வந்திலன். எனக்கு [1]உவகையுண்டாதற்பொருட்டு ஏதாவது ஒன்றைப் பாடுகின்றேன். [என்று பாடுகின்றான்.] ஐய! ஐய! யான் பாடியதைத் தாங்கள் கேட்டீர்களா?

விடன்—என்னசொல்லுவேன்! தாங்கள் கந்தருவராயினீர்கள்!

சகாரன்—ஏன் கந்தருவனாகமாட்டேன்?

கொச்சகக்கலிப்பா.

235. [2] காயமண மிகுமுத்தக் காசொடுசீ ரகம்வசம்பும்
மேயகருப் பஞ்சாற்று வெல்லம்விர வியசுக்கும்
ஆயமணப் பொருள்கூட்டி யானுகர்ந்தே னுதலினாற்
றூயநல மிகுமினிய சுரமுடையே னயினானல். (கூ)

ஐய! மீண்டும்பாடுகின்றேன். [அங்ஙனமே செய்கின்றான்.] ஐய! ஐய! யான் பாடியதைத் தாங்கள் கேட்டீர்களா?

விடன்—என்னசொல்லுவேன்! தாங்கள் கந்தருவராயினீர்கள்!

சகாரன்—ஏன் கந்தருவனாகமாட்டேன்?

---

[1] பசித்துன்பம் தெரியாமைப்பொருட்டென்பதாம்.

[2] காயம் - பெருங்காயம். முத்தக்காசு - கோரைக்கிழங்கு. குரலினிமைக்குரிய மருந்துகளை உண்ட எனக்குக் காந்தருவரிசை ஏன் உண்டாகாதென்பது கருத்து.

கலித்துறை.

236. [1]காய மேவிய கறித்துகள் கலந்துநெய் கூட்டி
மேய வெண்ணெயுங் கிருதமும் விராய்ப்பதப் படுத்த
ஒய்வி லின்னிசைக் குயிலின நிறைச்சியை யுண்டேன்
ஆய தன்மையா லின்னிசைப் பாடக ஞனேன். (கச)

ஐய! இன்னும் சேடன் வந்திலன்.

விடன்-தாங்கள்கவலைப்படாமலிருங்கள். இப்பொழுதே வந்துவிடுவான்.

[அதன்பின் வசந்தசேனையும் சேடனும் வண்டியிலேறி வருகின்றனர்.]

சேடன்—யான் மிகவும் அஞ்சுகின்றேன். சூரியன் நண்பகலை அடைந்துவிட்டான். இப்பொழுது அரசன் மைத்துனராகிய சமத்தானகர் சினங்கொள்ளாமலிருப்பாரா? ஆதலின் விரைந்துசெலுத்துகின்றேன். எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள்.

வசந்தசேனை—ஆ! ஆ!! இது வருத்தமானகனுடைய பேச்சுக்குரலாக இல்லையே. ஈதென்ன! மாட்சிமிக்க சாருதத்தரால் தம் ஊர்திகளின் களைப்பைப்போக்க எண்ணி வேற்றுளும் வேற்றுவண்டியும் அனுப்பப்பட்டனவோ! வலக்கண் துடிக்கின்றது! என் நெஞ்சம் நடுக்கமுறுகின்றது! திசைகள் பாழாய்த் தோன்றுகின்றன! எல்லாம் மாறாகக் காணப்படுகின்றனவே!

---

[1] கறித்துகள்-மிளகுபொடி. நெய்கூட்டி, எண்ணெயும் கிருதமும் விராய் என்பது கூறியதுகூறல். குயிலிறைச்சியுண்டமையாற் குயிலையொத்த இன்னிசைவல்லவனாயினேன் என்பதாம்.

சகாரன்—[உருளொலியைக் கேட்டு] ஐய! ஐய! வண்டி வந்துவிட்டது.

விடன்—எப்படி அறிந்தீர்கள்?

சகாரன்—ஐய! தாங்கள் பார்க்கவில்லையா? கிழப்பன்றி போலக் குரகுர என்னும் ஒலியோடு காணப்படுகின்றது.

விடன்—[பார்த்து] நன்றாகக் கண்டீர். இவன் வந்து விட்டான்.

சகாரன்—மகனே! தாவரக! சேட! வந்தனையா?

சேடன்—ஆம்.

சகாரன்—வண்டியும் வந்ததா?

சேடன்—ஆம்.

சகாரன்—எருதுகளும் வந்தனவா?

சேடன்—ஆம்.

சகாரன்—நீயும் வந்தனையா?

சேடன்—[[1] சிரித்துக்கொண்டு] பெருமானே! யானும் வந்தேன்.

சகாரன்—அப்படியானால் வண்டியை உள்ளே விடு.

சேடன்—எந்தவழியாக?

சகாரன்—இடிந்த இம் மதிற்சுவரின்வழியாக.

சேடன்—பெருமானே! எருதுகள் இறந்துபோம். வண்டியும் ஒடிந்துவிடும். சேடனாகிய யானும் இறந்துபோவேன்.

---

[1] வாராத ஒருவன் எங்ஙனம் மறுமொழிகூறுவன் என்பதை அறியாமல் "நீயும் வந்தனையா" என்று கேட்டது சேடன்சிரிப்புக்குக் காரணமாகும்.

சகாரன்—அடே! யானே அரசன்மைத்துனன். எருதுகள் இறக்குமாயின் வேறு எருதுகளை விலைக்குவாங்குவேன்; வண்டி ஒடியுமாயின் வேறு ஒரு வண்டி செய்விப்பேன்; நீ இறந்துவிடின் மற்றொருவன் வண்டியோட்டுபவனாவன். [1]

சேடன்—எல்லாம் தங்களுக்கு உண்டாகும். யானே எனக்குப் பயன்செய்தவனாகமாட்டேன்.

சகாரன்— அடே! எல்லாம் அழிந்துபோகட்டும். இடிந்தமதிற்சுவர்வழியாகவே வண்டியை உள்ளேவிடு.

சேடன்—ஏ! வண்டியே! ஒடிந்துபோ. உன் தலைவனோடு தொலைந்துபோ. மற்றொருவண்டி வரட்டும். பெருமான்பாற்சென்று தெரிவிப்பேன். [உள்ளேசென்று] வண்டி ஏன் ஒடியவில்லை? பெருமானே! இவ்வண்டி உள்ளேவந்துவிட்டது.

சகாரன்—[2]எருதுகள் அறுந்துபோகவில்லையா? கயிறுகள் இறந்துபோகவில்லையா? நீயும் இறக்கவில்லையா?

சேடன்—ஆம்.

சகாரன்—ஐய! வாருங்கள்; வண்டியைப் பார்ப்போம். ஐய! தாங்களே எனக்கு ஆசிரியர்; பேராசிரியருமாவீர். அரசர்க்கு நெருங்கிய துணைவன் என்றும், போற்றத்தக்கவன் என்றும் என்னைத் தாங்கள் அன்போடு [3]மதிக்கின்றீர்கள். தாங்களே முதலில் வண்டியில் ஏறவேண்டும்.

---

[1] எனக்குக் கிடைத்தற்கரியது ஒன்றுமில்லை என்பது கருத்து.

[2] எருதுகள் இறக்கவில்லையா? கயிறுகள் அறவில்லையா? என்று கூறவேண்டியவைகளை மாறுபடக்கூறினான், கூறுபவன் சகாரனாதலின்.

[3] தன்னை விடன் என்குமதிப்பதே தான் அவனைமதிப்பதற்குக் காரணம் என்பது கருத்து.

விடன்—அங்ஙனமேயாக. [என்று ஏறுகின்றான்.]

சகாரன்—நீங்கள் நில்லுங்கள். உங்கள் அப்பனுடையதா இவ்வண்டி? நீங்கள் முன்னால் ஏறுகின்றீர்களே? யானன்றோ இவ்வண்டிக்குரிய தலைவன்? முதலில் வண்டியில் ஏறுவேன்.

விடன்—தாங்கள்தானே அங்ஙனங் கூறினீர்கள்?

சகாரன்—யான் அப்படிக்கூறினாலும் "பெருமான் ஏறுங்கள்" என்று சொல்லுவதன்றோ உங்களுக்கு முறை?

விடன்—தாங்கள் ஏறவேண்டும்.

சகாரன்—யான் இப்பொழுது ஏறுகின்றேன். மகனே! தாவரக! சேட! வண்டியைத் திருப்பு.

சேடன்—[திருப்பி] பெருமானே! ஏறுங்கள்.

சகாரன்—[ஏறிப் பார்த்து அச்சக்குறிப்பை அவிநயித்து விரைந்து இறங்கி விடனதுகழுத்தைப் பற்றிக்கொண்டு] ஐய! ஐய! [1]செத்தாய். செத்தாய். [2]அரக்கியோ கள்வனோ வண்டியில் ஏறியிருக்கின்றனர். அரக்கியாயின் நம் இருவரையும் திருடுவாள்; அன்றிக் கள்வனாயின் நம் இருவரையும் தின்றுவிடுவான்.

---

1 "செத்தேன் செத்தேன்" என்று சொல்லமுற்பட்டுத் தடுமாறிச் "செத்தாய். செத்தாய்." என்றான்.

2 பெண் ஆண் என்று பகுத்தறியும் ஆற்றலில்லாதவனுக்குச் சிறப்புமுறையான வசந்தசேனை என்னும் அறிவு எவ்வாறு உண்டாமென்பதாம். தின்றுவிடுவாள் திருடுவான் என்பன மாறுபடக் கூறப்பட்டன.

விடன்—அஞ்சவேண்டா. [1]அரக்கி இந்த மாட்டுவண்டியில் ஏறி எங்ஙனம் போக்குவரவுசெய்வாள்? இஃது அங்ஙனமன்று. நண்பகற் கதிரவனது மிகுவெயிலால் தடைப்பட்ட கண்களையுடைய தங்களுக்குத் தாவரகனது சட்டையிட்ட உருவத்தின் நிழலைக் கண்டவுடன் [2]மயக்கமுண்டாயிற்று.

சகாரன்—மகனே! தாவரக! சேட! [3]பிழைத்திருக்கின்றாயா?

சேடன்—ஆம்.

சகாரன் — ஐய! ஒரு பெண் வண்டியில் ஏறியிருக்கின்றாள். ஆதலிற் பாருங்கள்.

விடன்—பெண்ணா?

ஆசிரியவிருத்தம்.

237. [4]வழியிடை மழைநீர் தாக்குறக் கண்கள்
வாட்டமுற் றெருதுறல் போல
வழுவில தாகத் தலையினை வணக்கி
மண்ணிடை விரைந்துசெல் லுதுமால்
குழுவிய பெரியோ ரவைக்களத் தென்றுங்
குறைவிலாச் சிறப்பினை விரும்பும்
பழுதிலென் விழிக ளற்குல மகளைப்
பார்த்தலிற் பயமுறு மம்மா. (கரு)

---

[1] ஒரு கணப்பொழுதில் நெடுந்தூரம் செல்லும் ஆற்றல்வாய்ந்த அரக்கி மெல்லச்செல்லும் மாட்டுவண்டியில் எங்ஙனம் ஏறுவாள்? என்பது கருத்து.

[2] சட்டையணிந்தமையால் தாவரகனுடல்நிழல் பருத்திருக்கும்; அதுகண்டு மாறுபட எண்ணியது மயக்கத்துக்குக் காரணமாகும் என்பதாம்.

[3] அரக்கி உன்னைத் தின்னாமலிருக்கின்றாளா? என்பதாம்.

[4] நிலத்தில் தலைவணக்கி விரைந்துசெல்லுதற்குக் கண் அஞ்சுதல் காரணமாகும். பிறர்மனைநயத்தல் பெருமையைக் கெடுக்குமென்பது கருத்து.

வசந்தசேனை—[வியப்போடு தனக்குள்] என் கண்களுக்குத் [1]துன்பத்தையே விளைவிக்கின்ற அரசன்மைத்துனனா? அங்ஙனமாயின், பேறிலளாகிய யான் உயிர்பிழைத்தல் சந்தேகமே. இப்பொழுது இவ்விடத்திற் பேறிலளாகிய என்னுடைய இவ்வரவு, களர்நிலத்தில்விதைத்த வித்துக்கூட்டம் போலப் பயனிலதாயிற்று. இனி இந்நிகழ்ச்சியில் யான் என் செய்வேன்.

சகாரன்—கிழவனாகிய இச்சேடன் அச்சமுற்று வண்டியைப்பார்க்கின்றானில்லை. ஐய! நீங்கள் வண்டியைப்பாருங்கள்.

விடன்—அதனாற் குற்றமென்ன? நிற்க. அங்ஙனமே பார்க்கின்றேன்.

சகாரன்—ஈதென்ன? [2]நரிகள் பறக்கின்றன. காக்கைகள் நடக்கின்றன. இவ்வையன் அரக்கியின்கண்களால் உண்ணப்பட்டுப் பற்களாற் பார்க்கப்படுமுன்னரே யான் ஓடிவிடுகின்றேன்.

விடன்—[வசந்தசேனையைப் பார்த்துத் துன்பத்தோடு தனக்குள்] ஓ! ஈதென்ன? மான்பேடு புலியைத் தொடர்கின்றதே! ஆ! துன்பம்.

---

1 காதலனைக் காண வந்த எனக்கு அக்காட்சி இல்லாமையோடு வெறுக்கத்தக்கவனைக் காண்டலும் நேர்ந்ததென்பது கருத்து.

2 நரி காக்கைகளைப்பற்றிக் கூறியது நிமித்தம் என்றற்காம். வினைச்சொற்களெல்லாம் மாறுபடக் கூறப்பட்டனவாம்.

நேரிசைவெண்பா.

238. [1]மன்னுசரற் கால மதிபோற் புளினமுறுந்
தன்னினிய காந்தற் றழாதொரீஇ—யன்னப்
பெடைமுயன்று காக்கையினைப் பேணி வலிய
அடைகின்ற தென்னோ வது. (கசு)

[மறைவாக] வசந்தசேனே! இது தக்கதன்று; இஃது ஒத்ததுமன்று.

கலிவிருத்தம்.

239. [2]மான நோக்கி மதித்திலை முன்னர்நீ
யான பொன்விழைந் தன்னை வயப்படூஉ

வசந்தசேனை—இல்லை; [என்று [3]தலையை அசைக்கின்றாள்.]

விடன்—

[4]தான சீலந் தவிர்ந்த விலைமகள்
ஆன தாலிவன் றன்னை யடுத்தனை. (கஎ)

---

[1] ஓர் அன்னப்பேடு எல்லாநலனும் நிரம்பிய தன் அரசவன்னத்தைச் சாராது இழிந்த காக்கையை அடைகின்றது என்? என்னும் இதனால், வசந்தசேனை குணம் உருவம் நிலைமை முதலியவற்றான் மேம்பட்ட சாருதத்தனைவிட்டு அவ்வெல்லாவற்றானும் இழிந்த சகாரனையடைய எவ்வாறு ஒருப்பட்டாள்? என்பது போதரும். இது பிறிதுமொழிதல் என்னும் அணி.

[2] முன்னர் மானம்நோக்கி மதித்திலை - முன்னாளில் நின் பெருமை கருதித் தகுதியில்லாதவனாகிய சகாரனை மதித்தாயல்லை.

[3] தன்குரலைச் சகாரன் அறியலாகாதென்பது கருதி.

[4] விடன் வசந்தசேனையின்கருத்துணர்ந்தும் வேறுவிதமாகப் பேச இயலாதவனாய் முன்கூறியதையே முடித்துரைக்கின்றான். தானசீலம் தவிர்ந்த - கொடைக்குணமில்லாத; உலோபகுணம் மிக்க.

யான் நின்னை நோக்கி, "நல்லாய்! விருப்பொடு வெறுப்பு நாடி நீ சமமெனக் கோடி" (அங்கம் 1. செய்யுள் 29.) என்று [1]முன்னரே சொல்லினேனன்றோ?

வசந்தசேனை—வண்டியின் மாற்றத்தால் வந்தேன். அடைக்கலம்புகுகின்றேன்.

விடன்—அஞ்சவேண்டா. நிற்க. இவனை வஞ்சிப்பேன். [சகாரன்பக்கல் சார்ந்து] கானின! இவ்வண்டியில் உண்மையாக அரக்கியே இருக்கின்றாள்.

சகாரன்—ஐய! ஐய! [2]அரக்கி இருப்பாளாயின் ஏன் நின்னைத் திருடவில்லை? அன்றிக் கள்வன் இருப்பானாயின் ஏன் நின்னை உண்ணவில்லை?

விடன்—இவ்வாராய்ச்சியால் வரக்கடவதென்? இப்பூஞ்சோலையின் நிழல்வழியாகக் கால்களால் நடந்து உச்சயினி நகரத்தையடைவேமாயின் அதனால் என்னகுற்றம் நேரும்?

சகாரன்—அப்படி நடந்துசெல்வதால் வரும் பயன் என்ன?

விடன்—இங்ஙனம் நடந்துசெல்வேமாயின் உடற்பயிற்சிசெய்ததுமாம்; எருதுகளுக்கும் இளைப்பாற்றிய தாகும்.

சகாரன்—அப்படியே ஆக. தாவரக! சேட! வண்டியைக் கொண்டுவா. வேண்டாம். நில். நில். திருக்கோயில்களிலுள்ள

---

1 சாருதத்தரைநோக்கி நீ செல்லும்பொழுதில்.

2 இத்தொடர்மொழிகளிலும் முன்போல வினைச்சொற்கள் மாறுபட்டன.

தெய்வங்களின்முன்னிலையிலும் நகரத்துள்ள அந்தணர்களின் முன்னிலையிலும் கால்களாலே நடந்துசெல்வேன். இல்லை. இல்லை. நகரத்துமக்கள் தூரத்தில் வரும்பொழுதே என்னைப் பார்த்து "இதோ அரசன்மைத்துனராகிய அப்பெருமான் வருகின்றார்" என்று சொல்லுவார்கள்; ஆதலின் வண்டியில் ஏறியே போவேன்.

விடன்—[தனக்குள்] [1]நஞ்சை மருந்தாகச்செய்தல் இயலாததொன்று. நிற்க. இங்ஙனங்கூறுவேன். [வெளிப்படையில்] காணினரே! இவள் வசந்தசேனை; தங்களைக் கூடுதற்கு வந்திருக்கின்றாள்.

வசந்தசேனை— [2]தீவினை ஒழிக. தீவினை ஒழிக.

சகாரன்—[மகிழ்ச்சியோடு] ஐய! ஐய! யான் சிறந்த புருடன், மனிதன், [3]வாசுதேவனை ஒப்பவனன்றோ!

விடன்—ஆம்.

சகாரன்—அப்படியானால் இதற்குமுன் பெறாத திரு என்னால் அடையப்பட்டதாகும். அக்காலத்தில் யான் இவளைக் கோபமூட்டினேன். இப்பொழுது இவள்திருவடிகளில் வீழ்ந்து அருள்பெறுவேன்.

விடன்—நன்றாகச் சொன்னீர்கள்.

---

[1] கொடியவனை எவ்வுபாயத்தானும் திருத்தவியலாதென்பது கருத்து.

[2] "கூடுதற்கு வந்திருக்கின்றாள்" என்னும் இச்சொற்கேட்க நேர்ந்ததே தீவினையென்பது கருத்து.

[3] என் உயர்குணங்களுக்கு ஈடுபட்டுக் கூடுதற்குவந்தாள் என்பது கருத்து.

சகாரன்—இதோ கால்களில் விழுகின்றேன். [என்று வசந்தசேனையின்பக்கல் எய்தி] [1]அம்மா! தாயே! என் விஞ்ஞாபனத்தைக் கேட்டல்வேண்டும்.

கட்டளைக்கலித்துறை.

240. அகல்விழித் தாதகை யாளேநின் கால்களில் யான்விழுவேன்
[2]தொகுமுகிர் பத்தினுங் கைதலை மேற்குவித் துத்தொழுவேன்
புகுமத நோய்வயப் பட்டுமுன் யான்செய் பிழைபொறுப்பாய்
தகவுடைச் சீருட லாய்நின் றொழும்பென் றலைக்கண்ணதே.

வசந்தசேனை—[சினத்தோடு] போ. தகுதியில்லாத சொற்களைப் பேசுகின்றாய். [என்று காலால் உதைக்கின்றாள்.]

சகாரன்—[சினத்தோடு]

கலிவிருத்தம்.

241. [3]அன்னை தாய ரகமுற மோர்ந்தது
என்ன தேவரை யும்மிறைஞ் சாத்தலை
தன்னைக் காட்டிற் சவத்தை நரிமிதித்
தென்னக் காலினு லெற்றி யுதைத்தனை. (கசக)

அடே! தாவரக! சேட! இவளை நீ எங்கிருந்து ஏற்றிக்கொண்டாய்?

சேடன்—பெருமானே! கிராமத்து வண்டிகளால் இராசவீதி தடைப்பட்டது. அப்பொழுது சாருதத்தரது உப

---

[1] காமநுகர்ச்சிக்குரியவளை "அம்மா! தாயே!" என்றது அறிவின்மையாலும்.

[2] உகிர் - நகம். பத்துநகங்களையுமுடைய நின் கால்களில் என்பது கருத்து.

[3] அன்னை தாயர் கூறியதுகூறல். சவத்தை நரி மிதித்தாற்போல என் தலையை நீ உதைத்தனை என்பதாம்.

வனத்தில் வண்டியை நிறுத்திவிட்டு அங்கே இறங்கி வண்டிச் சக்கரத்தைச் சுற்றித் தள்ளினேன். தள்ளித் திரும்புதற்குள் வண்டிமாறியதால் இவள் இதன்கண் ஏறினுள் என்று எண்ணுகின்றேன்.

சகாரன்—வண்டிமாற்றத்தாற்றான் இவள் இங்கு வந்தாளோ? என்னைச் சேர்தற்கில்லையா? அப்படியானல் என்வண்டியினின்றும் இறங்கு. இறங்கு. நீ வறுமைமிக்க வாணிகத்தொழிலாளனுகிய அச் சாருதத்தனைக்கூடுதற்குச் செல்லுகின்றாய். என் எருதுகளுக்குச் சுமையாயினை. ஆதலின் இறங்கு. இறங்கு. கருப்பதாசி! இறங்கு. இறங்கு.

வசந்தசேனை—"அப் பெருமான் சாருதத்தரைக்கூடுதற்குச் செல்கின்றாய்" என்னும் இஃது உண்மையே. இச் சொல்லால் யான் அலங்கரிக்கப்பட்டுளேன். இப்பொழுது யாதுவரினும் வருக.

சகாரன்— ஆசிரியவிருத்தம்.

242. [1]பலவிதமா மின்பவிளை யாடலிற்று
டனம்புரியும் பான்மை மிக்குக்
குலவுமொரு பதுநகமாங் குவளைமலர்க்
குழூவுடையிக் கரங்க ளாலே
வலமிகுவா லியின்மனைவி தன்னைமுனஞ்
சடாயுபற்று மாறென் வண்டி
யிலகுறவிற் றிருக்குமெழி லுடன்மயிலே
நினைமயிர்தொட் டிழுப்பே னின்னே. (௨௦)

---

[1] தாடனம்புரிதல் - சுரதவிளையாட்டில் இன்பமிகுதற்பொருட்டுக் கையால் தட்டுதல். நகங்களுக்குக் குவளைமலரை உவமித்தது பொருத்தமின்று. வாலியின்மனைவியைச் சடாயு இழுத்ததுபோல் என்பது இதிகாசவிருத்தமான உவமவழு.

விடன்—

நேரிசைவெண்பா.

243. நற்குணங்கண் மிக்கவிந் நல்லார் கருங்குழலை
இக்கரங்க ளாலீர்க்க வெண்ணுதல்—தக்கதன்றால்
பூஞ்சாவின் வல்லி பொதுளுந் தளிர்பறித்தல்
பாங்காமோ கூடாது பார். (உக)

ஆதலால் நீங்கள் எழுந்திருங்கள். யான் இவளை இறக்கு கின்றேன். வசந்தசேனே! இறங்கு.

[வசந்தசேனை இறங்கி ஒரு தனியிடத்தில் நிற்கின்றாள்.]

சகாரன்—[தனக்குள்] என் சொற்களை அவமதித்தமை யால் அப்பொழுது என்பால் மூட்டப்பட்ட சினத்தீ இப் பொழுது இவளுடைய இக் காலுதையால் மிகவும் கிளர்ந்து எரிகின்றது; ஆதலின் இப்பொழுது இவளைக் கொன்று விடுகின்றேன். நிற்க. விடனைநோக்கி இங்ஙனங் கூறுவேன். [வெளிப்படையில்] ஐய! ஐய!

நேரிசைவெண்பா.

244. [1]நீண்டகன்று தூங்கு நுனியு நெருங்கியசீர்
மாண்டவிழைபலவும்வாய்ந்ததுகில்—வேண்டுதியேல்
நல்ல விறைச்சியுண்ண நாடுதியேல் குருகுவென்
றெல்லை மகிழ்ச்சி யுற. (உஉ)

விடன்—[2]அங்ஙனம் விரும்பின் என்செய்தல்வேண்டும்?

---

[1] தூங்குதல் - தாலல். சீர்மாண்ட - அழகு மாட்சிமைப்பட்ட. குரு குரு என்று உண்ண என்க. குரு குரு என்பது உண்ணுங்கால் உண்டாம் சுவைநுகர்ச்சியின் அநுகரணவொலியாகும்.

[2] முற்செய்யுளில் வேண்டுதியேல் நாடுதியேல் என்பன முடி யாமலிருப்ப அம்முடிபை அறிதற்கு எழுந்த வினாவாகும் இது.

சகாரன்—[1]எனக்குப்பிரியமானதைச் செய்.

விடன்—தகாதசெயலைவிட்டுத் தங்களுக்குப் பிரிய மானதை உறுதியாகச்செய்வேன்.

சகாரன்—ஐய! தகாதசெயல் ஒருசிறிதும் இன்று. [2]அரக்கியுமிலள்.

விடன்—அங்ஙனமாயின், சொல்லுங்கள்.

சகாரன்—வசந்தசேனையைக் கொன்றுவிடுங்கள்.

விடன்—[செவிகளைப் பொத்திக்கொண்டு]

ஆசிரியவிருத்தம்.

245. [3]இந்நகர்க் கணியா யிளையளாய்க் கணிகை
யெனினுமக் குலத்தினுக் கொவ்வா
நன்னர்வான் குணங்க ளமைதரப் பெற்ற
நவையறு முண்மையன் பினளாம்
முன்னுறி வினையில் பெண்மணி யிவளை
முடுகியான் கொலைசெயின் மறுமை
துன்னுபே ரிடும்பை யாற்றினை யெந்தத்
தோணியின் றுணைகொடு கடப்பேன். (உரு)

---

[1] முற்செய்யுளின் முடிபு இதுவாகும்.

[2] அரக்கியின்பக்கல் அடைதலே தகாதசெயலாகும். அரக்கி யோ இல்லை. ஆதலின், தகாதசெயல் ஒருசிறிதும் இன் றென்பதாம்.

[3] பெண்கொலை, நகரத்துக்குக் கேடுவிளைத்தல், விலைமகளி ரைப் பற்றுக்கோடாகவுள்ள எனக்கே தீங்குதேடிக்கொள்ளல், நம்பிக்கைத்துரோகம், குற்றமில்லாதாரைத்துன்புறுத்தல்: என்னும் இவற்றுள் ஒவ்வொன்றே கீழ்வீழ்த்தற்குப் போதியதாகும். இவ் வெல்லாம் கூடின் யாதுசெய்யாவென்பது கருத்து.

சகாரன்—யான் உனக்குத் தோணிதருவேன்; மேலும், சனவழக்கம் இல்லாத இப் பூந்தோட்டத்தில் இவளைக் கொல்லுகின்ற உன்னை யார்காண்பார்?

விடன்— ஆசிரியவிருத்தம்.

246. திசைவன தெய்வந் திங்கள்
திகழ்சுடர்க் கதிரின் செல்வன்
வசையறு தருமங் காற்று
மாவிசும் [1]பந்த ரான்மா
இசைவுறு மிவையெ லாமெ
னியல்பினை யென்றுங் காண்ப
நசைநில மகளே நாஞ்செய்
நன்றுதீ திவற்றின் சான்றாம். (உச)

சகாரன்—அப்படியானால் அவளை [2]ஆடையால் மறைத்துக்கொண்டு கொல்லுங்கள்.

விடன்—அறிவிலாய்! [3]தன்னாலேயே மறுக்கப் படுகின்றாய்.

சகாரன்—இக் கிழநரி பாவத்திற்கு அஞ்சுகின்றது. நிற்க. சேடன் தாவரகனை இணங்கச்செய்வேன். மகனே! தாவரக! சேட! நினக்குப் பொன்னாலியன்ற தோளணிகளைத் தருவேன்.

---

[1] அந்தரான்மா - உயிரின் உள்ளே விளங்கும் பரமான்மாவாகிய கடவுள்.

[2] அப்படியானால் ஒருவரும் காணார் என்பது கருத்து.

[3] திசைமுதலியவைகளை மறைத்தற்கு யாதுமின்று என்பது உன்சொல்லாலே போதருமாதலின் உன்சொல்லாலே நீ மறுக்கப் பட்டாய் என்பது கருத்து.

சேடன்—யானும் அவிக்துகொள்ளுவேன்.

சகாரன்—உனக்குப் பொன்மயமான இருக்கைசெய்து தருவேன்.

சேடன்—யானும் அதன்கண் இருப்பேன்.

சகாரன்—உனக்கு என் எச்சிலுணவுகள் எல்லாவற்றையும் தருவேன்.

சேடன்—யானும் உண்பேன்.

சகாரன்—உன்னைச் சேடர்கள் எல்லோருக்கும் தலைவனுகச்செய்வேன்.

சேடன்—பெருமானே! அங்ஙனமே ஆவேன்.

சகாரன் — அப்படியானல் என்சொல்லைப் போற்றி ஒழுகவேண்டும்.

சேடன்—தகாதசெயலைவிட்டு மற்றெல்லாவற்றையும் செய்வேன்.

சகாரன்—தகாதசெயல் ஒருசிறிதும் இன்று.

சேடன்—பெருமான் சொல்லுங்கள்.

சகாரன்—இவ் வசந்தசேனையைக் கொன்றுவிடு.

சேடன்—பெருமான் பொறுத்தருளுங்கள். பாவியாகிய யான் இப் பெருமாட்டியை வண்டிமாற்றத்தாற் கொண்டு வந்துவிட்டேன்.

சகாரன்—அடே! சேட! [1]உனக்குமா நான் தலைவனில்லை?

---

[1] விடன்முன் யான்கூறியதைக் கேட்கவில்லை; நீயுமா எனக்கு மாறுபடநடப்பவன்? என்பது கருத்து.

சேடன்—பெருமான் என் உடலுக்குமாத்திரம் தலைவரே யன்றி ஒழுக்கத்திற்கும் தலைவராகமாட்டீர்கள். ஆதலின் பெருமான் பொறுத்தருளுங்கள். பொறுத்தருளுங்கள் யான் அஞ்சுகின்றேன்.

சகாரன்—நீ எனக்குச் சேடனாகி யார்க்கு அஞ்சுகின்றனை?

சேடன்—பெருமானே! மறுமையுலகிற்கு அஞ்சுகின்றேன்.

சகாரன்—அம் மறுமையுலகியாது?

சேடன்—பெருமானே! நல்வினை தீவினைகளின் பயன் நுகர்ச்சியே மறுமையுலகாகும்.

சகாரன்—நல்வினையின் பயனுகர்ச்சி எத்தகையது?

சேடன்—பெருமான் பலவகைப் பொன்னாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் இந்நிலையே.

சகாரன்—தீவினைப் பயனுகர்ச்சி எத்தகையது?

சேடன்—யான் ஏவலாளனாய்ப் பிறருணவை யேற்றுண்ணும் இந்நிலையே. ஆதலின் தகாதசெயலைச் செய்யமாட்டேன்.

சகாரன்—அடே! நீ கொல்லமாட்டாயா? [என்று பலவாறு அடிக்கின்றான்.]

சேடன்—பெருமான் என்னை அடியுங்கள்; கொல்லுங்கள்; நான் தகாதசெயலைச் செய்யமாட்டேன்.

நேரிசைவெண்பா.

247. எவ்வினையின் குற்றம் பிறப்படிமை யாக்கியதோ
அவ்வினையே யின்னு மதிகமா—எவ்வமுற
ஐய விலைகொடுத்தி யான்கொள்ளே னாதலினாற்
செய்யேன் தகாத செயல். (உரு)

வசந்தசேனை—ஐய! அடைக்கலம்புகுகின்றேன்.

விடன்—கா ணீ ன! பொறு. பொறு. தாவரக! நன்று. நன்று.

ஆசிரியவிருத்தம்.

248. [1]வறுமையு மிழிவு மேவின செயலும்
வாய்ந்தவ னென்னினு மிவனே
மறுமையின் பயனை விரும்புகின் ருனிம்
மடத்தலை வனுக்கஃ தின்றால்
செறியுநல் லறங்க டமையொழித் தொவ்வாத்
தீமையே நனிபுறந் தருமிச்
சிறுமதி யாள ரழிவினை யெங்ஙன்
சேர்கிலா திருப்பரிப் பொழுதே. (உ௬)

---

[1] வறியவன் பொருளாசையால் எதனையும் செய்வன்; இழிந்தவனுக்குச் செய்யத்தகாத தொன்றுமில்லை; ஏவலாளன் தன்தொழிற்குக் கேடுவிளையும் என்னும் அச்சத்தால் தலைவன் கட்டளையை யாராயாமலே செய்யவேண்டியவனுவான். இம் மூன்று குற்றமும் ஒருங்குடையனுயிருந்தும் இச் சேடன் மறுமைக்கு அஞ்சித் தகாதனசெய்தற்கு ஒருப்பட்டிலன். இச் சகாரன் முன்னை நல்வினைப்பயனை யனுபவித்தும் மேல் வாக்கடவ பயனை விரும்புகின்ருனில்லை என்பதாம். இச் சிறுமதியாளர் - அறங்குறைந்த இச் சகாரனை ஒத்தவர். அழிவினை இப்பொழுதே எங்ஙன் சேர்கிலா திருப்ப ரென்க. பின்னிரண்டடிகளாலும் அறமுடைய நல்லோரை விடுத்து மறம்மிக்க சகாரனைப்போன்ருரைப் போற்றிக்காக்கும் அறிவுகுறைந்த பாலகன் என்னும் அரசனைப்போன்ருர் விரைந்து அரசுநிலைகெட்டு எங்ஙனம் அழிவெய்தாமலிருப்பரென்னும் தொனிப்பொருள் தோன்றியவாறுணர்க.

இன்னும்,

ஆசிரியவிருத்தம்.

249. [1]நின்னுடைச் செல்வ நுகர்ச்சியை யிவன்ரு
னேர்ந்தில னிவன்செய்குற் றேவல்
தன்னைநீ யேற்றுப் புரிந்திலை யுனக்குத்
தகாததோர் தலைமையாந் தன்மை
மன்னிய திவற்குத் தொண்டுபூண் டொழுக
வாய்த்தது மாறிய வியல்பிற்
றுன்னிய தெய்வ மெலிந்தவன் வழியிற்
றுன்புறத் தொடருமா லந்தோ. (உஎ)

சகாரன்—[தனக்குள்] இக் கிழநரி அ த ரு ம த் தி ற் கு அஞ்சுகின்றது. அடிமைப்பிறப்பாளனுகிய இவன் மறுமை யுலகிற்கு அஞ்சுகின்ருன். அரசன்மைத்துனனும், சிறந்த [2]புருடனும், மனிதனுமாகிய யான் யார்க்கு அஞ்சுவேன்? [வெளிப்படையில்] அடே! அ டி மை ப் பி ற ப் பா ள! சேட! [3]கொட்டிலிற்புகுந்து ஒருமூலையில் இளைப்பாறியிரு.

---

[1] இது, சகாரனைநோக்கிக் கூறியதாகும். குணங்களின் சிறப்பாலும் இழிவாலும் முறையே இச் சேடன் தலைவனுகவும் நீ சேடனுகவும் இருக்கவேண்டும். விதியின் பகுப்புணர்ச்சியின்மையே இங்ஙனம் மாறுபட்டதற்குக் காரணமாகும் என்பது கருத்து.

"நல்லார்கட் பட்ட வறுமையி னின்னுதே
கல்லார்கட் பட்ட திரு" (திருக்குறள்-408)

என்னும் பொய்யில்புலவர் பொருளுரை ஈண்டு நினைவுறற்பாலது.

[2] கூறியதுகூறல்.

[3] கொட்டில் - பசு எறு முதலிய கட்டும் இடம்.

சேடன்—பெருமான்கட்டளைப்படியே. [வசந்தசேனை யின்பக்கல்சென்று]பெருமாட்டி! இவ்வளவுதான் என் ஆற்றல்.

[என்று போகின்றான்.]

சகாரன்—[கச்சை இறுக்கிக்கட்டிக்கொண்டு] நில். வசந்த சேனே! நில். கொல்லுவேன்.

விடன்—ஆ! ஆ! என்முன்னிலையிலா கொல்லுவாய்? [என்று கழுத்தைப் பிடிக்கின்றான்.]

சகாரன்—[நிலத்தில் வீழ்கின்றான்.] [1]ஐயன் [2]பெருமானைக் கொல்லுகின்றான். [என்று மயக்கத்தை அவிநயிக்கின்றான். பின் தெளிவடைந்து]

நேரிசைவெண்பா.

250. எப்பொழுது மென்பா லிறைச்சியொடு நெய்யேற்றுத்
துய்ப்புற் றுடல்பருத்துத் தோன்றினன்—இப்பொழுதோர்
காரியத்தி லெற்குக் கடும்பகைவ னாயினன்
சீரியது தோழன் செயல். (உஅ)

[நினைவுகூர்ந்து தனக்குள்] நிற்க. விடனைப் போக்கும் உபாயம்அறிந்துளேன். இக் கிழநரி வசந்தசேனையை அஞ்ச வேண்டாம்என்று தலையசைத்துச் சமிஜ்ஞை செய்தது. ஆதலின் இவ் விடனைப் போக்கிவிட்டு வசந்தசேனையைக் கொல்லுவேன். இவன்பால் இங்ஙனம் கூறுவேன். [வெளிப் படையில்] ஐய! யான் தங்களிடத்து எதனைப்பற்றிக் கூறினே

---

[1] ஐயன் - விடன். [2]பெருமான் - சகாரன்; தன்னைப் படர்க்கை யாகக்கூறினன்.

ளே அத் தகாதசெயலை இங்ஙனம் [1]தொன்னைபோல் அகன்ற மிகப்பெரிய குலத்திற் பிறந்த யான் எப்படிச்செய்வேன்? இவள் என்னை ஏற்றுக்கொள்ளுதற்பொருட்டு யான் இவ்வாறு கூறினேன்.

விடன்—

நேரிசைவெண்பா.

251. [2]குலம்பேசி யாம்பயனென் கூறு மிதன்கட்
பலஞ்சில காரணமே பாங்காம்—நிலஞ்சார்ந்
தினத்தொடு கூடி யெழுந்து வளர்ந்து
கனத்திருக்கு முண்மரங்கள் காண். (உசு)

சகாரன்—இவள் தங்கள் முன்னிலையில் நாணமடைகின்றாள். அதனால் என்னை ஏற்றுக்கொள்கின்றாளில்லை. ஆதலின் நீங்கள் செல்லுங்கள். தாவரகன் என்னும் சேடன் என்னால் அடிபட்டுப் போய்விட்டான். அவன் மிக விரைவாக ஓடுகின்றான். ஆதலால் அவனைப் பற்றி இழுத்து ஐயன் கொண்டுவரல்வேண்டும்.

விடன்—[தனக்குள்]

---

[1] கடல்போல் என்று கூறற்பாலதைத் தொன்னைபோல் என்றது அறிவின்மையால்.

[2] இதன்கண் - தகாதசெயலிற் றலைப்படாமைக்கு. காரணம் பலம் சிலம் - காரணமாவது நற்பயன் தரும் ஒழுக்கமாகும். பாங்கு ஆம் நிலம் - தகுதியான நன்னிலம். உயர்ந்தகுலத்திலும் தீயவர் தோன்றுவர் என்பது கருத்து.

கலித்துறை.

252. [1]வசந்த சேனையென் கண்ணெதிர் மூர்க்கனை மருவ
இசைந்தி லாளுறு செருக்கின னாதலி னிவட்கு
நசைந்த தாகிய தனிமையை நானளித் தகல்வேன்
பசைந்த நாணமி னிலைமையே காமத்தின் பயனும். (௩௦)

[வெளிப்படையில்] அங்ஙனமேயாக. போகின்றேன்.

வசந்தசேனை—[விடனது ஆடைநுனியைப் பற்றிக் கொண்டு] அடைக்கலமாகின்றேனென்று சொல்லுகின்றேனே!

விடன்—வசந்தசேனே! அஞ்சவேண்டா. அஞ்சவேண்டா. கன்னிகைபுதல்வரே! வசந்தசேனை உங்கள்கையில் அடைக்கலமாக இருக்கவேண்டும்.

சகாரன்—அப்படியே என்கையில் இவள் அடைக்கலமாக இருக்கட்டும்.

விடன்—உண்மைதானா?

சகாரன்—உண்மையே.

விடன் —[சிறிதுதூரஞ்சென்று] யான் சென்றபின் இரக்கமற்றவனாகிய இச் சகாரன் இவளைக் கொல்லவுங்கூடும். ஆதலின் யான் மறைந்துநின்று இவன் செய்யவிரும்புங்காரியத்தைப் பார்க்கின்றேன். [என்று ஒரு தனியிடத்தில் நிற்கின்றான்.]

---

[1] இவள் வண்டிமாற்றத்தைத் தலைக்கீடாகக்கொண்டு பொருள் விருப்பத்தாலும் வந்திருக்கக்கூடும்; யான் முன்னர் "இது தக்க தன்று; இஃது ஒத்ததுமன்று" என்று கூறினமையான் என் முன்னிலையிற் சகாரனோடு கூடுதற்கு நாணுகின்றாள்; ஆதலின் தனிமையளித்து அகல்வேன் என்பது கருத்து.

சகாரன்—நிற்க. இவனைக் கொல்வேன். அன்றி வஞ்சக குணம்வாய்ந்த இப் பார்ப்பனக் கிழநரி ஒருசமயம் தன்உடலை மறைத்துக்கொண்டுவந்து வஞ்சிக்கவுங்கூடும். ஆதலின் இவனை யான் வஞ்சிக்கும்பொருட்டு இங்ஙனஞ்செய்வேன். [மலர்களைப் பறித்துத் தன்னை அணிசெய்துகொள்ளுகின்றான்.] எடி! பெண்ணே! வசந்தசேனே! வா.

விடன்—ஓ! ஓ! காமுகனாயினான். இனிக் கவலையில்லாதவனாகின்றேன். போகின்றேன். [என்று போய்விடுகின்றான்.]

சகாரன்—

நேரிசைவெண்பா.

253. பொன்றருவே னின்சொற் புகல்வேனிப் [1]பாகுடனே
யென்றலையை நின்காற் கிசைவிப்பேன்—மின்றந்த
நங்கா யெனைச்சிறிது நாடுகிலை யெம்மைநீ
யிங்கார் மரமனித ரென்று. (௩௧)

வசந்தசேனை—[2]இதன்கண் ஐயமென்ன? [குனிந்த முகமுடையளாய்ப் பின்வரும் இரண்டு செய்யுட்களையும் படிக்கின்றாள்.]

ஆசிரியவிருத்தம்.

254. கயவர்த மொழுக்கங் கடைப்பிடித் திழிந்தோய்
கரிசெலா முடையநீ யென்னை
மயறரு பொருளா லவாவுறுத் திண்டு
வயப்படுத் தடைதர நினைத்தி

---

[1] பாகு - தலைப்பாகை.

[2] மரமனிதர் என்பதில் ஐயமில்லை என்பது கருத்து.

செயலினுற் சிறந்த [1]சீலமுந் தூய
தேகமும் படைத்தசெங் கமலத்
தியைதரு மதுவுண் டின்பமா ரளிக
ளெங்ஙன மதனைவிட் டேகும். (௩௨)

கலித்துறை.

255. [2]வறிய ளுயினுங் குலவொழுக் குடையான் மகனே
முறைமை யின்முயன் றடைதாற் குரியவன் முற்றும்
அறிய வொத்திய லாடவற் பற்றிய காதல்
மறுவி லாப்பொருண் மகளிரை வயப்படுத் தொளிரும். ()

இன்னும், [3]மாமரத்தைச் சார்ந்த யான் புரசமரத்தை யேற்றுக்கொள்ளேன்.

சகாரன்—தேவடியாள் மகளே! வறியவனுகிய சாருதத்தனை மாமரமாகச்செய்தனை. என்னையோ புரசமரமாகக் கூறுகின்ருய். [4]முருக்கமரமாகவேனும் சொல்லின

---

[1] சீலமும் தேகமும் படைத்த செங்கமலம் என்பது உயர்ந்த ஒழுக்கமும் தூய உடலும் உடைய சாருதத்தனைக் குறிக்கும். இத்தகைய பெருமானைவிட்டுப் பொருளாசை காரணமாக அறிவுமிக்க எப்பெண்தான் நின்னையடைவாள்? என்பது கருத்து.

[2] பொருட்பற்றெழித்துக் குணத்தைப் பற்றியொழுகுதல் மகிழ்ச்சிக்கும் புகழ்ச்சிக்கும் காரணமாகும். அந்நிலையில் நிற்கும் கணிகையே "மறுவிலாப் பொருண்மக ளாவள்" என்பதாம்.

[3] சாருதத்தனைப்பற்றிய யான் மற்றொருவனையும் விரும்பேன் என்பதாம். மலரின் நிற அழகுகுறித்துப் புரசமரத்தைச் சார்தல்போலப் பொருள்குறித்து நின்னைப் பிறர் அடைவர். நன்கு அறிந்த யான் அடையேன் என்பது கருத்து.

[4] புரசமலரினும் முருக்கமலர் சற்று மிகுந்த சிவப்புநிற முடையதாகும்.

யல்லே. இவ்வாறு நீ என்னைப் பழித்துரைத்து இன்னும் அச்சாருதத்தனையே எண்ணுகின்றாய்.

வசந்தசேனை—என் நெஞ்சத்துள் இருப்பவரை எங்ஙனம் மறப்பேன்?

சகாரன்—இப்பொழுது [1]உன் நெஞ்சத்துள் இருக்கின்றவனையும் உன்னையும் ஒருங்கே கொல்லுகின்றேன். வாணிகத்தொழிலாளனாகிய வறுமைமிக்க அம் மனிதனைக் காதலிக்கின்றவளே! நில். நில்.

வசந்தசேனை—சொல். சொல். இன்னும் சொல். சாருதத்தரைப்பற்றிய இவ்வெழுத்துக்கள் [2]பாராட்டத் தக்கனவே.

சகாரன்—தாசிமகனாகிய வறுமைமிக்க சாருதத்தன் உன்னைக் காப்பாற்றுக.

வசந்தசேனை—என்னைக் காண்பாராயிற் காப்பாற்றுவார்.

---

1 நீ இறப்பையாயின் உன் நெஞ்சத்துள் இருப்பவனும் இறந்துவிடுவான் என்பது கருத்து. உன்னைக் கொன்று அக்கொலைக் குற்றத்தைச் சாருதத்தன்மேலேறிட்டு அரசனால் அவனையும் கொலைப்படுத்துவேன் என்பதூஉம் ஆம்.

2 வறுமைமிக்க அம்மனிதன் என்பது முதலியன, பொருட்பெண்டிர் என்னும் இழிவைவிலக்குதலிற் பாராட்டத்தக்கனவாயின.

சகாரன்—

ஆசிரியவிருத்தம்.

256. [1]இந்திர னவனே வாலியின் மகனு
மகேந்திர னென்பவன் றானே
அந்தகல் லரம்பை புதல்வனுங் கால
நேமியாஞ் சுபந்துவோ வன்றி
முந்துருத் திரனு மரசனே துரோண
முனிமகன் சடாயுவோ முதிய
துந்துமா ரப்பேர் சொலப்படுஞ் சாணக்
கியன்றிரி சங்குகொல் சொல்வாய். (௩௪)

அன்றி இவர்களும் உன்னைக் காப்பாற்றமாட்டார்கள்.

கலித்துறை.

257. [2]முந்தைப் பாரத யுகத்தினிற் சீதையை முடுகி
யந்தச் சாணக்கி யன்கொலை புரிந்தனன் சடாயு
வந்த சிர்த்திரௌ பதியினை வதைத்தன னதுபோற்
கொந்திநின்னையான்கொலைபுரிந்தொழிப்பனிப்பொழுதே.

[என்று அடிக்க முயல்கின்றான்.]

---

[1] இந்திரன் மகேந்திரன் என்பன கூறியதுகூறல். இந்திரன் மகன் வாலியாவன். காலநேமி - ஓ ரசுரன்; அரம்பைமகனல்லன். சுபந்து ஒரு புலவன்; அவன் காலநேமியுமல்லன்; அரம்பைமகனு மல்லன். உருத்திரன் தேவனாவான்; அரசனல்லன். துரோணன் மகன் அசுவத்தாமா; சடாயுவல்லன். துந்துமாரன் ஓர் அரசன். சாணக்கியன் ஓர் அந்தணன். தி ரி ச ங் கு மற்றோ ரரசன். இவ் வெல்லாம் ஆகமவிருந்தங்களாம்.

[2] கொந்துதல் - குத்துதல். உவமைக ளிரண்டும் இ தி கா ச விருத்தம். பாரதவருடம் என்பது நிலப்பகுதியை யுணர்த்துவது; பாரதயுகம் என்று காலம்பற்றிக் கூறியது மாறுபாடாகும்.

வசந்தசேனை—ஆ! தாயே! எங்கிருக்கின்றாய். ஆ! ஐய! சாருதத்தரே! யான் மனவிருப்பம் முற்றும் நிறைவேறப் பெறாமலே கொல்லப்படுகின்றேன். இனி உரக்கக் கதறு கின்றேன். ஆனால் வசந்தசேனை உரக்கக் கதறி அழுகின்றாள் என்னும் இது நாணமுறத்தக்கதன்றே. மாட்சிமிக்க [1]சாரு தத்தருக்கு வணக்கம். [நமோ சாருதத்தாய.]

சகாரன்—கருப்பதாசி, இன்னும் அத் தியவனதுபெய ரையே நினைக்கின்றாள். [என்று கழுத்தை நெரித்துக்கொண்டு] நினை. கருப்பதாசி! நினை.

வசந்தசேனை—[நமோ ஆரிய சாருதத்தாய] மாட்சிமிக்க சாருதத்தருக்கு வணக்கம்.

சகாரன்—செத்துப்போ. கருப்பதாசி! செத்துப்போ.

[அவிநயத்தால் மிகவும் கழுத்தை நெரித்துக் கொல்லுகின்றான். வசந்தசேனை உயிர்ப்பிலளாய்ச் செயலற்று விழுகின்றாள்.]

சகாரன்—[மகிழ்ச்சியோடு]

ஆசிரியவிருத்தம்.

258. ஏதநிறை பேழையதாய்ச் செருக்கினுக்கோ
ரிருப்பிடமா யிழிதக் காளாய்
யாதுமிலா ளெடுகூடல் விழைபவளா
யிருங்கால மெய்தப் போந்த
மாதிவளைக் கொன்றனனென் கைத்திறனை
யெவ்வாறு வருணிப் பேன்யான்
தீதகல்[2]பா ரதத்தின்முனஞ் சீதையென
வுயிர்ப்பின்றிச் செத்தா ளம்மை. (ருஅ)

---

[1] இறுதிக்காலத்தில் நினைக்கப்படும் நல்லோன் மறுபிறப்பி லேனும் வந்துகூடுவன் என்பது கருத்து.

[2] பாரதத்தில் சீதை இறந்ததுபோல் என்றது ஆகமவிருத்தம்; உவமவழு.

ஆசிரியவிருத்தம்.

259. [1]விரும்பியவென் றனைவிரும்பா மையிற்சினந்திவ்
விலைமகளை விரைந்தென் கையாற்
சுரும்பிசையிப் புட்பகரண் டகம்பாழென்
றுணர்ந்தஞ்சத் தொலைத்தே னின்ன
அருந்திறலை மகன்புரிந்தா னெனநேரிற்
காணுமை யாலென் றந்தை
பொருந்துதிரௌ பதியாமெ னன்னையுஞ்சோ
தாருநலம் பொன்றி னரே. (௩எ)

நிற்க. இப்பொழுது அக் கிழநரி வரக்கூடும். ஆதலின் இவ்விடத்தினின்றும் வேறோரிடத்திற் போயிருக்கின்றேன். [அங்ஙனமே செய்கின்றான்.]

[சேடனோடு விடன் வருகின்றான்.]

விடன்—தாவரகன் என்னுஞ் சேடனை யான் உடன் படுத்தினேன்; ஆதலின், கன்னிகைமகனைக் காண்பேன். [சுற்றிவந்து பார்த்து] ஓ! ஓ! வழியிலேயே ஒரு மரம் வீழ்ந்து கிடக்கின்றது. இம்மரம் வீழ்ந்து ஒரு பெண்ணைக் கொன்று விட்டது. ஏ! [2]பாவி! ஏன் இத் தகாதசெயலை மேற்கொண் டனை? பாவியாகிய நீ வீழ்ந்துகிடப்பதினும் ஒரு பெண்

---

[1] தாய் தந்தை உடன்பிறந்தா ரெல்லோரும் பெண்கொலை புரிந்த குரனுகிய என்னைக் காணுமையால் பேறு இலராயினர் என்பதாம். செய்யத்தகாததைச் செய்தபின் அநுதாபமின்மையும் மகிழ்ச்சியுறலும் கீழ்மக்கள் இயல்பாம். திரௌபதி இவன் தாயல்லள்.

[2] பாவி! என்னும் விளி வீழ்ந்துகிடக்கும் மரத்தைக்குறித்த தாகும்.

இறந்துகிடத்தலைக் காண்பது எனக்கு மிகவும் வருத்தந் தருகின்றது. உண்மையாகவே வசந்தசேனையைக்குறித்து என்மனம் ஐயுற்று நடுங்குகின்றதாதலின், இது நிமித்தமாகும். எவ்வாற்றானும் தெய்வங்கள் நல்லனவற்றையே செய்யும். [சகாரன்பக்கல் சார்ந்து] காளீன! தாவரகன் என்னும் சேடனைத் திரும்பிவரும்படி உடன்படுத்தினேன்.

சகாரன்—ஐய! தங்கள்வரவு நல்லதாக. மகனே! தாவரக! சேட! நின்வரவும் நல்லதாக.

சேடன்—ஆம்.

விடன்—என்னுடைய அடைக்கலப் பொருளைக் கொண்டுவா.

சகாரன்—அடைக்கலப்பொருள் யாது?

விடன்—வசந்தசேனை.

சகாரன்—போய்விட்டாள்.

விடன்—எங்கே?

சகாரன்—ஐயன் பின்புறமாகவே.

விடன்—[ஐயமுற்று] அத்திசைவழியாக அவள் போகவில்லையே!

சகாரன்—நீங்கள் எத்திசைவழியாகப்போயினீர்கள்?

விடன்—கிழக்குத்திசைவழியாக.

சகாரன்—அவளோ தென்றிசைவழியாகச் சென்றாள்.

விடன்—யான் தென்றிசைவழியாகச் சென்றேன்.

சகாரன்—அவளோ வடதிசைவழியாகச் சென்றாள்.

விடன்—மிகவுங்கலக்கமுற்று மாறுபடப்பேசுகின்றீர். என் உள்ளம் தெளிவடையவில்லை; ஆதலின் உண்மையைச் சொல்லுங்கள்.

சகாரன்—ஐய! உங்கள் தலையை என்கால்களால் மிதித்துச் சூளுற்றுச் சொல்லுகின்றேன். ஆதலின் உள்ளத்தை அசைவின்றி நிலைப்படுத்திக்கொள்ளுங்கள். அவளை யான் கொன்றுவிட்டேன்.

விடன்—[துன்பத்தோடு] உண்மையாகவே அவள் நுங்களாற் கொல்லப்பட்டாளா?

சகாரன்—என்சொல்லில் உங்களுக்கு நம்பிக்கையில்லையாயின் முதலில் அரசன்மைத்துனனும் சமத்தானகனுமாகிய என் வீரத்தைப் பாருங்கள்.[1] [என்று [2]காட்டுகின்றான்.]

விடன்—ஆ! பேறிலனாகிய யான் கெட்டேன். [என்று மயங்கி வீழ்கின்றான்.]

சகாரன்—ஓ! ஓ! ஐயன் இறந்துவிட்டான்.

சேடன்—ஐய! தெளிவடையுங்கள். தெளிவடையுங்கள். ஆராய்ந்துபாராமல் வண்டியைக்கொண்டுவந்த என்னாலேயே முதலிற் கொல்லப்பட்டாள்.

விடன்—[தெளிவுற்று அவலத்தோடு] ஆ! வசந்தசேனே!

---

[1] என்சொல்லில் நம்பிக்கையில்லையாயின் வீரச்செயலைப் பாருங்கள் என்பதாம்.

[2] வசந்தசேனை இறந்துகிடத்தலைக் காட்டுகின்றான்.

ஆசிரியவிருத்தம்.

260. [1]நாகரிக நீர்நிறைந்த நதியைக் காணே
னலமிகுசி ரிரதியவ ளகாஞ் சார்ந்தாள்
ஆகமொளி ரணிகளுக்கோ ரணியே யின்ப
வாடலினுற் பொலிசுமுக வணங்கே யந்தோ
வாகைமிகுங் குணநதியே முறுவ லாய
மணற்குன்றே யென்போல்வார் மகிழும் வாழ்வே
யோகைதரு மெழிற்பண்ட நிலைய மாய
வொருமதனன் [2]அங்காடி யொழிந்த தந்தோ. ()

[கண்ணீரொழுக்கி] ஆ! துன்பம்! துன்பம்!

நேரிசைவெண்பா.

261. இச்செயலை நீபுரிதற் கேது வுளதாங்கொல்
அச்சமிலாப் பாவவுரு வாய்வந்து—நச்சுந்
திருநகரத் தென்றுந் திகழ்திருவைத் தீமை
யொருவினளைக் கொன்று யுவந்து. (௩௯)

[தனக்குள்] ஆ! இப் பாவி ஒருசமயம் இத் தகாதசெயலை என்மேலேற்றவுங்கூடும். நிற்க. இங்குநின்றும் போகின்றேன். [என்று சுற்றிவருகின்றான்.]

[சகாரன் சென்று பிடித்துக்கொள்ளுகின்றான்.]

விடன்—பாவி! என்னைத் தொடாதே. உன்னோடு பழகியது போதும். யான் போகின்றேன்.

சகாரன்—அடே! வசந்தசேனையை நீயே கொன்று என்னைப் பழித்துரைத்துவிட்டு எங்கே ஓடுகின்றாய். இப் பொழுது யான் இங்ஙனம் துணையற்றவனாயினேன்.

விடன்—நீ கெட்டாய்.

---

1 நாகரிகம் - கண்ணோட்டம். 2 அங்காடி - கடைத்தெரு.

சகாரன்— ஆசிரியவிருத்தம்.

262. [1]இலகுபொன் பொருளீ ரைம்ப
துனக்கியா னீவே னன்றிப்
பலகறை யிருப தோடு
பணம்பதி னாறு மீவேன்
குலவுமென் றண்மை யாமிக்
கொலைகெழு குற்றந் தன்னைப்
புலனுறு மனிதர்க் கெல்லாம்
பொதுவெனச் செய்தல் வேண்டும். (௪௰)

விடன்—சீ! இக்குற்றம் உன்னுடையதாகவே முடியும்.

சேடன்—[2]தீமை நீங்குக.

சகாரன்—[சிரிக்கின்றான்.]

விடன்— ஆசிரியவிருத்தம்.

263. [3]முறுவலீங் கெதற்கு வேண்டா
முன்னிநின் றிரங்கல் வேண்டும்
மறுவுறீஇ மானம் போக்கு
மகிழ்ச்சியை வெறுத்தல் வேண்டும்
தறுகண வினியோர் காலுஞ்
சார்கிலே னினது நட்பை
யிறுமொரு வில்லைப் போல
வியல்குண மில்லாய் நீங்க. (௪௧)

---

[1] இருபதுபலகறை காற்பணமதிப்புடையதென்பது லீலாவதியிற் கண்டது. இக்குற்றத்தைப் பொதுவாக்கவேண்டும் என்றதனாற் சிறப்புவகையாக என்னைக் குறிப்பிடலாகாது என்பது கருத்து.

[2] இக்கொடுஞ்செயலைக் கேட்டற்கும் இயலவில்லை என்பதாம்.

[3] இற்றவில்லைப்போலக் குணமில்லாதவனே! என்பதால் விலக்கப்படத்தக்கவன் என்பது போதரும். குணம்-வில் நாண்; நற்குணம்.

சகாரன்—ஐய! அருள்செய்யுங்கள். அருள்செய்யுங்கள். வருக. தாமரைக்குளத்திலிறங்கி விளையாடுவோம்.

விடன்—

ஆசிரியவிருத்தம்.

264. தீவினை யில்லே னென்னினு நின்னைச்
சேர்தலாற் சிறுமைமிக் குடைய
பாவிபோ லென்னை யெண்ணுவ ரிந்தப்
பாருளார் பெண்கொலை கேட்டுத்
தாவறு நகர மகளிர்க ளஞ்சித்
தம்விழிப் பாதியாற் காண
மேவுநின் நட்பைக் களைகிலா துன்னை
மீண்டும்யா னெங்ஙனந் தொடர்வேன். (சஉ)

[அவலத்தோடு] வசந்தசேனே!

கொச்சகக்கலிப்பா.

265. பிற்றைப் பிறப்பிற் பிறங்கும் [1]விலைமகளா
வுற்றுப் பிறவா தொழிக வுறுந்தூய்மை
துற்று மொழுக்க நிறைகுலத்திற் றோன்றுதியாற்
கற்றைக் குழற்குக் கனம்வெரூஉங் கட்டழகி. (சங)

சகாரன்—எனது புட்பகரண்டகமென்னும் பழைய பூந்தோட்டத்தில் வசந்தசேனையைக் கொன்றுவிட்டு எங்கே ஓடுகின்றாய்? வா. என் தங்கைமணாளனாகிய அரசன்முன்னிலையில் வழக்கைக்கொடு. [என்று விடனைப் பிடிக்கின்றான்]

---

[1] விலைமகளாகப் பிறவாதொழிக என்றது, அவள்குணங்களுக்கு அப்பிறப்புத் தக்கதன்றென்பது கருதி.

விடன்—ஆ! ஆ! நில். மூர்க்க! [என்று வாட்படையை உருவுகின்றான்.]

சகாரன்—[அச்சத்தோடு பின்னாக ஓடி] அடே! அஞ்சுகின்றனையா? அப்படியானால் போ.

விடன்—[தனக்குள்] இங்கிருத்தல் தகுதியன்று. நிற்க. ஐயன் சருவிலகன் சந்தனகன் முதலியோர் எங்குள்ளாரோ அங்குச் செல்கின்றேன்.[1] [என்று போகின்றான்.]

சகாரன்—செத்துப்போ. அடே! மகனே! தாவரக! யான் செய்த காரியம் எத்தகையது?

சேடன்—பெருமானே! தாங்கள்செய்தது மிகவும் தகாதசெயல்.

சகாரன்—அடே! சேட! யான்செய்தது தகாதசெயல் என்று கூறுகின்றாய்? நிற்க. இங்ஙனஞ்செய்வேன். [பலவகையான அணிகலன்களைக் கழற்றி] இவ் வணிகலன்களை வாங்கிக்கொள். இவை என்னாற்கொடுக்கப்பட்டவை. யான் அணிந்துகொள்ளும்பொழுதெல்லாம் என்னுடையனவாகும். மற்றைக்காலங்களில் உன்னுடையனவாகும்.[2]

சேடன்—பெருமானுக்கே இவை அழகுசெய்யும். எனக்கு இவற்றால் என்ன பயன்?

---

[1] சருவிலகன் சந்தனகன் முதலியோர் அரசனுக்குப் பகைவராவர்; ஆகலின் அங்குச் சென்றால் அரசன் தண்டிப்பான் என்னும் அச்சத்துக்கு இடனின்றாம் என்பது கருத்து.

[2] எப்பொழுதும் உனக்கேயுரியனவாகக் கொடுக்கப்பட்டனவாகா என்பது கருத்து.

சகாரன்—அப்படியானல் இவ்வெருதுகளைப் பிடித்துக் கொண்டுபோ. யான் அங்கு வரும்வரை என் இல்லத்தினது மேனிலத்துவழியில் [1] இரு.

சேடன் — பெருமான்கட்டளைப்படியே. [என்று போகின்ருன்.]

சகாரன்—ஐயன் தன்னைக் காத்துக்கொள்ளுதற் பொருட்டு மறைந்துபோயினன். சேடனையும் என் இல்லத்தினது மேனிலத்துவழியில் விலங்குபூட்டி இறுகுறக் கட்டிவைப்பேன். இங்ஙனம் வசந்தசேனையின்கொலையைப் பற்றிய இரகசியம் வெளிப்படாமற் காக்கப்பட்டதாகும். ஆகலின், போகின்றேன். இனி இவளைப் பார்க்கின்றேன். இவள் இறந்துவிட்டாளா? மீண்டும் கொல்லவேண்டுமா? [பார்த்து] நன்ருக இறந்துவிட்டாளே. நிற்க. இம்மேலாடையால் இவளை மூடுவேன். இவ்வாடை என் பெயரடையாளமிடப்பட்டுள்ளதே! அதனல் அறிவுடையான் எவனாவது என்குற்றத்தை அறிந்துகொள்ளுவான். நிற்க. இடையிடில்லாமல்வீசும் காற்றினல் திரட்டப்பட்ட இவ்வுலர்ந்த சருகுகளால் மூடுவேன். [அங்ஙனமே செய்து நினைவுகூர்ந்து] நிற்க. இங்ஙனஞ்செய்வேன். இப்பொழுது நீதிமன்றஞ் சென்று "வாணிகத்தொழிலாளனுகிய சாருதத்தன் எனது புட்பகரண்டகமென்னும் பழைய பூங்கோட்டத்துட்புகுந்து பொருள்காரணமாக வசந்தசேனையைக் கொன்ருன்" என்று வழக்கு எழுதுவிப்பேன்.

---

[1] எருதுகளைக் கொட்டிலிற் கட்டிவிட்டு இரு என்பது கருத்து.

நேரிசைவெண்பா.

266. [1]தூய நகரிற் றுணிந்து பசுக்கொலையாந்
தீய செயலதனைச் செய்தாங்கு—மாயமொன்று
தக்கமுறை யிற்புரிதோய்ச் சாருதத்தன் சாமாறு
மிக்கவிரை விற்புரிகு வேன். (உச)

நிற்க. போகின்றேன். [என்று சிறிதுதூரஞ்சென்று அச்சத்தோடுபார்த்து] ஆ! ஆ! யான் எவ்வழியாகச் செல்கின்றேனே அவ்வழியாகவே இக்கொடிய புத்தசமயத் துறவி துவர்நீர்தோய்ந்த சீவர ஆடையை எடுத்துவருகின்றான். இவன் என்னால் மூக்கில் துளையிட்டு ஓட்டப்பட்ட பழைய பகைவன். ஒருசமயம் வெளிப்படுகின்ற என்னைக் கண்டு "இவன் வசந்தசேனையைக் கொன்றான்" என்று வெளிப்படுத்தவுங்கூடும். ஆதலின் எப்படிப் போவேன். [பார்த்து] நிற்க. பாதி இடிந்துவிழ்ந்துகிடக்கும் இம் மதிற்சுவரைத் தாண்டிப்போகின்றேன்.

நேரிசைவெண்பா.

267. [2]விண்ணினு மண்ணினு மேவுமநு மான்மலையாம்
கண்ணினும் பாதலக் கண்ணினும்—நண்ணிமுன்
மாகமுற நீண்ட மகேந்திரன்றான் சென்றாங்கு
வேக மிகவோடு வேன். (உரு)

[என்று போகின்றான்.]

---

[1] வசந்தசேனையின் நெஞ்சத்தை அடைந்தமையால், சாருதத்தன் கொலைக்குரியவனாவான். அக்கொலையால் தன்குற்றத்தின் ஒழிவும், பகைவனுக்குக் கேடும் ஒருங்குநிகழ்வனவாம் என்பது கருத்து.

[2] மகேந்திரமலையின்கண் என்பதை அநுமான்மலையாம் கண்ணினும் என்றும், அநுமான்சென்றாங்கு என்பதை மகேந்திரன்சென்றாங்கு என்றும் கூறியது மாறுபாடாம்.

[திரை எடாதிருக்க வந்து]

[1]சம்வாககன் என்னும் துறவி—யான் இச் சிவாஆடையைத் தோய்த்துக் கழுவினேன். இதனை மாக்கிளையிற் கட்டி உலர்த்தலாம்; இங்குக் குரங்குகள் கிழித்துவிடும். நிலத்தில் உலர்த்தலாம்; புழுதிபடியும். ஆதலின் எவ்விடத்தில் விரித்து உலர்த்துவேன்? [பார்த்து] நிற்க. இடையறவில்லாக் காற்றினாற் றிரட்டப்பட்ட இவ் வுலர்ந்த சருகுக்குவியலில் இவ்வாடையை விரிப்பேன். [அங்ஙனஞ்செய்து] புத்தபகவானுக்கு வணக்கம். [நமோ புத்தாய என்று இருக்கின்றான்.] நிற்க. அறவுரைகளைக் கூறுகின்றேன். [என்று முற்கூறிய "ஐவர் தமைக்கொன்று" (இவ்வங்கத்தின் 2-ஆம் செய்யுள்) என்பதனைப் படிக்கின்றான்.] அன்றிப் புத்தோபாசிகையாகிய அவ் வசந்தசேனைக்குக் கைம்மாறுசெய்யாதவரையில் எனக்கு மறுமையின்பம் வேண்டுவதொன்றன்று. பத்துப் பொற்காசுகளினிமித்தம் வசந்தசேனையால் சூதர்களிடத்தினின்றும் யான் விடுவிக்கப்பட்டதுமுதல் அவளாற் கொள்ளப்பட்ட விலைப்பொருள்போலவே என்னை எண்ணுகின்றேன். [பார்த்து] ஈதென்ன? சருகுகளின் நடுவில் மூச்சுக்காற்று உண்டாகின்றது![2]

---

[1] இவன் மாதுரனால் பிடிக்கப்பட்டு வசந்தசேனை உதவிய பத்துப் பொற்காசுகளால் விடுவிக்கப்பட்ட சூதன்; பின்னர்ப் புத்த சமயத்துறவியாயினான்.

[2] நனைந்த ஆடையின் சேர்க்கையால் வசந்தசேனைக்கு மூச்சுக்காற்று உண்டாக, அதனால் இலைக்குவியல் அசைதலைக்கண்டு இவ்வாறு கூறினன். சருகுக்குவியலின் உள்ளே பாம்பு முதலியவைகள் மறைந்திருக்கலாமென்று நினைந்து மூச்சுக்காற்று உண்டாகின்றதென்றான்.

கலிவிருத்தம்.

268. [1]உருவெயிற் காற்றினு லுலர்ந்து சீவரம்
மருவிய நீரினு னனைந்த வான்றிரட்
சருகிவை யகற்சியைச் சிறிது சார்தலாற்
குருகின திறகென வசைதல் கூடுமால். (சசு)

[வசந்தசேனை தெளிவெய்திக் கையைநீட்டிக் காட்டுகின்ருள்.]

துறவி—ஆ! ஆ! சிறந்த அணிகலன்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு பெண்மகளின் கை வெளிப்படுகின்றதே! ஈதென்ன? இரண்டாவது கையும் வெளிப்படுகின்றதே! [பலவகையாக உற்றுப்பார்த்து] இக்கைகள் முன் பார்க்கப்பட்டனபோற் றேன்றுகின்றனவே! இவ் வாராய்ச்சி எதற்கு? உண்மையாக எனக்கு முன் அபயம் அருளிய கையே இது. நிற்க. பார்க்கின்றேன். [அவிநயத்தால் இலைகளை விலக்கிப்பார்த்து உண்மையுணர்ந்து] அப் புத்தோபாசிகையே இவள்.

[வசந்தசேனை தண்ணீரைவிரும்பிக் குறிப்புச்செய்கின்ருள்.]

துறவி—ஈதென்ன? தண்ணீர்வேண்டுகின்ருள். குளம் தூரத்திலுள்ளது. இப்பொழுது இதற்கு யான் என்செய்வேன். நிற்க. இவள்மேல் இச் சீவர ஆடையைப் பிழிவேன்.

[அங்ஙனமே செய்கின்ருன்.]

[வசந்தசேனை நன்கு தெளிவெய்தி எழுகின்ருள்.
துறவி ஆடைநுனியால் விசிறுகின்ருன்.]

வசந்தசேனை—ஐய! தாங்கள் யார்?

---

[1] உலர்ந்து சுருங்கிய சருகு ஈரம்பொருந்தியவுடன் விரியுமாதலின் "அகற்சியைச் சிறிது சார்தலால்" என்று கூறப்பட்டது. குருகு - பறவை.

துறவி—புத்தோபாசிகையாகிய தாங்கள் பத்துப்பொன் கொடுத்து விலைக்குவாங்கிய என்னை மறந்தீர்களோ?

வசந்தசேனை—நங்களை மறக்கவில்லை. தாங்கள் சொல்லியபடி விலைக்குவாங்கப்பட்டவர்களாகத் தங்களை எண்ணவில்லை. யான் இறத்தலே சிறந்ததாகும்.[1]

துறவி—புத்தோபாசிகே! ஈதென்ன?

வசந்தசேனை—[துன்பத்தோடு] பொருட்பெண்டிரியல்புக்கு இஃது ஒத்ததே.[2]

துறவி — புத்தோபாசிகே! மரத்தின்பக்கத்திலுள்ள இக்கொடியைப்பற்றிக்கொண்டு எழுக.[3] எழுக. [என்று கொடியை வளைக்கின்றான்.]

[வசந்தசேனை கொடியைப்பற்றிக்கொண்டு எழுகின்றாள்.]

துறவி—இப் பௌத்தமடத்தில் என் தருமசகோதரியாகிய பிட்சுகி இருக்கின்றாள். உபாசிகை அவ்விடத்தில் இளைப்பாறிக்கொண்டு இல்லத்திற்குச் செல்லலாம். [என்று சுற்றிவந்துபார்த்து] மெல்லமெல்லப் புத்தோபாசிகை நடக்க

---

[1] பாவியாகிய சகாரனால் தீண்டப்பட்ட யான் உயிர்வாழ்தலாற் பயனென்? என்பதாம்.

[2] பொதுமகளை யாவரும்விரும்புவர் என்பதற்குப் பயன் இதுவேயாம் என்பது கருத்து.

[3] தான் துறவியாதலின் அவளைத் தீண்டலாகாதென்று கருதிக் கொடியைப்பற்றும்படி கூறினான்.

வேண்டும். விலகிச்செல்லுங்கள். ஐயன்மீர்! விலகிச்செல்லுங்கள். இவள் இளம்பெண். யான் துறவி. என்னுடைய இத் துறவறம் மிகவும் தூய்மைவாய்ந்தது.[1]

நேரிசைவெண்பா.

269. [2]கையடக்க நாவி னடக்கங் கருதுபொறி
மெய்யடக்க மாமிவற்றை மேவினன்—செய்ய
மனிதனு மற்றிவன்கை மன்னு மறுமை
இனியரசர் செய்வ தெவன். (௭௭)

[என்று போகின்றான்.]

"வசந்தசேனை துன்பநிலை" என்னும்

எட்டாம் அங்கம் முற்றிற்று.

---

[1] இளம்பெண்முன்னிலையில் விகாரமின்றியிருத்தலே துறவறத்துக்கு உரைகல்லாகும் என்பது கருத்து.

[2] கையடக்கம் - கன்மேந்திரியத்துக்கு உபலக்கணம். பொறி மெய்யடக்கம் - ஞானேந்திரியங்களின் உண்மையடக்கம். இவன் கையில் மறுமை மன்னும் என்க. இத்தகைய துறவிக்கு அரசர் செயக்கடவதென்? யாதும் இன்றென்பதாம். இம்மையில் அரசர் முதலியோரால் விளையும் அச்சமுதலியனவும் மறுமையில் பாவபயமும் இல்லை என்பது கருத்து.

# [1]ஒன்பதாம் அங்கம்.

## வழக்காராய்ச்சி.

[[2]ஏவலன் வருகின்ருன்.]

ஏவலன்—“அடே! ஏவற்கார! நீதிமன்றத்தை யடைந்து இருக்கைகளைச் சித்தப்படுத்து” என்று நீதிபதியவர்களால் கட்டளையிடப்பட்டுள்ளேன். ஆதலின் நீதிமன்றத்தைத் தூய்மைசெய்து இருக்கைமுதலியவற்றைச் சித்தப்படுத்தற்குப் போகின்றேன். [சுற்றிவந்து பார்த்து] இதுதான் நீதிமன்றம். இதன்கட் புகுகின்றேன். [புகுந்து அலகிட்டுத் தூய்மைசெய்து இருக்கைகளை உரிய இடங்களில் வைத்து] நீதிமன்றம் என்னல் தூய்மைசெய்யப்பட்டுள்ளது. இருக்கைகள் உரிய இடங்களில் வைக்கப்பட்டன. ஆதலின் நீதிபதிக்குத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். [சுற்றிவந்து பார்த்து] கொடியவனும் குறளைகூறுபவனும் அரசன்மைத்துனனுமாகிய இம்மனிதன் இதோ வருகின்ருன். அவன் கண்ணிற்படாமற் போகின்றேன். [என்று ஒரு தனியிடத்தில் நிற்கின்ருன்.]

---

1 சகாரன் வசந்தசேனையின் கொலைக்குற்றத்தைச் சாருதத்தன்பால் ஏறிட்டு நீதிமன்றத்தில் வழக்கிடுதலும் அரசன் சாருதத்தனுக்கு மரணதண்டனைவிதித்தலும் இவ்வங்கத்தின் உள்ளுறை பொருள்களாம்.

2 நீதிமன்றத்தை அலகிட்டுத் தூய்மைப்படுத்துதல் முதலியன செய்யும் பணியாள்.

[அதன்பின் மிக்க [1]ஒளிசெய்கின்ற வேடம்பூண்டு
சகாரன் வருகின்றான்.]

சகாரன்— கலிவிருத்தம்.

270. [2]பொங்கு நீரிற் புனலிற் படிந்தனன்
நங்கை நாரியர் பெண்க ணையப்புறத்
தங்கு பூம்பொழிற் சோலையைச் சார்ந்தயான்
அங்க நல்லணி யாற்கந் தருவனே. (க)

271. [3]ஒருகணை மயிர்முடி யுச்சி யோர்கணம்
ஒருகணங் குஞ்சிமற் றோரி யோர்கணம்
ஒருகணை மவிழ்த்தன்மே லுயர்த்த லோர்கணம்
வருபல வுருவினே னரசன் மைத்துனன். (உ)

இனி, நச்சுப்பொருட்குவியலினுள்ளேபுகுந்து வெளி வருதற்குரிய இடைவெளியைத்தேடும் புழுப்போல யான் செய்த குற்றத்தினின்றும் வெளிப்படுதற்கேற்ற தக்க வழியை அடைந்துளேன். ஆதலின் [4]எவன்மேல் இவ் விழி செயலை ஏற்றலாம். [நினைவுகூர்ந்து] ஆம். முன்னரே என்னால்

---

[1] தன்குற்றம் வெளிப்படாமற்செய்தற்காம்.

[2] இதன்கட் கூறியதுகூறல் வெளிப்படை.

[3] உச்சி - மயிர்முடி. குஞ்சி ஓரி - ஆண்மயிர்; கூறியதுகூறல். அரசன்மைத்துனனாதலின் தலைமயிரை முடித்தல் அவிழ்த்தல் உயர்த்துமுடித்தல் முதலிய செயல்களால் விரும்பியவாறு ஒழுகு பவன் என்பது கருத்து.

[4] "வறியவன் பொருளாசையாற் கொலைசெய்வன்" என்பது நம்பத்தக்கதாகும். அதற்கு ஏற்றவன் இன்னானென்பதை இவன் முன்னரே துணிந்துவைத்தும், அச்சத்தால் ஓடிவந்தமையான் மறந்துவிட்டானாதலின் மீண்டும் எவன்மேல் ஏற்றலாமென்று எண்ணுவானாயினன் என்பதாம்.

நினைக்கப்பட்டதே. வறியவனாகிய சாருதத்தன்மேல் இவ் விழிசெயலை ஏறிடுவேன். இன்னும், அவனோ வறியவன். அவன்பால் ஏறிடுவனவெல்லாம் பொருந்தும். நிற்க. நீதிமன்றத்தை அடைந்து, "சாருதத்தன் வசந்தசேனையை அடித்துக் கொன்றான்" என்று முதலில் வழக்கை எழுதுவிப்பேன். அதனிமித்தம் நீதிமன்றத்தை அடைகின்றேன். [சுற்றிவந்து பார்த்து] இதுதான் அந் நீதிமன்றம். இதன்கட் புகுகின்றேன். [புகுந்துபார்த்து] இருக்கைகள் சித்தப்படுத்தப்பட்டுள்ளன. நீதிபதி இங்கு வரும்வரை அறுகம்புல்நிறைந்த இவ்வெளி யிடத்தில் சிறிதுநேரம் இருந்து அவர் வரவை எதிர்பார்ப் பேன். [அங்ஙனமே இருக்கின்றான்.]

ஏவலன்— [வேறுவழியாகவந்து நேரிற்பார்த்து] இதோ நீதிபதி வருகின்றார். ஆதலின் அவர்பக்கலிற்போகின்றேன். [என்று அணிமையிற் செல்லுகின்றான்.]

[அதன்பின் நீதிபதி, [1]செட்டி [2]எழுத்தாளன் இவர்கள் சூழ வருகின்றான்.]

நீதிபதி—ஓ! ஓ! செட்டி, எழுத்தாளர்களே!

செட்டியும் எழுத்தாளனும்—பெருமான் கட்டளையிடுக.

நீதிபதி—ஆ! நீதிபதிகள் [3]வழக்குநிலையின்வயப்பட்டவ ராதலின் பிறர் உள்ளத்தின் இயல்புகளைப் பகுத்தறிதல் அவர்க்கு அரிதாகின்றது.

---

[1] செட்டி - தண்டமாக இறுக்கப்படும் பொருள் முதலிய வற்றை ஆராய்ந்து எண்ணுதல் முதலிய வினைசெய்பவன்.

[2] எழுத்தாளன் - வழக்குமுறையை எழுதுபவன்.

[3] முறையிடு, எதிர்மொழி, ஐயப்பாடு, காரணம், ஆராய்ச்சி, அளவை, துணிவு, பயன்: என்னும் இவ்வெட்டனையும் உடையது வழக்கு எனப்படும். நீதிபதிகள் வழக்கின் சான்று முதலியன எவ்வாறுள்ளவோ அவ்வாறே அதனை முடிக்கற்பாலார். தம் அறிவு மாத்திரையே கடைப்பிடித்து ஒருவன் இயல்பைத் தீர்மானித்தல் இயலாததொன்றென்பது கருத்து.

ஆசிரியவிருத்தம்.

272. [1]வழக்குரைப்போ ரளவைகளான் மதிப்பரிய
வழக்கியலை மறைத்துச் சொல்வார்
இழுக்குமவா வயத்தினராய்த் தம்பிழையை
யிம்மன்றத் தியம்பார் தாமே
உழக்குமுரை யெதிருரையா லுரன்மிகுமப்
பிழையரசற் குறுவ தாகும்
பழிப்பெளிது புகழ்ச்சியரி தறங்காண்பார்க்
குறல்சுருங்கப் பகரி னம்மா. (௩)

[1] அளவை - காட்சி முதலியன. மதிப்ப அரிய - துணிதற்கு இயலாத. மறைத்துச்சொல்லல் - அமயத்துக்கேற்றபடி மெய்யைப் பொய்யினால் மறைத்துக்கூறல். அவா - மேற்கொண்டசெயலைச் சாதிக்கும் ஆசை. தம்பிழையை இயம்பார் என்றதனால், எல்லோரும் தம்மைக் குற்றமற்றவரென்றும் பிறர்காரணமில்லாமலே தீங்கிழைத்தனரென்றும் கூறும் இயல்பினரென்பது போதரும். உழக்கும் உரை - நியாயம்பெற முயன்றுகூறும் வாதியுரை. உழத்தல் - முயறல். எதிருரை - பிரதிவாதியுரை. ஊன் மிகும் அப்பிழை - வலிமிகப்பெற்ற அக்குற்றம். வலிமிகுதலாவது வாதி பிரதிவாதிகளிருவரும் தம்பிழைகளை மறைத்துப் பிறர்பிழைகளை வெளிப்படுத்தற்குச் செய்யும் ஆரவாரங்களால் உண்மை புலனுகாமை. வழக்கின் உண்மையுணராமற் செய்யப்படும் முடிபால் உண்டாம் பிழை அரசனை அடையும் என்பதை, "தண்டிக்கத் தகாதவனைத் தண்டித்தும் தண்டத்திற் குரியவனை விடுத்தும் நீதிவழங்கும் அரசன் பெரும்பழியையும் நரகத்தையும் அடைவன்" என்னும் மனுமொழியானும் (அத்—8. சு—128) உணர்க. அறங்காண்பார்க்கு உறல் - நீதிபதிகளுக்குப் பொருந்துவதை; சுருங்கப் பகரின் - சுருக்கிக் கூறுமிடத்து. பழிப்பு எளிது புகழ்ச்சி அரிது என்க.

இன்னும்,

273. [1]வழக்கழிய வெகுளியினுற் சான்ருவார்
மறைத்துண்மை வழுவிச் சொல்வார்
ஒழுக்கமுடை யோரெனினுந் தமர்பிழையை
யிம்மன்றத் துரைப்பா ரல்லர்
உழக்குமுரை யெதிருரையா லுறுபாவ
முற்றுமுறீஇக் கெடுவ ருண்மை
பழிப்பெளிது புகழ்ச்சியரி தறங்காண்பார்க்
குறல்சுருங்கப் பகரி னம்மா. (ச)

நீதிபதிகளுக்கோ,

---

[1] சான்ருவார் ஒழுக்கமுடையாரெனினும் வெகுளியினுல் வழக்கு அழிய உண்மையை மறைத்துச்சொல்வார் எனவும் வழுவிச் சொல்வா ரெனவும் இயைக்க. உண்மையை மறைத்துச்சொல்லுவா ரென்றதனுற் கண்டனவற்றை மறைத்தலும், வழுவிச்சொல்வார் என்றதனுற் காணுதனவற்றை எறிட்டுக்கூறுதலும் புலனும். இஃது எதிர்ப்பக்கத்தாரைக் குறித்ததாகும்; பின்னர்த் 'தமர்' என்றதனுல் தம் பக்கத்தார் குறிக்கப்படுதலின். தமர்பிழையை உரையார். தமர் - தம்மைச் சார்ந்தார். இங்ஙனம் மாறுபடச் சான்றுகூறு வோர், வாதப் பிரதிவாதங்களினுல் ஏற்படும் குற்றங்களால் பாவத் துக்கு ஆளாகிக் கெடுவர்; இஃது உண்மை. வாதப் பிரதிவாதங்க ளாற் சான்றுகூறுவோர்க்கு ஏற்படும் பாவமாவது: தம் பக்கத்தார் குற்றத்தை மறைத்தல்; எதிர்ப்பக்கத்தார்பால் பொய்ம்மையாகக் குற்றத்தை யேறிட்டுக்கூறுதல் என்னும் இரண்டுவகையானும் விளையும் தீங்கு. சான்றுகூறுவாரியல்பு இன்னவாதலின் அறங் காண்பார்க்குப் பழிப்பெளிது புகழ்ச்சி அரிதாமென்க.

274. [1]நூலறிவு சினமின்மை வஞ்ச ருள்ள
நுனித்துணரு மாற்றலொடு நுவலும் வன்மை
ஞாலநிகழ் நண்பர்தமர் பகைவர்க் கெல்லா
நடுநிற்றல் வழக்கியலே நாடித் தீர்த்தல்
சாலமெலிந் தவர்ப்புரத்தல் வஞ்சர் தம்மைத்
தகவொறுத்தல் தருமமுற லுலோப மின்மை
மூலமெனும் பரனன்பு முன்ன வாயின்
முனிவரசற் குறிற்றடுத்தன் முற்றும் வேண்டும்.

---

[1] நூல் - அறம் பொருள்களைப் பற்றியவை. சினம் அறிவுடையான் அறிவையும் தடைப்படுத்துமாதலின் அதன் இன்மை வேண்டும். நுவலும் வன்மை - பேசும் ஆற்றல்; தான் அறிந்த பொருளை வெளிப்படுத்தற்குரிய ஆற்றல். தமர் - உறவினர். வழக்கியலையேநாடித் தீர்த்தலாவது, பொருட்பற்றுடையாரெல்லோரும் பொருள்காரணமாகத் தம் இயல்பு மாறுபடுவாராதலின், வாதி பிரதிவாதிகளின் முன்னைக் குணங் குற்றங்களை நினையாமல் வழக்கின் தன்மையையே சான்று முதலியவைகளால் ஆராய்ந்து முடிவு செய்தல். மெலிந்தவர் - வலியற்றவர்; உண்மையாக நிகழ்ந்த தொன்றை எடுத்துரைக்கும் ஆற்றலில்லாதவர். புரத்தல் - தாமே உண்மையுணர்ந்து காத்தல். தக ஒறுத்தல் — வஞ்சத்தையுணர்ந்து தக்கவாறு தண்டித்தல். தருமம் உறல் - அறநெறியினின்றும் பிறழாமை. உலோபம் இன்மை - பொருளாசையில்லாமை. பரன் அன்பு - கடவுட்பத்தி; அதனால் அறத்தைக் கடைப்பிடித்தலும் மறத்தை ஒழித்தலும் உண்டாம். முன்னம் வாயில் - பிறர்கருத்துக்களை யுணர்தலில் வாயிலாதல்; பிறர்கருத்துக்கள் தடையின்றிப் புகுதற்குரிய வாயிலாக விளங்குபவன் என்பது கருத்து. அரசற்கு முனிவு உறின் தடுத்தல் - அரசனுக்குச் சினமுறின் நீதிவழியை எடுத்துரைத்துத் தடைப்படுத்தல்.

சேட்டியும் எழுத்தாளனும்—பெருமானுக்கும் நன்மை திமைகள் கூறப்படுகின்றனவா! அங்ஙனமாயின் திங்கள் ஒளியிலும் இருள் உள்ளதென்று கூறல்வேண்டும்.

நீதிபதி—நன்மைமிக்க ஏவல! நீதிமன்றத்தின்வழியைக் காட்டு.

ஏவலன்—வருக. வருக. நீதிபதியவர்களே! வருக.

[சுற்றிவருகின்றனர்.]

ஏவலன்—இது நீதிமன்றம். நீதிபதிகள் இதன்கட் புகுதல்வேண்டும்.

[எல்லோரும் புகுகின்றனர்.]

நீதிபதி—நன்மைமிக்க ஏவல! வெளியேசென்று வழக்குரைப்பவர் யார் யார் என்பதை அறி.

ஏவலன்—பெருமான்கட்டளைப்படியே. [என்று வெளிச்சென்று] ஐயன்மீர்! இங்கே வழக்குரைப்பவராக வந்தவர்கள் யார் யார் என்று நீதிபதிகள் கேட்கின்றனர்.

சகாரன்—[மகிழ்ச்சியோடு] நீதிபதிகள் வந்துவிட்டனர். [செருக்கோடு சுற்றிவந்து] சிறந்த [1]புருடனும், மனிதனும், வாசுதேவனும், அரசன்மைத்துனனுமாகிய யான் வழக்குரைப்பவன்.

ஏவலன்—[பரபரப்போடு] ஓ! முதலிலேயே அரசன் மைத்துனர் வழக்குரைப்பவராயினரா! நிற்க. ஐய! சிறிது நேரம் நில்லுங்கள். அதற்குள் நீதிபதிகளுக்குத் தெரிவிக்கின்றேன். [நீதிபதியின்பக்கல் அணுகி] ஐயன்மீர்! அரசன்

---

[1] புருடனும் மனிதனும் என்றது கூறியதுகூறல்.

மைத்துனராகியஇவர் வழக்குரைப்பவராக வழக்குக்கொண்டு வந்திருக்கிறார்.

நீதிபதி—முதலிலேயே அரசன்மைத்துனர் வழக்குரைப்பவராயினரா? [1] இது கதிரவன் உதயமாகுங்கால் உண்டாம் கிரகணம் அரசன்முதலிய பெரியோர்க்குத் தீங்குவிளைத்தலைக் குறிப்பிடுதல்போலாம். ஏவல! இவ்வழக்கு இப்பொழுது குழப்பமுடையதாக இருக்கும். நல்லோய்! வெளியேசென்று "இப்பொழுது செல்லுங்கள். உங்கள் வழக்கு விசாரிக்கப்படமாட்டாது" என்று சொல்.

ஏவலன்—பெருமான் கட்டளைப்படியே. [என்று வெளிச்சென்று சகாரன்பக்கலணுகி] ஐய! "இப்பொழுது செல்லுங்கள். உங்கள்வழக்கு விசாரிக்கப்படமாட்டாது" என்று நீதிபதிகள் கூறுகின்றார்கள்.

சகாரன்—[சினத்துடன்] ஆ! ஆ! என்வழக்கு விசாரிக்கப்படமாட்டாதா? அங்ஙனமாயின் என் உடன்பிறந்தாள் கணவனாகிய பாலகன் என்னும் அரசற்கும், என் உடன்பிறந்தாளுக்கும் தெரிவித்து இந் நீதிபதியை அதிகாரத்தினின்றும் விலக்கி வேறொரு நீதிபதியை இங்கு நிலைப்படுத்துவிப்பேன். [என்று திரும்பிப்போதற்கு விரும்புகின்றான்.]

ஏவலன்—ஐய! அரசன்மைத்துனரே! சிறிதுநேரம் நில்லுங்கள். இதோ நீதிபதிகளுக்குத் தெரிவிக்கின்றேன்.

---

[1] இது - சகாரன் முதலில் வழக்குரைப்பவனாக வந்தது. கதிரவன் உதயம், நீதிமன்றத்தின் றொடக்கத்தையும் கிரகணம், சகாரன்வரவையும் அரசன்முதலியோர்க்குத் தீங்குவிளைத்தல், நல்லோர்க்குக் கேடுண்டாக்கலையும் ஒப்புமையாற் புலப்படுத்துவனவாம்.

[நீதிபதியின்பக்கலடைந்து] அரசன்மைத்துனராகிய இவர் சினந்துகூறுகின்றூர். [என்று சகாரன்சொல்லியதைக் கூறுகின்றூன்.]

நீதிபதி—இம் மூர்க்கன் எல்லாவற்றையுஞ் செய்வான். நல்லோய்! "வருக. உங்கள்வழக்கு விசாரிக்கப்படும்" என்று சொல்.

ஏவலன்—[சகாரன்பக்கல் சார்ந்து] ஐய! "வருக. உங்கள் வழக்கு விசாரிக்கப்படும்" என்று நீதிபதி கூறுகின்றூர். ஆதலின், பெருமான் வருக.

சகாரன்—முதலில் விசாரிக்கப்படமாட்டாதென்று கூறினூர். இப்பொழுது விசாரிக்கப்படும் என்று கூறுகின்றூர். ஆதலின் நீதிபதி மிகவும் அச்சமெய்தினூர்போலும்! இனி யான்கூறுவனவெல்லாவற்றையும் நம்பும்படிசெய்வேன். நிற்க. உட்புகுவேன். [புகுந்து நீதிபதியின்பக்கல் சென்று] [1]நாம் நலமுடையேம். நுமக்கு [2]நலந்தருவேம். தாமாட்டேம்.

நீதிபதி—[தனக்குள்] ஆ! வழக்குக்கொண்டுவருபவனுடைய உறுதிப்பாடு [3]வியப்பைத்தருகின்றது. [வெளிப்படையில்] இருக்கவேண்டும்.

சகாரன்—ஆம். இந்நிலம் என்னுடையதாகும். ஆதலின் எவ்விடத்தில் எனக்கு விருப்பமோ அவ்விடத்தில்

---

1 அரசன்மைத்துனனூதலின் நாம் நலமுடையேம் என்றூன்.

2 வழக்கு எமக்கு அநுகூலமாகச்செய்யின் நலந்தருவேம், இன்றேல் தாமாட்டேம் என்பது கருத்து.

3 இஃது அரசனது குற்றம் என்பது கருத்து.

இருக்கின்றேன். [[1]செட்டியைநோக்கி] யான் இருக்கின்றேன். [[2]ஏவலனைநோக்கி] இவ்விடத்தில் இருக்கின்றேன். [என்று [3]நீதிபதியின் தலையைக் கையால்தொட்டு] இதோ யான் இருக்கின்றேன். [என்று நிலத்தில் இருக்கின்றான்]

நீதிபதி—நீவிர் வழக்குரைப்பவரா?

சகாரன்—ஆம்.

நீதிபதி—அங்ஙனமாயின் காரியத்தைச் சொல்லுங்கள்.

சகாரன்—காரியத்தைச் செவியிற் கூறுவேன். இங்ஙனம் தொன்னைபோலகன்ற [4]பெரியகுலத்திற் பிறந்தவன் யான்.

நேரிசைவெண்பா.

275. [5]என்றாதை வேந்தற் கியன்மாமன் றந்தைக்கு
மன்றா னினிய மருகனும்—என்றங்கை
வேள்வனு மெற்கரசன் கீர்த்தி மிகுமரசற்
காள்வலிய மைத்துனனே யான். (கூ)

---

[1] செட்டியைநோக்கிக்கூறியது நீதிபதியைப் பொருட்படுத்தாமைப்பொருட்டாம்.

[2] ஏவலனைநோக்கிக்கூறியது செட்டியைப் பொருட்படுத்தாமைப்பொருட்டாம்.

[3] நீதிபதியின் தலையைக் கையால்தொட்டுக் கூறியது "யான் அரசன் அன்புக்கு உரியவன்; நீ அரசியல்வினைசெய்பவன்" என்னும் தன் பெருமையைப் புலப்படுத்தற்காம்.

[4] மற்றை வாதி பிரதிவாதிகளைப்போலப் பெரியகுலத்திற் பிறந்த என்னையும் விசாரித்தலாகாதென்பது கருத்து.

[5] இச் செய்யுளில் முன்னிரண்டடியிலும் பின்னிரண்டடியிலும் உள்ள இரண்டிரண்டு பொருள்களுள் ஒன்றனே மற்றொன்று பெறப்படும்; ஆதலின் மீண்டுங்கூறியது பொருளின்மையாம்.

நீதிபதி—எல்லாம் அறிந்துளேம்.

276. [1]குலம்பேசி யாம்பயனென் கூறு மிதன்கட்
பலஞ்சில காரணமே பாங்காம்—நிலஞ்சார்ந்
தினத்தொடு கூடி யெழுந்து வளர்ந்து
கனத்திருக்கு முன்மரங்கள் காண். (எ)

ஆதலின் காரியத்தைச் சொல்லுங்கள்.

சகாரன்—அப்படியே சொல்லுகின்றேன். யான் குற்றவாளியாயினும், என்னை அரசர் ஒன்றுஞ் [2]செய்யமாட்டார். என் உடன்பிறந்தாள் மணாளராகிய அரசர் யான் இன்பநுகர்தற்கும் காப்பாற்றுதற்கும் உரியதாக உய்யானங்கள் எல்லாவற்றினும் மிகச்சிறந்த புட்பகரண்டக மென்னும் பழைய பூந்தோட்டத்தை எனக்கு மகிழ்ந்து அளித்தார். அதனைக் காண்பதற்கும் [3]ஈரம் உலர்த்துதற்கும் தூய்மைசெய்தற்கும் வளர்த்தற்கும் களைதற்கும் நாடோறும் அங்குச் செல்வேன். விதிவசத்தால் இறந்துகிடக்கும் ஒருபெண்ணினுடம்பைப் பார்த்தேன்; அன்றிப் [4]பார்க்கவில்லையோ!

நீதிபதி—அங்ஙனமாயின் இறந்தபெண் யாவள் என்று அறிந்திருக்கின்றீரா?

---

[1] இச்செய்யுள் சகாரனைநோக்கி விடன்கூறியதாக முன் எட்டாம் அங்கத்திலும் வந்துளது. (செய்யுள்—29)

[2] அரசர் என் தங்கைமணாளராதலின்.

[3] ஈரம் உலர்த்துதலாவது நீர்வேண்டாத கொடிகளுக்கு மழைநீரால் கேடுறுவண்ணம் அந்நீரை வெளிப்படுத்துலர்த்தல்.

[4] "பார்த்தேன்" என்றபின் "பார்க்கவில்லையோ" என்று கூறியது மூடனாகும்.

சகாரன்—ஏ! ஏ! நீதிபதிகளே! பல பொன் ஆபரணங்களையுடையளாய் நகரத்திற்கு அலங்காரமாகவிளங்கும் அத்தகைய அப்பெண்மணியை ஏன் யான் அறியமாட்டேன். யாரோ இழிதகவனொருவன் சனவழக்கமற்ற புட்பகரண்டகமென்னும் பழையபூந்தோட்டத்துள் வசந்தசேனையைப் புகுவித்துப் பழஞ்சோற்றளவு பொருள்காரணமாக அவளைக் கையால் இறுக்கிக் கொன்றுவிட்டான். யான் இல்லை. [என்று பாதி கூறிய அளவில் வாயை மூடிக்கொள்ளுகின்றான்.)

நீதிபதி—ஆ! ஊர்காவலரது விழிப்பின்மை என்னே! ஏ! செட்டி, எழுத்தாளர்களே! [1]"யான் இல்லை" என்னும் வழக்காராய்ச்சிக்குரிய இச்சொற்களை முதலில் எழுதிக் கொள்ளுங்கள்.

எழுத்தாளன்— பெருமான்கட்டளைப்படியே. [என்று அங்ஙனமே செய்து] ஐய! எழுதிக்கொண்டேன்.

சகாரன்—[தனக்குள்] ஆ! ஆ! கொதித்து விரைவாக வெளிக்கிளம்புகின்ற பாயசான்னத்தைப்போல இப்பொழுது என்னையே யான் கெடுத்துக்கொண்டேன்[2]. நிற்க. இங்ஙனம் கூறுவேன். [வெளிப்படையில்] ஏ! நீதிபதிகளே! யான் கண்டேன் என்று சொல்லுகின்றேன். நீங்கள் ஏன் ஆரவாரஞ்

---

[1] "யான் இல்லை" எனத் தொடர்பில்லாததொன்றைக் கூறியதால் இவன் இக்குற்றத்தைச் செய்திருப்பானோ என்று ஐயுற்று அத்தொடர்மொழியை எழுதிக்கொள்ளச்செய்தான்.

[2] பிறர்பாற் குற்றத்தை யேறிடுதற்பொருட்டு யானுகவே னெம்பிக் கொதிக்கின்ற பாலில் இடப்பட்ட அன்னம் விரைந்து பொங்கி வடிந்து கெடுதல்போல, எனக்கே கேடுவிளைக்கும் சொற்களைக் கூறினேன் என்பது கருத்து.

செய்கின்றீர்கள்? [என்று காலால் இலிகிதத்தைச் சிதைக்கின்ருன்.]

நீதிபதி—பொருள்காரணமாகக் கையால்இறுக்கிக் கொல்லப்பட்டாள் என்பதை நீங்கள் எங்ஙனம் அறிந்தீர்கள்?

சகாரன்—ஓ! கழுத்து மிகவும் [1]வீங்கி வெறுமையுற்றிருத்தலாலும் அணிகலன் அணிதற்குரிய மற்றையுறுப்புக்கள் அவற்றை [2]இழந்திருத்தலாலும் நிச்சயமாக எண்ணுகின்றேன்.

சேட்டியும் எழுத்தாளனும்—பொருத்தமாம்போலும்[3].

சகாரன்—[தனக்குள்] தெய்வவயத்தால் இறந்துபிழைத்தேன். ஆ! ஆ!

சேட்டியும் எழுத்தாளனும்—ஓ! இவ்வழக்கு யாரைப் பற்றிநிற்கின்றது?

நீதிபதி—இங்கு இவ்வழக்கு இருவகையாகும்.

சேட்டியும் எழுத்தாளனும்—எப்படி?

---

[1] இது கையாலிறுக்கிக் கொன்றதற்கு அடையாளமாகும். வாள் முதலிய கருவிகளாற் கொல்லப்பட்டிருப்பின் புண் காணப்படும். கயிற்ருல் இறுக்கப்பட்டிருப்பின் அதன் அடையாளம் தோன்றும். கைக்குத்தாயின் நடுவிடம் பருத்திருக்கும். இவற்றுள் யாதும் தோன்ருமையாற் கையா லிறுக்கிக் கொல்லப்பட்டிருப்பள் என்று எண்ணினேன் என்பதாம்.

[2] வசந்தசேனை சாருதத்தன்புதல்வன் உரோகசேனனுக்குப் பொன்வண்டிசெய்துகொள்ளுதற்பொருட்டுத் தன் அணிகலன்களைக் கொடுத்துவிட்டபடியால் கொலைப்படுங்கால் அவள் உடம்பில் அணிகலனில்லை. அவ் வின்மையையே கொலைக்குக் காரணமாகக் குறிப்பிடலானுன் என்பதாம்.

[3] சகாரன் பொய்கூறுபவனுதலின் "போலும்" எனப்பட்டது.

நீதிபதி—[1]வாக்கியங்களைப்பற்றியதும், [2]விடயங்களைப் பற்றியதும் என வழக்கு இருவகைப்படும். வாக்கியங்களைப் பற்றியது வாதி பிரதிவாதிகள் முகமாகவும் விடயங்களைப் பற்றியது நீதிபதியின் புத்திவன்மையானும் ஆராய்ந்து தீர்க்கத்தக்கனவாம்.

செட்டியும் எழுத்தாளனும்—அங்ஙனமாயின் இவ்வழக்கு வசந்தசேனையின் [3]தாயைப்பற்றிநிற்பதாகும்.

நீதிபதி—இஃது அங்ஙனமேயாம். நன்மைமிக்க ஏவல! வசந்தசேனையின்தாயை [4]வருத்தப்படுத்தாமல் அழைத்து வா.

ஏவலன்—கட்டளைப்படியே. [என்று வெளிச்சென்று வசந்தசேனையின்தாயோடுவந்து] பெருமாட்டி! வருக. வருக.

கிழவி—என்மகள் தன் இளமைப்பயனை நுகர்தற் பொருட்டு நண்பனது இல்லத்தை அடைந்தாள். இந்நீதிமன் றத்து ஏவலனே "நீதிபதி அழைக்கின்றார். வருக" என்று

---

[1] வாக்கியங்களைப்பற்றியது,வழக்குரைப்பார் எதிர்வழக்குரைப்பார் சான்றுகூறுவார் என்னும் இவர்களின்சொற்களை ஆதாரமாகக் கொண்டது.

[2] விடயத்தைப்பற்றியது,வழக்கியல்பின் ஆராய்ச்சியை ஆதாரமாகக்கொண்டது.

[3] அவளே தன்மகளைப்பற்றிய வழக்கிற்கு வாதியாகற்பாலள் என்பதுகருத்து.

[4] அவள் மகள் இறந்தசெய்தியைக்கூறித் துன்புறுத்தாமலும், எதிர்பாராதநிலையில் நீதிபதியின் அழைப்பு ஐயுறச்செய்யுமாதலின் அமைதியாகவும் அழைத்துவா என்பதாம்.

கூறுகின்றான்; ஆதலின் [1]என்னை மயக்கத்தின் வயப்பட்டவள்போல் அறிகின்றேன். என் நெஞ்சம் துடிக்கின்றது. ஐய! நீதிமன்றத்தின்வழியை எனக்குக் காட்டு.

ஏவலன்—பெருமாட்டி! வருக. வருக.

[இருவரும் சுற்றிவருகின்றனர்.]

ஏவலன்—இதுதான் நீதிமன்றம். பெருமாட்டி இதன்கட் புகுக.

[இருவரும் புகுகின்றனர்.]

கிழவி—[அணிமையிற்சென்று] பெரியீராகிய நுங்கட்கு நலமுண்டாக.

நீதிபதி-நங்காய்! நின்வரவு நல்வரவாக;இருக்கவேண்டும்.

கிழவி—அப்படியே. [என்று இருக்கின்றாள்.]

சகாரன்—[உரப்புதலோடு] வந்தனையா. விருத்த[2]குட்டினி! வந்தனையா.

நீதிபதி—ஏ! நீ வசந்தசேனையின் தாயா?

கிழவி—ஆம்.

நீதிபதி—அப்படியானால் இப்பொழுது வசந்தசேனை எங்கேபோயினாள்?

கிழவி—நண்பனது இல்லத்திற்கு.

நீதிபதி—அவளுடைய நண்பன்பெயர் என்ன?

---

[1] காலையில் மகள் திரும்பிவாராமையால் ஏதோதீங்குநேர்ந்தது கொல் என்று வருந்தும் என் நெஞ்சம் நீதிபதியின் அழைப்பால் பெரிதும் கலக்கமுறுகின்றதென்பதாம்.

[2] குட்டினியென்பது ஈண்டு வேசையையுணர்த்தும்; பழிப்புரையுமாம்.

கிழவி—[தனக்குள்] ஆ! ஆ! மிகவும் நாணமுறத்தக்க தன்றே இது.[1] [வெளிப்படையில்] இச் செய்தி பிறர்பழி தூற்றும் மனிதரால் வினவத்தக்கது. [2]நீதிபதிகள் வினவத் தக்கதன்று.

நீதிபதி—நாணமுறவேண்டா; வழக்குநிமித்தமாகவே நீ வினவப்படுகின்றாய்.

செட்டியும் எழுத்தாளனும்—வழக்குநிமித்தம் வினவப் படுகின்றாய். [3]குற்றமில்லை. சொல்.

கிழவி—வழக்கா? அங்ஙனமாயின் பெரியோர்களே! கேளுங்கள். வசந்தசேனையின் நண்பரோ வாணிகத்தொழி லாளராகிய வினயதத்தருடைய பெயரர்; சாகரதத்தருடைய புதல்வர்; மிகப் பிரசித்திவாய்ந்த மாட்சிமிக்க சாருதத்தர் என் னும் பெயரினையுடையர்; செட்டித்தெருவில் வாழ்கின்றார். அவரிடத்தில் என்மகள் தன் இளமையின்பத்தை அனுபவிக் கின்றாள்.

---

[1] இது - சாருதத்தன் நண்பனுவான் என்னும் இச்செய்தி. அவன் வறியவனாக இருத்தலின் அவனை நண்பனென்றுகூறுதல் நாணந்தரத்தக்கதென்பது கருத்து.

[2] கணிகையரின் மறைவொழுக்கத்தை நீதிபதி வினவுதலாற் பயனின்று என்பது அவள்கருத்தாம்.

[3] வழக்கிற் சொல்லத்தகாததொன்றும் இல்லை. எல்லாவிடயங் களையும் வழக்காராய்ச்சி தூய்மைப்படுத்தும் என்பது கருத்து.

சகாரன்—பெரியோர்களே! கேட்டீர்களா? இச் சொற்களை எழுதிக்கொள்ளல்வேண்டும். [1]சாருதத்தனோடு எனக்கு வழக்கு ஏற்பட்டுள்ளது.

செட்டியும் எழுத்தாளனும்—சாருதத்தன் நண்பன் என்னும் இது குற்றமின்று.

நீதிபதி — இவ்வழக்குச் சாருதத்தரைப்பற்றிநிற்கின்றது.

செட்டியும் எழுத்தாளனும்—அப்படியே.

நீதிபதி—தனதத்த! "வசந்தசேனை மாட்சிமிக்க சாருதத்தரது இல்லத்தை அடைந்தாள்" என்று வழக்கின் முதற்கூற்றை எழுதிக்கொள். மாட்சிமிக்க சாருதத்தரும் நம்மால் [2]அழைப்பிக்கத்தக்கவராயினரோ! அதனாலென்? வழக்குநிமித்தம் அழைக்கப்படுகின்றார். நன்மைமிக்க ஏவல! போ. "ஒருகாரியநிமித்தம் நீதிபதி தங்களைக் காண்பதற்கு விரும்புகின்றார்" என்று மாட்சிமிக்க சாருதத்தரைப் பரபரப்பின்றி அச்சுறுத்தாமல் [3]அன்போடு மெல்ல அழைத்துவா.

---

[1] இவ்வழக்கில் சாருதத்தன் பிரதிவாதியாவான்; யான் வாதியாவேன்; வழக்கை மெய்ப்பிக்கும்பொறுப்பு என்னைச்சார்ந்திருத்தலால்.

[2] இன்னோரன்ன நிகழ்ச்சிகளில் அழைக்கப்படும் நிலையினரல்லர் என்பது கருத்து.

[3] நல்லொழுக்கமுடைய ஒருவரை ஐயுறுங்காரியநிமித்தம் அழைக்கநேரின் அவர்பெருமையைப் பாதுகாத்தல்வேண்டும் என்பது கருத்து.

ஏவலன் — பெருமான்கட்டளைப்படியே. [என்று வெளியே சென்று சாருதத்தனோடு வந்து] ஐயன் வருக. வருக.

சாருதத்தன்—[நினைவுகூர்ந்து]

கலிவிருத்தம்.

277. மன்னவர் மதித்துணர் மாண்புஞ் சீலமும்
மன்னிய உயர்குடிப் பிறப்பும் வாய்ந்தவென்
றன்னை[1]யாண் டழைத்தலென் னிலையின் றாழ்வினை
யுன்னுறச் செய்யுமீ துண்மை யாகுமால். (அ)

[உய்த்துணர்வோடு தனக்குள்]

ஆசிரியவிருத்தம்.

278. [2]வன்றளை யொருவிப் போந்து வழியிடைச்
சார்ந்தென் வண்டி
தன்றுணை பற்றிச் சென்றான் றனையர
சறிந்த தேகொல்!
ஒன்றிய வொற்றுங் கண்க ளுடையமன்
செவிக்கொண் டான்கொல்!
இன்றியா னபியுத் தன்போ லிங்ஙன
மேகு கின்றேன். (கூ)

---

[1] "ஆண்டு அழைத்தல் என் நிலையின்தாழ்வினை உன்னுறச் செய்யும்" என்றது, குற்றம் அற்ற என்னை நீதிமன்றத்துக்கு அழைத்தல் என் நிலைப்பிறழ்ச்சியின் இழிவை நினைவுறுத்தும் என்பதாம்.

[2] சென்றான் - ஆரியகன். அரசன் மேனிலத்திருந்து அறிந் தான்கொல்லோ! செவிக்கோடல் ஒற்றரால் நிகழ்வது. அபியுத் தன் - அபியோகஞ் செய்யப்பட்டவன்; பிரதிவாதி. அபியோகம் - வாதி முதலில் நீதிமன்றத்தில் தெரிவித்துக்கொள்ளும் வழக்குநிலை.

இனி இவ்வாராய்ச்சியாற் பயனென்! நீதிமன்றத்திற்கே செல்வேன். நன்மைமிக்க ஏவல! நீதிமன்றத்தின்வழியைக் காட்டு.

ஏவலன்—ஐய! வருக. வருக.

[சுற்றிவருகின்றனர்.]

சாருதத்தன்—[அச்சத்தோடு] ஈதென்ன! மற்றொன்று.

ஆசிரியவிருத்தம்.

279. [1]கடுங்குரல் கரையு மிந்தக்
காக்கைதா னடுத்த டுத்துப்
படுஞ்செயற் றுணைவ ரேவற்
பணியின ரழைப்ப ரன்றி
யிடந்திகழ் கண்ணு மற்றொ
ரியைபின்றித் துடிக்கு மிங்ஙன்
றொடர்ந்துதீ நிமித்த மென்னைத்
துன்புறச் செய்யு மாலோ. (௧௦)

ஏவலன்—ஐய! கலக்கமின்றி மெல்ல வருக. வருக.

சாருதத்தன்—[சுற்றிவந்து எதிரேபார்த்து]

---

[1] துணைவர் ஏவற்பணியினர் அடுத்தடுத்து அழைப்பரென்க. அழைத்தல் ஈண்டு அவர் தம்முள் ஒருவர் ஒருவரையாதல் அவ்விரு திறத்தினரும் சாருதத்தனையாதல் விளித்தலையுணர்த்தும். ஒருவன் ஒருகாரியத்தைமுன்னிட்டுச்செல்லுங்கால் அவனைப் பிறர் அழைத்தலும், பிறர் தம்முள் ஒருவர் ஒருவரை அழைக்க அவன் கேட்டலும் அவற்குத் தீநிமித்தம் என்ப.

நேரிசைவெண்பா.

280. [1]பட்டமாத் திற்காகத் தங்கிப் பகலவனை
யொட்டி யெதிர்நோக்கி யுற்றதால்—தட்டின்றிச்
சாலக் கொடியவிடக் கண்ணைத் தமியேன்பால்
ஏலச் செலுத்துமா லீங்கு. (கக)

[மீண்டும் மற்றொருபுறத்தேநோக்கி] ஆ! ஈதென்ன பாம்பு!

ஆசிரியவிருத்தம்.

281. பிளவுண்ட வஞ்சனக்க லெனக்கரிய
வொளிபடைத்துப் பிறங்கி நீண்ட
அளவுண்ட் நாவொடுநான் காகியவென்
பல்வினையு மடைந்து சால
விளைவுண்ட துயினீத்து வழியிடையே
தடைப்படுத்து மிகவுஞ் சீறி
வளைவுண்ட பெருவயிற்றிக் கரும்பாம்பிங்
கெனைநோக்கி வருமா லம்ம! (கஉ)

இன்னும்,

கொச்சகக்கலிப்பா.

282. [2]நிலமுறுகால் வழுக்குமிந்த நிலமுமிக நனைந்திலதே
யலைவுறுமா லிடக்கண்ணு மடுத்தடுத்திவ் விடத்தோளும்
பலமுறைமற் றீங்குறுமிப் பறவைமுரண் படவொலிக்கும்
புலமுறுத்துங் கொடுமரணப் புரையிதன்க ணுய்விலதால்.

---

[1] இச்செய்யுளிற் கூறப்பட்டனவும் தீநிமித்தங்களேயாம்.

[2] நிலம் மிகுதியான ஈரமில்லாமலிருக்கவும் அதன்கண் ஊன்றிய கால் வழுக்கும்; இடக்கண்ணும் இடத்தோளும் அலைவுறும். அலைவுறல் - துடித்தல். இவ்வெல்லாம் கொடிய மரணக்குற்றம் நேரும் என்பதைப் புலப்படுத்துவனவாம். இதன்கண் - இந்நிகழ்ச்சியில். ஆய்வு இலது - ஆராய்ச்சி இன்று.

எவ்வாற்றானும் தெய்வங்கள் நலஞ்செய்தல்வேண்டும்.

ஏவலன்—ஐய! வருக. வருக. இதுதான் நீதிமன்றம். இதன்கட்புகுக.

சாருதத்தன்—[புகுந்து நாற்புறமும் பார்த்து] ஆ! இந் நீதிமன்றத்தின் சிறந்த அழகு என்னே!

நேரிசையாசிரியப்பா.

283. [1]காரியச் சூழ்ச்சியிற் சீரிய வறிவைத்
தோய்தரச் செலுத்தி யாயுமவ் வமைச்சர்
என்னுநீர்ப் பெருக்கு முன்னிய வினைபுரி
தூதுவ ராய துயல்வரு திரைவளை
வரம்பிடை மரீஇ யுரம்பெறு மொற்றராம்
முதலையு மீனு மதமிகு களிற்றொடு
குதிரையு மாய கொடுந்தொழி லவுணர்
அரக்கரும் பலப்பல வரக்கப் பேசும்
வழக்கியன் மாக்களா முழப்புடைக் கழுகும்
எழுதுவினைக் கணக்காம் பழுதுடைப் பாம்பும்

---

[1] ஆழமுடைமையால் அமைச்சர் நீர்ப்பெருக்காகவும், போக்கு வரவு புரிதலில் தூதுவர் அலைகளாகவும் சங்கினங்களாகவும், தம்நிலையை 'மறைத்துக்கொண்டுறைதலில் ஒற்றர் முதலைகளாகவும் மீன்களாகவும், வன்செயலுடைமையால் யானை குதிரைகள் அவுணர் அரக்கராகவும், இடையறாதுமுயன்று வேண்டுவனபெற விழைதலின் வாதி பிரதிவாதிகள் கழுகுகளாகவும், நஞ்சுபோன்றமையைவெளிப்படுத்திப் பிறர்க்குத்தீங்குவிளைத்தலின் எழுதுவினைக்கணக்கர் பாம்பாகவும் உருவகஞ் செய்யப்பட்டனர்,

மலிதரப் பெற்றுப் பலவகை நீதியாம்
ஆற்றினாற் றாக்குறீஇ யழிதரு கரையினை
யுடையவிந் நீதி யடைவுறு மன்றம்
தண்டமாங் கொடுவினை சார்தலிற்
றெண்டிரைக் கடலெனச் செப்பலாந் தகைத்தே.

நிற்க. [உட்புகுந்து தலையிடித்தலை அவிநயித்து உய்த்துணர்வோடு] ஆ! ஆ! இது மற்றொன்று.

நேரிசைவெண்பா.

284. [1]என்ற னிடக்கண் துடிக்கு மெதிர்காக்கை
கன்று நிலையிற் கரையுமே—யொன்றி
வழிமறித்துப் பாம்பு வருமால் நலநம்
முழையுறுத்துந் தெய்வமே யூங்கு. (கரு)

இதோ புகுகின்றேன். [என்று புகுகின்றான்.]

நீதிபதி—இவரோ சாருதத்தர்.

---

பலவகை நீதியாம் ஆறுகளால் தாக்கப்பட்டு நீதிமன்றமாம் கடல் வரம்பழிதலின், அவ்வரம்பழிந்த நீதிமன்றம் கொடுந்தொழிலாகிய தண்டத்தையுடைமையாற் கடல்போல்வதாமென்க. நீர்ப்பெருக்கும், திரை வளைகளும், முதலை மீன்களும், அவுணரும், அரக்கரும், கழுகும், பாம்பும் மலிதரப்பெற்றுத் தாக்குறீஇ அழியுங் கரையினையுடைய இந்நீதிமன்றம் கொடுவினையுடைமையால், கடலெனச் செப்பலாந்தகைத்து என்க.

[1] ஊங்கு நம்முழைத் தெய்வமே நலம் உறுத்துமென்க. இனி, தெய்வமே நமக்குப் புகலிடமென்பது கருத்து.

கலித்துறை.

285. [1] உயர்ந்த மூக்கொடு கடையகல் விழியினை யுடைய
நயந்த விம்முக மேதுவி னவைக்கிட ளுகா
தியைந்த மானுடர் கரிபரி பசுக்களி னியல்பு
வயந்த வாதவவ் வடிவொடு பொருந்துதல் வழக்கே. (கரு)

சாருதத்தன்—நீதிமன்றத்துள்ளவர்களே! நுங்களுக்குநல முண்டாக. நீதிபதிமுதலியவர்களே! நீங்கள் நலமுடையீரா?

நீதிபதி—[[2]பரபரப்போடு] ஐயன்வரவு நல்லதாக. நன்மை மிக்க ஏவல! ஐயர்க்கு இருக்கைகொண்டுவா.

ஏவலன்—[இருக்கைகொணர்ந்து] இஃது இருக்கை. இதன்கண் தாங்கள் இருத்தல்வேண்டும்.

[சாருதத்தன் இருக்கின்றான்.]

சகாரன்— [3][சினமுற்று] வந்தனையா! அடே! பெண் கொலையாள! வந்தனையா! ஆ! ஆ! பெண்கொலையாளனாகிய இவற்கு இருக்கையீதலால் இவ் வழக்கு எப்படி நீதியுடைய

---

[1] மூக்கொடு விழியினையுடைய இம்முகம் உத்தம இலக்கண முடையது என்பது கருத்து. இம்முகம் - இச் சாருதத்தனது முகம். ஏது இல் நவைக்கு இடன் ஆகாது - காரணமில்லாமல் வலிந்து ஏறிடும் குற்றத்துக்கு இடனாகாது. இயல்பு வடிவொடு பொருந்துதல் வழக்கென்க. குணங்கள் உருவத்தைப் பற்றிநிற்பன வாம். “இலங்கெழிலளவு குணமென உரைப்பர்” (நைடதம் அன்னத்தைத் தூதுவிட்டபடலம். செய்—31) என்பது ஈண்டுக் கருதற்பாலது.

[2] பரபரப்புற்றது சாருதத்தன்பாலுள்ள பெருமைநோக்கி.

[3] இருக்கையீந்தது சினத்திற்குக்காரணமாகும்.

தாகும்? அறத்தினின்றும் பிறழாததாகுமா? [செருக்கோடு] நிற்க. [1] இருக்கை கொடுக்கப்படுக.

நீதிபதி—ஐய! சாருதத்தரே! இப்பெருமாட்டியின் மகளோடு தங்களுக்குச் சேர்க்கையாதல், காதற்கிழமையாதல், நட்புரிமையாதல் உண்டா?

சாருதத்தன்—யாருடைய மகள்?

நீதிபதி—இவளுடைய மகள். [என்று வசந்தசேனையின் தாயைக் காட்டுகின்றான்.]

சாருதத்தன்— [எழுந்து] பெருமாட்டி! வணங்குகின்றேன்.

கிழவி—என்குழந்தாய்! நீடுவாழ்க. [தனக்குள்] இவன்றான் அச் சாருதத்தன். என்மகள் தன்யௌவனத்தை [2] நல்லிடத்தில்வைத்துப் பயன்படுத்தினாள்.

நீதிபதி—ஐய! விலைமகள் தங்களுக்கு நட்புரிமையுடையளா?

[சாருதத்தன் நாணமுறுதலை அபிநயிக்கின்றான்.]

---

[1] பின்னர் மாறிவிடும் என்பது கருத்து.

[2] எவ்வாற்றானுஞ் சிறந்த இளைஞனுடைய சேர்க்கையால் பயன்படுத்தினாள் என்பது கருத்து.

சகாரன்—

கலிவிருத்தம்.

286. [1]அச்சமே நாணமே யாதன் மேற்கொடு
பொச்சமா ரொழுக்கினை மறைப்பர் புல்லியோர்
நச்சுபு பொருட்கொலை புரிந்த நம்பியின்
றச்செயன் மறைத்திடத் துணிகின் றானரோ. (கஎ)

சேட்டியும் எழுத்தாளனும்—ஐய! சாருதத்தரே! சொல்லுங்கள். நாணமுறல்வேண்டா. இது வழக்கைப் பற்றியதன்றோ?

சாருதத்தன்—[நாணத்தோடு] நீதிபதிகளே! விலைமகள் எனக்கு நட்புரிமையுடையாள் என்று யான் எங்ஙனம் இவ்வாறு கூறுவேன். இந்நிகழ்ச்சியில் யௌவனப்பருவமே குற்றமுடையதாகின்றது. [2]ஒழுக்கம் அங்ஙனமன்று.

---

[1] அச்சம் வரக்கடவ அரசதண்டத்தாலுண்டாவது; நாணம் தகாதசெயலைச் செய்வதால் விளைவது; இவற்றுள், ஒன்றை மேற்கொண்டு அதனாலே புல்லியோர் தம் பொய்யொழுக்கத்தை மறைக்கமுயல்வர். பொச்சம் - பொய். பொருள் நச்சுபு கொலை புரிந்த நம்பி என்க. வறியனாயிருந்தும் செல்வமுடையவனைப் போல் நடிக்கின்றான் என்னும் இகழ்ச்சிக்குறிப்புத்தோன்ற "நம்பி" என்றான். அச் செயல் - அக் கொலைச்செயல்.

[2] தூய ஒழுக்கமுடையவனையும் இளம்பருவம் காமவயப்படுத்தும் என்பது கருத்து.

நீதிபதி— நேரிசைவெண்பா.

287. [1]இடையூ றுடையதநா மிவ்வழக்கு நெஞ்சத்
தடைநா ணெறீஇக்கலக்க மற்றுத்—திடமேற்கொண்
டுண்மை யுரைத்திர் உயர்நீதி மன்றத்தில்
என்மையுறு பொய்யேற்ப தின்று. (கஅ)

நாணமுறல்வேண்டா. வழக்குநிமித்தம் கேட்கப்படுகின்றீர்கள்.

சாருதத்தன்—நீதிபதிகளே! [2]யாரோடு எனக்கு வழக்குளது?

சகாரன்—[செருக்கோடு] அடே என்னோடுவழக்குண்டு.

சாருதத்தன்—[3]உன்னோடு எனக்கு வழக்குநிகழ்தல் பொருத்தமின்றே!

சகாரன்— அடே! பெண்கொலையாள! பலவகை [4]இரத்தினுபரணங்களையுடைய சிறப்புமிக்க அவ் வசந்த

---

[1] இடையூறுடையதென்றதால்; இயைபுடைய வேறு பல காரியங்களையும் ஆராய்ந்து இவ்வழக்குத் தீர்க்கத்தக்கதென்பது கருத்து. பொய் எற்பதின்று - நாண முதலியவைகளை வெளிக்காட்டி உண்மைமறைத்தலை இந் நீதிமன்றம் ஏற்றுக்கொள்ள மாட்டாது; சகாரன்பேச்சிற் காணப்பட்டதைக்கொண்டு நீதிபதி இவ்வாறு கூறினன்.

[2] விலைமகளோடு நட்புக்கொண்டவிடயத்தில் வழக்கு எவ்வாறுண்டாகும் என்பதாம்.

[3] சிறிதும் தொடர்பில்லாத மிகவும் தீயொழுக்கமுடைய உன்னோடு என்க.

[4] "இரத்தினுபரணங்களையுடைய" என்றது கொலைசெய்தற்கு நிமித்தத்தைப் புலப்படுத்தும்.

சேனையைக் கொன்றுவிட்டு இப்பொழுது மிக்க வஞ்சக முடையவனாய் அதனை மறைக்கின்றாய்.

சாருதத்தன்—பொருத்தமற்றசொற்களைப் பேசுகின்றாய்.

நீதிபதி—ஐய! சாருதத்தரே! இவனோடு பேசல் வேண்டா. உண்மையைச் சொல்லுங்கள். விலைமகள் தங்களுக்கு நட்புரிமையுடையளா?

சாருதத்தன்—ஆம்.

நீதிபதி—ஐய! வசந்தசேனை எங்கே?

சாருதத்தன்—இல்லத்திற்குப்போயினாள்.

செட்டியும் எழுத்தாளனும்—[1]எவ்வாறுபோயினாள்? [2]எப்பொழுது போயினாள்? எவனாற் பின்தொடரப்பட்டுச் சென்றாள்?

சாருதத்தன்—[தனக்குள்] என்னாற் காணப்படாமலே சென்றாள் என்று சொல்லுவேனா?

செட்டியும் எழுத்தாளனும்—ஐய! சொல்லுங்கள்.

சாருதத்தன்—இல்லத்திற்குச் சென்றாள். [3]வேறென்ன சொல்லுவேன்?

சகாரன்—எனது புட்பகரண்டக மென்னும் பழைய பூந்தோட்டத்தை யடைவித்துப் பொருள் காரணமாகக்

---

1 ஊர்தியிலேறிச்சென்றாளா? அன்றி நடந்துசென்றாளா? என்பதாம்.

2 இரவிலா? பகலிலா? என்பதாம்.

3 தன்வீட்டிற்குச்சென்றவளைப்பற்றிச் சொல்லவேண்டியது யாதுளதென்பதாம்.

கையால் நெரித்துக்கொன்றுவிட்டாய். அடே! இப்பொழுது இல்லத்திற்குச் சென்றுள் என்று கூறுகின்றாய்

சாருதத்தன்—ஆ! ஆ! பொருத்தமின்றிப் புலம்புகின்றவனே.

ஆசிரியவிருத்தம்.

288. [1]முகில்பொழி நீரா னனைந்திலை காடை
முன்னிய சிறைநுனி யென்னத்
தகவில தாகி நடுவிடைக் கருமை
சான்றநின் முகமது பனிநாள்
அகமலர் முளரி யலரென வொளியை
யகன்றுசோர் வுற்றிட லானே
புகருற வென்பாற் றொடர்ந்தநின் வழக்குப்
பொய்யெனப் புகறரப் படுமால். (கக)

நீதிபதி—[முகத்தை ஒருபுறத்தே மறைத்துக்கொண்டு]

---

[1] "மழைநீரால் நனைந்திலை" என்றதனால் அகாலத்தில் புதிதாக நீராடி இருக்கின்றாய் என்பதும், அஃது ஐயுறத்தக்கதென்பதும் போதரும். புதிதாகக் கழுவப்பட்டிருத்தலால் முகத்தின்கருமை நன்குவிளங்குகின்றதென்பான், "காடைப் புள்ளின் நுனி இறகு போலக் கருமைசான்ற" தென்றான். அகம் மலர் முளரி அலர் - உள்ளிடம்மலர்ந்த தாமரைமலர். பனிக்காலத்து அலர்ந்த தாமரை மலர் வாட்டமுற்றிருக்கும். அதுபோல முகம், "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டும் முகம்" (திருக்குறள் 706) என்னும் பொருளுரைப்படி ஒளியகன்று சோர்வுற்றிருத்தலான் நீகொண்டுவந்தவழக்கைப் பொய்யெனக்கூறும்படி புலப்படுத்தாநிற்கும் என்பதாம்.

289. [1]வள்ளலாஞ் சாருதத்தர் மாட்டுக் குறையேறிட்
டெள்ளன் மலையரசை யிர்த்தசைத்தல்-கொள்ளவரு
காலைக்கை யாற்பிடித்தல் காலாற் கடல்கடத்தல்
போலுமா லென்னே பொருள். (உ௦)

[வெளிப்படையில்] இவர் மாட்சிமிக்க சாருதத்தரன்றே! இத் தகாதகாரியத்தை எங்ஙனஞ் செய்வார்? ["உயர்ந்த மூக்கொடு" (இவ்வங்கத்தின் 16-ஆம் செய்யுள்.) என்பதனைக் கூறுகின்றான்]

சகாரன்—ஈதென்ன! [2]ஒருதலைச் சார்பாக வழக்கை ஆராய்கின்றீர்கள்?

நீதிபதி—அறிவிலாய்! செல்.

290. [3]இழிவுடையாய் மறைப்பொருளை யிகழ்கின்றாய்
நின்னாவோ விற்று வீழா
தொழிவில்லாக் கதிரவனை நண்பகலிற்
காண்கின்றா யொளிபோ யொல்லை
விழியிழவா யெரிநெரிப்பிற் கையிடுதி
யதுகரிந்து வேவா தென்றும்
பழிபடையாச் சாருதத்தற் பழிக்கின்றாய்
நினதுடன்மண் பற்றா தென்னே. (உக)

---

[1] வருகாலைக் கொள்ள - வருகின்ற காற்றைக் கொள்ள. சாருதத்தன்பாற் குறையேறிடல் இயலாதென்பதாம்.

[2] மனிதனைக்கருதிப் பேசுகின்றீர்களேயன்றி வழக்கினியல்பை ஆராய்கின்றீர்களில்லை.

[3] மறைகளைப்பழித்தன் முதலியனசெய்துழி நாவிற்றுவீழ்தன் முதலியவை நேர்தல்போலச் சாருதத்தரைப்பழித்தவுடனே நீ தீங்கு எய்தவேண்டும். அங்ஙனம் எய்தாதிருத்தலே வியப்பிற்கிடனும் என்பதாம்.

மாட்சிமிக்க சாருதத்தர் இத்தகாதசெயலை எங்ஙனஞ் செய்வார்?

ஆசிரியவிருத்தம்.

291. [1]நீர்நிறை யளவி லெஞ்சிய தாக
நெடுங்கட றனைப்புரிந் திரப்போர்
யாருநன் குவப்பத் தனக்கென வின்றி
யாவையும் வழங்குவோ னெதிரில்
சீருடைப் பெரியோன் நல்லற மெவைக்குஞ்
சிறந்ததோர் நிலையமே யன்னான்
பாரினிற் பொருளாற் கயவரிற் கொடிய
பாவத்தை யெங்ஙனம் புரிவான். (உஉ)

கிழவி—[2]நீயோய்! முன்னர் அடைக்கலமாக வைக்கப்பட்ட பொற்பணியை இரவிற் கள்வர்கவர்ந்துசெல்ல, அது குறித்துக்கடல்சூழ்ந்தநிலவுலகத்திற்சிறந்தஇரத்தினவளியை அளித்தபெருந்தகையாளராகிய சாருதத்தனர், இப்பொழுது மிகவும் இழிந்த பொருள்காரணமாக இத் தகாதசெயலை எங்ஙனஞ் செய்வார்? [3]ஆ! குழந்தாய்! என்மகளே! வருக [என்று அழுகின்றாள்.]

---

[1] கடலை நீரளவில் எஞ்சியதாகப்புரிந்துஎன்றதனல் வாணிகத்தால் மிக்க இரத்தினமுதலியவைகளைச் சாருதத்தன் ஈட்டினன் என்பதும், அதனற் கடலில் நீரன்றி வேறு மணி முதலிய பொருள்கள் இல்லை என்பதும் போதரும். கயவரின் - கீழ்மக்களைப்போல. கொடியபாவம் - பெண்கொலை.

[2] "நீயோய்" என்று கூறியது சகாரனைக்குறித்து.

[3] வேறுவிதமாக மகள் கொலைப்பட்டிருக்கலாமென்று உணர்ந்து "ஆ! குழந்தாய்" என்று அழுதாள்.

நீதிபதி—ஐய! சாருதத்தரே! வசந்தசேனை கால்களால் நடந்துசென்றாளா? அன்றி வண்டியிலேறிச் சென்றாளா?

சாருதத்தன்—ஐய! யான் பார்க்கச் சென்றிலள். ஆதலின் கால்களால் நடந்து சென்றாள் என்றாவது வண்டியில் ஏறிச் சென்றாள் என்றாவது யான் அறிந்திலேன்.

[சினத்தோடுபுகுந்து]

வீரகன்—

நேரிசைவெண்பா.

292. [1]காலுதையாற் றாக்கக் கனமழிந்தேன் மற்றதனால்
ஏலும் பெரும்பகைக்கி யானுடைந்து—சாலத்
தருதுயர மாகுஞ் சலதி படிந்தேற்
கரிதி னிரவகன்ற தால். (உ௬)

ஆதலின் [2]நீதிமன்றத்தை அடைகின்றேன். [அடைந்து] பெரியோர்களுக்கு நலமுண்டாக.

நீதிபதி—ஓ! நகர்க்காவலாளர் தலைவனாகிய வீரகனா? வீரக! நீ எக்காரியத்தைமுன்னிட்டு வந்தனை?

வீரகன்—ஆ! விலங்கு முறித்ததனால் உண்டாகிய குழப்பத்தில் ஆரியகனைத் தேடுங்கால் மறைக்கப்பட்ட வண்டி போதலை அறிந்து ஐயமுற்று அதனை ஆராயும் பொழுது "அடே! உன்னாலும் பார்க்கப்பட்டது. என்னாலும் பார்க்கப்பட வேண்டும்" என்று யான் சொல்லிய அள

---

[1] இரவு துன்பநுகர்ச்சியிலே நீங்கிற்று என்பதாம். பகையொழியும்வரை உறக்கம்வாராதென்பது கருத்து.

[2] பகைவனாகிய சந்தனகன்குற்றத்தை வெளிப்படுத்தற்கு.

வில், சந்தனகன் என்னும் படைத்தலைவன் தன் காலால் என்னை உதைத்து விட்டான். இதனைக் கேட்டுத் தாங்கள் நீதிசெலுத்தல்வேண்டும்.

நீதிபதி—நல்லோய்! அவ்வண்டி யாருடைய தென்று அறிந்திருக்கின்றாயா?

வீரகன்—இச் சாருதத்தருடையது. "புட்பகரண்டக மென்னும் பழைய பூந்தோட்டத்தில் விளையாடி இன்புறு தற்கு வசந்தசேனை ஏற்றிக்கொண்டுபோகப்படுகின்றாள்"[1] என்று வண்டியோட்டுபவன் கூறினான்.

சகாரன்—மீண்டும் பெரியோர்களே! கேட்டீர்களா?

நீதிபதி— கலிவிருத்தம்.

293. [2]மாசறு நிலவினால் வயங்கு மிம்மதி
கூசலில் கோளின்வாய்க் கொள்ளப் பட்டதால்
தேசுறு தெளிவினாற் சிறக்கு மிப்புனல்
காசுறு கரைவிழக் கலங்கிற் றம்மவோ. (உச)

வீரக! பின்னர் இந்நீதிமன்றத்தில் நின்வழக்கை ஆராய் வோம். நீதிமன்றத்தின் வாயில்வெளியில் இதோ குதிரை

---

[1] இதனால், சாருதத்தருடைய வண்டியிலேயே வசந்தசேனை புட்பகரண்டகத்தை அடைந்தனள் என்பது வெளிப்பட்டது.

[2] நிலவினால்வயங்கும் இம்மதி என்பதும், தெளிவினாற் சிறக் கும் இப்புனல் என்பதும் கொடை முதலிய உயர்குணங்களால் விளங்கும் சாருதத்தனையும், கோளின்வாய்க்கொள்ளப்படுதலும் கரைவிழக் கலங்குதலும் தீயூழ்காரணமாகச் சகாரனால்நேர்ந்த தீவினைப்பயனாற்பற்றப்படுதலையும் குறிப்பனவாம். இது பிறிது மொழிதல் என்னும் அலங்காரம்.

நிற்கின்றது. அதன்கண் [1]ஏறிப் புட்பகரண்டகமென்னும் பழைய பூந்தோட்டத்தையடைந்து அவ்விடத்தில் இறந்த ஒரு பெண்ணின்உடல் இருக்கின்றதா இல்லையா என்று பார்த்துவரல்வேண்டும்.

வீரகன்—பெருமான் கட்டளைப்படியே. [என்றுபோய்த் திரும்பிவந்து] அங்கேபோயினேன். [2]நரிமுதலிய கொடிய விலங்குகளாற் சிதைக்கப்படும் ஒருபெண்ணின்உடலை யான் கண்டேன்.

செட்டியும் எழுத்தாளனும்—பெண்ணின் உடலென்று நீ எவ்வாறு அறிந்தனை?

வீரகன்—[விலங்குகள் உண்டு] எஞ்சிய கூந்தலாலும் [3]கை கால்களாலும் யான் பெண்ணுடலென்று கண்டேன்.

நீதிபதி—ஆ! உலகநிகழ்ச்சியின் மாறுபாட்டுத்தன்மை என்னே!

---

[1] வெளிப்பட்டுவிடும் என்னும் அச்சத்தால் இறந்த பெண்ணுடலை யாரேனும் மறைத்துவிடக்கூடும் என்று நினைந்து விரைவிற்சென்று கண்டுவருமாறு குதிரையிலேறிச்செல்லும்படி கட்டளையிட்டான்.

[2] இதனால் வசந்தசேனை கொலைப்பட்டிறந்தாள் என்பது ஐயமின்றிக் கூறப்பட்டதாயிற்று. இங்கு வீரகன்கண்டதாகக் கூறப்பட்டபெண்ணுடல், எட்டாம் அங்கத்தில் புட்பகரண்டகத்திற் சகாரனைக்காண விடன்செல்லுங்கால் வழியிடை ஒரு மரத்தின் வீழ்ச்சியால் இறந்துகிடந்த பெண்ணின் உடலாகும். அவ்வுடலை விடன்கண்டு வருந்தியதும் தீநிமித்தம் என்று எண்ணியதும் ஆங்குக் காண்க.

[3] கையில் வளையலும், காலிற் சிலம்பும் காணப்படுதல் ஈண்டுப் பெண்ணுடல் என்பதற்குரிய அடையாளங்களாகும்.

நேரிசைவெண்பா.

294. [1]ஈங்கிதனை யுய்த்துணர்ந்தி யான்றெளிய வெண்ணுதொறும்
ஓங்குமிடை யூறே யுளதாகும்—ஏங்கி
யுழக்குமதி சேற்றி லுறுமாவைப் போல
வழக்கு நெறியரிய வாம். (உரு)

சாருதத்தன்—[தனக்குள்]

ஆசிரியவிருத்தம்.

295. [2]அலர்தரத் தொடங்கும் போதே
யம்மலர் மதுவை யுண்பான்
பலவளி திரண்டு வீழும்
பான்மைபோ லொருவன் றீமைப்
பலனுகர் காலத் தாங்குப்
படுநெறி சிறிதுண் டேனும்
நலிதரு துன்பம் பல்ல
நண்ணுத லியல்பே யன்றோ. (உசு)

---

[1] இதனை - சாருதத்தனைப்பற்றிய இவ் வழக்கை. சேற்றில் உறும் ஆவைப்போல மதி எங்கி உழக்கும் என்க. ஆ - பசு. மதி - என் அறிவு. வழக்குநெறிகள் புகுதற்கு அரியவாமென்க.

[2] ஒருமலர் முற்றும் மலராது சிறிது வாய்விண்டஅளவில் அச் சிறுவழியாகப் பலவண்டுகள் திரண்டுவீழ்தல்போல, ஒருவன் தீவினைப்பயன் நுகரத் தொடங்குங்காலத்தே புரைவழி சிறிது உண்டாய அவ்வளவிற் பல துன்பங்கள் நண்ணுதல் இயல்பென்க. வசந்தசேனையின்பால்வைத்த காதல்வடிவான சிறியகாரணத்தை முன்னிட்டுப் பெண்கொலையாகிய பெரும்பிழையுண்டாயிற்றென்பது கருத்து. ஈண்டு ஆற்றுவெள்ளம் அதன்கரையின் உடைப்பு மிகச்சிறிதாயினும், அதன்வழியாகவெளிப்பட்டு அதனைப் பெரிதாக்கிக் கரையை அழித்துவிடுதல்போல என்னும் உவமைத்தொனி புலனாதல் அறிக.

நீதிபதி—ஐய! சாருதத்தரே! [1]உண்மையைக் கூறல் வேண்டும்.

சாருதத்தன்—

ஆசிரியவிருத்தம்.

296. [2]பிறர்நலத்தி லழுக்காறும் பிறருயிரைக்
கவரவுறும் பெட்புங் காம
மறநிலையு மிரக்கமிலா வன்னெஞ்சு
மிகவுளவிம் மனித னீங்குக்
குறையுடைய தன்பிறப்பின் குற்றத்தாற்
பொய்யுரையே கூறு கின்றான்
அறநெறியி னிதனியல்பை யாராய்தல்
வேண்டாவோ வமையுங் கொல்லோ. (உஎ)

இன்னும்,

---

[1] இது வீரகன்சொற்களால் ஐயுற்றுக்கூறியது.

[2] குலம் பண்பு செயல் முதலியன இன்னவென்றறியப்படாத வன் என்பான் பொதுவாக "இம்மனிதன்" என்றான். ஒருவனைப் பற்றி நல்லோன் ஒருவன் குறைகூறினும் அதனை முதலிற் சான்று முதலிய அளவைகளால் ஆராய்தல்வேண்டும்; பின்னர்க் குற்றவாளி எனக் கொள்ளப்பட்டவனை வினவுதலும்வேண்டும்; இது வழக்காராயும்முறை. இப்பொழுது சான்று முதலியன இல்லாமலே சகாரன் கூறிய பொய்யுரையைநம்பி என்னையே வினவுகின்றீர்கள் என்பான் "அறநெறியி னிதனியல்பை ஆராய்தல் வேண்டாவோ வமையுங் கொல்லோ" என்றான் என்க.

கலிவிருத்தம்.

297. [1]மலர்நிறை சொடியினை மலர்கொ ளாசையால்
உலைவுற வளைத்தலுக் கொருப்ப டாதயான்
குலவளிச் சிறையன குழலைப் பற்றியீர்த்
தலறவோர் பெண்கொலை யாற்று கிற்பனே. (உஅ)

சகாரன்—ஆ! நீதிபதிகளே! கொடியவனாகிய சாருதத் தனை இன்னும் இருக்கையில் இருக்கச்செய்தலால் நீங்கள் வழக்கின் நிலையை ஒருதலைச் சார்பாகக் காண்பவராகின்றீர்க ளன்றோ!

நீதிபதி—நன்மைமிக்க ஏவல! [2]இங்ஙனஞ்செய்.

[ஏவலன் அங்ஙனஞ்செய்கின்றான்.]

சாருதத்தன்—வழக்கையாராயுங்கள். நீதிபதிகளே! வழக்கை ஆராயுங்கள். [என்று இருக்கையினின்றும் இறங்கி நிலத்தில் இருக்கின்றான்.]

சகாரன்— [தனக்குள், மகிழ்ச்சியோடு நிருத்தஞ்செய்து] ஆ! ஆ! இதோ யான்செய்தபாவத்தை மற்றொருவன் தலை யில் ஏற்றிவிட்டேன். ஆதலின் எவ்விருக்கையிற் சாருதத் தன் இருந்தானோ அதன்கண் யான் இருக்கின்றேன். [அங்ஙனமேசெய்து வெளிப்படையில்] சாருதத்த! என்னைப்பார்; பார். "என்னாற் கொல்லப்பட்டாள்" என்று சொல் சொல்.

---

[1] அறிவில்லாத பூங்கொடியை வளைப்பினும் அதற்குத்துன்பம் உண்டாம் என்று எண்ணும் இயல்பினனாகிய யான் ஒருபெண்ணை அஞ்சி நடுங்கும்படி எவ்வாறுகொலைசெய்யத்துணிவேன் என்பதாம். "குலவளிச்சிறையன குழல்" என்னும் இதனாற் சாருதத்தனது காதற்குறிப்புப் புலனாம்.

[2] இருக்கையை எடுத்துவிடு என்பது கருத்து.

சாருதத்தன்—ஓ! தீதிபதிகளே! [மேற்கூறிய "பிறர்கலத்தி லழுக்காறும்" என்னும் 27-ஆம் செய்யுளைப் படித்துப் பெருமூச் செறிதலோடு தனக்குள்]

ஆசிரியவிருத்தம்.

298. [1]நேசமார் மைத்தி ரேய
நேர்ந்ததென் கொலைக்கா ளானேன்
மாசில்பார்ப் பனியே தூய
மறையவர் மரபில் வந்தாய்
ஏசலி லுரோக சேன
வெற்குறு துயரங் காணாய்
பேசுறு துன்பத் தாலே
பிணிப்புண்டு மகிழ்கின் றுயால். (உகூ)

வசந்தசேனையின்செய்தியை அறிந்துவருதற்கும், பொன்வண்டிசெய்தற்பொருட்டு உரோகசேனற்கு அவள் கொடுத்த அணிகலன்களைத் திருப்பிக்கொடுத்தற்கும் மைத்திரேயனை யான் அவள்பால் அனுப்பினேன். என் காலந் தாழ்க்கின்றான்.

[அதன்பின் அணிகலன்களை எடுத்துக்கொண்டு
விதூடகன் வருகின்றான்.]

---

[1] தனக்குவிளைந்தகேட்டினால் துன்பம் உறுதற்குரிய நண்பன், மனைவி, புதல்வன் என்னும் இவர்களை நினைவுக்கு அணியாக்கி விளித்துக்கூறுகின்றான். "மாசில் பார்ப்பனியே" என்றதனால் நினக்குக் கணவற்பிரிவாகிய இத்தகைய தீங்குநேர்தல் தக்கதன்று என்பது கருத்து. "துன்பத்தாலே பிணிப்புண்டு மகிழ்கின்றாய்" என்பது குழந்தைப்பருவத்தின் இயல்புநோக்கிக் கூறியது.

விதூடகன்—மாட்சிமிக்க சாருதத்தர் வசந்தசேனையின் அணிகலன்களை என்பாற்றந்து "ஐய! மைத்திரேய! குழந்தை உரோகசேனனை வசந்தசேனை தன் அணிகலன்களால் அலங்கரித்து அவன்தாயின்பக்கல் போக்கினுள். அவள் அணிகலன்கள் அவட்குக் கொடுக்கத்தக்கதே; நாம் பெறத்தக்கதன்று. ஆதலின், கொடுத்துவிடு" என்றுகூறிவசந்தசேனையின்பக்கல் என்னைவிடுத்தார். ஆதலின்வசந்தசேனையினிடத்தேசெல்கின்றேன். [சுற்றிவந்துபார்த்து ஆகாயத்தை நோக்கி] என்ன? ஐயர் இரேபிலரா? ஓ! ஐய! இரேபிலரே! நீங்கள் எதற்காக மிகவும் வருத்தமுற்றவர்போற்காணப்படுகின்றீர்கள்? [கேட்டு] அன்புமிக்க நண்பராகிய சாருதத்தர் நீதிமன்றத்துக்கு அழைக்கப்பட்டார் என்று சொல்லுகின்றீர்கள்? அப்படியானுல் அது சிறியகாரியமாக இராது. [நினைவுகூர்ந்து] ஆதலின் வசந்தசேனையின்பாற் பின்னர்ச்செல்வேன். இப்பொழுது நீதிமன்றத்திற்குப் போகின்றேன். [சுற்றிவந்து பார்த்து] இது தான் நீதிமன்றம். இதன்கட்புகுகின்றேன். [புகுந்து] நீதிபதிகளே! நலமுடையீரா? என் அன்புமிக்க நண்பர் எங்கே?

நீதிபதி—இதோ இருக்கின்றுர்.

விதூடகன்—நண்பீர்! தங்களுக்கு மங்கலமுண்டா?

சாருதத்தன்—இனி உண்டாதல்வேண்டும்.

விதூடகன்—தங்களுக்கு நலமுண்டோ?

சாருதத்தன்—இதுவும் இனி உண்டாதல்வேண்டும்.

விதூடகன்—ஓ! நண்பீர்! எதற்காக வருத்தமுற்றவர்போற் காணப்படுகின்றீர்கள்? எதன்பொருட்டு இங்கு அழைக்கப்பட்டீர்கள்?

சாருதத்தன்—நண்ப!

கலிவிருத்தம்.

299. [1]மறுமையை யறிகிலா வஞ்ச னாகிய
தறுகணன் யானொரு தைய லாளைமற்
றுறுமெழி லிரதியைச் சிறப்பி னோதுங்காற்
குறையுள செய்தியைக் கூறு வானிவன். (கூ0)

விதூடகன்—என்ன? என்ன?

சாருதத்தன்—[செவியில்] இங்ஙனம். இங்ஙனம்.

விதூடகன்—எவன் இப்படிச் சொல்லுகின்றான்?

சாருதத்தன்—[குறிப்பினால் சகாரனைக் காட்டுகின்றான்.] [2]இரங்கத்தக்க இவன் காரணமாக என்தீயூழ் என்னைக் கூறுகின்றது.

---

[1] "மறுமையை..............தறுகணன் யான்" என்றது ஒரு குற்றமும் இல்லாத தன்னைப் பெண்கொலையாகிய பெருங்குற்றத்துக்கு ஆளாக்கிய சகாரன்கருத்தாகக்கொண்டு கூறியது. வசந்தசேனை பொதுவாகப் பெண்ணாயினும் உருவநலத்தால் இரதியை ஒப்பாள் என்பான் "தையலாளைச் சிறப்பின் ஓதுங்கால் உறும்எழில் இரதியை" என்றான். குறையுள செய்தியாவது - கொன்றேன் என்பதாம். அக் கொடுஞ்சொல்லைத் தான் கூறவிருப்பமில்லாதவனாய் "கூறுவானிவன்" எனச் சகாரனைச் சுட்டினான் என்பதாம்.

[2] சகாரனை "இரங்கத்தக்கவன்" என்றது, அவன் செய்யும் தீவினை அவனைத் துன்பத்துக்கு ஆளாக்குமாதலின், அங்ஙனம் துன்புறும் நிலையிலுள்ளானைநோக்கி இரங்கவேண்டுமன்றிப் பகையாகக் கோடலாகாதென்பதையுட்கொண்டு கூறியது. "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற், றெம்மை யிகழ்ந்த வினைப் பயத்தா—லும்மை, யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று, பரிவதூஉஞ் சான்றோர் கடன்" (நாலடியார். செய்—58) என்பது ஈண்டுக் கருதி யின்புறற்பாலது.

விதூடகன்—[முகத்தை ஒருபுறத்தே மறைத்துக்கொண்டு] "வீட்டுக்குச் சென்றாள்" என்று இங்ஙனம் ஏன் நீங்கள் சொல்லவில்லை.

சாருதத்தன்—யான் அப்படிக் கூறியும் என் நிலையின் தாழ்வுபற்றி (நீதிபதிகள்) அங்கிகரித்திலர்.

விதூடகன்—ஓ! ஓ! ஐயன்மீர்! எவர் புதிய மேன் மாளிகைகள், பண்டசாலைகள், மடங்கள், உய்யானங்கள், திருக்கோயில்கள், வாருணி கிணறுகள், யூபங்கள் என்னும் இவற்றால் உச்சயினிநகரத்தை அலங்கரித்துள்ளாரோ, அத் தகைய பெருஞ்செல்வராக விளங்கிய சாருதத்தர் மிகவும் இழிந்தபொருள் காரணமாக இத்தகைய தகாதசெயலைச் செய்யத்துணிவாரா? [சினத்தோடு] அடே! அடே! கன்னிகை யின்மகனே! அரசன்மைத்துனனாகிய சமத்தானக! அடக்க மில்லாதவனே! சனங்களுக்குத் தீங்குசெய்பவனே! நகைத்து இகழ்தற்குரியவனே! பலவகை அணிகலன்களால் அலங்கரிக்கப்பட்ட குரங்கே! என் முன்னிலையிற்சொல். சொல். மலர்ந்த மாதவிக்கொடியையும் வளைத்து மலர்பறிப் பின் அங்ஙனம் வளைத்தலால் ஓர் அமயம் அதன் தளிர் உதிர்ந்துவிடுமோ என்னும் ஐயத்தால் அக்காரியத்தைச் செய்தற்கும் மனம் ஒருப்படாத என் இனிய நண்பராகிய அச் சாருதத்தர் இம்மை மறுமையாகிய இரண்டு உலகத்திற் கும் மாறுபட்ட இத்தகைய தகாத செயலை எங்ஙனஞ் செய் வார்? நில். அடே! குட்டினிமகனே! நில். உன் மனம் போல்வளைந்த இம்மரத்தடியால் உன் தலையை அடித்துப் பலதுண்டுகளாகச் சிதறச்செய்வேன்.

சகாரன்— [சினத்தோடு] கேளுங்கள். கேளுங்கள். பெரியோர்களே! எனக்கு [1]விவாதமோ வழக்கோ சாருதத்தனோடுதான் உண்டு. அங்ஙனமிருக்கக் காக்கைக்கால்போன்ற தலையினையுடைய இவன் எதற்காக என்றலையை அடித்துப் பலதுண்டுகளாகச்செய்யவேண்டும்? நிற்க. அடே! தேவடியாள்மகனே! துட்டப்பையலே!

[விதூடகன் மரத்தடியைத் தூக்கிக்கொண்டு முன்கூறியபடி கூறுகின்றான். சகாரன் சினத்தோடு எழுந்து அடிக்கின்றான். விதூடகன் எதிர்த்து அடிக்கின்றான். இருவரும் ஒருவரை ஒருவர் அடிக்கின்றனர். விதூடகனது கக்கத்தினின்றும் அணிகலன்கள் வீழ்கின்றன.]

சகாரன்— [அவ்வணிகலன்களை எடுத்துப்பார்த்து [2]அச்சத்தோடு] பாருங்கள். பாருங்கள். பெரியோர்களே! இவைதாம் அந்த எளியவளுடைய ஆபரணங்கள். [சாருதத்தனைக் குறிப்பிட்டு] இச்சிறுபொருள்காரணமாகவே அவள் கொல்லப்பட்டாள்.

---

[1] ஒன்றுக்கொன்று முரண்பட்டவுரைகளையுடையது விவாதமாகும். வழக்கின் இயல்பு மேற்கூறப்பட்டது.

[2] இருவரும் கைகலந்து கலகம்விளைக்குங்கால் விழுந்த அணிகலன்கள் இன்னாரிடத்தினின்றும் வீழ்ந்தனவென்பதை நீதிமன்றத்தார் அறியாமல், தான் அவற்றை எடுத்ததுபற்றித் தன்பால் அக்குற்றத்தை யேறிடவுங்கூடும் என்னும் ஐயமே சகாரனுக்கு அச்சமுண்டாதற்குக் காரணமாகும்.

[அதிகாரிகள் எல்லோரும் [1] தலையைக் கவிழ்த்துக்கொண்டனர்.]

சாருதத்தன்—[முகத்தை ஒருபுறத்தே மறைத்துக்கொண்டு]

ஆசிரியவிருத்தம்.

300. [2] ஊருசா விற்றைப் போழ்திங்
குள்ளவர் காண வென்றன்
மாறுபா டாய வூழின்
வலியினான் மறைவின் வீழ்ந்த
வீறுசா லொளியான் மிக்கு
விளங்குமிவ் வணிக ளெல்லாம்
பேறிலா வெளியேன் றன்னைப்
பீழையுள் வீழ்த்த வம்மா. (கக)

விதூடகன்—ஓ! ஏன் [3] உண்மைநிகழ்ச்சியைத் தெரிவிக்கக் கூடாது?

சாருதத்தன்—நண்ப!

---

[1] எல்லாவகையானும் வழக்காராய்ச்சி, சாருதத்தனுக்கு மாறாகவே முடிகின்றதெனக்கண்டு சாருதத்தன்பால் நன்மதிப்புடைய அதிகாரிகள் நாணத்தால் தலையைக்கவிழ்த்தனர் என்பதாம்.

[2] இங்கு உள்ளவர் என்றது நீதிபதி முதலியோரை. மாறுபாடு ஆய ஊழ் - தியூழ். வீழ்ந்த இவ்வணிகள் எனவும் விளங்கும் இவ்வணிகள் எனவும் கூட்டுக. பீழை - மரணத்துன்பம்.

[3] உண்மைநிகழ்ச்சியாவது, இவ்வணிகலன்கள் வசந்தசேனையால் உரோகசேனனுக்குக் கொடுக்கப்பட்டுப் பின்னர் அவளுக்கே திருப்பிக்கொடுக்கும்நிமித்தம் கொண்டுவரப்பட்டனவென்பது.

ஆசிரியவிருத்தம்.

301. [1]உண்மையி னியல்பைத் தேறி
யுணர்கிலா மையினு லென்றும்
வெண்மைசா லரசர் கண்கள்
விறலில வாகு மன்றே
உண்மையை யுரைப்போர்க் கிந்நா
ளுறுவதோ வெளிமை யிந்த
எண்மையா லிறத்த லந்தோ
விழிவிழி வெந்த ஞான்றும். (௩௨)

நீதிபதி—துன்பம்! ஆ! துன்பம்!

கலிவிருத்தம்.

302. [2]வாம மார்வலி குன்றி மருங்கணை
பூம கன்பகை பற்றிய பொன்னற்குத்
தூம கேதுவோர் பக்க றுறுத்தென
வேம மார்கல னீதொன்று வந்ததால். (௩௩)

---

[1] வெண்மை – அறிவுமுதிராமை. விறல் - உண்மையுணரும் ஆற்றல். எண்மை - எளிமை.

[2] வாமம் ஆர் வலி - ஒளியாகிய நிறைந்த வன்மை. கோள் ஒளியை ரச்மி என்று சோதிடநூலார் கூறுவர். பூமகன் – பூதேவியின்மகனாகிய செவ்வாய். பொன்னன் - வியாழன். வலிகுன்றிப் பற்றிய பொன்னன் என்க. தூமகேது - உபக்கோள்களி லொன்று. றுறுத்தல் - நெருக்குதல். முன்னரே வலியிழந்துநிற்கும் பொன்னற்குத் தன்மருங்கு அணைந்த செவ்வாயின்பகைமையால் ஒருபாற் கேடுநேர்ந்திருக்குங்கால் மற்றொருபால் தூமகேதுவின் நெருக்கம் நேர்ந்து துன்புறுத்தல்போல, முன்னரே பொருள்வலியிழந்து வறியனாயிருக்கும் நல்லோனாகிய சாருதத்தற்குச் சகாரனதுபகைமை ஒருபாற் கேடுவிளைக்க மற்றொருபால் இவ்வணிகலன் வெளிப்பட்டுத் துன்புறுத்துகின்றதென்பது கருத்து.

சேட்டியும் எழுத்தாளனும்-[அணிகலன்களைக்கண்டு வசந்தசேனையின் தாயை நோக்கி] பெருமாட்டீ! இப் பொற்பணி அதுதானு? இல்லையா? என்பதை ஊன்றிப்பார்த்தல்வேண்டும்.

கிழவி— [பார்த்து] இஃது அதனை ஒத்திருக்கின்றது. [1] அஃதன்று.

சகாரன்—ஆம். விருத்தகுட்டினி! [2] கண்களாற்சொல்லி வாக்கினுல் மறைத்துவிட்டாய்.

கிழவி—தீயவனே! போ.

சேட்டியும்எழுத்தாளனும்—இஃது அதுதானு? இல்லையா? என்பதைத் தெளிவாகச் சொல்.

கிழவி—ஐய! [3] சிற்பியின்றிறமையாற் கண்ணைக்கவர்கின்றது. ஆனல் அஃதன்று.

நீதிபதி—அம்மா! இவ்வணிகலன்களைக் கண்டிருக்கின்ருயா?

கிழவி—இல்லை. இல்லை கண்டதில்லை என்றே சொல்லுகின்றேன். அன்றி ஒருசமயம் சிற்பியினுல் அதுபோல் அமைக்கப்பட்டதாகவும் இருக்கலாம்.

நீதிபதி—செட்டியாரே பார்க்கவேண்டும்.

---

1 "அஃதன்று" என்றது சாருதத்தன்பாலுள்ள கருணையாற் கூறப்பட்டது.

2 கண்டவுடன் அதுவே இஃதென்றுநினைந்தது கண்களின் குறிப்பா லுணரப்பட்ட தென்பதாம்.

3 "கண்களாற்சொல்லி" என்னும் சகாரன்கூற்றுக்கு எதுக் கூறியவாறு.

கொச்சகக்கலிப்பா.

303. [1]ஒருபொருள்போற் பிறபொருள்க ளுளபலமற் றணிகலன்கள்
உருவமைதி குணஞ்செய்கை யொத்தனமுற் கண்டியற்றும்
அரியதிறல் சிற்பிகள்பா லமைந்துளதா தலிற்பெரிதும்
பொருவுநிலை கைவன்மை புலப்படுத்த வெளிப்படுமால். (நடசு)

செட்டியும் எழுத்தாளனும் — [2]இவ் அணிகலன்கள் பெருமான் சாருதத்தருடையனவா?

சாருதத்தன்—இல்லை. இல்லை.

செட்டியும் எழுத்தாளனும்— அப்படியானல் யார்க்கு உரியவை?

சாருதத்தன்— இதோ இருக்கின்ற பெருமாட்டியின் புதல்விக்குரியவை.

செட்டியும் எழுத்தாளனும்—அவளிடத்திநின்றும் இவ் வணிகலன்கள் எப்படிப் பிரிவெய்தின?

சாருதத்தன்—[3]இவ்விதம் பிரிவெய்தின. இஃதுண்மை.

செட்டியும் எழுத்தாளனும்—ஐய! சாருதத்தரே! இந் நீதிமன்றத்தில் உண்மைகூறுதல்வேண்டும். பார்க்க. பார்க்க.

---

1 பிறபொருள்கள் பலவுள என்க. பொருவுநிலை - ஒப்புத் தன்மை.

2 இது கிழவியைநோக்கிக் கேட்டது.

3 இவ்விதம் - வசந்தசேனையினிடத்திநின்றும் கவர்ந்ததாக நீங்கள் எண்ணுகின்றபடியே. நிகழ்ந்தவாறுகூறின் ஏற்றுக்கொள்ளா ரெனக்கருதி உண்மையைக் கூறினனல்லன் என்க. இவ்விதம் என்பதற்கு உரோகசேனனுக்குச் சிறுதேர் அமைத்துக்கொள்ள வசந்தசேனையாற் கொடுக்கப்பட்டசெய்தியைப்பற்றிய தென்று பொருள்கொள்வாரும் உளர்.

நேரிசைவெண்பா.

304. [1]உண்மைசொல வின்ப முளதாகுந் தீவினைகள்
உண்மைசொல வெய்தா வுறுதியே—உண்மை
யிரண்டக் கரத்தானு மீங்கிதனைப் பொய்யான்
மருண்டு மறையற்க மன். (௩௫)

சாருதத்தன் — [2]அணிகலன்களை அணிகலன்களாகக் காண்கின்றேனல்லேன். [3]என் இல்லத்தினின்றும் கொண்டு வரப்பட்டவைகளாகமாத்திரம் அறிகின்றேன்.

சகாரன்—உய்யானத்துட்புகுவித்து முதலிற் கொன்றாய். இப்பொழுது மிக்க வஞ்சகத்தால் மறைக்கின்றாய்.

நீதிபதி—ஐய! சாருதத்தரே! உண்மையைக் கூறல் வேண்டும்.

நேரிசையாசிரியப்பா.

305. [4]நல்லெழில் வாய்ந்தநின் மெல்லிய வுடலில்
நின்னைச் சாக்க வுன்னுமெம் மனத்தொடு
பொல்லாக் கசையடி பொருக்கென
வீழுமீ துறுதி தாழா தைய. (௩௬)

---

[1] அக்கரம் - எழுத்து. பொருணிலையால் என்றும் அழிவில்லாததும் சொன்னிலையால் ஒற்றொழித்தெண்ணுங்கால் இரண்டெழுத்தானுயதும் ஆகிய உண்மையை அழிதன்மாலையதும் ஒரெழுத்தானுயதுமாகிய பொய்யான் மறையற்கவென்பது கருத்து. அக்கரம் என்பது ஈண்டு எழுத்து அழிவின்மை என்னும் பொருள்களைப் புலப்படுத்துநிற்றலுங் கருதற்பாலது. மன் - அசைநிலை.

[2] அவை அவாவப்படும் பொருள்களாக என்கண்களுக்குப் புலப்பட்டிலவென்பது கருத்து.

[3] புட்பகரண்டகத்தினின்றும் அடையப்பட்டிலவென்பது கருத்து.

[4] உண்மையை வெளிப்படுத்துதற்பொருட்டு இக்கசையடித் தண்டம் விதிக்கப்படும் என்பது கருத்து.

சாருதத்தன்—

ஆசிரியவிருத்தம்.

306. [1]பாவமோர் சிறிது மில்லாப்
பழியறு குலத்தில் வந்தேன்
பாவமென் பால்வந் தெங்ஙன்
பற்றுமீ ரென்மாட் டிந்தப்
பாவமுண் டெனவுள் ளத்தாற்
பார்த்திரேற் கனவி லேனும்
பாவமொன் றில்லேன் செய்யப்
படுவதொன் றியாதே யம்ம! (கஎ)

[தனக்குள்] வசந்தசேனையைப் பிரிந்த யான் இனி உயிர் வாழ்தலாற் பயனென்? [வெளிப்படையில்] ஓ! [2]பலவாறு கூறுதலென்?

கலிவிருத்தம்.

307. [3]மறுமையை யறிகிலா வஞ்ச னாகிய
தறுகணன் யானொரு தைய லாளைமற்
றுறுமெழி னங்கையைச் சிறப்பி னோதுங்காற்
குறையுள செய்தியைக் கூறு வானிவன். (கஅ)

---

[1] குற்றம் குணங்களை உணர்ந்து ஒறுத்தல் விடுதல் செய்தற்குரிய பொறுப்புத் தங்கள்பாலதே. அத்தகைய தங்கள்கருத்து மாறுபடுமாயின் எளியேனாகிய யான் செயற்பாலதென்? என்பதாம்.

[2] கொடியவனாகிய சகாரனதுகூற்றை நம்பி ஆராயாதுசுமத்தப்பட்ட குற்றத்தையுடையவனாகிய யான் உண்மையை வெளிப்படுத்தற்குமுயறல் பயனில்லாததென்பது கருத்து.

[3] இவ்வங்கத்து 30-வது செய்யுளே இது. இதன் குறிப்புக்களை ஆண்டுக்காண்க. நங்கை என்பதொன்றே வேறாகவுள்ளது. நங்கை - பெண்ணிற்சிறந்தாள்.

சகாரன்—அவள் கொல்லப்பட்டாள். [1]அடே! "யான் கொன்றேன்" என்று நீயும் சொல்.

சாருதத்தன்—[2]நீயே சொல்லிவிட்டாயே.

சகாரன்—கேளுங்கள். கேளுங்கள். பெரியோர்களே. இவனே கொன்றான். இவனாலேயே ஐயம் நீங்கிற்று. வறியவனாகிய இச்சாருதத்தனுக்கு [3]உடலைப்பற்றியதண்டம் விதித்தல்வேண்டும்.

நீதிபதி—ஏவல! சகாரன் சொல்லியபடிசெய். ஓ! சேவகர்களே! இச்சாருதத்தனைப் பிடியுங்கள்.

[சேவகர்கள் பிடிக்கின்றார்கள்.]

கிழவி — அருள்செய்தல்வேண்டும் பெரியோர்களே! அருள்செய்தல்வேண்டும். ["முன்னர் அடைக்கலமாக வைக்கப்பட்ட" (334-வது பக்கம்) என்பது முதலியசொற்களை மேற்கூறியபடி கூறுகின்றாள்.] என்மகள் கொலைசெய்யப்பட்டு இறந்தாளாயின் இறக்க. என்பொருட்டுஇவர்நீண்டவாணாளையுடையவராக உயிர்வாழ்க. அன்றியும் வழக்கு வாதி பிரதிவாதிகளைச் சார்ந்ததாகும். யான் வாதியாவேன். இவரை விடுதலை செய்யுங்கள்.

---

[1] மேற்செய்யுளில் உள்ள "நங்கையை" என்னும் சொல்லை முடித்துக்காட்டுவான் "யான் கொன்றேன்" என்றுசொல் என்றான் என்க.

[2] இந்நிகழ்ச்சியில் யான்கூறற்பாலது யாதுமின்று. நின் சொல்லே அதனை உறுதிப்படுத்தும். "யான்கொன்றேன்" என்று அநுவாதமாகக்கொண்டு நீ கூறினும் அச்சொல்லே உண்மையாக நீ கொன்றாயென்பதைக் குறிப்பிற் புலப்படுத்தும் என்பதாம்.

[3] உடலைப்பற்றிய தண்டம் - மரணதண்டனை.

சகாரன்—போ. கருப்பதாசி! போ. இவ் வழக்கினுல் உனக்கு என்ன?

நீதிபதி—அம்மா! போகலாம். ஓ! சேவகர்களே! இவளை வெளிப்படுத்துங்கள்.

கிழவி—ஆ! மகனே! ஆ! குழந்தாய்! [என்று அழுது கொண்டு வெளியேசெல்கின்ருள்.]

சகாரன்—[தனக்குள்] என் [1]தகுதிக்கு ஏற்றதை யான் இவனுக்குச் செய்துவிட்டேன். இப்பொழுது போகின் றேன். [என்று போகின்ருன்.]

நீதிபதி—ஐய! சாருதத்தரே! வழக்கைத்துணியும்விடயத்தில் எங்களுக்கு அதிகாரம் உண்டு. [2]எஞ்சிய காரியம் அரசனைச்சார்ந்தது. [3]ஆயினும் ஏவல! பாலகன் என்னும் அரசற்குப் பின் வருமாறு [4]அறிவித்தல்வேண்டும்.

---

[1] தகுதி - அரசன்மைத்துனனும்நிலை. என்னேடுபகைத்து உயிர்வாழ்பவன் யாவன்? என்பது கருத்து.

[2] எஞ்சியகாரியமாவது தண்டம் இன்னதென்று கட்டளையிடுதல்.

[3] தண்டித்தற்குரிய அதிகாரம் எங்களுக்கு இல்லையாயினும் என்றவாறு.

[4] பொருத்தமானதொன்றை அறிவிப்பது குற்றமாகாதென்பதாம்.

நேரிசைவெண்பா.

308. [1]குற்றமிழைத் தானிவனே யாயினுமென் கொல்லுதற்
குற்ற மறையோ னுரியனலன்—பெற்றியினால்
என்று மனுவுரைத்தா னீங்கிவனை நந்நாட்டி
னின்றுபொரு ளோடகற்றல் நேர். (௩௧)

ஏவலன்—பெருமான் கட்டளைப்படியே. [என்று வெளியேபோய் மீண்டும்வந்து கண்ணீர்வடிய] ஐயன்மீர்! அரசர் பாற்சென்றேன். பாலகன் என்னும் அரசர், "மிகவும் இழிந்த பொருள் காரணமாக வசந்தசேனையைக் கொன்ற அச் சாருதத்தன்கழுத்தில் அவ்வணிகலன்களையேகட்டிக் குற்றம் வெளிப்படப் பறைசாற்றுவித்து அவனைத் தென்பாலுள்ள சுடலைக்குக்கொண்டுபோய்க் கழுவில் ஏற்றிக் கொன்றுவிடுங் கள்" என்று கூறுகின்றார். வேறு எவனொருவன் இத்தகாத செயலைச் செய்கின்றானோ அவன் இவ்வவமானத்தோடுங் கூடிய தண்டத்துக்கு ஆளாவான்.

சாருதத்தன்—ஆ! அரசன் பாலகன் ஆராய்ச்சியில்லாத செய்கையுடையவனாகின்றான். ஆம்.

---

[1] பெற்றி - தன்மை. பிராமணத்தன்மை யுண்மையால், குற்றம் புரிந்தபார்ப்பான் கொலைக்குரியனாகான் என்று மனுகூறினான். ஆதலின், இவனை நம் நாட்டினின்றும் உரியபொருளோடு வெளிப் படுத்தலே நேரிதாமென்க. இதுவே இவற்குச் செய்யத்தக்க தண்டமாகும் என்பது கருத்து.

கலிவிருத்தம்.

309. [1] இத்தகை வழக்கெனு மெரியிற் றீச்செயன்
மெத்திய வமைச்சரால் வீழ்த்தப் பட்டுளார்
மத்தமா ரரசர்கள் வழீஇய தன்மையால்
ஒத்ததோர் கீழ்நிலை யுறுத லுண்மையே. (௪0)

இன்னும்,

310. [2] மன்னவ னுணையை மாசு றுத்தியே
பன்னுவெண் காக்கைமேற் பறப்ப தாச்சொலும்
இன்னவன் கொடியரா லியைந்த நல்லறம்
அன்னவ ரழிந்தன ரழிகின் றார்பலர். (௪௧)

---

[1] இத்தகை – நுணுகியாராய்தற்குரிய. மெத்திய - மிகுந்த. மத்தம் - மயக்கம். அரசர்கள் வீழ்த்தப்பட்டுளார் எனவும், அரசர்கள் வழீஇயதன்மையால் உறுதலுண்மை யெனவும் இயைக்க. அரசியல்பிழைத்தோர் இம்மையிற் பழியையும் மறுமையில் நரகத்தையும் எய்துவர் என்பதைப் பின்வரும் மனுமொழியானும் உணர்க. "ஒறுத்தற்குரியரல்லாதாரை யொறுத்தலையும், ஒறுத்தற்குரியாரை யொறுதுவிடுதலையும் செய்யும் அரசன் இம்மையில் மிக்கபழியையும் மறுமையில் நரகத்துன்பத்தையும் எய்துவன்" (மநு அத்—8. சு—128)

[2] அரசனது செங்கோலை மாசுறச்செய்து "வெள்ளைக்காக்கை பறக்கின்றது" என்பதுபோன்ற பொய்யுரைகளைக்கூறும் இச்சகாரனைப்போன்ற கொடியவர்களால், அறக்கடவுள்போன்ற பெரியார் பலர் அழிந்தனர்; பலர் அழிகின்றனர் என்பதாம். அரசன் உண்மையுணர்ச்சியிற் சிறிதுந்தலைப்படாமையால் அவன் அறிவின்மை மிகப்பெரியதென்பது கருத்து.

இனி, இத்தகைய தீயொழுக்கமுடையவன் இயல்பையறியாமல் இவனை நாட்டுமக்களுக்குரிய நன்மைதீமைகளிற் றலைப்படும்

நண்ப! மைத்திரேய! போ. தாய்க்கு இறுதியாகிய வணக்கத்தை யான் கூறியதாகச்சொல். என் புதல்வன் உரோகசேனனையும் காப்பாற்று.

விதூடகன்—[1]வேர் அறுக்கப்படின் மரம் எங்ஙனம் காப்பாற்றப்படும்?

சாருதத்தன்—அங்ஙனமன்று.

---

அதிகாரபதவியில் நியமனஞ்செய்தது முதலாவது அரசனது குற்றமாகும். பின்னர், இன்னோரன்ன தீயவர்கூற்றில்நம்பிக்கைவைத்து, நல்லொழுக்கமுடையாரியல்பை மதியாமல் அவர்பாற் குற்றந்துணிதல் நீதிபதிகளின்பிழையாகும். வசந்தசேனையைக் கொலைசெய்யுங்கால் "யான் இவனைக்கண்டேன்" என்று சகாரனுலுங் கூறப்பட்டிலது. "வசந்தசேனை வண்டியில் ஏறியிருக்கின்றாள்" என்று சந்தனகன்கூற, "அதனை நேரிற்காணும்விருப்பினனாய் அவ் வண்டியில் ஏறிய என்னை அச் சந்தனகன் அடித்துவீழ்த்தினான்" என்னும் வீரகன்சொல்லால் அவனுக்குச் சந்தனகன்உரையில் அவநம்பிக்கையுண்டாயிற்றுஎன்பதை உய்த்துணர்ந்துகொள்ளாமல், வசந்தசேனை சாருதத்தன் வண்டியில் ஏறிச்சென்றாள்என்றும் துணியப்பட்டது. இறந்துகிடக்கும் ஒரு பெண்ணுடலைக்கண்டு கூறிய அளவில் வசந்தசேனையின்கொலையும் துணியப்பட்டது. "கொன்றுவிட்டான்; யான் இல்லை" என்று சகாரன் முதலிற்கூறிப் பின் வேறுவிதமாக அச்சொல்லைமாற்றியதில் ஐயப்பாடும் ஏற்பட்டிலது. இவை முதலிய எல்லாம் நீதிபதிகளால் ஆராய்ந்தறியற்பாலன. இவ்வெல்லாப்பிழைகளும் அரசனையே சார்வனவாம். இதுகருதியே முதல் அங்கத்தில் "வழக்கின் மாறுந் தன்மையும்" (செய்யுள்—5) என்று கூறப்பட்டது.

[1] சாருதத்தனை வேராகவும் புதல்வனை மரமாகவும் கருதினான் என்பதாம்.

கலிவிருத்தம்.

311. விண்ணுல கெய்தினர் விளங்கு நல்லுடற்
புண்ணிய வுருவமே புதல்வ னாதலின்
எண்ணியென் பாற்புரி யினிய நட்பினை
நண்ணிய வுரோகசே னற்கு நாட்டுதி. (சஉ)

விதூடகன்—ஓ! நண்பீர்! தங்களுக்கு இனிய நண்பனாகிய யான் தங்களைப் பிரிந்தபின் உயிரைத் தாங்குவேனா?

சாருதத்தன்—[1]உரோகசேனனையும் பார்த்துக்கொள்.

விதூடகன்—ஆம். பொருத்தமே.

நீதிபதி-நன்மைமிக்கஏவல! இப்பையலை வெளிப்படுத்து.

[ஏவலன் அங்ஙனமே செய்கின்றான்.]

நீதிபதி—ஓ! யார் இங்கே? கொலையாளிகளுக்கு அரசனது ஆணையைத் தெரிவி.

[சாருதத்தனைவிட்டு நீதிபதி முதலிய அதிகாரிகள்
எல்லோரும் போய்விடுகின்றனர்.]

ஏவலன்—ஐயன் இங்கே வருக.

சாருதத்தன்—[துன்பத்தோடு "நேசமார் மைத்திரேய" என்னும் இவ்வங்கத்தின் 29-ஆம் செய்யுளைக் கூறுகின்றான். [2]ஆகாயத்தைநோக்கி]

---

[1] யான் இல்லாதபொழுது நீயே அவனுக்குப் பற்றுக்கோடாவாய் என்பது கருத்து. முதனூலில் "தர்சய" என்றுள்ளது. இது பார் என்னும் பொருளோடு காட்டு என்னும் பொருளும் தருதலால் "உரோகசேனனையும் கொண்டுவந்து காட்டு" என்றும் கொள்ளலாம்; பின்னர் 10-ஆம் அங்கத்தில் உரோகசேனனின் சந்திப்புக் கூறப்படுதலின்.

[2] அரசன் அரங்கத்தில் வெளிப்பட்டிலனாயினும் அவனைக் குறித்துக் கூறியது.

நிலைமண்டில ஆசிரியப்பா.

312. [1]என்னைப் பற்றிய விவ்வழக் கியலை
முன்னித் தீர்க்க மொழிநீர் துலைநஞ்
செரியெனு மிவற்றை யென்னு தரிய
இவ்வுட றுணிபடற் கியையும்வெவ் வாளென
வெளவிய நின்சிறு மதிகொடு துணிந்தோ
பகையுரை பற்றியோ பார்ப்பன னுமெனைத்
தகவறக் கொல்லுதி சாற்றுமிச் செயலால்
அடுநர கிடைநின் குடிவழி மக்களொடு
கடிதின் வீழ்ந்து படுதுய ருறுகவே. (சகூ)

[2]இதோ வந்துவிட்டேன்.

[எல்லோரும் போகின்றனர்.]

"வழக்காராய்ச்சி" என்னும்

ஒன்பதாம் அங்கம் முற்றிற்று.

---

[1] சான்று முதலிய ஆராய்ச்சிகளால் துணிதற்கரியவழக்கு, நீர் துலை நஞ்சு எரி என்னும் தெய்விகங்களால் ஆராயத்தக்கதாகும். ஆராய்தல்: நீரின் முழுகல், துலையில் ஏறுதல், பாம்புப்புற்றிற் கையிடல், தீயிற்புகுதல் என்னும் இவற்ருல் ஏதமுறுமை தெரிதல். அரிய இவ்வுடல் - கிடைத்தற்கரிய எனது இவ்வுடல். உடல் துணிபடற்கு வெவ்வாள் இயையுமெனத் துணிந்து பார்ப்பனனும் என்னைக் கொல்லுதியென இயைக்க. துணிந்தோ என்பதிலுள்ள ஓகாரத்தைக் கொடு என்பதனேடுகூட்டி, நின் சிறுமதிகொண்டோ பகையுரைபற்றியோ துணிந்தெனக் கூட்டுக. வெளவிய - தீயொழுக்கமுடைய அமைச்சர்முதலியோராற் கவரப்பட்ட. தகவு அற - நடுவுநிலை ஒழிய.

[2] ஏவலனைநோக்கிக் கூறியது.

# [1]பத்தாம் அங்கம்.

## தொகுத்துரைத்தல்.

[[2]சண்டாளர்கள் இருவர் பின் தொடரச்
சாருதத்தன் வருகின்றான்.]

சண்டாளர்கள் (இருவரும்)—

கலிவிருத்தம்.

313. [3]பலவிதக் கொலைசிறைப் படுத்த லொல்லையிற்
றலைதனை வெட்டுதல் கழுவி லேற்றுதல்
வலமித னேதுவை மதித்து நம்மனம்
அலைவுற லெதன்பொருட் டாகு மம்மவோ! (க)

[4]விலகுங்கள்; ஐயன்மீர்! விலகுங்கள். இவ் வையன் சாருதத்தன்,

---

1 இவ்வங்கத்தில் வசந்தசேனை உயிர்பிழைத்துத் திரும்பி வருதலால் சாருதத்தன் விடுதிபெறலும், ஆரியகன் அரசனாதலும், சருவிலகனது சேர்க்கையும் ஆகிய இவைமுதலியன கூறப்படும்.

2 கொலைக்களத்துக்குக் கொண்டுபோகப்படும் சாருதத்தனது வருகை முதலிற் கூறப்படுகின்றது.

3 கொலைபுரிதல் சிறைப்படுத்தல் வெட்டுதல் கழுவேற்றல்: ஆகிய இச்செயல்களில் வன்மையுடையேம். வலம் தன்மைப் பன்மை. இதன் ஏதுவை - இக்கொலையின் காரணத்தை. நமக்கு ஆற்றலும் அரசன்கட்டளையும் உண்மையால் நாம் சிந்திக்கவேண்டுவ தென்? என்பது கருத்து.

4 சாருதத்தனைக் காணவிரும்பிக் கூடிய மக்களைநோக்கிக் கூறியது.

கலிவிருத்தம்.

314. [1]படுகொலை வினைஞர்யாம் பற்றச் செங்நிறத்
தொடுமல ரலரியைச் சூடி செய்யற
அடைவினின் விளக்கொளி யவிதல் போன்றிவண்
வடுவுறீஇத் தனதொளி மாண்டு நிற்பனால். (உ)

சாருதத்தன்—[துன்பத்தோடு]

ஆசிரியவிருத்தம்.

315. [2]கண்ணீரான் மிகநனைந்து கடும்புழுதி
யுறுப்பெல்லாங் கறையிற் சார
எண்ணிம மலர்மாலை யிமைதரச்செஞ்
சந்தனச்சேச றளைஇ யீங்கே
நண்ணியவென் னுடலிதனைப் பலியுணவென்
றுண்ணுதற்கு நயந்து காக்கை
கண்ணுறீஇக் கடுங்குரலாற் கரைந்துகரைந்
தருகிலுறக் கருது மாலோ. (ங)

சண்டாளர்கள்—விலகுங்கள். ஐயன்மீர்! விலகுங்கள்.

---

[1] தொடுமலர் அலரி - தொடுக்கப்பட்ட மலர்களையுடைய அலரி மாலை. அடைவினின் என்னும் உவமையடையைப் பொருளுக்கும் கூட்டுக. அடைவினின் - முறையாக. வடு - கொலைக்குற்றம். ஒளிமாண்டுநிற்றற்குக் காரணம், கொலைவினைஞராகிய யாங்கள் பிடித்த அளவினனே இறத்தல் உறுதியெனத் துணிந்துகொண் டமையாம் என்பது.

[2] நனைந்து சார இமைதர அளைந்து நண்ணிய உடல் என்க. ஈமம் - சுடலை. ஈங்கு - சுடலைக்கண். பூசித்தற்குரிய மலரோ டியைதலும் புழுதிபடிதலும் ஆடு கோழிகளின் புண்ணீரிற் றோய்த லும் பலியுணவுக்கும் உளவென்பது அறியற்பாலது.

வெண்பா.

316. [1]சில முடைப்பெரியோ ராய செழும்புட்கள்
ஏலவுறுந் தக்கோணு மித்தருவைக்—காலமெனுங்
கோடரியின் கூர்நுதிகள் கூறு படுத்துதலை
நாடியுறக் காண்டலெவ னன்று. (சு)

வா. அடே! சாருதத்த! வா.

சாருதத்தன்— [2]யான் இத்தகையநிலைமையை அடைந்தேன். மக்களுடைய ஊழ்வினைப்பயன்கள் நினைவுக்கடங்காதனவன்றோ?

---

[1] ஏல உறும் - மிகத் தங்கும். காலம் ஈண்டு எல்லாப்பொருள்களும் அழிவெய்தற்குக் காரணமாகநிற்பது. நுதிகள் - மக்களின் கன்மபரிபாக வடிவமாகவுள்ள நுனிகள். எங்களையும் அரசனையும் தலைக்கீடாகக்கொண்டு காலமே கூறுபடுத்துகின்றதென்பது கருத்து. நுங்கட்குப் பற்றுக்கோடாகவுள்ளவனை இந்நிலையிற் காண்டல் நன்றன்று என்பார் "காண்டலெவன்" என்று ரென்க.

[2] எல்லோர்க்கும் புகலாகவுள்ளவனென்பான் "யான்" எனவும், இப்போது புகலற்றவனுயினேன் என்பான் "இத்தகையநிலைமையை அடைந்தேன்" எனவும் கூறினுன்.

கலிவிருத்தம்.

317. [1]அரிசிமாப் பொடிநனி படிந்த யாக்கையேன்
விரவுசெஞ் சாந்திஞல் விளங்கு மைவிரல்
உருவுகொ ளிலச்சினை யுறுப்பிற் சேர்தலாற்
புருடனுய்ப் பசுநிலை பொருந்தப் பெற்றனன். (ரு)

[எதிரேபார்த்து] ஆ! [2]மனிதரின் ஏற்றத்தாழ்வு என்னே! [துன்பத்தோடு]

ஆசிரியவிருத்தம்.

318. [3]யானுறு நிலையை நோக்கி
யிந்நகர் மக்க ளெல்லாம்
மானுடப் பிறவி திதென்
றுரைத்துமா ழாந்து கண்ணீர்
தானுற வழுதீங் கென்னைத்
தாங்குதற் காற்ற லின்றி
வானுறீஇ யின்பந் துய்க்க
வென்றுரை வழங்கு கின்றூர். (சு)

---

[1] மாப்பொடி - மாவாகிய பொடி; அல்லது பொடியை எள்ளுப் பொடி எனவும் கொள்ளலாம். யாக்கையேனுகிய என் உறுப்புக் களில் இலச்சினைசேர்தலாற் புருடனுயிருந்தும் பசுவின்நிலையை அடைந்தேன் என்பதாம். உடம்பில் அரிசிமாப்பொடியைப் பூசிச் செஞ்சந்தனத்தாற் பஞ்சாங்குலமுத்திரையிடல் கொலைப்படற் குரியானது அலங்காரமென்ப. இலச்சினை - அடையாளம்; முத் திரை. தேவதைகளுக்குப் பலியாக வெட்டப்படும் பசுக்களுக்கும் இவ்வலங்காரம் உண்டென்ப. பசு ஈண்டு ஆடு முதலியன.

[2] நகரத்து நன்மக்கள் தன்பால் இரக்கமேற்கொண்டு வருந்துதலைக் கண்டு இவ்வாறு கூறினன். அவர் வருத்தம் பின் வருஞ் செய்யுளிற் காண்க. மக்கட்டன்மை பொதுவெனினும் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் உள்ள ஏற்றத்தாழ்வாகிய வேறுபாடு மிக்கதென்பது கருத்து.

[3] நின் நல்வினைகளின்பயன் இவ்வுலகத்திற் காணப்படாமை யான் வானுற்று இன்பம் துய்க்கவென்று வாழ்த்துவாராயினர் என்க.

சண்டாளர்கள்—விலகுங்கள்! ஐயன்மீர்! விலகுங்கள்! என் பார்க்கின்றீர்கள்?

வெண்பா.

319. [1]நாடிகந்து வேந்த னடத்தலய ஞண்மீன்கள்
பாடு பெயர்தல் பசுவீனல்—பீடுயரு
நல்லோ ருயிர்க்கேடு நண்ணா லெனுநான்கும்
ஒல்லாவாங் காண்டற் குவை. (எ)

சண்டாளருள் ஒருவன்—அடே! [2]ஆகிந்த! பார். பார்.

கலிவிருத்தம்.

320. [3]இந்நகர்க் கணியென விலங்கு வோனிவன்
முன்னையூழ் வலியினாற் கொலையின் முற்றினன்
அன்னது கண்டுவிண் ணரற்று கின்றதோ
மின்முகி லிடிதிடி வீழு கின்றதோ. (அ)

---

[1] நாடு - தன் நாடு. அயல் நடத்தல் என்க. அயல் - வேற்றிடம். நாண்மீன்கள் - நக்ஷத்திரங்கள். பாடுபெயர்தல் - இடம் பெயர்தல்; வீழ்தலுமாம். எனும் உவை நான்கும் காண்டற்கு ஒல்லாவாம் என இயைக்க.

[2] ஆகிந்த! கோக! என்பன: சண்டாளர்கள் ஒருவரையொருவர் அழைக்கும் குறிப்புமொழிகளாம்.

[3] மேன்மாளிகைகளில் உள்ள பெண்கள் சாருதத்தனது நிலைகண்டு அழுதலான், அவர்கள் கண்களினின்றும் நீரொழுக, அதனைக்கண்டு இவ்வாறு கூறினன். அந் நீரொழுக்கம் பருமை வெண்மை வெம்மை என்னும் இவற்றை உடைமையால் அது விண் அழுதலாகவும் வச்சிரப்படை உருகி வீழ்தலாகவும் தற்குறிப்பேற்றத்தாற் கூறப்பட்டது. இடி - வச்சிரப்படை. வீழ்தல் ஈண்டு உருகி வடிதலின்மேற்று. இடியின்வீழ்ச்சி அரசற்குவிளையுந் தீங்குகளுக்கு நிமித்தம் என்பதும் புலப்படுத்தவாறு.

இரண்டாமவன்—அடே! கோக!

வெண்பா.

321. விண்ணு மழுவில்லை மேகமின்றி யேயசனி
நண்ணி விழவுமில்லை நங்கையராங்—கொண்மூ
வினம்பொழியுங் கண்ணீ ரிடைபரு தீங்கு
மனம்பதற வீழுமான் மற்று. (க)

இன்னும்,

கலிவிருத்தம்.

322. [1]கொலையுறு மிவனையாங் கொணர்தல் கண்டுளம்
அலைவுறு மாந்தர்க ளனைவ ருங்குழீஇ
மலைவுற வழுதலின் வழிகண் ணீரினால்
நிலமுறு புழுதிமே லெழுத னீங்கிற்றே. (கo)

சாருதத்தன்—[துன்பத்தோடு பார்த்து]

323. [2]அரமியத் துலவுமிவ் வணங்க ளூரெழில்
விரவுசா ளரத்திறை முகம்வெ ளிப்படீஇத்
தருதுய ருறுமெனைச் சாரு தத்தவென்
றுரைகொடு தூம்பென வொழுக்கு வார்கணீர். (கக)

சண்டாளர்கள்—வா. அடே! சாருதத்த! வா. இது தான் பறைசாற்றுமிடம். பறையை [3]அடியுங்கள். குற்றத்தை வெளிப்படுத்திச் சொல்லுங்கள்.

---

[1] நிலத்துப் புழுதிகளைனைக்கும் அத்துணைக்கண்ணீர் ஒழுகின வென்னும் இது உயர்வுநவிற்சியணியாகும். இதனாற் சாருதத்தன் யாவர்க்கும் இனியன் என்பது புலப்படும்.

[2] இறை - சிறிது. வெளிப்படீஇ - வெளிப்படுத்து. உரைகொடு - சொல்லிக்கொண்டு.

[3] "அடியுங்கள்; சொல்லுங்கள்" என்பன அவ்வத்தொழிலாளரை நோக்கிக் கூறப்பட்டனவாம்.

சண்டாளர்கள்—கேளுங்கள். பெரியோர்களே! கேளுங்கள். இவன் வாணிகத்தொழிலாளனாகிய வினயதத்தனுடைய பெயரன்; சாகரதத்தன் மகன்; மாட்சிமிக்க சாருதத்தனென்னும் பெயருடையனுவான். தகாதசெயலைச் செய்பவனாகிய இவன், வசந்தசேனை என்னும் கணிகையை இழிந்தபொருள் காரணமாகச் சனவழக்கமில்லாத புட்பகரண்டகமென்னும் பழைய பூந்தோட்டத்தையடைவித்து அவளைக் கையினால் நெரித்துக்கொன்றான். அதுபற்றி இவன் களவுப்பொருளோடு பிடிக்கப்பட்டான். குற்றத்தைத் தானும் உடன்பட்டான். ஆதலிற் பாலகன் என்னும் அரசர் இவனைக் கொன்றுவிடும்படி எங்களுக்கு ஆணைதந்தார். இம்மைக்கும் மறுமைக்கும் மாறுபாடான இத்தகைய தகாதசெயலைச் செய்யும் மற்றையோரையும் பாலகன் என்னும் அரசர் இப்படியே தண்டித்துவிடுவார்.

சாருதத்தன்—[துன்பத்தோடு தனக்குள்]

நேரிசையாசிரியப்பா.

324. வாய்மைசான் மகம்பல வழிவழி யியற்றித்
தூய்மைசான் றொளிருமென் றெழுகுலமுன்னைநாள்
வேள்விச் சாலையிற் கோளிறீக் கடவுளைப்
பற்றிய மறைகளின் உற்றநல் லொலிகளாற்
களக்கமற் றுயர்ந்து விளக்கமுற் றுளதால்
இற்றைநா ளதுவே யிறத்தலா நிலையினைப்
பற்றிய வென்றன் பாவமே லீட்டால்

தண்டம் வெளியிடேஉர் தானத் திங்ஙன்
தகுதியின் மாக்கள் சாற்றிடப்
பறையொலி யொடுவெளிப் படுவதா லங்கோ.[1] (கஉ)

[[2]நடுக்கமுற்றுச் செவிகளைப்பொத்திக்கொண்டு] ஆ! காதலி! வசந்தசேனை!

கலிவிருத்தம்.

325. [3]மறுவிறன் கதிரொளி மானும் வெண்ணகைச்
செறியெழிற் பவளவாய்த் தெரிவை நின்னிதழ்
உறுசுவை யமுதநன் குண்ட யானெவன்
பிறர்வய முறீஇப்பழி விடமுண் பேனரோ. (கங)

சண்டாளரிருவரும்—விலகுங்கள். ஐயன்மீர்! விலகுங்கள்.

---

[1] தண்டம் ஈண்டு அதற்குரிய குற்றத்தையுணர்த்தும். மறையொலிகளின் நிலையிற் பறையொலியும், வேள்விச்சாலையின் நிலையிற் குற்றத்தை வெளிப்படுத்துப் பறைசாற்றும் இடமும் அமைந்தன வென்னும் இதனால், முன்னைநிலைக்கும் இற்றைநிலைக்கும் உள்ள பிறழ்ச்சிவேறுபாடு பெரிதென்பது கருத்து.

[2] நடுக்கம் வசந்தசேனையின்கொலையைப்பற்றியசெய்தியைக் கேட்கப்பொறாமல் உண்டாயது.

[3] எவன் - எப்படி. "பிறர்வயத்தனும்நிலையினின்று எங்ஙனம் பழிவிடம் உண்பேன்?" என்றதனால், இதழமுதுண்ணுங்கால் தன் வயத்தனும்நிலையினின் றுண்டானென்பது போதரும். நின்னைப் பிரிந்த எனக்கு உயிர்வாழ்தலில் விருப்பம் இன்று; பழியோ மிகவும் வருத்துகின்றது; அப்பழியும் நின்னைப்பற்றிநிகழ்ந்தது மிகவும் பொறுத்தற்கரிய துன்பந்தருவதாம் என்று வருந்தினன் என்பது கருத்து.

வெண்பா.

326. [1]நல்லோர் துயர்க்கடலை நாடிக் கடக்குமணை
யெல்லா வுயர்குணமு மேற்றநிதி—யெல்லார்ந்த
பொன்னு லியலாப்பூண் போகின்ற தின்றேகாண்
என்னே நகரி னெழில். (கச)

இன்னும்,

327. [2]இவ்வுலகி லெல்லோரு மின்புற் றிருப்பார்க்குச்
செவ்வே நலம்புரியச் சிந்திப்பார்—எவ்வத்
துழலு மனிதர்க் குதவி புரிவோர்
மொழியி னரியரென முன். (கரு)

சாருதத்தன்—[நாற்புறமும் பார்த்து]

கலிவிருத்தம்.

328. [3]கலைநுனி யான்முக மறைத்துக் காணுறூர்
விலகியென் னண்பர்கள் விரைந்து செல்வரால்
நலமுடை யவர்க்கய லாரு நண்பரே
அலமரு மவர்க்குற வாரு மில்லையே. (கசு)

---

[1] போகின்றதென்னும் பயனிலைக்கு அணை நிதி பூண் என்பவைகளைத் தனித்தனியே எழுவாயாக்குக. சாருதத்தன்பிரிவால், நல்லோர்க்குக் கேடும் நற்குணங்களுக்கு உறையுளின்மையும் நகர்க்கு அலங்காரமின்மையும் உண்டாயினவென்பது கருத்து.

[2] சிறந்த வள்ளலாகிய சாருதத்தனது துன்பநிலையில் அவனைக் குறித்து இரக்கமுறுவார் யாருமிலராயின ரென்பது கருத்து.

[3] ஆடையான் முகத்தைமறைத்தல் துன்பநிலைபற்றிய செயலாம். நண்பர்கள் விலகிச்சேறற்குக்காரணம், கொடுங்கோலனாகிய அரசனை எதிர்க்கும் ஆற்றலின்மையும் தற்காப்புவிருப்பமுமாகும். அலமரல் - துன்புறுதல்.

சண்டாளரிருவரும்—எல்லோரும் விலகினர். இராசவீதி சனங்கள் இல்லாததாயிற்று. கொலைப்படுதற்குரிய அடையாளங்களையுடைய இவனைக் [1]கொண்டுவாருங்கள்.

[சாருதத்தன் பெருமூச்செறிந்து "நேசமார்மைத்திரேய" என்னும் (9-ஆம் அங்கம் 29-ஆம்) செய்யுளைக் கூறுகின்றான்.]

[வேடசாலையுள்]

[2] ஆ! தந்தையே! [3] ஆ! அன்புமிக்க நண்பரீர்!

சாருதத்தன்—[கேட்டு வருத்தத்துடன்] ஓ! புலைஞர்சாதித் தலைவ! யான் உன்னிடத்தினின்றும் ஒன்றைப் பெறவிரும்புகின்றேன்.

சண்டாளர்—என்ன? [4]எங்கள்கையினின்று ஒன்றைப் பெறவிரும்புகின்றாயா?

சாருதத்தன்—[தனக்குள்] [5]தீவினை நீங்குக. [6]இச்சண்டாளன், ஆராயாமற்செய்யும் தீயொழுக்கமுடையோனாகிய அரசன் பாலகனைப்போல்வானல்லன். [வெளிப்படையில்]

---

[1] தொட்டுப்பிடித்தற்குரிய அதிகாரிகளைநோக்கிக் கூறியது.

[2] இஃது உரோகசேனன்கூற்று.

[3] இது மைத்திரேயன்கூற்று.

[4] நீ ஏற்றுக்கொள்வதானால் எங்களுக்குத் தடையின்று என்பது கருத்து.

[5] சண்டாளர்கையினின்றும் தான் ஒருபொருள்பெற விரும்புவதாக அவர் எண்ணுதற்குக் காரணமாகநின்ற தீவினை நீங்குக என்பது கருத்து.

[6] பாலகன் என்னும் அரசன் உண்மையையுணராமற் கொலைசெய்யக் கட்டளையிட்டதனால் தீயொழுக்கமுடையனாவான். இச்சண்டாளனோ பிறர்க்குக்கொடுக்குந் தகுதியில்லாத தன் தன்மையையுணர்ந்தும் இவ்வாறு வினாவினன். கொலையாளியாக நியமிக்கப்பட்டும், கொலைப்படற்குரிய எனது முன்னை ஒழுக்கத்தின் நம்பிக்கையால் என் விருப்பத்துக்கு இணங்குகின்றான். இதனால் இவன் அவனைப்போல்வானல்லன் என்பது கருத்து.

மறுமைப்பயன்குறித்துப் புதல்வன்முகத்தைக் காண்பதற்கு [1]வேண்டுகின்றேன்.

சண்டாளர்—அப்படியேசெய்.

[வேடசாலையுள்]

ஆ! தந்தையே! ஆ! ஐய!

[சாருதத்தன் கேட்டுத் துன்பத்தோடு ஓ! "புலைஞர்சாதித்தலைவ!" (368-ஆம் பக்கம்) என்பது முதலியவற்றைச் சொல்லுகின்றான்.]

சண்டாளர்—ஓ! நகரத்தவர்களே! கணப்பொழுது வழி விடுங்கள். இப்பெருமான் சாருதத்தன் தன் மகன்முகத்தைப் பார்க்கட்டும். [வேடசாலையைநோக்கி] ஐய! இதோ இதோ வருகின்றான். வா. அடே! குழந்தாய்! வா.

[அதன்பின் குழந்தையை அழைத்துக்கொண்டு விதூடகன் வருகின்றான்.]

விதூடகன்—குழந்தாய்! விரைந்துவா. விரைந்துவா. உன் தந்தையைக் கொல்லுதற்குக் கொண்டுபோகின்றனர்.

குழந்தை—ஆ! தந்தையே! ஆ! ஐய!

விதூடகன்—ஆ! அன்புமிக்க நண்பரீர்! யான் தங்களை [2]எங்கேகாண்பேன்.

சாருதத்தன் — [புதல்வனையும் நண்பனையும் பார்த்து] ஆ! மகனே! ஆ! நண்ப! [துன்புறுதலை அவிநயித்து] ஆ! துன்பம்.

---

[1] இரத்தற்கு இரக்கப்படுவானது சாதிநிலை கருதத்தக்கதன்று; குணநிலையே கருதற்பாலது. ஆதலின் ஈண்டு "வேண்டுகின்றேன்" என்றான் என்க.

[2] உயிர்களின் வினைகளுக்குத் தக்கவாறு மறுமையிலும் இடம் வேறுபடும். ஆதலின் ஒன்றுகூடலரிதென்பது கருத்து.

கலிவிருத்தம்.

329. [1]அம்மையா முலகினி லளவில் காலமா
விம்மனுற் றுண்ணுநீர் வேட்கை விஞ்சுவேற்
கிம்மகன் றருப்பனைத் தியைக்கு நீருணு
அம்மவோ சிறியதா யமையு மாலரோ. (கஎ)

புதல்வன்பொருட்டு எதனைக்கொடுப்பேன்! [தன் உடம்பைப்பார்த்துப் பூணூலைக்கண்டு] ஆம். எனக்கு இஃது ஒன்று இருக்கின்றது.

கலிவிருத்தம்.

330. [2]பொன்புனை மணியினுற் பொருந்த லின்றியே
யன்பமை யந்தணர்க் கணியி னுயது
தென்புல வாணர்க்குந் தேவர்க் குங்கடன்
இன்புற விறுத்தன்மற் றிதனி னுகுமால். (கஅ)

[என்று பூணூலைக் கொடுக்கின்றான்.]

சண்டாளன்—வா. அடே! சாருதத்த! வா.

இரண்டாமவன்— அடே! பெருமான் சாருதத்தனைப் பெருமைகுறிக்கும் அடைமொழியின்றிப் பெயர்மாத்திரம் சொல்லி அழைக்கின்றாய். அடே! பார்.

---

[1] புதல்வன் ஒருவனுதலானும் அவன்மாட்டுவைத்த அவா ஒழிவெய்தாமையானும் அவன் உதவும் நீர் தன் பேரவாவைப் போக்குதற்குப் போதியதாகாதென்பான் "நீருணு......சிறியதா யமையும்" என்றான் என்க.

[2] இதனின் - இப் பூணூலினுல். தேவர்கடன் இறுக்குங்கால் இடத்தோளினும் தென்புலத்தார்கடன் இறுக்குங்கால் வலத் தோளினும் பூணூல் அணிதல் விதியாம். ஈரிடத்தும் அணிதலை முறையே உபவீதமெனவும் பிராசீனுவீதமெனவும் கூறுப.

ஆசிரியவிருத்தம்.

331. [1]அல்லினன் பகலின் மற்றை
யாக்கத்தி னழிவி னென்றும்
வல்லவெத் தடையி னானு
மறிபடா வழிமேற் கொண்டு
பல்லவாங் குழுவிற் புக்குத்
தாயினைப் பற்றுங் கன்றிற்
புல்லுமால் விரைந்து தற்செய்
புருடனை நாடி யூழே. (கசு)

மேலும்,

332. [2]குன்றெனுங் குணத்தான் சீர்த்தி
குன்றிய தெனினு முன்னர்
நின்றுநாந் தலைவ ணங்க
னேரிதாங் கரிய பாம்பு
சென்றுற விழுங்கிற் றேனுந்
திங்களஞ் செல்வன் றன்னை
நன்றுற வணங்கி வாழ்வர்
நானிலத் துள்ளா ரன்றே. (உ0)

---

[1] ஊழைக் கடத்தற்கு ஒருவனாலும் இயலாதென்பது கருத்து. "பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தே தற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு." (நாலடியார் 11-ஆம் அதிகாரம். செய்—1.) என்பது ஈண்டு ஒப்புநோக்கற்பாலது.

[2] கரிய பாம்பு - இராகு. இராகுவினாற் பற்றப்பட்ட சந்திரனை மக்கள் நீராடித் தருப்பணஞ்செய்தன்முதலியவற்றாற் சிறப்புமுறையிற் போற்றுதல்போலக் கேடுற்றிருக்கும் ஒரு பெருந்தகையாளனை எல்லோரும் அவமதியாமற் பாராட்டவேண்டும் என்பதாம்.

குழந்தை—அடே! அடே! சண்டாளர்களே! என் தந்தையை எங்கே கொண்டுபோகின்றீர்கள்?

சாருதத்தன்—குழந்தாய்!

ஆசிரியவிருத்தம்.

333. [1] அருந்துயர முளந்தாங்க வலரிமலர்
மாலைகள மணியிற் றாங்கப்
பொருந்துதிருத் தோள்சூலப் பொறைதாங்க
வுயிர்தாங்கிப் பொலியுந் தேவர்
அருந்தவருள் வேள்வியிலே மறைமொழியிற்
கொலைப்படச்செல் லாடு போலப்
பெருந்துயரத் தொடுகொலைஞர் பின்றொடராக்
கொலைக்களத்தே பெயர்கின் றேனல். (உக)

சண்டாளன்—குழந்தாய்!

வெண்பா.

334. [2] சண்டாளர் தங்குலத்திற் றாம்பிறந்தே மாயினுமுன்
சண்டாள ரல்லேந் தகவுநனி—கொண்ட
பெருமை யுடையாரைப் பேதுறுக்குந் தீயர்
கருமமுறு சண்டாளர் காண். (உஉ)

---

[1] துயரம் - புகழ்கெடவரும் பழிபற்றியது. தோளிற் சூலந் தாங்குதல் கொலைக்குரிய தான் இவர்தற்பொருட்டாம். சூலம் ஈண்டுக் கழுவையுணர்த்தும்.

[2] முன்பிறந்தேம் ஆயினும் என இயைக்க. எங்களுக்குப் பிறப்புப்பற்றி நேர்ந்த சண்டாளத்தன்மை இப்பிறப்பளவினும் மேற்றொடர்வதின்று. கன்மம்பற்றிநேரும் சண்டாளத்தன்மை பலபிறப்பினுந் தொடர்வதாகும். ஆதலின், கன்மசண்டாளரை நோக்க, யாங்கள் சண்டாளரல்லேம் என்றார் என்பதாம். பெருமை யுடையாரைப் பேதுறுக்குந்தியர் கன்மசண்டாளராவர் என்றதனால், சகாரன் பாலகன் முதலியோர் அன்னாராவரென்பது குறிப்பிற் புலப்படுத்தவாறு.

குழந்தை—அப்படியானல் என் தந்தையை ஏன்கொல்லு கின்றீர்கள்?

சண்டாளன்—நிறைநாட்செல்வ! இந்நிகழ்ச்சியில் அரச னுடைய ஆணையே குற்றமுடையதாகும். [1]யாங்கள் பிழை யுடையேமல்லேம்.

குழந்தை—என்னைக்கொல்லுங்கள். என் தந்தையை விடுங்கள்.

சண்டாளன்—சிரஞ்சிவி! குழந்தாய்! இப்படிச்சொல்லு கின்ற நீ என்னிடத்தினின்றும் நீங்கி [2]நீடுவாழ்க.

சாருதத்தன்— [கண்ணீரோடு மகன்கழுத்தைத் தழுவிக் கொண்டு]

நிலைமண்டில ஆசிரியப்பா.

335. [3]அருமருந் தன்ன திருமக னுடலங்
குழைதர வுவந்து தழுவுமிப் பேறே
சந்தன முசீரஞ் சார்தரா தியைந்து
நெஞ்சிற் பூச நிலவுங் கலவையாம்

---

[1] அரசன்கட்டளையைக் கடவாதுசெய்தல் எங்கள் கடமை யாதலின் "பிழையுடையேமல்லேம்" என்றான்.

[2] உனக்கு இத்தகைய கெடுநிலை ஒருபொழுதும்நிகழவேண்டா வென்பது கருத்து.

[3] தழுவும் இப்பேறே கலவையாமெனவும் சாரமாமெனவும் முடிக்க. நெஞ்சு ஈண்டு மார்பையும் உள்ளத்தையும் உணர்த்தும். உசீரம் - விலாமிச்சைவேர். சந்தனம் உசீரம் இவற்றாலாகிய பூச்சுப் பொருளளவிற்கேற்ப உடலின்புறத்திற்கு இன்பஞ்செய்வ தாம். புதல்வனைத்தழுவுதல் உள்ளத்தைக் குளிர்வித்து நல்லின்பஞ் செய்வதாம்.

[1]செல்வர் வறியவ ரென்றிரு வோர்க்கும்
அல்கா தொத்த அன்பின் சாரமாம். (உ௩.)

["அருந்துயர முளர்ந்தாங்க" என்னும் இவ்வங்கத்து 21 ஆம் செய்யுளை மீண்டுங்கூறிப் பின்னர், பார்த்துத் தனக்குள் "கலைநனி யான்முக மறைத்து" என்னும் இவ்வங்கத்து 16-ஆம் செய்யுளையும் மீண்டும் கூறுகின்றான்.]

விதூடகன்—ஓ! இனியமுகமுடையீர்! அன்புமிக்க நண்பராகிய சாருதத்தரை வீட்டுவிடுங்கள் என்னைக் கொல் லுங்கள்.

சாருதத்தன்—தீவினை ஒழிக [பார்த்துத் தனக்குள்] இப் பொழுது அறிகின்றேன். ["நலமுடையவர்க் கயலாரும்" என் னும் இவ்வங்கத்து 16 ஆம் செய்யுளின் பிற்பகுதியைக் கூறுகின் றான். (வெளிப்படையில்) "அரமியத்துலவும்" என்னும் இவ்வங் கத்து 11 ஆம் செய்யுளை மீண்டுங் கூறுகின்றான்.]

சண்டாளன்—விலகுங்கள். ஐயன்மீர்! விலகுங்கள்.

கலிவிருத்தம்.

336. [2]பழிவயப் பட்டுயிர் வாழ்க்கைப் பற்றிலான்
மொழிதரு கயிறறக் கிணற்றின் மூழ்கிய
வழுவில்பொற் குடநிகர் வள்ள றன்னையிவ்
விழிதரு நிலையினிற் காண்ட லென்னையோ. (உ௪)

---

[1] செல்வர் வறியவர் என்னும் இருதிறத்தினர்க்கும் ஏற்றத் தாழ்வின்றி ஒத்துநிலவும் அன்பினது சாரமும் ஆம் என்க.

[2] கிணற்றின்மூழ்கிய பொற்குடம் உடையாமல் உருமறைந்து கிடத்தல்போலச் சாருதத்தன் தன் உயர்குணங்களினின்றும் பிறழாமற் கேடெய்தியுள்ளான் என்பதாம். பொற்குடம் என்றத னால் மட்குடம்வீழின் உடைந்துவிடுமென்பதும் அதுபோற் கயவர் கேடெய்திற் குணப்பிறழ்ச்சியெய்துவரென்பதும் போதரும்.

[சாருதத்தன் துன்பத்தோடு "மறுவிறண் கதிரொளி" என்னும் இவ்வங்கத்து 13 ஆம் செய்யுளை மீண்டுங் கூறுகின்றான்.]

மற்றொருவன்—அடே' மீண்டும் பறைசாற்று.

[சண்டாளன் அங்ஙனமேசெய்கின்றான்.]

சாருதத்தன்— ஆசிரியவிருத்தம்.

337. [1]பொருளற மெலிந்தே யிழிதரு நிலையைப்
பொருந்தினே னிதன்பய னாக
மருளுறீஇ யுயிர்க்கு மிறுதியா நிலைமை
வாய்க்கவும் பெற்றன னன்றித்
திருமிகு வசந்த சேனையை யானே
செகுத்தன னென்னுமித் தீய
வுரைசெவிப் படவீங் கொலிபறை முழக்க
முளத்தினைக் கவற்றுமா லந்தோ. (உரு)

[அதன்பின் சகாரனது இல்லத்து மேனிலத்தில் இருந்தவண்ணமாக விலங்கிடப்பட்ட தாவரகன் என்னும் ரேடன் வருகின்றான்.]

தாவரகன்—[பறையொலித்துக்கூறும் சொற்களைக் கேட்டு மிக்க வருத்தத்தோடு] ஒரு தீங்குமில்லாத சாருதத்தர் கொலை செய்யப்படுகின்றாரோ? என்னை என் தலைவனாகிய சகாரன் விலங்கிட்டுச் [2]சிறைப்படுத்தினான். நிற்க. உரக்கக்கத்து

---

[1] பொருளறமெலிதல், இழிதருநிலையைப்பொருந்துதல், உயிர்க்கு இறுதிநிலைவாய்க்கப்பெறுதல்; என்னும் இவற்றினும், காதலியாகிய வசந்தசேனையை யானே கொன்றதாகச் சாற்றப்படும் பறையொலி என்னுள்ளத்தை மிகவும் துன்புறுத்துகின்றதென்பதாம்.

[2] சிறைப்படுத்தியதால் உண்மையை வெளிப்படுத்திச் சாருதத்தரைக் காத்தற்கு இயலாதவனாகின்றேன் என்பது கருத்து.

கின்றேன். 'கேளுங்கள். ஐயன்மீர்! கேளுங்கள். இப் பொழுது இஃது உண்மை. பாவியாகிய யான் வண்டிமாற்றத் தால் புட்பகரண்டகமென்னும் பழைய பூந்தோட்டத் திற்கு வசந்தசேனையைக் கொண்டுசேர்த்தேன். பின்னர் என் தலைவன் சகாரன் வசந்தசேனையைநோக்கி "என்னை விரும்புகின்றாயல்லை" என்று சொல்லி அவளைத் தன்கையால் நெரித்துக் கொன்றுவிட்டான். இப்பெருமான் சாருதத்தர் கொல்லவில்லை.' என் சொற்களை மிகுதூரமாக இருத்தலால் ஒருவரும் கேட்கின்றார்களில்லையே! ஆதலால் என்ன செய் வேன்! என்உடம்பைக் கீழேவிழ்த்துகின்றேன். [நினைவுற்று] இப்படிச்செய்வேனாயின் பெருமான் சாருதத்தர் கொல்லப் படமாட்டார். நிற்க. இம்மேனிலத்து வழியிடத்தினின்றும் இப்பழமையான சாளரத்தின்வழியாக என் உடம்பைக் கீழேவிழ்த்துகின்றேன். யான் இறப்பது நல்லதே. நற் குலத்துத் தோன்றிய நல்லோராகிய பறவைகள் வாழ்தற் குரிய நன்மரமாகிய இப்பெருமான் சாருதத்தர் இறப்பது நல்லதன்று. யான் இங்ஙனம் இறப்பேனாயின் மறுமை யின்பத்தை யடைவேன். [என்று தன் உடலைக் கீழேவீழ்த்து கின்றான்.] ஆ! ஆ! நான் இறக்கவில்லையே! எனக்குத் [1]தண்டத்தோடு இயைத்து பிணைக்கப்பட்ட விலங்கும் முறிந்துபோயிற்று. ஆதலின் சண்டாளன் பறைசாற்றிக் கூறும் இடத்தைத் தேடிச்செல்கின்றேன். [அவ்விடத்தைக் கண்டு அருகிற்சென்று] ஆ! ஆ! சண்டாளர்களே! வழி வேண்டும். வழிவேண்டும்.

---

[1] தண்டமாவது கால்களை விரும்பியவாறு மடக்குதற்கும் நீட்டுதற்கும் இயலாதவண்ணம் குறுக்காக அமைக்கப்படுவது.

சண்டாளர்கள்—அடே! யார் வழிவேண்டுகின்றவன்?

[சேடன் "கேளுங்கள் ஐயன்மீர்! கேளுங்கள்." (பக்கம்-376) என்று தொடங்கி முன்சொல்லியவற்றைக் கூறுகின்றான்.]

சாருதத்தன்—ஆ! யான்,

வெண்பா.

338. காலன்கைப் பாசத்தாற் கட்டுண்டு துன்புறாஉம்
வேலைதனி னீரறவின் மெய்வாடிச்—[1]சால்புதவிர்
பைங்கூழ் செழிக்கப் பயன்செய் கருமுகில்போல்
இங்குற்றான் யாவ னிவன். (உசு)

ஓ! ஓ! நீங்கள் கேட்டீர்களா!

கலிவிருத்தம்.

339. [2]இறப்பதற் கஞ்சுவே னல்ல னின்புகழ்
மறப்பழி யாற்கெடல் வாதை செய்யுமால்
திறப்படுந் தூய்மையிற் றிறம்ப லின்றியான்
இறப்பது மகப்பெறு மின்ப மாகுமால். (உஎ)

மேலும்,

---

[1] சால்பு - குணம்.

[2] யான் தூய்மையினின்றும்திறம்பவில்லை என்னும் உண்மையை உலகம் அறியுமாயின், பொய்யாக ஏறிடப்பட்ட குற்றத்தோடு உயிர் வாழ்தலினும் இறத்தல் இன்பந்தருவதாகும் என்றவாறும்.

வெண்பா.

340. [1]முற்பகைமை யில்லான் மொழியுஞ் சிறுமதியான்
அற்பன் மரபொழுக்க மற்றுநின்றான்—இப்பொழுது
மாசு படுத்தியெனை வாட்டினான் வன்னஞ்சு
பூசுநதி யம்பிற் புகுந்து. (உஅ)

சண்டாளர்கள்—தாவரக! உண்மையாகச் சொல்லுகின்றாயா?

சேடன்—உண்மையே. யார்க்கும் இச் செய்தியைச் சொல்லக்கூடாதென்றுகூறித் தன் இல்லத்தின் மேனிலத்து வழியில் என்னையும் தண்டத்தோடியைந்த விலங்கினாற் பிணித்துவைத்தான்.

[வந்து]

சகாரன்—[மகிழ்ச்சியோடு]

ஆசிரியவிருத்தம்.

341. கைப்பொடு புளிப்புச் சார்ந்த
கறிகளு மிறைச்சித் துண்டும்
நற்சுவைப் பருப்பு மீனு
நல்லநெல் லரிசிச் சோறும்
துய்ப்புறற் கினிய வெல்லச்
சோறுமென் னில்லி னுக்கி
யிப்படித் தினமு முண்டே
யின்பமுற் றிருப்பன் யானே. (உகூ)

---

[1] அற்பன் - சகாரன். இல்லானும் மதியானும் அற்றுநின்றானு மாகிய அற்பன் என்க. அம்பின் - இன் ஐந்தாவது உவமப்பொருளில் வந்தது.

[செவிசாய்த்துக் கேட்டு]

உடைந்த வெண்கலத்தைப்போற் கணகணவென்று கடுமையாக ஒலிக்கின்ற சண்டாளனது பேச்சுக்குரல் கேட்கப்படுகின்றது. நீண்டு இசைக்கின்ற இக்கொலைப்பறையின் ஒலியும், படகவாத்தியங்களின் ஒலியும் கேட்கப்படுகின்றமையால், வறியவனாகிய சாருதத்தனைக் கொலைக்களத்துக்குக் கொண்டுவருகின்றார்கள் என்று எண்ணுகின்றேன். அதனைப் பார்ப்பேன். பகைவனதுமரணமோ என் உள்ளத்திற்கு மிகப்பெருமகிழ்ச்சியாகும். எவன் கொலைசெய்யப்படும்பகைவனைப் பார்க்கின்றானோ அவனுக்கு மறுபிறப்பிற் கண்ணோய் வாராது என்னும் இச்செய்தியை யான் கேட்டிருக்கின்றேன். நச்சுப்பொருளிடுக்கினுள்ளேபுகுந்த புழுவைப்போல வெளிப்படுதற்குரிய யாதேனும் ஒருவழியைத் தேடுகின்ற யான், வறியவனாகிய அச் சாருதத்தனுக்கு மரணத்தை விளைத்தேன். இப்பொழுது என் இல்லத்தின் மேனிலவழியில் ஏறிநின்று என் பராக்கிரமத்தைப் பார்க்கின்றேன். [அங்ஙனமே ஏறிநின்று பார்த்து] என்னே! என்னே! வறியவனாகிய இச் சாருதத்தனைக் கொலைக்களத்திற்குக் கொண்டுபோகுங்கால் இத்துணைச் சனநெருக்கம்உள்ளதே! என்னைப் போன்ற பெரியமனிதனைக் கொலைக்களத்திற்குக் கொண்டுபோகும்பொழுது எத்துணைக்கூட்டம்உண்டாகும்! [பார்த்து] புதிய காளையைப்போல் அலங்கரிக்கப்பட்ட அச் சாருதத்தனை இதோ தென்திசையைநோக்கிக் கொண்டுபோகின்றனர். எதற்காக நம் இல்லத்தின் மேன்மாளிகைக்கு அணிமையில் பறையொலி தடைப்படுத்தப்பட்டு ஒழிவுற்றது? [பார்த்து] என்ன? தாவரகன் என்னும் சேடனும் இங்கு

இல்லையே? அவன் இங்குநின்றும் போய் நம் இரகசியத்தை வெளிப்படுத்தாமலிருக்கவேண்டுமே? ஆதலின் அவனைத் தேடுகின்றேன். [என்று கீழே இறங்கிவருகின்றான்.]

சேடன்—[பார்த்து] [1]ஐயன்மீர்! இதோ [2]அவன் வருகின்றான்.

சண்டாளர்கள்—

வெண்பா.

342. [3]ஓடுமின்கள் வாயி லுறுகதவைத் தாழிடுமின்
கூடி யொருமொழியுங் கூறன்மின்—காடி
வழிவிடுமின் பொல்லா மதக்கூர்ங்கோட் டேறீண்
டுழிதருமா னம்மெதிரே யுற்று. (கo)

சகாரன்—அடே! அடே! வழிவிடுங்கள். வழிவிடுங்கள். [அணிமையிற்சென்று] மகனே தாவரக! சேட! வா போவோம்.

சேடன்—ஏ! ஏ! இழிதகவ! வசந்தசேனையைக்கொன்று அவ்வளவின் மகிழ்ச்சியடைந்தாயல்லை. இப்பொழுது இரப்போர்க்குக் கற்பகதருவாகவிளங்கும் பெருமான் சாருதத்தரையும் கொல்லுதற்குமுயன்றுவிட்டாய்.

---

[1] இவ்விளி அங்குக்கூடியிருக்கும் மக்களைப்பற்றியது.

[2] சுட்டு வசந்தசேனையைக் கொலைபுரிந்த கொடியோன் என்பது உணர்கின்றது.

[3] மதமாகிய கூரியகோட்டினையுடைய பொல்லாத ஏறு என்றது சகாரனை. மதம் - செருக்கு. உழிதால் - திரிதல்.

சகாரன்—[1] மணிக்குடத்தையொத்த யான் பெண்கொலை செய்யவில்லை.

சனங்களெல்லோரும்—ஓ! நீதான் கொன்றாய். பெருமான் சாருதத்தர் கொல்லவில்லை.

சகாரன்—எவன் இப்படிச் சொன்னான்?

எல்லோரும்—[சேடனைக் குறிப்பிட்டு] இப் பெரியோன் சொல்லினான்.

சகாரன்—[ஒருபுறந்திரும்பி அச்சத்தோடு தனக்குள்] ஓ! ஓ! தாவரகன் என்னும் சேடனை யான் நன்றாக விலங்கிட்டுக் கட்டவில்லையே? இவன்றான் என் தகாதசெயலுக்குச் சான்றாவான். [நினைவுற்று] இப்படிச்செய்வேன். [வெளிப்படையில்] ஐயன்மீர்! இது பொய். ஆ! ஆ! இச் சேடன் பொற்பணியைத் திருடினமையால் இவனை யான் பிடித்து அடித்துக் [2]கொன்று கட்டினேன். அதுபற்றிப் பகைவனான இவன் எதனைச் சொல்லுகின்றானோ அஃது உண்மையாகுமா? [[3]மறைவாகச் சேடனுக்குக் கைக்காப்பைக் கொடுக்கின்றான். மெல்ல] மகனே! தாவரக! சேட! இதனைப்பெற்றுக்கொண்டு மாறுபடச்சொல்.

---

[1] மணிக்குடம் - இரத்தினத்தாற் செய்யப்பட்ட குடம். அது சிறப்புக்கும் தூய்மைக்கும் உவமையாகும்.

[2] கொன்று கட்டினேன் என்பது முரணும்.

[3] மறைவாகக் காப்பைக்கொடுத்தல் தன்குற்றத்தை வெளிப்படுத்தாமலிருத்தற்கும் பின்னர்ச் சேடன்பால் திருட்டுக்குற்றத்தை ஏறிடற்குமாம்.

சேடன்—[பெற்றுக்கொண்டு] பாருங்கள். பாருங்கள். பெரியோர்களே! ஆ! ஆ! பொற்காப்பினுல் என்னை ஏமாற்றுகின்ருன்.

சகாரன்—[காப்பைப் பிடுங்கிக்கொண்டு] இதுதான் அப் பொற்காப்பு. இதனைத் திருடியதுகாரணமாகவே யான் விலங்கிட்டேன். [சினத்தோடு] ஆ! சண்டாளர்களே! இவன் என்னுற் பொற்கருவூலத்திற்குக் காவலாக நியமிக்கப்பட்டுப் பொற்பணியைத் திருடினமையால் இவனைக் கொன்று அடித்தேன். இதனை நீங்கள் நம்பவில்லையாயின் இவன் முதுகைப் பாருங்கள்.

சண்டாளர்—[பார்த்து] நன்ருகச்சொன்னீர். துன்புறுத்தப்பட்டசேடன் எதைத்தான்சொல்லமாட்டான்?

சேடன்—அந்தோ! [1] அடிமைத்தன்மை இத்தகையது! உண்மையை யாரும் நம்பவில்லை. [துன்பத்தோடு] ஐய! சாருதத்தரே! இவ்வளவுதான் என் ஆற்றல். [என்று [2] பாதங்களில் வீழ்கின்ருன்.]

சாருதத்தன்—[துன்பத்தோடு]

---

[1] அடிமையாளன்கூறும் மெய் பொய்யாகவும், தலைவன்கூறும் பொய் மெய்யாகவும் மாறுபடுகின்றன என்பது கருத்து.

[2] காலில்வீழ்தல், நல்லோர்க்கு ஓர் எளியவன் வேறு உதவி புரிய இயலாமையைப் புலப்படுத்தும்.

நிலைமண்டில ஆசிரியப்பா.

343. [1]எழுக எழுக விழுமியோ யெழுக
காரண மெதுவுங் கருதா தெய்திய
உறவோய் செயலெலா மறவோய் நல்லோர்
பாலருள் சுரக்கு மேலோ யெழுக
என்னையிவ் விடர்க்கடல் வீழா தெடுக்க
முன்னிநீ செய்த முயற்சியோ மிகப்பெரி
தாயினு மதன்பயன் றீயவென் னூழாற்
பெறலரி தாயிற் றறவோ யின்னும்
நீசெயக் கடவ வாயின்மற் றிலையே. (௩௧)

சண்டாளர்—பெருமானே! இச்சேடனை அடித்து [2]வெளிப்படுத்துங்கள்.

---

[1] பண்டு தன்னால் ஓர் உதவிபெறுமையையும் எதிர்காலத்தில் உதவிபெறுதற்கு இடமின்மையையும் எண்ணாமலென்பான் "காரணம் எதுவுங் கருதாது" என்றான். செயல் எல்லாம் அற ஓய் நல்லோர் - ஆற்றல் எல்லாம் ஒழியத் தளர்ந்திருக்கும் பெரியோர். மேன்மாளிகையினின்றும் வீழ்தல், தலைவன்கட்டளைகடத்தல் முதலிய அருஞ்செயல்களைநோக்கி 'முயற்சியோ மிகப்பெரி'தென்றான் என்க. "நீ செயக்கடவ ஆயின் மற்று இல்லை" என்றதனால், இயன்றவெல்லாம் செய்தனை; என் தீயூழ் தடைப்படுத்திற்று. ஆதலின், ஆற்றலில்லாதவனைப்போல என் கால்களில் வீழ்தல் உனக்குப் பொருந்தாதென்பது போதரும்.

[2] சோற்றுக்கடனை வீணாக்கித் தலைவன்பொருளையும் கவர்ந்து அவனைப் பழித்துரைப்பவனை வைத்துக்கொள்ளலாகாதென்பது கருத்து.

சகாரன்—அடே! வெளியே போ. [என்று வெளிப்படுத்துகின்றான்.] ஓ சண்டாளர்களே! ஏன் காலந்தாழ்க்கின்றீர்கள்? இவனைக் கொல்லுங்கள்.

சண்டாளர்கள்—விரைந்துசெய்ய விரும்புவீர்களாயின் [1]நீங்களே கொல்லுங்கள்.

உரோகசேனன்—ஓ சண்டாளர்களே! என்னைக் கொல்லுங்கள். தந்தையை விடுங்கள்.

சகாரன்—மகனோடுகூட இவனைக் கொன்றுவிடுங்கள்.

சாருதத்தன்—இம்மூர்க்கன் [2]எல்லாவற்றையுஞ் செய்வான்; ஆதலின், மகனே! தாயின்பக்கலிற் செல்.

உரோகசேனன்—யான் போய்ச் செய்யவேண்டியதென்ன?

சாருதத்தன்— கலிவிருத்தம்.

344. [3]என்னரும் புதல்வநீ யினிய தாயுடன்
மன்னிய தவவனம் வல்லை சேர்தியால்
என்னுறு பிழையினு னீயு மிங்கிலை
துன்னுறப் பெறுதலைத் துறத்தி யாலைய. (கூஉ)

---

[1] எங்களுக்குக் கொலையில்விருப்பமின்று; கட்டளைகடவாமையொன்றே மேற்கொள்ளத்தக்கதாயிற்று என்பது கருத்து.

[2] நின்னையுங் கொலைபுரிவான். இவன் கொடுஞ்செயற்குக் காரணம்வேண்டுமென்பதின்று. அதற்கு யானே எடுத்துக்காட்டாவேன் என்பதாம்.

[3] கொடுங்கோலனாகிய அரசனதுநாட்டில் இருத்தலாகாதென்பான் "தவவனம் வல்லை சேர்தி" என்றான். இங்கிலை - கொலைப்படும்நிலை. "இவன்தந்தை குற்றவாளியாதலின் இவனையும் கொன்றுவிடவேண்டு" மென்று சகாரன் கூறுவானாயின், அவனிடத்து நம்பிக்கைமிக்க பாலகன் என்னும் அரசன், ஆராய்ச்சியிலனாய்க் குற்றம் ஒருசிறிதுமில்லாத நின்னையும் கொலைபுரிவிப்பன் என்பது கருத்து.

ஆதலின் நண்ப! மைத்திரேய! இவனை அழைத்துக் கொண்டுபோ.

விதூடகன்—ஓ! நண்பரீர்! தங்களைப் பிரிந்து யான் உயிர் தாங்கிவாழ்வேன் என்று நீங்கள் அறிந்திருக்கின்றீர்களா?

சாருதத்தன்—நண்ப! [1]சுதந்திரமான வாழ்க்கையுடைய நீ உயிரைவிடல் தகுதியன்று.

விதூடகன்—[தனக்குள்] இது பொருத்தமே. ஆயினும், அன்புமிக்க நண்பரைப்பிரிந்து உயிர்தாங்கிவாழ்தற்கு ஆற்ற லில்லேன் என்பது உறுதியே. ஆதலின், பார்ப்பனியின் பால் குழந்தையைக் கொடுத்துவிட்டு யான் உயிர்நீங்கி என் அன்புமிக்க நண்பரைப் பின்றொடர்வேன். [வெளிப்படையில்] ஓ! நண்பரீர்! இக்குழந்தையை விரைந்து தூரத்திற் கொண்டு போகின்றேன். [என்று கழுத்தைப் பிடித்துத் தழுவிக்கொண்டு கால்களில் வீழ்கின்றான்.]

[புதல்வனும் அழுது வீழ்கின்றான்.]

சகாரன்—அடே! சாருதத்தனை அவன் மகனோடுகூடக் கொன்றுவிடுங்கள் என்று சொல்லுகின்றேனே?

[சாருதத்தன் அச்சமுறுதலை அவிநயிக்கின்றான்.]

சண்டாளர்—சாருதத்தனை மகனோடு கொன்றுவிடுங்கள் என்று இவ்வாறு எங்களுக்கு அரசன் கட்டளையிடவில்லை.

---

[1] கொலைப்படற்குரிய யான் வேறு புகலில்லாமையால் இறப் பன். நீ அத்தகையனல்லன் என்பது கருத்து.

ஆதலின் வெளியேபோ. அடே! குழந்தாய்! வெளியே போ. [என்று வெளிப்படுத்துகின்றனர்] இது பறைசாற்று தற்குரிய மூன்றும் இடமாகும். பறையை அடியுங்கள். [மீண்டும் பறைசாற்றிக் கூறுகின்றனர்.]

சகாரன்—[தனக்குள்] இந்நகரத்துமக்கள் என் [1]நம்புகின்றார்களில்லை? [வெளிப்படையில்] அடே! சாருதத்தப் பையலே! இந்நகரத்துமக்கள் நம்புகின்றார்களில்லை. ஆதலின் "வசந்தசேனையைக்கொன்றேன்" என்று உன் நாவினாலேயே சொல்.

[சாருதத்தன் வாய்வாளாவிருக்கின்றான்.]

சகாரன்—அடே! சண்டாளமனித! சாருதத்தப்பையல் பேசுகின்றானில்லை. ஆதலின் கொலைப்பறையை ஒலியெழ அடிக்கும் இம்மூங்கிற்கழியால் இவனை [2]அடித்தடித்துச் சொல்லச்செய்.

சண்டாளன்—[கழியைத்தூக்கிக்கொண்டு] ஏ! சாருதத்த! சொல்.

சாருதத்தன்—[துன்பத்தோடு]

---

[1] சாருதத்தன்பொருட்டு நகரத்துமக்கள் இரக்கங்காட்டுகின்றார்களென்பது கருத்து.

[2] அடித்தடித்து என்னும் அடுக்கு, சொல்லாமலிருக்குந்தோறும் அடிக்கவேண்டுமென்னும் பொருள்பற்றிவந்தது.

கொச்சகக்கலிப்பா.

315. [1] இன்னதுயர்ப் பெருங்கடலுள் வீழ்ந்தழியு மேழைமையேற்
குன்னவரு முளநடுக்க முறுகவலை பிறிதிலையால் [னே
கொன்னுனைவேற் கண்மயிலைக் கொலைப்படுத்தே னெனயா
பன்னவிவ ணுறுநிலையிற் பழிநெருப்புச் சுடுமெனையே. (௩௩)

[சகாரன் மீண்டும் அங்ஙனமே கூறுகின்றான்.]

சாருதத்தன்— ஓ! ஓ! நகரத்தவர்களே! ["மறுமையை யறிகிலா" (அங்கம் 9. செய்யுள் 38.) என்பதனை மீண்டுங் கூறுகின்றான்.]

சகாரன்—"கொன்றேன்" என்றுசொல்.

சாருதத்தன்—அங்ஙனமாக.

சண்டாளருள் முதலாமவன்— அடே! இவன்விடயத்திற் கொலைத்தொழின்முறை உன்னைச் சார்ந்தது.

இரண்டாமவன்—அடே! [2] உன்னைச்சார்ந்தது.

---

[1] நகரத்துமக்களெல்லோரும் நீ கொலைபுரியவில்லை என்று நம்புங்கால் நினக்குப் பழி எவ்வாறுண்டாமெனின், கொலையாளிகள் செய்யுந்துன்பம் பொறுக்கலாற்றாது "வசந்தசேனையை யானே கொன்றேன்" என்று என் நாவினாலேயே சொல்லநேர்ந்ததாகவின், என்னுரையை மக்கள் எங்ஙனம் நம்பாமலிருப்பர்" என்னுங் கருத்தால் "பழிநெருப்புச் சுடுமெனையே" என்றான் என்க. இவண் பன்ன உறும் நிலை - இவ்விடத்திற் சொல்ல நேர்ந்திருக்கும் என் நிலைமை. நிலைமையால் உண்டாகிய பழிநெருப்பு என்க.

[2] என்முறை முன்னரே முடிந்தது என்பது கருத்து.

முதலாமவன்—அடே! எழுதிப்பார்ப்போம். [என்று பலவிதமாக எழுதிக் கணக்கிட்டுப் பார்த்து] அடே! கொலைத் தொழின்முறை என்னதாயின் ஒரு முகூர்த்தப்பொழுது காலந்தாழ்த்தல்வேண்டும்.

இரண்டாமவன்—எதற்காக?

முதலாமவன்—அடே! என்தந்தை இறக்கும்பொழுது என்னைநோக்கி "மகனே! வீரக! உனக்குக்கொலைத்தொழின் முறை வருமாயின் கொலைப்படவேண்டியவனை விரைந்து கொன்றுவிடாதே" என்று சொன்னார்.

இரண்டாமவன்—அடே! எதற்காக?

முதலாமவன்—ஒருசமயம் எவனாவது ஒரு நல்லோன் போதிய பொருளைக்கொடுத்துக் கொலைக்குரியானை விடுவிக்கவுங் கூடும். ஒருகால் அரசனுக்கு மகன்பிறக்க, அதுபற்றியுண்டாம் பிறந்நாட்கொண்டாட்டங் காரணமாகக் கொலைத் தண்டம் எய்தினரெல்லோரும் விடுதலையடையவுங் கூடும். ஒருவேளை யானை மதத்தாற் கட்டுத்தறியைமுறித்துச்செல்ல, அதுபற்றியுண்டாங் குழப்பத்தால் கொலைக்குரியான் விடப்பெறவுங் கூடும். ஒருசமயம் அரசு நிலைமாறுதலாற் கொலைத் தண்டம் எய்தினரெல்லோர்க்கும் விடுதலை யேற்படவுங் கூடும்.

சகாரன்—[1]என்ன! என்ன! அரசு நிலைமாறுதலா?

சண்டாளன்— அடே! கொலைத்தொழில்முறையைப் பற்றி எழுதிப்பார்க்கின்றோம்.

---

[1] தான்செய்த குற்றத்துக்கு அஞ்சி இவ்வாறு கேட்டான்.

சகாரன் — அடே! எழுதிப்பார்த்தது போதும். [1]விரைந்து சாருதத்தனைக் கொல்லுங்கள். [என்று கூறிச் [2]சேடனை அழைத்துக்கொண்டு ஒருதனியிடத்தில் இருக்கின்றான்.]

சண்டாளன்—ஐய! சாருதத்த! அரசனது ஆணையே நிங்கிழைக்கின்றது. சண்டாளர்களாகிய யாங்கள் இல்லை. ஆதலின் எதனை நினைக்கவேண்டுமோ அதனை நினை.

சாருதத்தன்—

நிலமண்டில ஆசிரியப்பா.

346. [3]மதிவலி மாற்றும் விதிமுத லாக
வலியவர் கூறிய வல்லுரை வழக்கால்
அரிதினை றிட்ட துரிசுளே னெனினும்
யான்புரி நல்லறன் வான்றிற லுடையதேல்
ஆதரம் பெருக்குங் காதற் கிழத்தியாம்
மானமார் வசந்த சேனையே வானிற்
பொன்னுடல் பெற்றுப் பொலிவுற் றிருப்பினும்
இந்நில வரைப்பி னெவ்விடத் துறினும்

---

[1] அரசு நிலைமாறுங்கொலோவென்னும் அச்சத்தால் 'விரைந்து' என்றான்.

[2] பகைவனுகிய ஆரியகனைச் சார்ந்தவர்களிடத்தில் உண்மையை வெளிப்படுத்துவான் என்று ஐயுற்றுச் சேடனைத் தன் அருகிலேயேவைத்துக்கொண்டான்.

[3] இச் செய்யுட்பொருள் குளூறவின்பாற்படும். விதிமுதலாக – ஊழ்காரணமாக. இந் நிலவரைப்பின் எவ்விடத்துறினும் – இந் நிலவுலகத்தில் யாண்டேனும் இறவாமலிருப்பினும்.

இப்பொழு தீங்கு மெய்ப்பொலி வோடு
வந்துத னியற்கை வண்மைசால் குணத்தால்
என்பழி துடைத்தே யின்புறுத் துகவே. (கச)

ஓ! நான் எங்கேபோகவேண்டும்?

சண்டாளன்—[முன்னிடத்தைக்காட்டி] அடே! கொலைத் தண்டமுடையார் கண்ட அளவிலேயே விரைந்து உயிர்விடத் தக்க இத்தென்பாற்சுடலை இதோ காணப்படுகின்றது. பார்! பார்!

கலிவிருத்தம்.

347. [1]கழுவிய வரையுட னயந்து நீணரி
யிழிதர வீர்ப்பன வெஞ்சு மோரரை
கழுமுளிற் பதிந்துவேற் றுருக்கொள் காலனார்
விழுமிய பெருஞ்சிரிப் பென்ன மேவுமே. (கரு)

சாருதத்தன்—ஆ! பேறிலனாகிய யான் கெட்டேன்! [என்று வருத்தத்தோடு இருக்கின்றான்.]

சகாரன்—யான் திரும்பிப்போகமாட்டேன். சாருதத்தனைக் கொன்றுமுடியும்வரை பார்த்துக்கொண்டிருப்பேன். [சுற்றிவந்துபார்த்து] என்ன! [2]கீழே இருக்கின்றானே?

---

வசந்தசேனை வெளிப்பட்டு உண்மையைப் புலப்படுத்திவிடுவாளாயின் பின்னர்ப் பழிநீங்கியநிலையில் நேரும் கொலை துன்பந்தருவதன்றாம் என்பது கருத்து. பழி - கொலைக்குற்றம்.

[1] எஞ்சும் ஓர் அரை — எஞ்சிய உடலின் ஓர் அரைக்கூறு. காலனாரது வேற்றுருக்கொள் பெருஞ்சிரிப்பென்னமேவும் என இயைக்க. தசை எலும்பு வெளிப்படக் கழுமுள்ளிற்பதிந்துகிடக்கும் உடற்கூறு, வாய்திறந்து பற்கள்வெளிப்படக் காலன்சிரிப்பதுபோல அச்சம்விளைப்பதா மென்க.

[2] கொலைக்களத்துக்குப்போகாமலிருக்கின்றான் என்பது கருத்து.

சண்டாளன்—சாருதத்த! [1] அஞ்சுகின்றாயா?

சாருதத்தன்—[விரைந்தெழுந்து] அறிவிலாய்! ["இறப்பதற் கஞ்சுவேனல்லன்" என்னும் (இவ்வங்கம் 27-ஆம்) செய்யுளைக் கூறுகின்றான்.]

சண்டாளன்—ஐய! சாருதத்த! [2] ஆகாயத்தில் வாழ்கின்ற சந்திர சூரியர்களும் [3] துன்பம் எய்துகின்றனர். அங்ஙனமாயின் [4] மரணத்திற்கு அஞ்சும் இயல்புடைய மற்றை உயிர்த்தொகுதிகளைப் பற்றியும் மனிதரைப்பற்றியும் [5] சொல்லவேண்டுமோ? உலகத்தில் உயர்ந்தவனொருவன் தாழ்கின்றான். தாழ்ந்தவனொருவன் உயர்கின்றான். [பிறந்தவன் இறக்கின்றான். இறந்தவன் பிறக்கின்றான் என்பதுமாம்.] உண்டாகி அழிகின்ற உடலுக்கு [6] ஆடையின்வீழ்ச்சிபோன்ற வீழ்ச்சி உள்ளது. இப்பொருள்களை உள்ளத்தமைத்துத் தேறுதலடைந்து அச்சமற்றிரு. [இரண்டாமவனை நோக்கி] இது நான்காவதுபறைசாற்றுமிடம். ஆதலின் பறையை முழக்கி அறிவிப்போம்.

---

1 மரணத்துக்கு அஞ்சுகின்றாயா என்பது கருத்து.

2 பிறர் எவராலும் எய்த இயலாத இடத்தில் என்பான் "ஆகாயத்தில்" என்றான்.

3 துன்பம் - இராகு கேதுக்களாற் பற்றப்படுதல்.

4 மரணத்திற்கு அஞ்சும் இயல்பை மனிதர்க்கும் கொள்க.

5 இறப்பு முதலிய துன்பம் எய்துதலைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ என்பது கருத்து.

6 காற்றினால் அலைத்து உயர்த்தப்பட்ட ஆடை அக் காற்றொழிவில் தானே வீழ்தல்போலப் பழவினையாலுண்டாகிய உடல் அதன் ஒழிவில் தானே ஒழியும் என்பதாம்.

[மீண்டும் அங்ஙனமே பறைசாற்றி அறிவிக்கின்றனர்.]

சாருதத்தன்—ஆ! காதலீ! வசந்தசேனே! ["மறுவிறண் கதிரொளி மாறும் வெண்ணகை" என்னும் (இவ்வங்கம் 13-ஆம்) செய்யுளைக் கூறுகின்றான்.]

[அதன்பின் பரபரப்போடு வசந்தசேனையும் துறவியும் வருகின்றனர்.]

துறவி—ஆ! ஆ! தகுதியில்லாத இடத்தில் உயிர்ப் பற்றுக்கிடந்த வசந்தசேனையைத் தேற்றி அழைத்துவரு கின்ற யான், [1] இத்துறவொழுக்கத்தால் அருள்செய்யப்பட் டுளேன். உபாசிகே! தங்களை எங்கே சேர்ப்பிக்கவேண்டும்?

வசந்தசேனை—எம்பெருமான் சாருதத்தரது இல்லத் திற்கே. முயற்கறையாளனாகிய சந்திரனது தரிசனத்தால் ஆம்பலோடை இன்புறுதல்போல அப்பெருமான் தரிசனத் தால் யான் இன்புறச்செய்தல்வேண்டும்.

துறவி-[தனக்குள்] எவ்வழியாகப்போவேன்? [நினைவுற்று] இராசவீதிவழியாகவே போகின்றேன். உபாசிகே! இவ் விராசவீதிவழியே வரவேண்டும். [கேட்டு] ஈதென்ன? இராசவீதியில் கலகலவென்று மிகப்பெரிய ஒலி கேட்கப் படுகின்றது!

வசந்தசேனை—[எதிரேபார்த்து] என்ன? எதிரிற் பெரும் சனக்கூட்டம்! ஐய! இஃ தின்னதென்று அறியவேண்டும். ஒத்ததல்லாத பாரத்தையுடைய உச்சயினிநகரம் ஒருபால்

---

[1] எனக்கு உதவிபுரிந்த வசந்தசேனையைப் பிழைப்பித்தலாகிய இப்பேறம் சீவர ஆடையைக் கழுவமுற்பட்டமையால் உண்டா யிற்று என்பது கருத்து.

உயர்ந்திருக்கும் பூமியைப்போற் காணப்படுகின்றது. [இவ்வுச்சயினீநகரம் ஒத்ததல்லாத பாரத்தால் நிறைந்த தோணியைப் போல் ஒருபக்கம் உயர்ந்துள்ளது. என்பதும் பாடம்.]

சண்டாளன்—இது [1]முடிவாகப் பறைசாற்றுமிடம். ஆதலின் பறையை அடியுங்கள். சொல்லவேண்டியவற்றை உரக்கச்சொல்லுங்கள். [அங்ஙனமேசெய்து] ஓ! சாருதத்த! சித்தமாக இரு. அஞ்சவேண்டா. [2]அதிவிரைவிலேயே கொல்லப்படுவாய்.

சாருதத்தன்—[3]சிறப்புமிக்க தெய்வங்களே!

துறவி—[கேட்டுப் பரபரப்போடு] உபாசிகே! தங்களைச் சாருதத்தர் கொன்றுவிட்டார் என்று சாருதத்தரைக் கொலை செய்தற்குக் கொண்டுபோகின்றனர்.

வசந்தசேனை—[பரபரப்போடு] அந்தோ! அ ந் தோ ! பேறிலளாகிய என் நிமித்தம் பெருமான் சாருதத்தர் கொல்லப்படுகின்றாரா! ஓ! விரைந்து வழியைக்காட்டுங்கள்.

துறவி—புத்தோபாசிகையாகிய தாங்கள் பெருமான் சாருதத்தர் உயிரோடிருக்கும்பொழுதே அவர்க்கு ஆறுதலளித்தற்பொருட்டு விரைந்துவருக. விரைந்துவருக. ஐயன்மீர்! வழிவிடுங்கள்.

வசந்தசேனை—வழிவிடுங்கள். வழிவிடுங்கள்.

---

1 ஐந்தாம் இடம் என்பதாம்.

2 துன்பந்தோன்றாதென்பதாம்.

3 குலதெய்வங்களைப்பற்றிய விளி.

சண்டாளன்—ஐய! சாருதத்த! அரசனது ஆணையே நிங்குவிளைக்கின்றது. ஆதலின் எதனை நினைக்கவேண்டுமோ அதனை நினை.

சாருதத்தன்—பலவாறுநினைப்பதென்? ["மதிவலிமாற்றும் விதிமுதலாக" என்னும் (இவ்வங்கம் 34-ஆம்) செய்யுளைப் படிக்கின்றான்.]

சண்டாளன்—[வாளை உருவி] ஐய! சாருதத்த! நிமிர்ந்து நேராக நில். [1]ஒரே வெட்டினால் உன்னைக் கொன்று துறக்க மடைவிப்போம்.

[சாருதத்தன் அங்ஙனமே நிற்கின்றான்.]

சண்டாளன்—[கொல்லுதற்கு முயல்கின்றான். கையினின்றும் வாள் நழுவுதலை அவிநயித்து] ஓ! ஈதென்ன!

ஆசிரியவிருத்தம்.

348. மிக்கவன் கண்மை யோடு
விழிடி யன்ன கூர்வாள்
ஒக்கவல் லுறையி னின்று
முருவியவ் வடியைப் பற்றி
இக்கையி னிறுகக் கொண்டே
னயினு மிடறி யீது
பக்கென நிலத்தின் கண்ணே
வீழ்ந்ததிப் பரிசென் னம்ம. (௩௪)

[1] "ஒரேவெட்டினால்" என்றது துன்பமில்மரணத்தைக் குறிக்கும்.

இந்நிகழ்ச்சியால் ஐயன் சாருதத்தன் கொல்லப்பட மாட்டானென்றெண்ணுகிறேன். பகவதி! [1] சகியவாசினி! அருள்க! அருள்க! சாருதத்தனுக்கு விடுதலையுண்டாகு மாயின் அது குலதெய்வமாகிய உன்னால் சண்டாளகுலம் [2] அனுக்கிரகிக்கப்பட்டதாகமுடியும்.

மற்றொருவன்—அரசன் கட்டளைப்படிசெய்வோம்.

முதலாமவன்—நிற்க. இப்படிச்செய்வோம்.

[சண்டாளரிருவரும் சாருதத்தனைக் கழுவில் ஏற்றுதற்கு முயல்கின்றனர்.]

[சாருதத்தன் "மதிவலிமாற்றும் விதிமுதலாக" என்னும் (இவ்வங்கம் 34-ஆம்) செய்யுளை மீண்டும் படிக்கின்றான்.]

துறவியும் வசந்தசேனையும்—[பார்த்து] [3] ஐயன்மீர்! வேண்டா. வேண்டா. ஐயன்மீர் இவரைக் கொல்லுதற்கு எவள் காரணமாகவுள்ளவளோ அத்தகைய பேறில்லாதவள் யானே.

சண்டாளன்—[பார்த்து]

---

1 சகியவாசினி என்பது சகியபருவதத்தில் உள்ள குலதெய்வ மாகும்.

2 இத்தகைய பெரியோனைக்கோறல் கொலைசெய்பவன்குலத் துக்குக் கேடுவிளைவிப்பதாகும். ஆதலின் அவனைக் கொலைபுரியாது விடுதல் சண்டாளகுலத்துக்கு அநுக்கிரகம்செய்ததாகமுடியும்; என்றான் என்பதாம்.

3 இவ்விளி, கொலையாளிகளைப்பற்றியதாகும்.

ஆசிரியவிருத்தம்.

349. தோளுறச் சரிந்து வீழுங்
கூந்தலின் சுமையி னோடு
மாளவிச் செயல்செய் யற்க
செய்யற்க வென்று கூறி
நீள்கர முயர்த்துக் காட்டி
நேருற விவண்வி ரைந்து
வாளன கண்ணி னல்லாள்
வருகின்றா ளிவள்யார் கொல்லோ. (௩௭)

வசந்தசேனை—ஐய! சாருதத்தரே! ஈதென்ன? [என்று [1]மார்பில்வீழ்கின்றாள்.]

துறவி—ஐய! சாருதத்தரே! ஈதென்ன? [என்று [2]பாதங்களில்வீழ்கின்றான்.]

சண்டாளன்—[அச்சத்தோடு விலகி] என்ன? வசந்தசேனையா? [3]நம்மால் இப்பெரியோன் கொல்லப்பட்டிலன்.

துறவி—[எழுந்து] அடே! சாருதத்தர் உயிரோடிருக்கின்றாரா?

சண்டாளன்—[4]நூறாண்டு உயிரோடுவாழ்வர்.

வசந்தசேனை—[மகிழ்ச்சியோடு] [5]மீண்டும் பிழைத்தேன்.

---

[1] அன்பினால் இறுகத் தழுவிக்கொள்கின்றாள்.

[2] முன்னர்க் கால்பிடித்தலாகிய தொழில்செய்தமையால்.

[3] நாம் கொலைஞராயினும் தெய்வவயத்தால் ஒருகுற்றமும் இல்லாத சாருதத்தன் நம்மாற் கொல்லப்பட்டிலன். இது நமக்கு மகிழ்ச்சிதருவதாகும் என்பது கருத்து.

[4] இனி இவர்க்குக் கேடு வாராது என்பது கருத்து.

[5] சாருதத்தர் வாழ்க்கையையே தன்வாழ்க்கையாகக் கொண்டவளாதலின் "மீண்டும் பிழைத்தேன்" என்றாள்.

சண்டாளன்—இச் செய்தியை வேள்விச்சாலையிலிருக்கின்ற அரசற்குத் தெரிவிப்போம். [போகின்றனர்.]

சகாரன்—[வசந்தசேனையைப் பார்த்து [1]அச்சத்தோடு] ஆ! இக்கருப்பதாசி எவனால் உயிர்பிழைத்தாள்? [2]இவளுயிர் முன்னமே போய்விட்டதே! நிற்க. ஓடுகின்றேன். [என்று விரைந்து ஓடுகின்றான்.]

சண்டாளன்—[[3]அணிமையிற்சென்று] அடே! "எவன் வசந்தசேனையைக் கொன்றவனோ அவனை நீங்கள் கொன்று விடுங்கள்" என்பதே அரசன் நமக்கு இட்ட கட்டளையாகும். ஆதலின் அரசன்மைத்துனனாகிய [4]சகாரனையே தேடிப் பிடிப்போம். [போகின்றனர்.]

சாருதத்தன்—[வியப்போடு]

வெண்பா.

350. [5]காலன்வாய்ப் பட்டுக் கடியவாட் காளாகும்
வேலைதனி னீரறவின் மெய்வாடிச்—சால்புதவிர்

---

[1] தன்குற்றம் வெளிப்படுமே என்பதுபற்றி அச்சம்நிகழ்ந்தது.

[2] இவளுயிர்போய்விட்டது முன்னரே என்னால் ஆராய்ந்து துணியப்பட்டதென்பது கருத்து. ஈண்டு "என்னுயிர்போயிற்று" என்னும் பாடமும் உண்டு. அதற்கு என்குற்றம் வெளிப்பட்டமையால் என் உயிர் உடலைவிட்டு நீங்கியதுபோலாம் என்பது கருத்தாகக்கொள்க.

[3] மற்றொருசண்டாளன்பக்கலிற் சென்று என்பதாம்.

[4] அரசன்கட்டளைப்படி தண்டம் குற்றத்திற்கன்றி, மனிதர்க்கு அன்று என்பது துணிந்து சகாரனைப் பிடிக்கக்கருதினர் என்பதாம்.

[5] இஃது இவ்வங்கத்தில் தாவரகனைக்குறித்துச் சாருதத்தன் கூறிய 26-ஆம் செய்யுளையே சிறிதுமாற்றி ஈண்டு வசந்தசேனையைக்குறித்துக் கூறியதாகக் கூறப்பட்டுள்ளது. அச் செய்யுளிற்

பைங்கூழ் செழிக்கப் பயன்செய் மழைமுகில்போல்
இங்குற்ருள் யாவ ளிவள்? (௩அ)

[பார்த்து]

ஆசிரியவிருத்தம்.

351. [1]மற்ருெரு வசந்த சேனை
யிவள்கொலோ வானி னின்றுந்
சொற்றவவ் வணங்கே மீண்டுந்
தொல்லுருக் கொடுவந் தாளோ
பற்றுமென் மனமா மூழாந்து
பார்க்கின்ற திவளை யேகொல்
பொற்ருெடி வசந்த சேனை
பொன்றின ளல்ல ளேயோ? (௩௧)

---

"கருமுகில்" என்பது ஈண்டு "மழைமுகில்" என மாற்றியுரைக்கப் பட்டது. கருமுகில் பெருங்காற்ருல் ஒரோவமயம் மழைபெய்யா மலும்போய்விடும். மழைமுகில் என்பது மழைபெய்பு முகில் என் னும் பொருளதாகலின் அஃது அவன் உய்திக்கு ஏதுவாய்நின்று வசந்தசேனைக்கு உவமமாயிற்று.

[1] "மற்ருெரு வசந்தசேனை யிவள்கொலோ" என்றதனல் இவ் வுலகில் உருவமும் பருவமும் ஒழுக்கமும் ஒத்த வசந்தசேனை இருவ ருளராக, அவருள் ஒருத்தி இறப்ப மற்ருெருத்தி என்னை அருள் செய்தற்பொருட்டு ஈண்டு வந்தாள்கொல்லோ எனவும், "வானி னின்றும் அவ் வணங்கே தொல்லுருக்கொடு வந்தாளோ" என்றத னுல் யான் அழைத்தலைக்கேட்டு என்னைக்காத்தற்பொருட்டுத் தனது பண்டையுருவோடு வந்தாளோ எனவும், "என் மனம் மாழாந்து இவளைப் பார்க்கின்றதுகொல்" என்றதனல் என்னெஞ்சம் அவாவயப்பட்டு மயங்கி இவ்வுலகத்தையே அவளாகக்கண்டு பாவனை யின் ஆற்றலால் இன்புறுகின்றதுகொல் எனவும், "வசந்தசேனை பொன்றினளல்லளேயோ" என்றதனல் அவள் இறப்பைச் சகாரன் பொய்யாக வெளிப்படுத்தினன்கொல் எனவும் கருதினன் என்பது புலனும். மாழாந்து - மயங்கி.

அன்றி,

கலிவிருத்தம்.

352. [1]என்னுயிர் வாழ்க்கையி லியைந்த பேரருள்
துன்னியத் துறக்கமுந் துறந்துற் றாள்கொலோ
மின்னனை யாளவ ளுருவின் வேறொரு
கன்னிநல் லுருக்கொடு காண்கின் றாள்கொலோ. ()

வசந்தசேனை—[கண்ணீரொழுக எழுந்து கால்களில்வீழ்ந்து] ஐய! சாருதத்தரே! எவள்பொருட்டுத் தாங்கள் தகுதியில்லாத இந்நிலையை யடைந்தீர்களோ [2]அப் பாவியாகிய வசந்த சேனையே யான்.

[வேடசாலையுள்]

வியப்பு! வியப்பு! வசந்தசேனை உயிரோடிருக்கின்றாள்! [என்று எல்லோரும் பேசுகின்றனர்.]

சாருதத்தன்—[கேட்டு விரைந்தெழுந்து ஊற்றின்பத்தை அபிநயித்து மூடப்பட்ட கண்களையுடையனாய்ப் பேருவகையால் தழுதழுத்தகுரலோடு] காதலீ! நீ வசந்தசேனையா?

---

[1] இது மேற்செய்யுட் பொருளையே வேறொருபடியாகக் கூறியதாகும். "அத்துறக்கமுந் துறந்துற்றாள்கொலோ" வென்றதனால் என்பாலுள்ள அன்பால் இன்பநிலையமாகியதுறக்கத்தையும் நீத்துவந்தாளோ என்று கருதினான் என்பதாம்.

[2] சாருதத்தனது துன்பத்துக்குக் காரணமாதல்பற்றித் தன்னைப் பாவி என்று கூறினாள் என்பதாம். அவளே யான் என்றதனால், இரண்டாமவளும் வானுலகத்தினின்றும் வந்தவளும் மயக்கவுணர்வாற் காணப்பட்டவளும் அல்லள் என்பது போதரும்.

வசந்தசேனை—பேறிலளாகிய அவளை யான்.

சாருதத்தன்—[கண்டு மகிழ்ச்சியோடு]உண்மையாக வசந்த சேனைதானா? [இன்புற்று]

கலிவிருத்தம்.

353. [1]காலனா ரென்னுயிர் கவர நிற்குமிவ்
வேலையின் மெய்யுணர் வெளிப்பட் டாலெனச்
சாலநீ ரொழுக்கினாற் றனத்தை யாட்டுமிவ்
வேல்விழி யெவணிருந் திங்கு மேவினாள். (சக)

காதலி! வசந்தசேனே!

கொச்சகக்கலிப்பா.

354. நின்மறைவா லழிவெய்து நிலையுற்ற வெனதுடன்மீண்
டுன்வரவா லுய்ந்ததா லுயிரனையா யொருவற்கு
மன்மனம்பற் றியபொருளே வந்தியையின் மாண்மிகவாம்
வன்மரண மெய்தினா னெவன்பிழைப்பான் மாநிலத்தில். ()

இன்னும், காதலி! பார்க்க.

ஆசிரியவிருத்தம்.

355. [2]செந்நிறந் தோய்ந்த வாடையு மலரிச்
செழுமலர் மாலையு மணப்பெண்
அன்னநின் வரவான் மணமகற் கியைந்த
வாடையு மாலையு மாய

---

[1] ஒருவற்கு இறப்பச்சம் உள்வழி அதனைப்போக்கும் ஆற்றன் மிக்க மெய்யுணர்வு உண்டானாற்போல வென்க. உணர் - உணர்வு. "மடம்படு முணர்செய் யட்டி" (தேவாரம். பொது. தனித்திரு நேரிசை. பதிகம்—1. பா—4.) என வருதல் காண்க. வேல்விழி - உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

[2] செந்நிற ஆடையும் செவ்வலரிமாலையும் கொலைக்குரியாற் குரிய அடையாளங்களாகும்.

பன்னிய வெழுந்த கொலைக்களப் பறையே
பயின்மணப் பறையெனப் பொலிந்து
முன்னுற முழங்கிற் றுதலான் விதியின்
முறையினை யளவிட லரிதால். (சங)

வசந்தசேனை—மிக்க கண்ணோட்டத்தால் எம்பெருமானாகிய தாங்கள் இச்செயலை முயன்று மேற்கொண்டீர்களோ?

சாருதத்தன் — காதலி! நீ என்னாற்கொல்லப்பட்டாய் என்று [1]கூறி,

கலிவிருத்தம்.

356. [2]முற்படு பகைவனு மூரி மொய்ம்பனும்
அற்படு நரகிடை வீழு மாதனும்
தற்புகழ் பவனுமாஞ் சகார னாற்றிய
சொற்படு துயர்நிலை சிறிது துய்த்தனன். (சச)

வசந்தசேனை—[செவிகளைப் பொத்திக்கொண்டு] தீவினை ஒழிக. அரசன்மைத்துனனாகிய அச் சகாரனே என்னைக் கொன்றான்.

---

[1]கூறி என்னும் இவ் வினையெச்சம் பின்வரும்செய்யுளிலுள்ள ஆற்றிய என்னும் பெயரெச்சத்தோடு முடியும்.

[2] மூரி மொய்ம்பன் - மிக்க வலியுடையான். அரசன்மைத் துனனாதலின் நினைத்ததை முடிக்கும் ஆற்றலுடையான் என்பது கருத்து. அல்படும் - இருளடர்ந்த. ஆதன் - அறிவிலான். அரசன் மைத்துனனாயினும் தீவினையாளனாதலின் மறுமையில் நரகத்துன்பம் எய்துதல் ஒருதலை என்பதாம். வசந்தசேனையின்வரவால் தனக்குநேர்ந்த துன்பம் சிறிதாயிற்றென்பான் "துயர்நிலை சிறிது துய்த்தனன்" என்றான் என்க.

சாருதத்தன்—[துறவியைப்பார்த்து] இவர் யார்?

வசந்தசேனை—அத்தீயவன் கொன்றான். இந் நல்லோர் உய்வித்தார்.

சாருதத்தன்—காரணமில்லாமல் உதவிபுரிந்த உறவின ராகிய நீர் யார்?

துறவி—எம்பெருமான் என்னை மறந்துவிட்டீர்கள்போ லும்! எம்பெருமானுக்குக் கால்பிடித்தலாகிய (சம்வாககத்) தொழிலையே நினைந்திருக்கும் சம்வாககன் என்னும் பெய ரினையுடைய அவனே யான். சூதர்களால் யான் பிடிக்கப்பட்ட பொழுது அதுகண்ட இவ்வுபாசிகை எம்பெருமானைச் சார்ந் தவன் இவன் என்றுகொண்டு தன்அணிகலன்களையே விலைப் பொருளாகக்கொடுத்து என்னை [1] விலைக்குவாங்கினள். அத னாற் சூதாடுவதில் வெறுப்புற்றுப் புத்தசந்நியாசி ஆயினேன். எம்பெருமாட்டியாகிய இவள் வண்டியின்மாற்றத்தால் புட்ப கரண்டகமென்னும் பழைய பூந்தோட்டத்தை அடைந்தாள். தீயவனாகிய அச்சகாரன் தன்னை விரும்பவில்லை என்று கருதித் தன்கைகளால் வலிந்து கழுத்தைநெரித்து இவ்வம்மையைக் கொன்றான். அதனை [2]யான் நேரிற்கண்டேன்.

[வேடசாலையுள் கலகல வென்னும் பேரொலி உண்டாகின்றது.]

---

[1] பணிபுரிதலால் தங்களுக்கும், சூதர்களிடத்தினின்றும் விடுவித்தமையால் வசந்தசேனைக்கும் கடமைப்பட்டவனாயினேன் என்பது கருத்து.

[2] எதிர்பாராதநிலையிற் கண்டேன் என்பது கருத்து.

ஆசிரியவிருத்தம்.

357. [1]தக்கனூர் வேள்விதகர்த் தானேறு
கொடியுயர்த்த தாணு வும்பின்
மிக்கபகை யறவென்று கிரவுஞ்ச
மலைபிளந்த வேளு மேன்மை
யொக்கவிளங் கினரதன்பின் வன்பகைவென்
றாரியக ளொளிமிக் கோங்கி
அக்கயிலை தனைத்துவச மாவுடைய
வகனிலத்தை யாள்கின் றானல். (சரு)

[[2]விரைந்துவந்து]

சருவிலகன்—

358. [3]கொடியபா லகனைக் கொன்று
குறைவிலா ரியகற் காங்கே
முடிபுனைந் தரசை யீந்தேன்
முறைமையி னவன தாணை

---

[1] இறைவன் ஒருவரே எல்லாத்தேவர்களையும் துன்புறுத்து ஒட்டித் தக்கன்வேள்வியைச் சிதைத்ததுபோலவும், பின்னர் அவ் விறைவன்புதல்வராகிய முருகவேள் ஒருவரே தாரகனைவென்று கிரௌஞ்சமலையைப் பிளந்ததுபோலவும் ஆரியகன் ஒருவனே வெல்லற்கரிய பகைவனாகிய பாலகனைவென்று நிலமுழுதும் தன் வயப்படுத்து ஆளுகின்றான் என்பதாம்.

[2] சாருதத்தனைக் காத்தற்பொருட்டு விரைந்துவந்தான் என்ப தாம்.

[3] ஆங்கே என்பதற்கு அப்பாலகன் இராச்சியத்தில் எனவும் அப்பொழுதே எனவும் பொருள்கொள்க. அவனது ஆணையைக்

கடிதலில் சேடம் போலக்
காண்வரச் சிரத்திற் றாங்கி
வெடியுறு சாரு தத்தன்
றன்னையும் விடுவிப் பேனால். (சசு)

359. [1]படைவலி யமைச்ச ரில்லாப்
பாலகன் றன்னைக் கொன்று
சடைவற நகர மாந்தர்
தம்மையுந் தேற்றி வீறுற்
றுடையவ னும்பர் நாட்டி
னோங்கிய பகைநாட் டோடு
புடவிக ளெல்லாந் தன்பாற்
குடைநிழல் பொருந்தப் பெற்றான். (சஎ)

[எதிரேபார்த்து] நிற்க. இவ்விடத்தில் [2]மக்கள் பலர் கூடியிருத்தலால் இங்குச் சாருதத்தர் இருத்தல்வேண்டும். ஆரியகன் என்னும் மன்னவனுடைய [3]இம்முயற்சி சாருதத்த

---

கடிதலில் சேடம்போலத் தாங்கி என்க. கடிதல் இல் - விலக்குதல் இல்லாத. சேடம் - தேவரின்மாலியம். வெடி - கேடு. "வெடி படக்கடந்து" (அடி 233) என்னும் மதுரைக்காஞ்சியானும் உணர்க. ஆரியகனுக்குமுடிசூட்டல், சாருதத்தனைவிடுவித்தல் என்னும் இரண் டும் யான் கடமையாக மேற்கொள்ளத்தக்க அறங்களாம் என்பது கருத்து.

[1] படைகளும் அமைச்சரும் உட்கலகத்தால் தாமே நீங்கின ராதலின், "படைவலி யமைச்ச ரில்லாப் பாலகன்" என்னப் பட்டான். சடைவு - மனத்தளர்ச்சி. உடையவன், கொன்று தேற்றி வீறுற்றுப் பொருந்தப்பெற்றான் என முடிக்க. உடையவன் -ஆரி யகன். உம்பர்நாட்டின், இன் ஒப்புப்பொருளது.

[2] சாருதத்தருக்கு நேர்ந்த துன்பத்தைப் பொறாதவர்களாய நகரத்துமக்கள்பலர் கூடியிருந்தனர் என்பது கருத்து.

[3] முயற்சி சாருதத்தருக்கு நலம்புரிய மேற்கொண்டது.

ரது உயிர்வாழ்க்கையால் [1]பயனுடையதாகுங்கொல்! [மிக்க விரைவோடு நெருங்கிவந்து] [2]கீழ்மக்களே! விலகிச்செல்லுங்கள். [பார்த்து மகிழ்ச்சியோடு] [3]வசந்தசேனையோடு சாருதத்தர் உயிர்தாங்கியிருக்கின்றாரா? நம் தலைவனது விருப்பம் நிறைவேறியது.

ஆசிரியவிருத்தம்.

360. [4]குணைநல மொழுக்க மார்ந்த
கூரெழிற் றோணி யன்ன
துணைவியா னல்லூழ் கூட்டத்
துன்பமாங் கரையி கந்த
புணரியைக் கடந்தான் றன்னைப்
பொங்கர வுமிழப் பட்ட
குணநிறை மதியிற் கண்ணு
னெடிதியான் கொள்கின் றேனால். (சஅ)

---

[1] யான் செல்வதற்குமுன் இறப்பெய்தாமலிருக்கவேண்டுமே என்பான் "பயனுடையதாகுங்கொல்" என்றான்.

[2] வழியைத்தடுத்தல்பற்றிக் "கீழ்மக்களே" என்று சினந்து கூறினான்.

[3] இருவருள் ஒருவர்க்கு இறப்புநேரினும் இருவர்க்கும் நேர்ந்தாகும் என்பான் "வசந்தசேனையோடு" என்றான் என்க.

[4] கூர் எழில் - மிக்க வனப்பு. ஆர்ந்த கூரெழிற் றுணைவி எனவும் தோணியன்ன துணைவி எனவும் கூட்டுக. கரையிகந்த துன்பமாம் புணரி - கரைகடந்த துயர்க்கடல். தோணியன்ன துணைவி என்றதனால் துன்பநீக்கத்திற்குத் துணைவியே கருவியாயினாள் என்பது புலனாம். தோணியில் ஏறிச்செல்லும் ஒருவன் கெடுதலில்லாத அத் தோணியோடு கரைசேறல்போல, இறப்புக்கேடுறாத துணைவியை உய்திக்கருவியாகக்கொண்ட சாருதத்தன் அவளோடு துன்பத்தினின்றும் விடுதிபெற்றான் என்பது கருத்து. மதியின்; இன் உவமப்பொருளது. கோடல் ஈண்டுக் காண்டலென்னும் பொருளதாம்.

ஆகலின், [1]பெரும் பாதகச்செயலைச் செய்தவனாகிய யான் இவரணிமையில் எங்ஙனஞ் செல்வேன்! ஆனால் எல்லாவிடத்தும் [2]நேர்மையே சிறப்புறுவதாகும். [அணிமையிற்சென்று கைகூப்பி] ஐய! சாருதத்தரே!

சாருதத்தன்—தாங்கள் யார்?

சருவிலகன்—

வெண்பா.

361. [3]பொன்னனையாண் முன்னாட் பொருந்து மடைக்கலமா
நின்னிற்கண் வைத்த நெடும்பணியைக்—கன்னமிட்டுக்
கொண்ட கொடுவினையேன் கூசிப் புகலாகக்
கொண்டே னினையே குறித்து. (சக)

சாருதத்தன்—நண்பீர்! குற்றமன்று. தங்களால் [4]அது நட்புரிமையாகச் செய்யப்பட்டதாகும். [என்று கழுத்தைப் பற்றித் தழுவிக்கொள்ளுகின்றான்.]

சருவிலகன்—[5]மற்றொருசெய்தியைக் கூறுகின்றேன்.

---

[1] பெரும் பாதகம் - பொற்பணியைக் களவுசெய்தது.

[2] ஒருவன் தான்செய்தகுற்றத்தை மறையாமை.

[3] பொன் அனையாள் - வசந்தசேனை. நின்னையே புகலாகக் குறித்துக்கொண்டேன் என்க. குற்றம் இழைத்ததையும் எண்ணாமற் புகலடைந்தேன் என்பான் "நின்னையே" என்றானென்க.

[4] அது - பொற்பணிக்களவு; அதுகாரணமாகவே நமக்கு இத்தகைய நட்புரிமையுண்டாயிற்றென்பது கருத்து.

[5] வசந்தசேனையோடு உயிர்பிழைத்ததே ஒரு நற்செய்தியாகும். அதன்மேலும் ஒரு நற்செய்தியுண்டு; கூறுகின்றேன் என்பதாம்.

வெண்பா.

362. [1]நல்லொழுக்க மிக்கு நவையில் குலமானம்
புல்லியசி ராரியகப் புண்ணியன்மற்—றொல்லாச்
செயல்புரிந்த பாலகனைச் செற்றான் பசுவின்
உயிர்துறக்க வேள்விநிலத் தூற்று. (௫௦)

சாருதத்தன்—உண்மைதானா!

சருவிலகன்—

வெண்பா.

363. [2]நின்வண்டி யேறிமுன்னா ணின்னைப் புகலடைந்த
மன்னியசி ராரியகன் வன்மையினால்—இந்நாளப்
பாலகனை வேள்விநிலம் பற்றி யுயிர்செகுத்தான்
கோலமுறும் யாட்டிற் குறித்து. (௫௧)

சாருதத்தன்—சருவிலக! பாலகன் என்னும் அரசனால் இடைச்சேரியினின்றுங் கொணர்ந்து காரணமில்லாமலே வஞ்சித்துச் சிறைப்படுத்தப்பட்டு உன்னால் விடுதலையடைந்த ஆரியகன் என்னும் பெயரினையுடைய அவனா கொன்றான்?

சருவிலகன்—தாங்கள் சொல்லுகின்றபடியே.

---

1 குலம் மானம் புல்லிய - குலப்பெருமையையும் மானத்தையும் பாலகன்செய்த சிறைத்தண்டனையினின்றுங் காத்துக்கொண்ட. ஒல்லாச்செயல் - தகாதசெயல். புண்ணியன், வேள்விநிலத்தூற்றுப் பாலகனை உயிர்துறக்கப் பசுவிற் செற்றான் என முடிக்க. இன் உவமப்பொருளது.

2 வேள்விநிலத்தில் யாட்டைக்கொன்றதுபோற் கொன்றான் என்றது எளிதிற்கொன்றதைப் புலப்படுத்தும். தீயவனாகிய பாலகனையே ஈண்டு வேள்விப்பசுவாக்கி ஆரியகன் வேள்விப்பயனை எய்தினான் என்பது குறிப்பிற் புலனாம்.

சாருதத்தன்—இது நமக்கு மிகவும் [1]மகிழ்ச்சிதருவதே.

சருவிலகன்—நண்பனாகிய ஆரியகன் தான் உச்சயினி நகரில் தலைவனாக முடிசூடிய அளவில் வேணையாற்றின்கரையி லுள்ள [2]குசாவதி என்னும் தலைநகரில் தங்களுக்கு அரசியலை வழங்கினான். ஆதலின் நண்பனது முதலாவதாகிய அன்புரிமைவேண்டுகோளை யேற்றுப் பெருமைப்படுத்தல்வேண்டும். [வேடசாலைப்பக்கந்திரும்பி] அடே! அடே! மறைவில் தீங்குசெய்தொழுகும் பாவியாகிய இச் சகாரனைக் கொண்டு வாருங்கள்.

[வேடசாலையில்]

சருவிலகர்கட்டளைப்படியே.

சருவிலகன்—ஐய! "இவ்விராச்சியத்தைத் தங்கள் [3]அருட்குணத்தால் யான் அடைந்துளேன்; ஆதலின் இதனை ஏற்று [4]அநுபவித்துக்கொள்ளல்வேண்டும்" என்று ஆரியகன் என்னும் அரசர் தெரிவித்துக்கொள்ளுகின்றார்.

சாருதத்தன்—இவ்விராச்சியம் [5]என் அருட்குணத்தாலா அடையப்பட்டது?

---

[1] முன்னர்த் தன்உதவிபெற்ற நண்பனுக்கு அரசும், கொடியவனாகிய பாலகனுக்கு இறப்பும் நேர்ந்தது சாருதத்தனது மகிழ்ச்சிக்குக் காரணமாகும்.

[2] குசாவதி என்பது, இராமபிரான்புதல்வனாகிய குசனால் அமைக்கப்பட்டது.

[3] அருட்குணமாவது வண்டியைத்தந்து உயிரைப் பாதுகாத்தது.

[4] யானும் தங்கள் ஏவலாளனும்நிலையிலிருப்பேன் என்பது கருத்து.

[5] அவனுடைய வீரம் முதலாகிய குணங்களாலேயே அடையப்பட்டதாகு மென்பது கருத்து.

[வேடசாலையில்]

அடே! அடே! அரசன்மைத்துனனாகிய சகார! வா. வா. நீ செய்த [1]தீங்கின் [2]பயனை அநுபவி.

[அதன்பின், பின்புறமாகவைத்துக்கட்டப்பட்ட கைகளையுடைய சகாரன் காவலராற் பாதுகாக்கப்பட்டு வருகின்றான்.]

சகாரன்—ஐயோ! ஐயோ!

வெண்பா.

364. [3]கட்டவிழ்ப் பெற்ற கழுதைபோன் மற்றவரால்
எட்டிப் பிடிக்க வியைந்திலனாய்—ஒட்டி
நெடுந்தூர மோடி நிலையற்ற நாய்போற்
கொடுங்கயிற்றாற் கட்டுண்டேன் கொண்டு. (ருஉ)

[நாற்புறமும்நோக்கி] அரசன்மைத்துனனாகிய எனக்கு நாற்புறத்தும் தடை ஏற்பட்டுள்ளது. புகலற்றவனாகிய யான் இப்பொழுது யாரைப் புகலாக அடைவேன்? [நினைவுகூர்ந்து] நிற்க. அடைக்கலமாயினார்பால் அருண்மிக்க [4]அச்சாருதத்தரையே அடைவேன். [என்று அணிமையிற்சென்று] மாட்சிமிக்க சாருதத்தரே! காத்தருளுங்கள். காத்தருளுங்கள். [என்று பாதங்களில் வீழ்கின்றான்.]

---

1 தீங்கு - பிறரைத் துன்புறுத்தல், பொய்கூறல் முதலியன.

2 பயன் - மரணதண்டனை.

3 ஒட்டி - உணவின்றி வற்றி. கொண்டு - கொள்ளப்பட்டு; பிடிக்கப்பட்டு. கொண்டு கயிற்றாற் கட்டுண்டேன் என்க. பிறராற் பிடித்தற்கரிய நான் இப்பொழுது இழிந்த நாய்போலப் பிடிபட்டது காலவேற்றுமையானும் என்று கருதினான் என்றவாறு.

4 சுட்டு என்னுற் றுன்புறுத்தப்பட்ட என்னும் பொருளது.

[வேடசாலையில்]

மாட்சிமிக்க சாருதத்தரே! விடுங்கள். விடுங்கள். இவனைக் கொன்றுவிடுகின்றோம்.

சகாரன்—[சாருதத்தனைநோக்கி] ஓ! புகலற்றவர்க்குப் புகலாகவுள்ளவரே! காப்பாற்றல்வேண்டும்.

சாருதத்தன்—[இரக்கத்தோடு] ஆ! ஆ! அடைக்கலம் புகுந்தோர்க்கு அச்சமின்றாக. அச்சமின்றாக.

சருவிலகன்—[பரபரப்போடு] ஆ! ஆ! இவனைச் சாருதத்தரின்பக்கலினின்றும் [1]கொண்டுபோங்கள். [சாருதத்தனை நோக்கி] இப்பாவிக்கு எத்தகையதுன்பத்தைச் செய்தல் தகும் என்பதைச் சொல்லல்வேண்டும்.

வெண்பா.

365. [2]கயிறுகளா லின்றிவனைக் கட்டி யிழுத்தல்
உயிரோடு நாய்களுணா வூட்டல்—துயர்கூர
முட்கழுவி லேற்றன் முரண்வாளி னாற்பிளத்தல்
உட்கவெது செய்த லுறும். (ருரு)

சாருதத்தன்—யான் எதனைச் சொல்லுகின்றேனே அது செய்யப்படுமா?

சருவிலகன்—இதன்கண் ஐயம் யாது?

சகாரன்—பெருமானாகிய சாருதத்தரே! அடைக்கலமடைந்தவனாகின்றேன். ஆதலின், காத்தருளுங்கள். காத்

---

[1] கொண்டுபோகவில்லையாயின், காப்பாற்றிவிடுவர் என்பது கருத்து.

[2] இழுத்தல், ஊட்டல், ஏற்றல், பிளத்தல்: என்னும் இச் சித்திரவதைகளுள் யான் எதனை விதிக்கவேண்டும் என்பதாம்.

தருளுங்கள். எது [1] தங்கள் உள்ளத்திற்கு ஒத்ததோ அதனைச் செய்யுங்கள். [2] மீண்டும் இத்தகைய காரியத்தைச் செய்ய மாட்டேன்.

[வேடசாலையில்]

நகரத்துக்காவலரே! கொன்றுவிடுங்கள். பாவியாகிய சகாரன் எதற்காக உயிர்பிழைத்திருக்கவேண்டும்?

[வசந்தசேனை சாருதத்தனதுகழுத்திலுள்ள கொலைமாலையைக் கழற்றிச் [3] சகாரன்மேல் எறிகின்றாள்.]

சகாரன்— [4] கருப்பதாசிமகளே! [5] பொறுத்தருள்க. பொறுத்தருள்க. இனி மீண்டுங் கொல்லமாட்டேன். ஆதலின், காப்பாற்றுவாயாக.

சருவிலகன்–அடே! அடே! கொண்டுபோங்கள். மாட்சிமிக்க சாருதத்தரே! இப்பாவிக்குச் செய்யவேண்டிய தண்டனையைப்பற்றிக் கட்டளையிடுங்கள்.

---

1 "தங்கள் உள்ளத்திற்கு ஒத்தது" என்றதனால் என்குற்றத்திற்கு ஒத்ததாக இருத்தலாகாதென்பது கருத்து. ஒத்தது அடைக்கலம்புகுந்தார் குற்றஞ்செய்தவராயினும் அவரை அருள்செய்து காத்தல்.

2 இதுகாறுஞ் செய்தவற்றைப் பொறுத்தருளவேண்டுமென்பது கருத்து.

3 இனிச் சகாரனே கொலைப்படற்குரியவன் என்பது கருத்து.

4 இது சாதியின் இயல்புகுறித்துப் பேசியது; பழித்துரைத்தலன்று.

5 செல்வநிலையில் தக்க இன்ன தகாதன இன்ன என்றுணராமற் செருக்குறுதலும், கெடுநிலையில் அளவின்மிக்க எளிமையை மேற்கோடலும் கயவரியல்பாமெனச் சகாரன்செய்தியாற் புலப்படுத்தவாறு,

சாருதத்தன்—யான் எதனைச் சொல்லுகின்றேனே அது செய்யப்படுமா?

சருவிலகன்—இதன்கண் ஐயம் யாது?

சாருதத்தன்—உண்மைதானு?

சருவிலகன்—உண்மையே.

சாருதத்தன்—அங்ஙனமாயின் இவனை விரைவில்

சருவிலகன்—கொன்றுவிடவேண்டுமா?

சாருதத்தன்—இல்லை. இல்லை. விடவேண்டும்.

சருவிலகன்—எதற்காக?

சாருதத்தன்—

கலிவிருத்தம்.

366. உடைப்பெரும் பகைவனு யூறு செய்தவன்
அடைக்கல மென்றுநம் மடிக்கண் வீழ்வனேற்
படைக்கலத் தவனுடல் படுத்த னன்றல

சருவிலகன்—ஆம். [1] அப்படியானுல் நாய்களைவிட்டுக் கடித்துண்ணச்செய்யலாம்.

சாருதத்தன்—அதுவுஞ் செய்தலாகாது.

தடைப்படா வுதவியால் [2] தடிதல் வேண்டுமே. (ருச)

---

[1] அப்படியானுல் – படைக்கலத்தாற் கொல்லலாகாதெனின்.

[2] தடிதல் - கொல்லுதல். அடைக்கலம்புகுந்த பகைவனைக் காத்தலே அவற்கு வாழ்நாள்காறும் நாணமுறச்செய்யுந் தண்டமாம் என்பது கருத்து. "இன்னுசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண, நன் னயஞ் செய்து விடல்" (திருக்குறள் 314) "இன்னுசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு" (திருக்குறள் 987) என்னும் பொருளுரைகள் ஈண்டு நினைந்து இன்புறற்பாலன.

சருவிலகன்—ஆ! [1] ஆச்சரியம்! என்செய்வேன்! பெருமான் கூறல்வேண்டும்.

சாருதத்தன்—அங்ஙனமாயின் விடல்வேண்டும்.

சருவிலகன்—விடுதலையடைந்தவனாகுக.

சகாரன்—ஆ! ஆ! மீண்டும் பிழைத்தவனாகின்றேன்.

[என்று காவலர்களோடு போய்விடுகின்றான்.]

[வேடசாலையில் [2] கலகலவென்னும் ஒலி உண்டாகின்றது]

[மீண்டும் வேடசாலையில்]

[3] "பெருமான் சாருதத்தருடையமனைவியாகிய இப்பெருமாட்டி தூதை, தன் கால்களையும் முன்றானையையும் பற்றியிழுக்கின்ற குழந்தையை விலக்கிவிட்டு நீரொழுகுங் கண்களையுடைய நகரத்துமக்களால் தடுக்கப்பட்டும் கேளாமல் எரிகின்றநெருப்பிற் புகுகின்றாள்."

சருவிலகன்—[கேட்டு வேடசாலையின் எதிரேபார்த்து] சந்தனகனா? சந்தனக! ஈதென்ன?

சந்தனகன்—[வந்து] ஐயன் பார்க்கவில்லையோ! அரசனது அரண்மனைக்குத் தென்பால் பெரிய சனக்கூட்டம் உள்ளது. ["பெருமான் சாருதத்தருடையமனைவி" என்பது முதலிய சொற்களை மீண்டுங்கூறுகின்றான்.] "பெருமாட்டி! இத்துணிவுச்செயலை மேற்கொள்ளவேண்டா. பெருமான் சாரு

---

[1] பகைவனைக்காத்தல் யாண்டும் முன்னர்க் கண்டதன்று என்பதாம்.

[2] சாருதத்தனதுமனைவியாகிய தூதை தீப்புகுதல்பற்றி நகரத்துமக்கள் ஆரவாரஞ்செய்தல் ஈண்டுக் கலகலவொலியாகும்.

[3] இது சந்தனகன்கூற்று.

தத்தர் உயிரோடிருக்கின்றார்." என்று யான் அவ்வம்மைக்குக் கூறினேன். ஆயினும், துன்பமேலீட்டால் என்சொல்லை யார் கேட்பர்? யார் நம்புவர்?

சாருதத்தன்—[வருத்தத்தோடு] ஆ! என் அன்பே! யான் உயிரோடிருக்கவும் இங்ஙனந் துணிந்ததென்ன?

[உயரப்பார்த்து நெடுமூச்செறிந்து]

கொச்சகக்கலிப்பா.

367. [1]சீலமுயர் கற்புடைய சேயிழாய் நின்னியல்பித்
தாலத் திருக்குந் தகுதியிலா மாண்பினதாற்
சாலச் சிறந்த தலைவன் றனையொழித்து
மேலுலக வின்ப மிசைத லலமன்றே. (ருரு)

[என்று மயக்கம் எய்துகின்றான்.]

சருவிலகன்—ஆ! என்ன துன்பம்!

கலிவிருத்தம்.

368. [2]ஆண்டுநாம் விரைந்தினி யடைய வேண்டுமற்
றீண்டுநம் பெருமகன் மயக்க மெய்தினன்
காண்டகு முயற்சிமேற் கொண்டுங் காண்கிலேம்
யாண்டுமற் றதன்பய னென்கொ லம்மவோ. (ருசு)

---

[1] மறுமையின்பநுகர்ச்சியிலும் தலைவனைவிட்டுத் தனிப்படல் நின் கற்பொழுக்கத்துக்கு ஒத்ததன்றென்பது கருத்து.

[2] ஆண்டு - சாருதத்தனது இல்லம். இனி விரைந்தடைய வேண்டும் என்றது தூதை தீப்புகுதலைத் தாழாதுதடைப்படுத்தற்கு. தாழ்ப்பேமாயின் தீயிற்புகுந்து உயிர்விடுவள் என்பதுபற்றி இவ்வாறு கூறினான். சாருதத்தனுக்கு உதவிபுரியநினைந்து சிறந்த முயற்சி மேற்கொண்டும் அதன்பயனை யாண்டும் காண்கிலேம். ஈதென்? என்றான். முயற்சிக்குப் பயன்காணாமை, தூதை எதிர்பாராமல் இறந்துவிடின் சாருதத்தனும் இறப்பான் என்பதுபற்றியாம்.

வசந்தசேனை—பெருமான் தேறுதலடைக. அங்கே சென்று பெருமாட்டியைப் பிழைப்பித்தல்வேண்டும். இல்லையேல் மனத்திட்பமின்மையால் கேடுவிளையும்.

சாருதத்தன்—[தெளிவுற்று விரைந்தெழுந்து] ஆ! காதலி! எங்கேயிருக்கின்றாய்? எனக்கு மறுமொழிதரல்வேண்டும்.

சந்தனகன்—பெருமான் இங்கேவருக. இங்கேவருக.

[எல்லோரும் சுற்றிவருகின்றனர்.]

[அதன்பின் முற்கூறியநிலையில் தூதையும், அவள் முன்றானையைப்பற்றிக்கொண்டு விதூடகனாற் பின்றொடரப்பட்ட உரோகசேனனும், இரதனிகையும் வருகின்றனர்.]

தூதை—[கண்ணீரோடு] குழந்தாய்! என்னைவிடு. இடையூறுசெய்யாதே. எம்பெருமானுக்குநேரும் [1]அமங்கலச் செயலைக்கேட்டற்கு அஞ்சுகின்றேன். [என்று எழுந்து முன்றானையையிழுத்துக்கொண்டு நெருப்பிற்கு எதிர்முகமாகச் செல்லுகின்றாள்.]

உரோகசேனன்—தாயே! பெருமாட்டி! என்னைக் காப்பாற்றவேண்டும். நீ இல்லாமல் யான் உயிர்தாங்குதற்கு ஆற்றலில்லாதவனாகின்றேன் [என்று விரைந்து அணிமையிற் சென்று மீண்டும் முன்றானையைப் பற்றுகின்றான்.]

விதூடகன்—பார்ப்பனியாகிய தங்களுக்குத் தலைவனோடன்றி வேறாகச் [2]சிதைக்கண் ஏறல் பாவமாகுமென்று இருடிகள் கூறியுள்ளார்.

---

[1] அமங்கலம் - மரணம்.

[2] சிதைக்கண் ஏறல் - ஈமவிறகில் ஏறுதல்; ஈண்டு நெருப்பிற் புகுதலைக்குறிக்கும். வேறாகச் சிதையேறல் பாவமாகும் என்றதனால் கணவனுடன் இறத்தல் அறமாம் என்பது கருத்து.

தூதை—இங்குப் பாவகாரியம் விரும்பத்தக்கதாகும். எம்பெருமானுக்குநேரும் அமங்கலத்தைக்கேட்டல் விரும்பத்தக்கதன்று.

சருவிலகன்—[எதிரேபார்த்து] பெருமாட்டி நெருப்பின் அருகில் நிற்கின்றாள். ஆதலின் விரைந்துசெல்லுங்கள். விரைந்துசெல்லுங்கள்.

[சாருதத்தன் விரைந்துசெல்லுகின்றான்.]

தூதை—இரதனிகே! யான் விரும்பியதை நிறைவேற்றிக் கொள்ளும்வரை குழந்தையைப் பிடித்துக்கொள்.

சேடி—[துன்பத்தோடு] யானும் எம்பெருமாட்டிக்கு [1]வழிகாட்டுபவளாகின்றேன்.

தூதை—[விதூடகனைப்பார்த்து] ஐய! தாங்கள் பிடித்துக் கொள்ளுங்கள்.

விதூடகன்—[பரபரப்போடு] விரும்பியகாரியநிறைவேற்றத்தில் முயற்சிமேற்கொண்டிருப்போர் பிராமணனைமுன்னிட்டுச்செய்வர்; ஆதலின் தங்களுக்கு யான் [2]முற்படுகின்றேன்.

தூதை—[3]இருவரும் மறுத்துவிட்டனரே? [குழந்தையைத் தழுவிக்கொண்டு] குழந்தாய்! எங்களுக்கு எள்ளும் தண்ணீரும்தருதற்பொருட்டு நீயேஉன்னைக்காப்பாற்றிக்கொள்வாயாக. கடந்த நிகழ்ச்சிகளைப்பற்றிப் பலவாறு எண்ணுத

---

[1] வழிகாட்டுதல் - முதலிற் றீப்புகுதல்.
[2] யானே முதலில் தீப்புகுவேன் என்பதாம்.
[3] இருவரும் - இரதனிகையும் மைத்திரேயனும்.

லாற் பயனென்? [பெருமூச்செறிந்து] [1]எம்பெருமான் உன்னைக் காப்பாற்றமாட்டார்.

சாருதத்தன்—[கேட்டு விரைந்து அணிமையிற்சென்று] யானே குழந்தையைக் காப்பாற்றுவேன். [என்று குழந்தையைக் கைகளால் எடுத்து மார்போடு தழுவிக்கொள்ளுகின்றான்.]

தூதை— [பார்த்து] ஆ! எம்பெருமான்குரலாகவே தோன்றுகின்றதே! [மீண்டும் உற்றுநோக்கி மகிழ்ச்சியோடு] தெய்வவயத்தால் வந்த இவர் எம்பெருமானே. எனக்கு மிகவும் மகிழ்ச்சிதருகின்றது.

குழந்தை—[மகிழ்ச்சியோடுபார்த்து] ஆ! தந்தையார் என்னைத் தழுவிக்கொள்ளுகின்றனர். [தூதையைநோக்கி] அன்னாய்! நலமுடையவளாகின்றாய்! தந்தையாரே என்னைக் காப்பாற்றுகின்றார். [என்று எதிராகத் தழுவிக்கொள்ளுகின்றான்.]

சாருதத்தன்—[தூதையைநோக்கி]

கொச்சகக்கலிப்பா.

369. [2]கண்ணே யுயிரோடுன் காதலன்மற் றீண்டிருக்க
எண்ணாக் கொடுஞ்செயலை யெங்ஙனமேற் கொண்டனைநீ?
உண்ணீர் நிறைகமல வோடைமகள் கண்மூடல்
விண்ணிற் கதிர்மறையா வேலைதனிற் கூடுங்கொல்? (௫௭)

---

1 அவர் இவ்வுலகவாழ்வைத்துறந்துவிட்டாராதலின் உன்னைக் காப்பாற்றமாட்டாரென்றாள் என்க. அவரையிழந்தமையால் யானும் இறப்பேனாதலின் என் பாதுகாப்பும் உனக்கு இன்றாம் என்பது கருத்து. இதனால் "நீயே உன்னைக் காப்பாற்றிக்கொள்வாயாக" என்பதை வலியுறுத்தவாறு.

2 கொடுஞ்செயல் - தீப்புகுதல். கமல ஓடைமகள் - தாமரையையுடைய ஓடையாகிய பெண். கண்மூடல் ஈண்டு மலர்குவிதலையும் மகிழ்ச்சியொழிவையும் குறிக்கும்.

தூதை—எம்பெருமானே! அதனாலேதான் அத்தாமரை யோடை [1]அறிவில்லாதது என்று கூறப்படுகின்றது.

விதூடகன்–[பார்த்து மகிழ்ச்சியோடு] ஆ! ஆ! [2]இக்கண்க ளாலேயே அன்புமிக்க நண்பரைக் காண்கின்றேன். [3]தீப் புகும் முயற்சியினாலேயே காதலனதுசேர்க்கையை எய்தப் பெற்றாள். ஆ! ஆ! கற்பரசியின்பெருமை என்னே! [சாருதத் தனைநோக்கி ] அன்புமிக்க நண்பர் வாழ்க. வாழ்க.

சாருதத்தன்—வருக. மைத்திரேய! [என்று தழுவிக் கொள்ளுகின்றான்.]

சேடி—ஆ! [4]ஊழ்வலியால் நிகழ்ந்தது இக்கூட்டம். பெருமானே! வணக்கம். [என்று சாருதத்தனுடைய அடிகளில் வீழ்கின்றாள்.]

---

[1] அறிவுடையளாகிய ஒருபெண் தன் காதலனது பிரிவுத் துன்பத்தை அனுபவித்துப் பின் இறவாள். உடன் இறப்பாள் என்பது கருத்து. இதனை, "தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள், கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள், மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத், தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போற், பெருங்கோப் பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்" என்னும் சிலப்பதிகாரத்தானும் உணர்க. (காட்சிக்காதை அடி 82—86.)

[2] சுட்டு, இம்மையில் இவ்வுடலில் அமைந்த கண்களாலேயே என்னும் பொருளதாகும். இதனால் இறந்தபின் மறுமையிலன்மயும் உடற்கண்ணாற் காணும்நிலை நேர்ந்திலது என்பது புலனும்.

[3] தீப்புகுந்து மறுமையில் வேற்றுடம்புகொடு எய்தினாளல்லள் என்பது கருத்து.

[4] இருவரும் இறவாமல் மீண்டுங்கூடியது தெய்வவயத்தா லாயிற்றென்பதாம்.

சாருதத்தன்— [முதுகிற் கையைவைத்து] இரதனிகே! எழுந்திரு. [என்று எழுவிக்கின்ருன்.]

தூதை— [வசந்தசேனையைநோக்கி] [1]தெய்வவயத்தால் உடன்பிறந்தாள் நலமுடையளாயினுள்.

வசந்தசேனை—[2]இப்பொழுதுதான் நலமுடையவளாக இருக்கின்றேன்.

[ஒருவரையொருவர் தழுவிக்கொள்ளுகின்றனர்.]

சருவிலகன் —தெய்வவயத்தாற் பெருமான் பிழைத்திருக்கும் உறவினரெல்லோரையும் உடையராயினர்.

சாருதத்தன்—தங்கள் [3]அநுக்கிரகத்தால்.

சருவிலகன்—பெருமாட்டி! வசந்தசேனே! மகிழ்ச்சிமிக்க ஆரியகன் என்னும்அரசர் தங்களை (குலமகளிர்க்குரிய) [4]வது என்னுஞ்சொல்லால் அழைக்க அருள்செய்துள்ளார்.

வசந்தசேனை—ஐய! நல்வினைப்பேறுடையளாயினேன்.

---

1 முன்னர் இறந்தாள் என்று துணியப்பட்டமையால் இவ்வாறு கூறினுள்.

2 நீ தீப்புகுந்து இறப்பின் சாருதத்தரும் இறந்தொழிவர். அங்ஙனம் நேரில் எனக்கு எங்ஙனம் நலமுண்டாம்? நின் இறப்பின்மையே என்நலத்திற்குக் காரணமாயிற்றென்பது கருத்து.

3 அநுக்கிரகமாவது: ஆரியகனதாக்கத்திற்கும் பாலகனது கேட்டிற்கும் சாதனமாகவுள்ளது.

4 வசந்தசேனையின் ஒழுக்கம் கணிகையர்குலத்துக்கு அரிதாம் என்பதுபற்றி இவ்வாறு பெருமைப்படுத்தப்பட்டாள் என்பது கருத்து.

சருவிலகன்— [வசந்தசேனைக்கு [1]முக்காடிட்டுச் சாருதத்தனைநோக்கி] பெருமானே! இத்துறவிக்கு யாதுசெய்தல் வேண்டும்?

சாருதத்தன்—பெரியீர்! தாங்கள் விரும்பிமதிக்கும் பொருள் யாது?

துறவி—[2]இத்தகைய இவ்வநித்தியத்தன்மையைக் கண்டமையால் துறவறநெறியில் எனக்கு [3]இருமடங்கு மிகுதியான மதிப்புநிகழ்வதாயிற்று. [அதுவே யான் விரும்பிமதிக்கும் பொருளாகும்.]

சாருதத்தன்—நண்பீர்! இத்துறவியின் துணிபு திட்பமாகவுள்ளது. ஆதலின் இந்நிலவுலகத்துள்ள விகாரங்கள் (பௌத்தமடங்கள்) எல்லாவற்றிற்கும் இவரைத் தலைவராகச் செய்தல்வேண்டும்.

சருவிலகன்—பெருமான்கட்டளைப்படியே.

துறவி—இஃது எனக்கு மகிழ்ச்சிதருகின்றது.

வசந்தசேனை — [4]இப்பொழுதுதான் உயிர்பிழைத்தவளாகின்றேன்.

---

[1] ஆடையால் முக்காடிடுதல் குலமகளிர்க்குரியது: அதனால் வசந்தசேனையை இனி எவரும் பொதுமகளெனக் கருதலாகாதென்பது கருத்து.

[2] தங்களுக்கு நேரவிருந்த கொலைத்தண்டமும் அதனைவிதித்த பாலகன் என்னும் அரசனுக்கு நேர்ந்த அழிவும் அநித்தியத்தன்மையை யான்காண்டற்குரிய ஏதுக்களாயின என்பதாம்.

[3] பற்றறுதியே வன்மையுறுவதாயிற்றென்பதாம்.

[4] இப்பொழுது - இத்துறவிக்குக் கைம்மாறுசெய்யப்படும் இவ்வமயம். இதுவே என் வாழ்க்கையின்பயனுமென்பது கருத்து.

சருவிலகன்—தாவரகனுக்கு என்னசெய்யவேண்டும்.

சாருதத்தன்—நல்லொழுக்கமுடைய அவன் அடிமைத் தன்மையில்லாதவனாக இருக்கவேண்டும். [1] அச்சண்டாளர்கள் எல்லாச்சண்டாளர்களுக்கும் தலைவராக இருக்கவேண்டும். சந்தனகன் இத்தேயத்திற்குத் தலைமையான படைத்தலைவனாக இருத்தல்வேண்டும். அரசன்மைத்துனனாகிய அச் சகாரனுக்கு எச்செயல் முன்னருள்ளதோ அதுவே இப் பொழுதும் இருக்கவேண்டும்.

சருவிலகன்— இங்ஙனம் பெருமான்கட்டளைப்படியே செய்வேன். [2] இவனைமாத்திரம் விடுங்கள்; விடுங்கள்; கொன்றுவிடுகின்றேன்.

சாருதத்தன்—[3] அடைக்கலமடைந்தோற்கு அபயமளித்தல்வேண்டும். ["உடைப்பெரும்பகைவனாய்" என்னும் (இவ் வங்கம் 54-ஆம்) செய்யுளை மீண்டுங் கூறுகின்றான்.]

சருவிலகன்— தங்களுக்கு இன்னும் பிரியமானது யாது? அதனைச் சொல்லல்வேண்டும். செய்கின்றேன்.

சாருதத்தன்—இவற்றினுஞ்சிறந்ததாக எனக்குப் பிரியமானது யாது இருக்கின்றது?

---

1 சண்டாளர்கள் கொலைச்செயலைத்தாழ்த்து உதவிபுரிந்தமை பற்றி இங்ஙனம் கூறினான்.

2 இவனை - சகாரனை.

3 ஒருவன் அடைக்கலம்புகுவானாயின் அதுவே அவன்செய்த பாவங்களுக்கெல்லாம் கழுவாயாகும் என்பது கருத்து.

நேரிசையாசிரியப்பா.

370. [1]ஒழுக்கந் தூய்தென விழுப்ப முற்றனென்
மிகைபல விளைத்த [2]பகைவனு மென்றன்
அடிமிசை வீழ்ந்து விடுதிபெற் றனனால்
அன்புறு நண்பனும் ஆரியகன்றான்
சார்தரு பகையெலாம் வேரறக் களைந்தே
யிருநில முழுது மொருகுடை நிழலிற்
றங்கி யின்புறச் செங்கோல் தாங்கினன்
மீண்டுமிக் [3]காதலி யீண்டுற் றனளால்
என்னருந் துணைவனு மியைதரு நீயும்
நின்னருந் [4]துணைவனை நேர்ந்தின் புற்றனை
இவற்றினும் வேறு வெய்தற் பால
தியாதுள தைய நாதன மாக
எதனையா னின்பா லிதமுற வேண்டுவல்?

---

[1] வசந்தசேனையின்வரவு, அவளை யான் கொன்றதாக எழுந்த பழியை நீக்கி என் ஒழுக்கம் தூய்தாதற்குக் காரணமாயிற்றென்பதாம்.

[2] எனக்குக் கேடுசெய்தவனும் ஆரியகனுக்குப் பகைவனும் முன்னை அரசனாகிய பாலகனுக்கு உறவினனுமாகிய சகாரன் என்பதாம்.

[3] காதலி - வசந்தசேனை.

[4] துணைவன் - ஆரியகன்.

முந்துரை [1]கூப யந்திர கடிகா
நியாயமா நிகழூந் தயாவறு மிவ்வூழ்
வறுமையுற் றுழலச் சிலரை வாட்டியும்
நிறைவுறச் சிலரை நெடுமகிழ் வூட்டியும்
நல்குர வுடையரை நடுக்குற வீழ்த்தியும்
எஞ்சிய சிலரைச் சஞ்சலத் தாழ்த்தியும்
ஒன்றுக் கொன்று நின்றமுறை பிறழ்ந்து
மாறுபடு குழுவிற் கூறுமிவ் வுலக
நிலைவெளிப் படுத்து நின்றீண்
டலகிலா விளையாட் டயருமா லம்ம! (ருஅ)

---

[1] கூபயந்திரகடிகாநியாயமாவது, கிணற்றில் நீர் இறைத்தற்கு அமைக்கப்பட்ட உருளிற் கயிற்றூற் பிணைக்கப்பட்டுள்ள சால்களைப் பற்றி அறியும் முறை. கயிற்றின் இருபாலும் பிணைக்கப்பட்ட சால்களுள் ஒன்றை நீரில் அமிழ்த்துங்கால் மற்றொன்றை மேலெழச் செய்வதும், ஒன்றை நீர்நிரப்புங்கால் மற்றொன்றை வறிதாக்குவதும் அக் கூபயந்திரத்தின் இயல்பாம். ஊழின் இயல்பும் அங்ஙனமாமென்ப. நீர்நிறைந்தசாலை நீரை வெளிப்படுத்தி வறிதாக்குதல் போலச் செல்வமுடையாரை வறியராக்கியும், வெறுஞ் சாலை நீர் நிறையச்செய்தல்போல வறியரைச் செல்வராக்கியும், நீர்முகந்த சாலை மேல் எழச்செய்வதுபோலச் செல்வமெய்தினாரைச் சிறப்புற வுயர்த்தியும், நீர்நீங்கியசாலைக் கிணற்றுள்வீழ்த்தல்போலப் பொருளிழந்தாரைத் துன்பத்துள்வீழ்த்தியும், கீழ்விழாமலும் மேலெழாமலும் இடையில்தூங்கும் சாலைப்போல இடைநிகராகவுள்ளாரைக் கீழ்நிலயினுதல் மேல்நிலயினுதல் அடைவித்தும், இங்ஙனம் ஒன்றுக்கொன்று நின்றமுறைபிறழ்ந்து மாறுபடுங்குழுவினையுடைய இவ்வுலகநிலையை வெளிப்படுத்து, இவ்வூழ் அலகிலா விளையாட்டயரும் என்க. உலகத்து மக்களுக்கு ஆக்க அழிவுகளை எளிதிற் புரியும் என்புதுபற்றி "விளையாட்டயரும்" என்று கூறப்பட்டது.

ஆயினும், [1]இப்பரதவாக்கியம் நிலைபெறல்வேண்டும்.

ஆசிரியவிருத்தம்.

371. வான்முகில்கள் காலமுறைப் பொழிக பைங்கூழ்
வளம்பெருக்கி நிலஞ்சிறக்க வழாது தீம்பால்
ஆனினங்க ளனிசுரக்க வுயிர்கள் யாவும்
அன்புடைய வாயுவகை யடைக வென்றும்
மேன்மைதரும் அந்தணர்க ளல்லோ ராக
வீசுக[2]மென் காலின்ப மிகுவித் தெங்கும்
பான்மைதரு திருவினொடு தருமம் பற்றிப்
பகைமையொழித் தரசர்[3]நிலம் பரித்து வாழ்க.

[என்று எல்லோரும் போய்விடுகின்றனர்.]

"தோகுத்துக்கூறல்" என்னும்

## பத்தாம் அங்கம் முற்றிற்று.

---

## மண்ணியல் சிறுதேர் முற்றிற்று.

---

[1] பரதவாக்கியமாவது: நடன் சாருதத்தனும் தன்மையை ஒழித்து இசைப்பாடகனும் தன்மையை மேற்கொண்டு கூறும் மங்கலவாழ்த்தாகும்.

[2] மென்கால் - இளங்காற்று.

[3] நிலம் பரித்து வாழ்க - நிலத்தைத் தாங்கி வாழ்க.

உ

# செய்யுண்முதற்குறிப்பகராதி.


| செய்யுள். | பக்கம். |
|---|---|
| அகல்விழித் | 275 |
| அகலியை | 195 |
| அச்சமே | 329 |
| அசைகின்ற | 25 |
| அசைவறு | 192 |
| அஞ்சியடைந்தார்க் | 235 |
| அடிமையார் | 139 |
| அடைக்கலமா | 204 |
| அண்ணனம்மனோர்க் | 46 |
| அணிகலத்தினாற் | 163 |
| அணியிழாய் | 32 |
| அந்தகன்பார்வை | 49 |
| அந்தணா | 32 |
| அந்நாளினில் | 14 |
| அம்மையா | 370 |
| அரமியத் | 364 |
| அரிசிமாப் | 362 |
| அரியதேய | 71 |
| அருந்துயர | 372 |
| அருமருந்தன்ன | 373 |
| அருளறுதிய | 122 |
| அல்லினண் | 371 |
| அலமுறுபடை | 208 |
| அலர்தாத் | 338 |
| அவந்திதிக | 6 |
| அன்பியல் | 194 |
| அன்னபச்சிலை | 110 |
| அன்னியரில்லந் | 106 |
| அன்னைதாயர் | 275 |
| ஆடவர்தம்மனை | 211 |
| ஆடவர்வன்கண | 196 |
| ஆண்டுநாம் | 414 |
| ஆண்மையின் | 116 |
| ஆயகுலமகள் | 151 |
| ஆரியனென்னாற் | 236 |
| ஆவினங்க | 264 |
| இக்கோப் | 62 |
| இச்செயலை | 295 |
| இடையூறுடையதா | 330 |
| இத்தகைவழக் | 355 |
| இத்துன்ப | 246 |
| இந்திரனவனோ | 290 |
| இந்நகர்க்கணியா | 278 |
| இந்நகர்க்கணியென | 363 |
| இந்நகர்மன்றம் | 228 |
| இப்பெண் | 177 |
| இம்மகளிரன்றே | 145 |
| இம்மாயத் | 145 |
| இராவினுக் | 133 |
| இரவெலாங் | 79 |
| இல்லத்தின் | 170 |
| இல்லாமையா | 37 |
| இல்லினுட்புகுக | 57 |
| இலகுபொன் | 296 |
| இவ்வுலகி | 367 |
| இவ்வுலகிற்பல் | 140 |
| இவளோ, காசினைப் | 25 |
| இழிவிதெனப் | 107 |
| இழிவுடையாய் | 333 |
| இழிவுநல்குரவினா | 44 |
| இளமையின் | 40 |
| இறப்பதற்கஞ்சுவே | 377 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| இன்னதுயர்ப் | 387 |
| இன்னுமிவ | 259 |
| ஈங்கிதனை | 338 |
| ஈங்கிவருயிர்ப்பு | 112 |
| ஈண்டெடனையறிவித் | 241 |
| ஈதென்னை | 22 |
| உடைப்பெரும் | 412 |
| உண்மைசொல | 350 |
| உண்மையினியல்பைத் | 347 |
| உண்மையினுணர் | 55 |
| உயர்ந்தமூக் | 327 |
| உரிமையிலாக் | 17 |
| உருகியவெண்பொனி | 172 |
| உருவெயிற் | 302 |
| உரைபரியங்க | 1 |
| உலகமீன்ற | 3 |
| உள்ளம்மழியா | 254 |
| உளபெருந்திரு | 55 |
| உறையுளை | 256 |
| உன்னுசெவ் | 53 |
| உன்னுடலுறப் | 138 |
| ஊடனீட்டிப்பி | 197 |
| ஊழ்வலியாற் | 18 |
| ஊறுசாலிற்றைப் | 346 |
| எங்ஙனமெங்ஙன | 178 |
| எதிரிக்கோரிருக் | 77 |
| எப்பொழுது | 284 |
| எல்லாருமென்னை | 207 |
| எல்லோருமென்னை | 122 |
| எவ்வினையின் | 281 |
| எழின்மிகுமிவர் | 6 |
| எழுக! எழுக! | 383 |
| எழுதிலையோடு | 178 |
| எளியவர்க் | 47 |
| என்போல்வார்க் | 210 |
| என்றலையிற் | 264 |
| என்றனிடக்கண் | 326 |
| என்றுதை | 314 |
| என்றுமிம் | 201 |
| என்னரும்புதல்வ | 384 |
| என்னுயிர் | 399 |
| என்னைப்பற்றிய | 358 |
| ஏ! ஏ! வீரக! | 229 |
| ஏதநிறை | 291 |
| ஏதிலர்சிலவ | 133 |
| ஏமமாமேது | 141 |
| ஏற்றநல் | 123 |
| ஏற்றவள | 126 |
| ஐயிருகாசினு | 80 |
| ஐவர்தமைக் | 254 |
| ஒத்தகுண | 226 |
| ஒருகணமயிர்முடி | 306 |
| ஒருங்கிய | 84 |
| ஒருசெவி | 201 |
| ஒருத்தனை | 143 |
| ஒருபொருள்போற் | 349 |
| ஒழுக்கந்தாய் | 422 |
| ஒழுக்கமுற் | 140 |
| ஒளியிடைப் | 35 |
| ஓடவிற்பாம்பு | 117 |
| ஓடுமின்கள் | 380 |
| ஓலையின் | 212 |
| கட்டவிழப் | 409 |
| கடுகவோடலின் | 176 |
| கடுங்குரல் | 323 |
| கண்ணீரான் | 360 |
| கண்ணேயுயிரோடுன் | 417 |
| கணகணவென்ன | 26 |
| கதிரவனுரு | 230 |
| கயவர்த | 287 |
| கயிறக்ளா | 410 |
| கரியினையடக்குதல் | 50 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| கருதுமுயர் | 166 |
| கருவியாம் | 105 |
| கருவியுமிடறு | 101 |
| கலவையார் | 209 |
| கலைநனியான் | 367 |
| களிற்றரசென்னக் | 188 |
| காட்டிலோர் | 27 |
| காடுறையுங் | 224 |
| காணாமுருக் | 135 |
| காதல்விறகிற் | 140 |
| காதலியை | 252 |
| காமமிக்கவளை | 44 |
| காமமிகுமங்கை | 61 |
| காமுகராய் | 184 |
| காமுறுமனிதனைக் | 141 |
| காயமண | 265 |
| காயமேவிய | 266 |
| காரியச்சூழ்ச்சியிற் | 325 |
| காலமாற்றாது | 99 |
| காலன்கைப் | 377 |
| காலன்வாய்ப் | 397 |
| காலனாரென்னுயிர் | 400 |
| காலுதையாற் | 335 |
| காற்றெனும் | 187 |
| குணநல | 405 |
| குந்திமகன் | 29 |
| குலம்பேசி | 285, 315 |
| குற்றமிழைத்தா | 354 |
| குன்றெனுங் | 371 |
| கேகையினால் | 191 |
| கைப்பொடு | 378 |
| கையடக்க | 304 |
| கைவாளுங் | 29 |
| கோக்கினங்க | 188 |
| கொடியபாலகனைக் | 403 |
| கொண்டன்முழக்காற் | 195 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| கொலையுறுமிவனை | 364 |
| சண்டாளர் | 372 |
| சந்திரன்போ | 241 |
| சார்புமிதஞ் | 232 |
| சிதைவுறு | 225 |
| சிந்தனைபற்பல | 19 |
| சிறுமிநின் | 41 |
| சிறையிடுத | 223 |
| சிறையுறு | 228 |
| சினமுடைக் | 263 |
| சீலமுடைப் | 361 |
| சிலமுயர் | 414 |
| சுற்றத்தார் | 250 |
| சூதாடல் | 69 |
| செந்நிறந்தோய்ந்த | 400 |
| செந்நிறவெண் | 197 |
| செறிதரு | 165 |
| சேற்றிடைக் | 208 |
| சொன்முப்புரிநூல் | 111 |
| தக்கனார் | 403 |
| தந்திரியினடையுஞ் | 4 |
| தருமநிதியாஞ் | 232 |
| தாமரை | 143 |
| தாய்தந்தை | 239 |
| தாவல்நடத்தல் | 23 |
| திசைவன | 279 |
| திண்ணியன் | 47 |
| தீட்டுதற்குரியதாய்ச் | 238 |
| தீவினையில்லை | 297 |
| துடியிடை | 90 |
| துதிக்கைபோ | 247 |
| துளைவழி | 111 |
| தூயசீலமுந் | 98 |
| தூயநகரிற் | 300 |
| தோளுறச்சரிந்து | 396 |
| நங்காயென் | 24 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| நடுவணுமெனை | 70 |
| நண்பரும் | 152 |
| நம்முழை | 127, 175 |
| நல்குரவா | 18 |
| நல்குரவுபற்ற | 136 |
| நல்குரவே | 38 |
| நல்லாய்நின் | 147 |
| நல்றாழே | 248 |
| நல்லெழில் | 350 |
| நல்லொழுக்க | 407 |
| நல்லோர் | 367 |
| நல்லோர்பிறர்க் | 88 |
| நலமறுகுநிறு | 92 |
| நழுவிய | 390 |
| நற்குணங்கண் | 277 |
| நற்குணத்தா | 150 |
| நற்குணத்தேன் | 232 |
| நன்னீரில்செயலும் | 154 |
| நாகரிகீர் | 295 |
| நாடகவரங்கத்தி | 41 |
| நாடிகந்து | 363 |
| நிலத்திலோவியம் | 262 |
| நிலமுறுகால் | 324 |
| நிறவியவித் | 211 |
| நின்மறைவா | 400 |
| நின்வண்டி | 407 |
| நின்னுடைச்சாதியி | 238 |
| நின்னுடைச்செல்வ | 283 |
| நீண்டகன்று | 277 |
| நீர்தங்கு | 36 |
| நீர்நிறை | 334 |
| நீரின்மூழ்கிய | 102 |
| நீருறநனைந்த | 171 |
| நீருறநனைந்து | 108 |
| நூலறிவு | 310 |
| நூலிற்ற | 77 |
| நெடுங்கடற் | 142 |
| நெருக்கிய | 186 |
| நெறிநிரி | 94 |
| நேசமார் | 341 |
| பட்டமரத் | 324 |
| படுகொலை | 360 |
| படைவலி | 404 |
| பண்டுணர்ந்து | 206 |
| பரியதேக | 105 |
| பலவிதக் | 359 |
| பலவிதமா | 276 |
| பலவிதமாய | 164 |
| பழிவயப் | 374 |
| பற்றுவயிற்றுப் | 253 |
| பன்னுசிவன் | 241 |
| பாதமொன்று | 78 |
| பாப்தவிற் | 117 |
| பாவமோர் | 351 |
| பிரிந்துறை | 185 |
| பிளவுண்ட | 324 |
| பிற்றைப்பிறப்பிற் | 297 |
| பிறர்நலத்தி | 339 |
| பீலிநிறை | 23 |
| புல்விரு | 35 |
| பூங்கொடி | 137 |
| பூசனை | 21 |
| பேரொலியைச் | 195 |
| பைங்கூழிரை | 99 |
| போங்குநீரிற் | 306 |
| பொருண்வரல் | 77 |
| பொருளற | 375 |
| பொருளிலார்க் | 206 |
| பொருளிலான் | 37 |
| பொல்லாதா | 192 |
| பொல்லாமை | 198 |
| பொன்புனை | 370 |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| பொன்றருவே | 287 |
| பொன்னனையாண் | 406 |
| பொன்னுல | 69 |
| போகூழாற் | 126 |
| மக்கண்முயற்சி | 150 |
| மக்களில்லதோ | 7 |
| மகளிரவமதிப்பு | 263 |
| மங்குல்பொழிக | 187 |
| மங்கையாணி | 94 |
| மண்ணியன் | 141 |
| மதனனுருவிலி | 24 |
| மதிவலிமாற்றும் | 389 |
| மலர்தரு | 109 |
| மலர்நிறை | 340 |
| மலர்பழ | 262 |
| மற்றொருபாண்டி | 244 |
| மற்றொருவசந்தசேனை | 398 |
| மறமிகுதர் | 153 |
| மறுமையை | 343, 351 |
| மறுவிறண் | 366 |
| மன்றல்வினைத் | 233 |
| மன்னவர்நெறி | 230 |
| மன்னவர்மதித்துணர் | 322 |
| மன்னவன்ற | 245 |
| மன்னவனெஞ்சிற் | 251 |
| மன்னவனுணையை | 355 |
| மன்னனையுங் | 26 |
| மன்னுசரற் | 272 |
| மன்னுமயிராவதத்தின் | 196 |
| மன்னுமிவ் | 40 |
| மாசறுநிலவினுல் | 336 |
| மாண்மிகுமறையவ | 45 |
| மாயோன்றிருமேனி | 171 |
| மாருயவுள்ளமு | 261 |
| மானத்தி | 76 |
| மானநோக்கி | 272 |
| மிக்கதாகிய | 15 |
| மிக்கவன்கண்மை | 394 |
| மிகுங்காற்ரு | 190 |
| மின்னலாங்கச்சை | 190 |
| மின்னலாகாவு | 212 |
| மின்னலின் | 194 |
| மூகில்பொழி | 332 |
| முந்தைப்பாரத | 290 |
| முற்பகைமை | 378 |
| முற்படுபகைவனு | 401 |
| முறுவலீங் | 296 |
| முன்னோா | 110 |
| மேருவினுச்சியி | 72 |
| மேலிடங் | 119 |
| யானுறுநிலையை | 362 |
| வசந்தசேனை | 286 |
| வணிகர்தமைப் | 243 |
| வம்மின்கடுக | 228 |
| வல்லுளியினுற் | 24 |
| வழக்கழிய | 309 |
| வழக்குரைப்போ | 308 |
| வழியிடை | 270 |
| வள்ளலாஞ் | 333 |
| வற்றலாங் | 52 |
| வற்றன்மரமு | 206 |
| வறியனுயினுங் | 288 |
| வறுமையிற் | 193 |
| வறுமையுமரணமு | 16 |
| வறுமையுமிழிவு | 282 |
| வன்றளையொருவிப் | 322 |
| வன்னத்தி | 101 |
| வாட்படையும் | 240 |
| வாமமார் | 347 |
| வாய்மைசான் | 365 |
| வான்முகில்கள் | 424 |
| வானனைதமாலபத்திர | 189 |

| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|
| விண்ணோர்க்கிலங்கு | 27 | விரும்பிய | 292 |
| விண்ணிற்செறிக்ரு | 169 | விலைமகளுட | 104 |
| விண்ணிழு | 300 | விளங்குமிச் | 128 |
| விண்ணுமழவில்லை | 364 | வினையாளர்க் | 134 |
| விண்ணுல | 357 | வீமனருஞ்செயலை | 234 |
| விண்முகில்காண் | 210 | வெற்றித்திரு | 234 |
| விதிவலியாற் | 54 | வேற்றுநாட் | 120 |
| விந்தியமலைக் | 95 | வேற்றுமகளிர் | 160 |
| விரவியகாற்றளை | 68 | வேனின்முதிர்வான் | 144 |

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௦ | ௨௪ | 552 | 352 |
| ௩௬ | ௧௧ | கேளாருங் கேட்ப | கேளாரும் வேட்ப |
| ௩௧ | ௨௬ | பண்டிமணி | பண்டிதமணி |
| ௬௩ | ௧௫ | மிகையுமாகும. | மிகையுமாகும். |
| ௬௮ | ௩ | றினைத் | றனைத் |
| 1 | 15 | நடனுதல் | துணைநடனுதல் |
| 13 | 23 | இடங்களிற | இடங்களிற் |
| 15 | 7 | நல்லதாக | நல்லதாக. |
| 51 | 24 | யுண்டாகும். | யுண்டாகும்." |
| 58 | 12 | அமைக; | 3 அமைக; |
| 84 | 10 | சொல்லினும் | செல்லினும் |
| 88 | 8 | அமைக.அமைக.அமைக. | அமைக. அமைக. |
| 98 | 4 | கலித்துறை. | ரேடன்—கலித்துறை. |
| 118 | 21 | வழிச்சென்றது" | வெளிச்சென்றது." |
| 144 | 26 | இது | இஃது |
| 239 | 16 | செய்கின்ருள். | செய்கின்ருன். |
| 264 | 22 | வண்டியின் | 2 வண்டியின் |
| ,, | 25 | 2 கால்வெயில்- | கால்வெயில்- |

மேலைச்சிவபுரிச்

# சன்மார்க்கசபை வெளியீடுகள்.

ஆசிரியர்: பண்டிதமணி திரு. மு. கதிரேசச்செட்டியாரவர்கள்.

## 1. சுலோசனை (இரண்டாம் பதிப்பு.)

இஃது, அரிய இனிய செந்தமிழ்நடையில் எழுதப்பட்டது; இலக்குவனால் அமரிடை மடிந்த தன் தலைவனாகிய இந்திரசித்துவின் பிரிவாற்றாது, யாவரும் வியக்குமாறு தன் கற்பின்திறத்தைப் புலப்படுத்தி இறுதியில் அருந்தழல் புகுந்த கற்பரசியாகிய சுலோசனையின்வரலாற்றைக் கூறுவது.

இதன்கண் அவலச்சுவையே சிறப்பாகநிலவுகின்றது; சுலோசனையின் அருங்கற்பும், பெருங்குணங்களும், அறிவுடைமையும் தலைவற்பிரிவால் துன்புறுநிகழ்ச்சிகளும், படிப்பார்க்கு வியப்பும் உருக்கமும் தோன்ற இன்புறுத்துவனவாம்; அறுபட்டனவாகிய கையும் தலையும் முறையே எழுதியதும் பேசியதும் கற்பின் ஆற்றலைப் புலப்படுத்துவனவாம். இப்பிறப்பிற் பயிலப்படாதாரைக் கண்டவிடத்து ஒரோவழியுண்டாம் அகநிகழ்ச்சிகளுக்கு முற்பிறப்பின் தொடர்பே காரணமென்பதும் இதன்கட் காணலாம்.

இஃது, ஆங்கில உயர்தரக்கல்லூரிகளிற் பாடபுத்தகமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது; தமிழ்ப்பேரறிஞர்சிலர் எழுதிய சிறந்த மதிப்புரைகளுடன் அழகுற அச்சிடப்பட்டுள்ளது.

விலை ரூபா 0—4—0

Meenalochani Press, Madura-33.

## 2. உதயனசரிதம். (இரண்டாம் பதிப்பு.)

இது, தெள்ளிய இனிய எளிய தமிழ்நடையா னமைந்தது; வற்சநாட்டின் தலைநகராகிய கௌசாம்பியி லிருந்து அரசுபுரிந்த சகச்சிரானீகன் புதல்வனாகிய உதயன னதுவரலாற்றையும், அவன்மகன் நரவாகனதத்தன்வரலாற் றையும் சுருக்கி விளக்குவது. வடமொழியிற் பல நூல் களிலும் தமிழிற் பெருங்கதை என்னும் அரிய காப்பியத் திலும் சிற்சில வேறுபாட்டுடன் விரித்துக்கூறப்பட்டதும் இதுவேயாம்.

இதன்கண் அரசர்க்கு வேட்டையாடல் முதலியவற்றால் வரும் தீங்கும், அறிவிற்சிறந்த அமைச்சர்சொல்வழிநிற்றலால் வரும் நலங்களும், சிறந்த அமைச்சனின் அரிய சூழ்ச்சி முதலிய செயல்களும், இடுக்கட்காலத்தும் மகளிர்கற்பு மாசுபடலாகாது என்பதும், ஒருவற்கு அமைந்த இரு மனைவியரின் அன்புகெழீஇய ஒற்றுமையும், அரசியல் விரிவதற்குச் செயற்பாலன இன்னவென்பதும், சிவவழி பாட்டின் பயனும், பிறவும் புலப்படுவனவாம்.

பற்பல கல்லூரிகளிற் பாடபுத்தகமாக ஏற்படுத்தப் பட்டுள்ளது. வனப்புமிக்க பதிப்பு.

விலை ரூபா **0—12—0**

---

## 3. சுக்கிரநீதி.

இஃது, அறமுதலிய உறுதிப்பயன்கள் நான்கனுள் ஒன்ருகிய பொருளினையே விதந்துகூறுவது; தூய செந் தமிழ்நடையானமைந்தது; வடமொழியில் சுக்கிராசாரியர் விரித்துக்கூறிய ஔசநசம் என்னும் நூலின் சாரமாக இரண் டாயிரத்தறுநூறு சுலோகவடிவில் தொகுக்கப்பட்ட சிறந்த பொருள்நூலின் நேரான மொழிபெயர்ப்பாகும்.

அரசியல் அமைச்சியல் குடிகளியல்பு ஒழுக்க வகைகள் உழவு வாணிகம் போர்முறை முதலிய அரிய பல பொருள்களை விரித்து விளக்குவது; தமிழ் ஆங்கிலம் வட மொழிகளிற் சிறந்த பேரறிஞர்களால் எழுதப்பட்ட மதிப் புரைகளையும் விரிந்த ஆராய்ச்சியுரைகளையும் தன்னகத்தே யுடையது. தமிழில் இதுகாறும் வெளிப்படாத சில அரிய செய்திகளும் இதனல் அறியலாம். "வெள்ளியும் பொன்னும் என்பார் விதிமுறை" என்று கம்பநாடரால் முதற்கண்வைத் துப் பாராட்டப்பெற்ற வெள்ளிவிதிமுறை இதுவேயாகும்.

உயர்ந்த காகிதத்தில் சிறந்த முறையில் அச்சிடப் பெற்றது. காலிக்கோ கட்டிடம்.

விலை ரூபா 3—8—0

---

## 4. மண்ணியல்சிறுதேர்.

இது, வடமொழியில் புலமைமிக்க சூத்திரகன் என்னும் அரசனால் பல்வகைச் சுவைகளுக்கும் நிலைக்களமாக இயற்றப் பட்ட "மிருச்சகடிகம்" என்னும் பிரகரணநாடகத்தின் தமிழ்மொழிபெயர்ப்பாகும்; சொற்பொருளினிமைமிக்க பலதிறப்பட்ட 371 செய்யுட்கள் இடையிடையே விரவப் பெற்ற பத்து அங்கங்களையுடைய உரைநடைநூலாகும்; ஆங்காங்கு அரும்பொருட்குறிப்புக்களையும் சிறந்த ஆராய்ச்சி மதிப்புரைகளையும் தன்னகத்தே யுடையது.

அந்தணர்குலத்துதித்து வாணிகத்தொழிலை மேற் கொண்ட வள்ளற்பெருமானாகிய சாருதத்தனும், அவன் பொருள்வறந்தநிலையில் அவன் அரிய குணங்களுக்கு ஈடு பட்டுக் காதல்மேற்கொண்ட கணிகை வசந்தசேனையும் இதன்கண் முக்கிய பாத்திராவர்; அரசன்மைத்துனனாகிய கொடியவன் சகாரன் இழைத்த கொடுஞ்செய்கைகளால் இவ்விருவரும் பலவகை அல்லலுழந்து முடிவில் அறந்தலை காக்க உய்திபெற்று இன்பவாழ்வெய்திய வரலாற்றை விரித்து விளக்கும் இதன்கண் வறுமைநிலையும், சூதினால் வரும் ஏதமும், நட்பின்பெருமையும், உண்மைக்காதலின் உயர்வும், கற்பறத்தின் பீடும், பிறர்க்குவிளைக்குந் தீங்கினால் வரும் துன்பமும், வள்ளன்மையின் மாண்பும், அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற்றுவதும், இடுக்கண்மிக்ககாலத்தும் இயலறம்பிழையாமையாலுண்டாம் இன்பமும், பிறவும் அமைந்து கற்பார்க்குக் கழிபேருவகை அளிப்பனவாம்.

உயர்வகுப்பு மாணாக்கர்களுக்குப் பாடபுத்தகமாந் தகுதி வாய்ந்தது. உயர்ந்த காகிதத்தில் சிறந்தமுறையில் அச்சிடப் பெற்றுள்ளது.

விலை: காலிக்கோ பைண்டு ரூ. 2-4-0. ராப்பர்பைண்டு ரூ. 2.

கிடைக்குமிடம்:

தலைவர், சன்மார்க்கசபை, மேலைச்சிவபுரி.

Melasivapuri, P. O., Pudukkottah State.

---